ஸ்ரீ

கடவுளுக்கு வந்தனம்.



ஸ்ரீசந்திரவமிச க்ஷத்திரியராகும்

ஆந்திரர் என்னும் கவரவராகிய

# பலிஜவாரு புராணம்

அல்லது

# நாயடுகாரு

## சமஸ்தான சரித்திரம்

(இரண்டாம் பதிப்பு.)

இதை

கோயமுத்தூர் கலாநிதி பத்திரிகாசிரியரும், ஆஸ்திகமத சித்தாந்தம்,
மதவிருக்ஷம், காசியாத்திரை, காஞ்சீ, திருபதி, ஸ்ரீபெரும்பூதூர்,
மேல்கோட்டை, மஹாத்துவங்கள், தருக்க சாஸ்திரம்,
சங்கீத சாஸ்திரம், பக்தி சாஸ்திரம், ஆரியர் வேதம்,
ஆரியர் ஆசாரம், கலியுக தருமம், கலியாணபாட்டுகள்,
வேதப்பொருள் சார சங்கிரகம், முதலான கிரந்தங்
களின் கருத்தரும், கோயமுத்தூர்
டிஸ்டிரிக்டு போர்டு மெம்பரும், கவுரவ மேஜஸ்திரேட்டும்
மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஓர் அங்கத்தினருமாகிய
சேலம் பகடால

### நரசிம்மலு நாயடு அவர்கள்

இயற்றி

கோயமுத்தூர் கலாநிதி ஆபீசு
சென்னை. பி. ஆ. அ. பிரஸ். டவடன் கம்பெனி பிரஸ்
ஆநந்தா பிரஸ், எம். எல்.வி பிரஸ். கிச்சினர் பிரஸ்,
பண்டித மித்திரன் பிரசுஆபீசுகளில்
பதிப்பித்தனர்.

1905.

To

# All Balija Caste People.

OR

# Nayudu Community

IN WHATEVER COUNTRY, TONGUE AND CREED
IN WHATEVER POST, POSITION AND NEED

TO WHOM

MY HEART HAS CLUNG

AMID MANY TRANSITIONS & TRIALS

THE FOLLOWING PAGES

Are Inscribed

WITH THE SERVICE OF SIMPLE AFFECTION

AND

FAITHFUL LOYALTY.

# முதற்பதிப்பின் முகவுரை.

இப் பூவுலகில் பெருமை பெற்ற பரதகண்டத்தில் பிரபலமான ஒவ்வொரு ஜாதியாருடைய பூர்வ உற்பத்தி, மத்தியகால ஸ்திதி, தத்காலஸ்திதிகளை பல புராணங்களாக எழுதப்பட்டும், அவைகளில், அநேகம் இக்காலத்தில் அச்சிடப்பட்டும் இருக்கின்றன. அவைகளால்; சிலர்- தாம் ஆரிய பிராம்மணர்களென்றும்; சிலர், விஸ்வகர் பிராம்மணர்களென்றும்; சிலர், சவுராஷ்டிர பிராமணர்களென்றும்; சிலர், சூரிய வம்சத்தைச்சார்ந்த க்ஷத்திரியர்களென்றும்; சிலர், சந்திரவம்சத்தைச்சார்ந்த க்ஷத்திரியர்களென்றும்; சிலர், தேவ அங்கத்தாரென்றும்; சிலர், சான்றோரென்றும்; சிலர், வேதோக்தமாக கர்மங்களைச் செய்யும் வைசியர்களென்றும்; சிலர், உயர்குல வேளாளர் என்றும் பெருமை பாராட்டி தம் தம் இனத்தாரை கவுரவப்படுத்தி வர்ச்சே; பலிஜவாரு எனனும் சந்திரகுல க்ஷத்திரியர்களுடைய சரியான சரித்திரம் இதுவரையில் அச்சிடப்படாமையால்; அநேகர், இந்த ஜாதியாரை கேவலம் சூத்திரர்களென்றும், சேவகா ஜாதியார் என்றும் சொல்லி வருகிறார்கள். இடையில், யாதோ ஒரு ஜாதாபிமானமுள்ள பண்டிதரால் கவுரிபுத்திர சரித்திரம் என்னும் பெயரால் ஒரு தெலுங்கு புத்தகத்தைப் பதிப்பித்தாலும்; அதைக் காலதேச வர்த்தமானங்களைத் தழுவி சரித்திர சாசனங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கச்சே அதுவும் சரியான சரித்திரமல்லவென்றே ஸ்பஷ்டமாகியது. ஆகவே,

இந்த பலிஜவாரு எந்த வகுப்பைச் சார்ந்தவர்கள்? இவர்கள் ஆதி ஜனனமெப்படி? இவர்கள் மத்தியகாலத்தில் எப்படி இருந்தார்கள்? இப்போது எப்படி இருக்கிறார்கள்? இவர்கள் பிறப்பில், க்ஷத்திரியர்களா? அல்லது சூத்திரர்களா? இவர்களுடைய குலம், கோத்திரம், நடை, உடை, விவாஹாதி காமங்கள் எப்படிப்பட்டவை? என்பதுகளை அறிந்துய்ய இனமுமேற்றல்ல; சுமார் இருபதுவருஷகாலங்களாக பல பெரியோர்களையும், பல கிரந்தகர்த்தர்களையும் விசாரித்துவந்தேன்; வந்துமென்ன? உள்ளது உள்ளபடி விவரித்தாரை இன்றளவும் கண்டேன் இல்லை. சமீப காலத்துக்கு முன்பு சென்னையம்பதியில் ஸ்ரீமான் அப்பாய் நாயடுகாரு முதலான கனவான்கள் சிலர் கூடி இந்த பலிஜவாருஜாதியாருக்கு தக்கபடி கல்வி அறிவையூட்ட "நாயுடு ஹோம்"- நாயடு ஆசிரமத்தை ஸ்தாபிக்க பிரயத்தனப் பட்டபோது, அச்சங்கத்தைச்சார்ந்தவரோ, மற்றெவரோ ஒருவர், சென்னை 'இந்து' (The Hindu) பத்திரிகையில "நாயுடு ஜாதியாரின் ஜனனமெப்படி" என்று வினவி இருந்தார். இந்த வினாவிற்கு யாராவது விடை எழுதியிருந்தால், அந்த விடையினாலாகிலும் உண்மை வெளியாகுமென்று எதிர்பார்த்திருந்தேன். அந்த வினாவுக்கு இது நாளதுவரையிலும் தக்க விடை எழுதியதாகத் தோன்றவில்லை: ஆகையால, இனி காலதாமதமாக்குவது நல காரியமில்லையென்று கண்டு "அரைப்படிப்பைக் கைக்கொண்டு அப்படியேமேறினால், அரைப்படிப்பு முழுப்படிப்பாகும்" என்ற பழமொழியைத்தழுவி, இந்த பலிஜவாரு

ஜாதியைப்பற்றிய கேள்விகளைப் பலரும் அறிய, ஆகமவேதபுராண இதிகாசாதி கிரந்தங்களினால் எனக்கு தெரியவந்த சங்கதிகளுடன், இக்காலத்தில் ஆங்கிலேய பண்டிதர்கள் பலர் தமது அருமையான அருந்தத்தையும், காலத்தையும், செலவிட்டுக் கண்டுபிடித்த சிலா சாசனங்களினாலும், சரித்திரங்களினாலும், அறியவந்த சங்கதிகளையும் சேர்த்தும்; நான் பரதகண்டத்தில் பெரும்பாகம் யாத்திரை செய்து அங்காங்கு கண்டும் கேட்ட சங்கதிகளைச் சேர்த்தும், வெறுங்காதுக்கு ஒலையாபரணம் சிறந்தது, என்னும் பழமொழியை அனுசரித்து பலிஜவாரைப் பற்றி வினாவும் வினாக்களுக்கு விடையாக இப்புத்தகத்தை முதல்பாகமாக வகுத்தும்; இந்த பலிஜவாரு ஆதி ஆந்திரர்களானபடியால், இவர்களது பாஷையும் ஆந்திரமே என்று எண்ணி இந்நூலின் சில பாகத்தை சென்னை ஆந்திரபிரகாசிகைக்கு தெலுங்குபாஷையில் எழுதி வந்தேன்; ஆனால் காலதேச வர்த்தமானங்களைத் தழுவி இந்த பலிஜவாரு, இப்போது மஹாராஷ்டிரம், தெலுங்கு, தமிழ் முதலான பல பாஷைகளை தம் சுயபாஷையைப்போல வழங்கிவருகிறதினாலும், இவர்களில் பெரும்பான்மையோர், இத்தக்ஷணபாகத்தில் தமிழ்பாஷையையே சுயபாஷையாக வழங்கிவருகிறதாக தெரியவந்தமையாலும், இப்பெரும்பான்மையோர் வழங்கும் தமிழ்பாஷையில் இப்புராணத்தை அச்சிட்டால் அநேகருக்கு உபயோகமாகுமென்று எண்ணி, முன் தெலுங்கில் எழுதிவந்ததையே இப்போது தமிழில் மொழிபெயர்த்து பதிப்பித்தனன்.

இந்நூலை வாசித்துப் பார்ப்பவருக்கு சுமார் பத்தாயிரம் வருஷங்களுக்கு முன் இப்பரதகண்டத்தில் நிகழ்ந்த சரித்திர சங்கதிகளையுந் தொடர்ந்து எழுதப்பட்டிருக்கிறதென ஸ்பஷ்டமாகும். இச்சங்கதிகள் பலகாலங்களிலும், பல பாஷைகளிலும், பல நாடுகளிலும் நிகழ்ந்தவை. இவைகளனைத்தையும் தெள்ளத் தெளியும்படி தொகுத்துக்காட்ட ஒருவர் இருவரால் முடியுமோ? அநேக பாஷைகளையறிந்த அநேக வித்வான்களால், அநேக வருஷங்களாக எழுதவேண்டிய காரியமல்லவா? ஆகவே, ஆனைபுலாவுங்காட்டில் பூனையுலாவத் துணிந்ததைப்போல, இப்புத்தகத்தை நானொருவன் வெளியிட்டதில் கணக்கற்ற குறைவு குற்றங்கள் இருக்கலாம்—ஆயினும், இது முதல் பதிப்பானபடியினாலும், இனி இதை விருத்தியாக்கியும், இத்துடன் 'பேட்டைபலிஜவாரு, முசுகுபலிஜவாரு கொல்ல பலிஜவாரு, கம்ம பலிஜவாரு முதலானவர்களுடைய சரித்திரங்களையும் விவரப்படுத்தி சேர்த்தும, இரண்டாம் பதிப்பாகப் பதிப்பிக்க யோசித்திருப்பதாலும்; புத்திமான்களான பெரியோர்கள் இதிலுள்ள குணங்களை நாடி, குறைவு குற்றங்களுக்காக அநுதாபப்பட்டு அவைகளை எனக்குக் காட்டியும், இனி இதில் சேர்க்கத்தகாதவை இன்னவையென்றும், சேர்க்கவேண்டியவை இன்னவையென்றும் தெரிவிக்க அதிக விநயமாக வேண்டுகின்றனன்.

கோயமுத்தூர், 1896௵ அக்டோபர்மீ 30உ. — இங்ஙனம், சே. ப. நரசிம்மலு நாயடு.

ஸ்ரீ

# இரண்டாம்பதிப்பின்

# முகவுரை.

இந்தப்பலிஜவாரின் புராணத்தினுடைய முதற்பதிப்பின் முகவுரையினால், இதை பிரசுரம் செய்யவேண்டிவந்த காரணம் ஸ்பஷ்டமாகும் — முதற்பதிப்பிற்கண்ட சங்கதிகள், சாசன சரித்திர சாஸ்திரோக்த மானவைகளோ என்பவற்றை அறியும்பொருட்டு, பெரும்பாகமான புத்தகங்களைப் பத்திராதிபர்களுக்கும், பாவலருக்கும், பிராம்மணப் பண்டிதர்களுக்கும், பலிஜவாரைச் சார்ந்த சிலபெரியோர்களுக்கும் அனுப்பித் தந்தோம். இந்த தக்ஷண தேசத்து ஆங்கிலபாஷையில் நடைபெறும் பல பத்திரிகைகளுக்கும், பூஷணமாக பிரகாசிக்கும் சென்னை ஹிந்து பத்திராதிபர், அதைப்பூரணமாகப் படித்துப்பார்த்து, அடியிற்கண்டபடி தமது அபிப்பிராயத்தை எழுதிப்பதிப்பித்திருக்கிறார்,

*ORIGIN AND HISTORY OF BALIJA CASTE*

*BY Mr. S. P. NARASIMMALU NAIDU.*

* * * * *

"The perusal of the book shows, what time, and trouble "should have been taken to gather the various interesting infor- "mation about the various dynasties of Northern and Central "India and of the Vejianagar Dynasty in particular. The * * "introduction is the more important and bulkier part of the book, "and it gives us a synopsis of the various dynasties beginning "of course from the beginning of the world, from Brahma and "from the Solar and Lunar dynasties. Our friend thinks that the "Balejahs are Kshatryas of the Lunar Dynasty, take their name "from an Andhra King called "Balinja", who ruled more than "2803 years before Christ. * * * The famous Vickramodi- "tya is stated to belong to the Andhra Dynasty. "Andhra" "means great, "noble' &c. Andhras have been called "Telu- "gus" or Telingas as they came to occupy the country of "Trilinga. *

சொல்லியும்; புத்தகத்தின் முடிவில் ஹிந்துஜாதி ஆசாரங்களைப்பற்றியும் வேத வேதாந்தங்களிலிருந்து பிரமாணங்களையும் இரட்டிக்காட்டி இருக்கிறார்.

கடைசியாக, புத்தகமுழுதையும் சேர்த்து நோக்குங்கால், இது மிக்க உபயோகமான விஷயங்களையும், விதிகளையும், மறைந்துபோன புராதனசரித்திரத்தையும் காட்ட முதல்முதல் தமிழ்பாஷையில் எழுதப்பட்டதாகையால், இதை இயற்றிய ம-ள-ஸ்ரீ நரசிம்மலுநாயடுடைய தேசாபிமான பிரயத்தனத்தை புகழ்ந்துகொண்டாடத் தகுந்ததேயாம்—சென்னையில் 1896ஹு நவம்பர் 30௳ பதிப்பித்த இந்துப்பத்திரிகையின் பத்திராதிபர்.

---

## அதைப்பற்றி தமிழ்பத்திரிகாசிரியர் கருத்தாவது.

நாகப்பட்டணம் சென்ட் அண்ட்ரு கலாசாலையின் பிரதமஉபாத்தியாயரும், தஞ்சை நாய்க்கர் வமிச சரித்திரத்தை நாகை நீலலோசனிப்பத்திரிகைக்கு நெடுநாட்களாக எழுதிவந்த விதவசிகாமணியுமாகிய ஸ்ரீமான் டி. இராஜம் ஐயங்காரவர்கள் பி.ஏ. இந்தபலிஜவாரு புராணத்தைப்படித்து ஷை பத்திரிகையில் (1899ஹு ஜூலை 4௳) அடியிற்கண்டபடி எழுதி இருக்கிறார்.

"மேலும், சிலநாட்களுக்குமுன்பாக கோயமுத்தூர் வாசியான சேலம் பகடால நரசிமமலுநாயடு அவர்களிடத்திலிருந்து பலிஜவாருபுராணம் என்ற நாயக்கர்வர்சப் பிரகாசிகைப் புத்தகத்தை அடியேன்பெற்று படித்தேன். இவர் நாயக்கர்வம்ச திலகர் என்பதில் அடியேனுக்கு யாதொரு ஆக்ஷேபமும் தோற்றவில்லை—இவ்வம்சத்திற்கு இவர் அழியாதகீர்த்தியையுண்டாக்கி யிருக்கின்றார்—அடியேன் எழுதிவருகின்ற தஞ்சை நாய்க்கர் சரித்திரத்தைப் பொறுமையோடு படித்துவருகின்ற நீங்கள், ஷை புத்தகத்தையும் வாசித்தீர்களானால், எனது விஞ்ஞாபனத்தின் ஆதாரமான சரித்திரம் வெளியாகுமென்று நம்புகின்றேன்". (Sd) T. RAJAM AIYANGAR, B. A.,

## அதைப்பற்றி சிலதமிழ் வித்வான்களுடைய கருத்துக்களாவன.

---

திரிசிரபுரம் மஹாவித்வ சிரோமணியாகிய
ம-ள-ஸ்ரீ, சி தியாகராஜ செட்டியாரவர்கள் மாணாக்கரும்,
தேவாங்கபுராண உரையாசிரியரும்,
கோயமுத்தூர் காலேஜ் பிரதம தமிழ்பண்டிதரும் ஆகிய கும்பகோணம்
ம-ள-ஸ்ரீ வித்வான் R. சபாபதிபிள்ளை அவர்களியற்றிய
எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

சீருறு மறையாகமபுரா ணாதி செப்பிய வருணநான் கினையுந்
தேருறு வாய்ந்த மற்றவை தமமுட் டிங்கடன் மரபினிற் செழித்த
வேருறு பலிஜ வாருமா புராண மின்புல வோர்தலை துளக்கப்
பாருறு மெவரு நன்றுபா ராட்டப் பைந்தமிழ் நடையிற்செய் தன்றல்,

## இரண்டாம்பதிப்பின் முகவுரை.

இத்தகு புலவன் யாரெனிற் கோவை யெழிலுறு கலாநிதி யெனுஞ்சீர்ப்
பத்திரிகைக்குத் தலைவனற் கலைகள் பயிறலே விநோதமா வுடையான்
எத்திசை யோரும் புகழ்பிர சங்க னெனக்கு மற்றெவர்க்கு நல்லினிய
வுத்தம னுலகு புகல்பக டால வொளிர் நரசிம்மலுத்தவனே.

கோயமுத்தூர் மஹாவித்வான் ம-ள-ள-ஸ்ரீ கந்தசாமிமுதலியாரவர்கள்
மாணாக்கருளொருவரும், சென்னைகல் காலேஜ் பிரதம தமிழ்ப்பண்டிதருமாகிய
வித்துவான் ம-ள-ள-ஸ்ரீ, த. திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்கள்,
இயற்றிய,
பன்னிரு சீரடி யாசிரிய விருத்தம்.

சீர்பூத்த வுலகமெலாந் தண்ணளிபதன் மதிக்குடையி னிழற்கீழ் வைக
நீதிநெறி வழாதளித்த பலிஜவா ரெனும்பெயரி னிருபா சோமான்
பேர்பூத்த வங்கிசத்தின் வழிவந்த மன்னவர்தம் பெருமை மன்னோர்
பீடுபெறச் செய்தபல வற்புதமு மவர்புகழும் பிறவு மிக்கப்
பார்பூத்த மாந்தரெலா முணர்ந்தினி விளங்கிடச் செப்பவிற வாரு
புராணமெனப் பெயரிட்டுப் பசுந்தமிழி னொருநூலைப் பகர்ந்து தந்தான்
சீர்பூத்த வெகுசலத்திற் பகடால வார்குடியிற் செனித்தோன் சீர்சால்
சேலநர சிம்மலுநாயுடு வென்னண்பா தமிழிற் சிறந்து ளோனே.

இராமநாதபுர சமஸ்தான வித்வான்களிலொருவரும்
கவிராக்கவியுக ஹாரதத்துவாசாரியாருமாகிய, ம-ள-ள-ஸ்ரீ,
சாயக்குளம், வெங்கடரமண ஐயங்காரவர்க ளியற்றிய
நேரிசை யாசிரியப்பா.

ஆதியாம் பகவ னமைத்த பூவுலகில்—வேதியர் முதலா மேதகுவருண
பேதம்பலவும் பிறங்கிய யாகரருள்—நீதிநெறியே திறுவிய செங்கோல்
செகநாயகோர் நீணிலம் புரந்து—மடியாக் கீர்த்தி வளர்ந்திட வாழ்வோர்.
முச்சுடாக்குலத்து முளைத்தி வேந்தருள்—மெச்சகப்புகழு முழுமதிக் குலத்தோர்
பலிஜவா ரென்று பாருளோர் துதிக்க—மலிபுகழோங்கி வாழ்ந்திடு மரபோர்
இவர் வரலாறுகள் யாவருமெளிதிற்—றவறறு துணரத் தமிழ்வசனத்தால்
வேதமாஞ்சுருதி ஸ்ரீநிகேய முதலா—யோதுநூல்பலவு மொருங்காராய்ந்து
முறைபடவியற்றி முத்துமேரச்சிற்—குறையறப்பதித்துக்கொடுத்துயர்ந்தனனால்
அத்தகைப்பெரியோன் யாவனோவெனில்-கதிரொளிர்கோவை நன்னகர்வாழ்
சுத்தப் பிரமச் சுட ரொளிதனையே—சித்தத்துதிக்கு நியமிக்குடையான் (வோன்
காலாநிதிதன்னைக்கவின்பெறநடத்தும்-வலான்பலநூல்கள்மகிழ்வொடுசெய்தோ
இப்போற்கேதுமில்லையென்றால்—சுப்போர்காணத் தருகாமலரான் (ன்
கவுரவமாதின்தி ரேட்டநிகாரம்—புவியினிற்பொறுத்த புண்ணியசீலன்
பாவியசேலம் பகடால—நரசிம்ம நாயுடாம் நல்லோன்றனே.

என்றும், பின்னும் பலவித்துவான்கள் பலவிதமாக வாணி
த்தும் பாடிகொடுத்தனர், விரிவஞ்சி பதிக்காமல் விட்டனம், இங்கு,

அப்புத்தகத்தின் சிலபிரதிகளை, தென்ஜில்லாக்களில் வதிந்துவரும், பலிஜவார்களிற் சிலருடைய பார்வைக்கு அனுப்பிக்கொடுத்ததில்; படித்துப்பார்த்து, சிலர் அனுதாபக்கடிதங்களை எழுதி எமக்கு உத்சாகமூட்டினார்கள் — சிலர், (அப்புதகமானது தம் ஜாதியாருடைய ஆதி அந்தஸ்தையும், அருமைப்பெருமைகளையும் அறிந்துய்யச் சாதனமானதைக்கருதி) தம்தம் குடும்பங்களில், நடந்த விவாஹாதிசுபகாலங்களில், தமது ஆசாரியர் முதலானவர்களுக்குதாம்பூலங்கொடுதது மரியாதைகள்செய்த பிறகு, எமக்கும் ஓதாம்பூலம் எடுத்துவைதது மரியாதைச்செய்வித்ததாகத் தெரிவித்திருக்கிறார்கள்-அதனால் அவர்கள் தம் ஜாதிவிஷயத்தில் கொண்டிருக்கும்அபிமானமும், அதிற்காகஉழைக்கும் எம்மிடம் கொண்டிருக்கும் அன்பும் ஸ்பஷ்டமாகும். சிலர், அப்புத்தகதனைபூரணமாகப்படித்துபபார்த்தபிறகு,

"தூங்கு சிறை வாவலுறை தொன் மரங்க ளென்ன
ஓங்கு குலம் நையவத னுட் பிறந்த வீரர்
தாங்கல் கடனாகும் தலைசாய்க்க வருநீச்சொல்
நீங்கல் மடவார்கள் கட னென்றெழுந்து போந்தான்"

என்று சீவகசிந்தாமணி, காந்தருவ தத்தையாரிலம்பகத்தில் சொல்லியபடி;

தமது ஜாதியாருக்கு தத்காலத்தில் சம்பவித்திருக்கும் குறைவுகளை நீக்கிகொள்ள பிரவர்த்தித்தவர்கள்—அப்படிபிரவர்த்தித்தவர்களில் முதன்மையானவர்கள் திருநெலவேலி ஜில்லாவைச்சார்ந்த, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலானவிடங்களில் வதிந்துவருபவர்களேயாம் — அதுவிஷயமாக அவர்கள் எமக்கனுப்பி இருக்கும் மஹஜரில்கண்ட சிலபாகங்களின் நகலை இதனடியிற் காணலாம்.

"கோயமுத்தூரிலிருக்கிற, மகா கனம்பொருந்திய, ஸ்ரீமான் சேலம் பகடால நரசிம்மலுநாயடு அவர்கள் திவ்வியசமுகத்துக்கு;

"ஸ்ரீவில்லிபுத்தூர், கசுப்பா மஞ்சபூத்தெருவிலிருக்கிற நாட்டாண்மை சிங்கிலிநாயடு, சிவந்தப்பநாயடு, மேட்டுத்தெருவிலிருக்கிற நாட்டாண்மை அழகிரிசாமிநாயடு, கிருஷ்ணன்கோவிலிருக்கிற அய்யவாரு முத்துசாமிநாயடு, பெருமாள்பட்டியிலிருக்கிற நாட்டாண்மை சங்கப்பநாயடு, தம்பிநாய்க்கன் தெருவிலிருக்கிற நாட்டாண்மை கிருஷ்ணசாமிநாயடு, அய்யம்பட்டியிலிருக்கிறவர்களும் ஷை யூர் நாட்டாண்மை கிருஷ்ணசாமிநாயடு, இராமசாமிநாயடு, சத்திருனம் கிராமத்திலிருக்கிறவர்களும், மடவார் விளாகம், காளையாகுரிச்சி தெருவிலிருக்கிறவர்களும், இடையபெட்டலென்ற கோகுலபிருந்தாவன தெருவிலிருக்கிற இராஜகோபாலநாயடு, அரிகோவிந்தராஜுநாவ், N. E. எதிராஜுலு நாயடு, சுப்பராவ் வகையாரா; இதனடியில் கையெழுத்து வைத்திருக்கிற கவுரவ பலிஜவாரு அதிக வணக்கமாக எழுதி தெரியப்படுத்திக்கொண்ட விண்ணப்பம் என்னவென்றால்,

இவ்விடம், ஸ்ரீவில்லிபுத்தூரிலிருக்கிற நம்முடைய தென்கலை, வடகலை குருசுவாமிகள் நம்முடைய வர்ணாச்சிரம, விபரங்களைக்குறித்து, அநேகசாஸ்திரங்களையும், அநேகசரித்திரங்களையும், அநேகசாசனங்களையும், பார்வையிட்டு, சாஸ்திரயுக்தமாக நம்முடைய ஜாதியாருக்கு சென்ற டிசம்பர்மீ 10உ யில் ஸ்ரீமுகபத்திரிக்கைகள் அச்சிற்பதிப்பித்து அனுப்பியிருக்கிறார்கள். அப்படி அவர்கள் அனுப்பிவைத்திருக்கிற ஸ்ரீமுகபத்திரிகையில் கண்ட சங்கதி சாராம்சத்துக்கு விரோதமாகவும், இப்போதிய மாக்ஷிமைதங்கிய கவர்ன்மெண்டாரவர்களால் சென்செஸ் விஷயமாய் பிறப்பித்திருக்கிற சென்ற 1890வரு சென்செஸ்மானியூல், 31-வது பிரிவில்கண்ட சங்கதிக்கு விரோதமாகவும், இப்போதிய 1900வருஷத்தில் ஷை கவர்ன்மெண்டாரால் பிறப்பிவித்திருக்கிற சென்செஸ்மான்யூல் 36-வது பிரிவில்கண்ட சங்கதிக்கு விரோதமாகவும், இவிடம் திருநெல்வேலிஜில்லா மா ஸ்ரீ, கலெக்டர்துரையவர்களாலும், நாளதுமீ 4உ யில் ஷை துரையவர்கள் யுகதியாகவோ, அல்லது எப்படியோ ஒரு லீஸ்டு அச்சில் பதிப்பித்து, இவ்விடத்திலுள்ள சென்செஸ் சூப்பிரவைசர்களுக்கு அனுப்பிவைத்திருக்கிறார்கள். அதை நாங்கள் பார்வையிட்டதில், ஷை List of Castes லீஷ்டின் சீரியல் நெ. 9-ல், 2-வது கலத்தில், நம்முடைய ஜாதியாரை பலிஜ ஆர் ஜெண்டு என்று காட்டியும், ஷை லீஷ்டின் மார்ஜினில் 3-வது கலத்தில் கம்மவார், காப்பு, கவரையர், ரெட்டி, கம்பளதார், தொட்டியர், நாய்க்கர்மார், வடுகர்கள், என்பதாக காட்டியும்; இவர்களும் பலிஜவார் வம்சத்தைச் சார்ந்த வகுப்பாரென்று எண்ணங்கொண்டு, இவ்விடத்திலுள்ள சென்செஸ் சூப்பிரவைசர்கள் அப்படியே அபிப்பிராயப்பட்டு ஷை விஷயமாய் ஷை வகை என்யூமரேட்டர்களுக்கு உத்திரவுகள் ஷை சூப்பிரவைசர்கள் ஷை விவரப்படி உத்திரவுகள் எழுதியனுப்பியதில், ஷை யார்கள் நம்முடைய ஜாதியாரை கவரையரென்றாவது, வடுகர்களென்றாவது, சென்செஸ்செடியூல் 8-வது கலத்தில் பதிவுசெய்வோமென்றும், இவ்விடத்திலுள்ள என்யூமரேட்டர்கள்சொன்னார்கள். அதின்பேரில் ஷை விபரத்தைக்குறித்து ஷை விதமாக லீஷ்ட்டு அச்சில்பதிப்பித்து, அனுப்பிவைத்த இவ்விடம் ஜில்லா மா-ா-ஸ்ரீ கலெக்டர்துரையவர்களுக்கு ஒருமாஜா மனு எழுதி இவ்விடத்திலிருக்கிற நம்முடையஜாதியார் வழூர்களும் சேர்ந்து கையெழுத்துவைத்து மனு எழுதியனுப்பிவைத்தோம். அது என்னவென்றால், எங்கள ஜாதியார் விஷயமாய மாக்ஷிமைதங்கிய கவர்ன்மெண்டாரவர்கள் பிறப்பிவித்திருக்கிற சென்செஸ்மான்யூலுக்கும் விரோதமாகவும், நம்முடையஜாதியாரை கம்பளம், தொட்டியார், வகையறாக்கள் வகுப்பில் ஜாயிண்டாக சேர்த்திருப்பதானது, நம்முடைய ஜாதியாருக்கு அதிகமனவருத்தத்தைக் கொடுக்கக்கூடியதாக யிருந்ததினாலே; இத்துடன சமுகமபார்வைக்கு அனுப்பியிருக்கிற மனுடிரூப்பட்டில் கண்ட விவரப்படி ஒருமாஜர் எழுதி அதில் இவ்விடத்திலுள்ள 7-ஊராரும் கையெழுத்துவைத்து 1901வரு ஜனவரிமீ 5உ யில் ஷை கலெக்டர்துரையவர்களுக்கு ஷை மாஜரை அனுப்பியிருந்தோம், அதின்பேரில் 1901வரு ஜனவரிமீ 15உ யில், ஒருசர்க்கியூலர் ஆடர் ஷை துரையவர்கள் அனுப்பியிருக்கிறார்கள் ஷை சர்க்கியூலருக்கும் ஒரு நகல் எழுதி இத்துடன் சமுகம் பார்வைக்கு அனுப்பியிருக்கிறோம். அதில் எழுதியிருக்கிறதானது, பலிஜர் ஆர் ஜெண்டுகொப்பந்தம் கம்மவார், கவரை, கம்பளம், தொட்டியர் வகையரா வெல்லாரும்முறையே ஒவ்வொன்றும் பிரதானமான ஜாதி என்று எல்லாருக்கும் தெரிந்தவிஷயம்; ஆகையால், இதைமுக்கியமாய் கவனித்துவரவேணுமென்று

ஷை சர்க்கியூலரிலிருக்கிறது. அதை வைத்து நம்முடைய ஜாதியாரை இப்போது கவரையரென்று, எழுதிக்கொள்வதாக என்யூம்ரேட்டர்கள் சொல்கிறார்கள், அப்படிசொல்லுகிறதானது நம்முடைய குருசுவாமிகள் நமக்கு அனுப்பியிருக்கிற ஸ்ரீமுகபத்திரிகைக்கும்; இப்போது சென்செஸ் மானியூலுக்கு விரோதமாகவும், இப்போது இவ்விடத்தில் சப்ரிஜிஸ்ட்டர் ஆபீசில் பதிரய வகையரா வில். நம்முடைய ஜாதியார் ஜாதிப்பெயர் கவரவரென்று அனுஷ்டானத்திற்கும் விரோதமாகவும், பலவிதமாக ரொம்ப கலவரமாக யிருக்கிறது.

ஷை விஷயமாக சங்கரநயினார் கோவில் கசுப்பாவிலும்,புளியங்குடியிலும்,ஸ்ரீவைகுண்டந்தாலூகா புதுக்குடி முதலான இடங்களிலும், இவ்விடம் ஸ்ரீவில்லிபுத்தூர்கசுப்பா சரம் கிருஷ்ணன்கோவிலிலிருக்கிற அய்யவாரு முத்துசாமிநாயடு வகையாரவர்கள் கேட்டுவந்து, தாங்கள் ஷை சென்செஸ்செடியூல் 3-வது கலத்திலும், 8 வது கலத்திலும், என்னவிதமாக எழுதிவைக்கிறதென்றும் ரொம்ப மனவருத்தமாகக் கேட்டிருக்கிறார்கள். மேல்கண்ட விஷயமாய் இந்த ஜில்லாமுழுவதும் நம்முடைய ஜாதியார்விஷயமாக பலவிதகலவரமாக யிருக்கிறது. ஷை விஷயமாக இவ்விடம் வந்திருக்கிற ஷை லீஸ்டாப் காண்ட்டு அச்சுபதிப்பு லீஸ்ட்டு ஒன்று, இவ்விடத்தில் கிடைத்த லீஸ்டும் 1-ம் ஷை லீஸ்ட்டின்பேரில் நாங்கள் கலெக்டர் துரையவர்களுக்கு எழுதியிருக்கிற மனுமாஜாவுக்கு ஒருநகலும், அதில் புட்நோட்டாக எழுதியிருக்கிற இங்கிலிஷ் தர்ஜிமாவுக்கு ஒருநகலும்; அதின்பேரில் இவ்விடம் ஜில்லாகலெக்டர் துரையவர்களால் பிறப்பிவிசதிருக்கிற சர்க்கியூலர் ஆர்டருக்கு ஒருநகலும், நம்முடைய குருசுவாமிகள் எங்களுக்கு அனுப்பிவைத்திருந்த ஸ்ரீமுக பத்திரிக்கையில் ஒன்றும் ஆக இத்தியாதி ஆதாரங்களையும் ஷை பேப்பர்களையும் இத்துடன் தங்கள்சமுகம் பார்வைக்கு அனுப்பியிருக்கிறோம்.

2. மேல்கண்ட பேப்பர்கள் எல்லாவற்றையும் சமுகத்தில் பூராவாக பார்வையிட்டு ஷை விஷயமாய் சமுகத்தில தீர்க்கஆலோசனைசெய்துகொண்டு, ஷை ஆர்டர்களுக்கும் ஷை லீஸ்டில்கண்ட நம்முடைய ஜாதிவிஷயமாய்ச் சொல்லியிருக்கிற அர்த்தங்களுக்கும், ஆக்ஷேபனை சமாதானம்சொல்லி எங்களில் இவ்விடத்திலிருக்கிற N. E. எதிராஜலுநாயடுக்கு சென்ற டிசம்பர் 18௳ 20௳ 22௳ யிலும் சமுகத்திலிருந்து எழுதியிருக்கிற போஸ்டுகார்டுகளில் கண்டபடிக்கு நம்முடைய ஜாதியாரை க்ஷத்திரியராக எடுத்துகொள்ளவேணுமென்று கவர்னமெண்டாருக்கு எழுதியிருக்கிறபடிக்காவதும்,அல்லது நமது குருசாமிகள் அனுப்பியிருக்கிற ஸ்ரீமுக பத்திரிகையில் கண்டபடி, நம்முடையவர்களுக்கு கவரவர்களென்று இருக்கலாமென்று சமுகத்துக்கு யுக்தமாக தோன்றினால்; அந்தப்படிக்காவதும்,கவரபலிஜவாரென்று இருக்கலாமென்று சமுகத்துக்கு தோன்றுகிற விஷயத்தில் அந்தப்படிக்காவதும்,ஆந்திர க்ஷத்திரியரென்றுயிருக்கலாமென்று சமுகத்துக்குத்தோன்றுகிற விஷயத்தில்அந்தப்படிக்காவதும் அல்லது சாஸ்திர யுக்தப்படி எவ்விதமாக யிருக்கலாமோ அவ்விதமாக சமுகத்தில் யோசித்தும், சீர்திருத்தத்துக்குக்கொண்டுவர தங்களால் கூடிய முயற்சியும் பிரயாசையும் எங்களுக்காக சமுகத்தில் எடுத்துகொள்ள வேணுமென்றுமகாபவந்தனங்களோடு கேட்டுக்கொள்ளுகிறோம்.

இப்படிக்கு, N. E. எதிராஜலுநாயடுவகையரா. பலபெயர்கள்

அந்த மஹாஜநரோடு எமக்கு வந்த ஸ்ரீவில்லிபுத்தூர் வடகலை,
தென்கலை சுவாமிகளுடைய ஸ்ரீமுகத்தை இதனடியிற் காணலாம்.

# ஸ்ரீமுகப்பத்திரிகை.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

கவுரவ பலிஜவாரு ஆதி ஜெனன உற்பத்தியின் விபரத்தை தெரிந்து; அனுஷ்டானத்திற்கு கொண்டுவருவதற்கு, அடியில் கையொப்பமிட்டிருக்கிறவர்களால் பிரசுரம் செய்யப்படுகிறதாவது.

(1) கவுரவ பலிஜவாருடைய ஆதிஜெனன விஷயத்தைப்பற்றி, ஆகம வேத ஆதிபூர்வ கிரந்தங்களாகிய பாரதம், மகாபாகவதம், விஷ்ணுபுராணம், மனுதருமசாஸ்திர முதலிய பலகிரந்தங்களை ஆதியோடந்தமாய் நாம் பரிக்ஷித்தும்; அதற்காதாரமாக இந்த கவுரவபலிஜவாரு ஜாதிவிஷயமாக கோயமுத்தூரில் இருக்கிற, தற்கசாஸ்திரம், யோகசாஸ்திரம்; சாமுத்திரிகா சாஸ்திரம், மனுதர்மசாஸ்திரமுதலிய பூர்வ உற்பத்தி கிரந்தங்களை வெகுகாலமாக அங்காங்கு பார்த்தும், 1897ஹு த்தில் சேலம் பகடால நரசிம்முலு நாயடுகாரால், பதிப்பித்திருக்கிற பலிஜவாரு புராண புஸ்தகத்தை ஆதியோடந்தமுமாக பார்த்தும், ஷை புஸ்தகத்தின் 7-வது பக்கத்தில் தெளிவாகவும், வியக்தமாகவும் சொல்லியிருக்கிற விபரங்களினாலும்; 1890 ஹு அக்டோபர் மீ த்தில் இப்போது மாக்ஷிமைதங்கிய கவர்ன்மெண்டாரவர்களால் பிரசுரம்செய்திருக்கிற, சென்சஸ் மானுயல் 10-வது பக்கம், 31-வது பிரிவின் 8 வது வரியிலும், 11-வது பக்கம் 1-வது வரியிலும், சொல்லியிருக்கிறபடி, (ராவ்) என்று தம்மைச்சொல்லிக் கொள்கிறவர்கள் பிராமணர்களாகவாவது (பலிஜ) ஜெண்டுகளாகவாவது இருக்கலாமென்றும் கண்டிருப்பதினாலும், இப்போது நாளது ஹுத்தில் பிரசுரம் செய்திருக்கிற சென்செஸ் மானுயல் 10, 11 வது பக்கங்களில், 35 வது பிரிவில்; 2 வது உட்பிரிவில், ராயலு என்று தம்மைச்சொல்கிற ஒருவர், பிராமணராகவாவது, பலிஜ ஜாதியாயாகவாவது, இருக்கலாமென்று கண்டிருப்பதனாலும், இதனடியிற்கண்டிருக்கிற திருஷ்டாந்திரங்களினாலும் இவர்கள் (ஆதிபூர்வம் சந்திரகுல தெலுங்கு க்ஷத்திரியர்களாகிய கவுரவ பலிஜவார்களென்றே தீர்மானமாக ஏற்படுகிறது).

(2) இந்த கவுரவஜாதியாருக்கு. இவிடம் திராவிட தேசமாகிய தென் பிராந்தியங்களில் இப்போது வழங்கிவருகிற ஜாதிப்பேர் கவரையென்றும், ஜெண்டியென்றும் இருப்பதைக்குறித்து, ஆகமவேத புராணகிரந்தங்களை பார்வையிட்டதில், மேல்கண்ட ஜாதிபேர்கள் ஷை கிரந்தங்களுக்கு ஒற்றுமையாக

இல்லை. அந்த ஜாதிப்பேர் கவரவர்களென்று இருக்கிற கிரந்தவார்த்தைக்கு இந்த பிராந்தியங்களில் விகர்பமாகவும், நாட்டோடிவார்த்தையாகவும், கவரை என்று வந்ததாகவும்,—ஜெண்டு என்று வந்திருக்கிறவார்த்தையானது அது ஒரு மேன்மையைக்குறித்துவந்த பட்டப்பேராகவா இருக்கிறதேயல்லாமல்; ஜாதியைக் குறித்துவந்த பெயராகயில்லை.

(3) அதற்கு திருஷ்டாந்தமாய்-வடபிராந்தியங்களில் உள்ள கவரவ பலிஜவார்களில் கவர்ன்மெண்டு பரிக்ஷைகளில் 8, 2, 81ல், ஜெனரல் நெ. 1397ல்; மிடில்ஸ்கூல் பரிக்ஷையில் தேறின, கொமூருசெட்டி பதமநாபசாமிநாயடு, குமாரர் கொமூருசெட்டி அப்பல் நரசிம்மராவ் வகையராப்பேர்களும், ஷை ஷை மீ டி யில் மெட்டிகுலேஷன் கிளாசில் ஜெனரல் நெ. 717 ல், பாசாயிருக்கிற T. N நாகப்பநாயடு குமாரர் T. N. வெங்கோபராவ் வகையராவும், 5, 2, 84 ல் 82வரு த்திய மிடில்ஸ்கூல் பரிக்ஷையில் தேறி, ஜெனரல் நெ. 83 ல், பிரசுரம் செய்திருக்கிற K. வெங்கிடரெட்டிநாயடு குமாரர், கோ. க. சேஷகிரிராவ் வகையரா அநேகப்பேர்களும், ஜெனரல் நெ. 1678 ல் கொண்டல செங்கல்வராவ்நாயடு குமாரர் கொண்டல வெங்கடேசுவரராவ் வகையரா பேர்களும், தங்களுடைய பூர்வ வம்சத்தின் அனுஷ்டானத்தைசரியாய் அனுஷ்டித்து வந்திருக்கிறார்கள்.

(4) இப்போது தங்கள் ஜாதியின் பூர்வ அனுஷ்டானத்தை இதுமுதலாகவாவது அனுஷ்டித்து வருவதற்கு ஒரு நல்லவழி யேற்படுவதால், அதாவது 10, 1, 1901 முதல் சென்சஸ் எடுத்து எழுத கவர்ன்மெண்டில் ஆரம்பமாவதால், சென்சஸ் எடுத்து யெழுதவருகிற யென்யூமரேட்டர்கள், சென்சஸ் செடியூலுக்கு ஒத்திருக்கும்படியான ஜாதிகளை சொல்லி யெழுதிவைக்கும்படி சொன்னால், விபரமாய் ஷை சென்சஸ் செடியூல் 3-வது கலமுதல்—16-வது கலம் வரையில், பூராவாக எழுதவைக்கவேண்டிய விஷயங்களில், 3வது கலத்தில் (ராவ்) அல்லது (ராவ்நாயடு) என்றும், 8வது கலத்தில் (கவரவர்கள்) என்றாவது (கவரவ பலிஜி) என்றாவது கலவரத்திற்கிடமன்றியில ஒரேவிதமாய்ச் சொல்லி எழுதிவைக்கவேண்டும், இப்படி எழுதிவைப்பதினால் இதுமுதல் அனுஷ்டானத்திற்கு சரியாய் வந்துவிடும.

(5) இதற்குமுன் அயன் பட்டாக்களிலும், பத்திரங்களிலும், யேர்ப்பட்டு அனுஷ்டானத்திலிருக்கிறபேர்களும், சர்க்கார் உத்தியோகத்திலிருக்கப்பட்டவர்கள் சர்வீசு ரிஜிஷ்டர்களில் எழுதிவைத்திருக்கிறபேர்களும், இதன் 4-வது கலத்தில் சொல்லியிருக்கிறபடிக்கு, சென்சஸ் செடியூல் 3வது கலத்தில் எழுதிவைப்பதில் ஆக்ஷேபனைக்கிடமில்லை. இப்போது பிறந்திருக்கிற குழந்தைகளுக்கும், பத்திரமுதலியதில் அனுஷ்டானத்திற்கு வராமலிருக்கிற பையன்களுக்கும் ஷை 3வது கலத்தில் (ராவ்) என்றாவது (ராவ் நாயடு) என்றாவது பட்டப்பேர் சாதாரணமாய் எழுதிவைக்கவேண்டியது.

(6) இந்த தென்தேசத்தில் கவரவ பலிஜவார் வீட்டுப்பேர்கள் அநேகமாக அனுஷ்டானத்திற்குவராமல், விட்டுப்போயிருப்பதாக யிருக்கிறது. அதை விபரமாகசொல்லி எழுதிவைக்கக்கூடுமானால். வீட்டுப்பெயர் தெரிந்தவர்கள் அவர்கள்பெயரைச்சொல்லி எழுதிவைக்கும்போது, அவர்களுடைய பேருடனே வீட்டுப்பெயரையும், விபரமாகச்சொல்லி எழுதிவைக்கலாம், கேட்டவர்களுக்கும் ஜாதி கவரவர்களென்றே சொல்லவேண்டும்.

(7) இந்த வீட்டுப்பெயர்களை, இச்சஜாதியார் கலியாண சுப சோபனகாலத்தில் அவரவர்கள் பெயருடனே; அவரவர்கள் வீட்டுப்பெயரையும்; பட்டோலையில் அனுஷ்டானத்திற்கு கொண்டுவந்தால், அவர்களின் கோத்திரம், வம்சவழி இவைகள் நன்றாய் துலங்கும்; இதுமுதலாக மேல்கண்ட அனுஷ்டானங்களை சவருதலன்றியில் அனுஷ்டிப்புக்கு சரியாய்க்கொண்டு வருவீர்களென்று நம்புகிறோம்.

☞ அச்சங்கி திருமலை, வடபத்திரசாயி தாத்தாசாரியார் }
கந்தாடை வி. ஸ்ரீ. அழகராசாரியார் } தென்கலை

ஜயகுரு, கோடி கன்னிகாதானம், கீழ்த்திருமாளிகை
சின்னகோபாலசுவாமி தாத்தாசாரியார், } வடகலை
ஜயகுரு, கோடி கன்னிகாதானம், ஸ்ரீநிவாச தாத்தாசாரியார் }

தென்கலை வடகலை குருசுவாமிகள் ஸ்ரீவில்லிபுத்தூர்.

இந்த மஹஜரும், ஸ்ரீ முகமும் எமக்கு எட்டியபோது, சென்னை கவர்ன்மெண்டார் 1901௵ காணிஸ்வாரி குடித்தொகைக்கணக்கோடு, இந்தராஜதானியில வசிக்கும் பலஜாதியாருடைய ஜாதி அந்தஸ்துக்களையும் தெரிந்து சரித்திரம் எழுதக்கருதி, ஒவ்வொரு ஜில்லாவின் கலெக்டரவாகளுக்கும், மற்றும் கற்றோர் முதலான பெரியமனுஷர்களுக்கும் உத்திரவுகளை அனுப்பினார்கள். அவ்வுத்திரவுகளை அனுசரித்து கோயமுத்தூர் கலெக்ட்ரவர்கள், கஸ்பா தாசில்தார வாகளையும், வேறுசில படிப்பாளிகளான பெரியோர்களையும், அவர்களோடு எம்மையும் சேர்த்து ஒருச்சபையைக்கூட்டி ஜாதி அந்தஸ்துவிஷயங்களைப்பற்றி சாசனைசெய்யவித்து, சபையாருடைய தீர்மானங்களை தெரிவிக்கும்படி நியமித்தபிரகாரம், கோயமுத்தூர் தாலூகா கசசேரியில் இரண்டு தடவைகளிலச் சபைகூடி தீர்மானித்தச்சங்கதியை இதனடியிற் காணலாம்.

---

## OUR CASTE CLASSIFICATIONS AND CENSUS OPERATIONS

"With reference to the letter dated 25th May 1901 of the Superintendent of Census Operations Madras, our Collector has appointed the following gentlemen, Messers E. T. Vedanayagam Pillay, Avl., Tahsildar, Coimbatore Viz. 'President,' H. Rama Row Avl. 1st Grade Pleader, C. Bujanga Row Avl. B. A., Asst. Master

Coimbatore College, Rajupurohitham Venkatasubba Sastrilu and S. P. Narasimmulu Naidu, Editor of the Coimbatore Crescent as members of the District Committee to discuss and criticize this scheme in so far as it relates to the Castes and tribes commonly found in Coimbatore District. The members met twice (on Saturday the 6th and on Wednesdey the 10th Instant; at the Taluk Office and carefully scrutinized the existing Classification. With regard to the *Balija Caste* which was placed in the 4th Class of the Classification the members recorded that they (Balija Caste) has good claim to be classed as Kshatriyas. One of the members (S. P. Narasimmulu Naidu) filed a phamplet containing the following letter &c. to the Superintendent of Census Operations Madras.

"THE CRESCENT" OFFICE,
COIMBATORE,
*10th July* 1904,

To

*M. FRANCIS Esq.* I. C. S.
*Superintendent of Census Operations,*
MADRAS.

SIR,

In reference to your letter No. 1018 of the 25th May 1901, enclosing a 'Classification of Castes and tribes', forwarded to all Collectors with a view to have the Classification carefully scrutinized, I have the honour to bring to your notice that the Balija Caste mentioned in the 4th page of the said classification is given a wrong place inasmuch as it ought to be placed in Group II under the head of Kshatriyas.

The Balija Caste people are Kshatriyas of the Lunar Race as can be proved by a reference to the Bahgavatham, Vishnupuranam and Brahmmandapuranam &c. (Vide XXIII Chap. of the IX Scanda of Bahgavatham. Journal of the Asiatic Society and District Manuals of Tanjore, Madura, Nellore &c.)

In this connection, it will be interesting to note that one Sevappa Naidu married Murthiammal, sister-in-law to Achutha Deva Rayulu of Narapathi Samasthanam of Vijianagar and as a marriage portion or dowry received the territory of Tanjore over which he ruled as king for a long period. It was at this time that the celebrated Tirumalay Naidu of Madura took as wife one of the daughters of Sevappa Naidu's family. Tirumalay Naidu's grandson, one Chockalinga Naidu, married Mangammal daughter of Vijiaragavalu Naidu, a grandson of the said Tanjore Sevappa Naidu. It will thus be seen that the Naidu rulers of Tanjore, Trichy and Madura were all relations of Narapathi Samasthanam of Vijianagaram. (Vide Pages 502, 503, 504, 505- Vol. VI Part II. The Journal of Asiatic Society, &c. The District Manuals of Madura, Tanjore &c.)

That these Narapathies of Vijianagaram were Kshatrias of the Lunar race can be seen clearly by a reference to Manucharithra, Parijathapaharanam. Prouda Prabanda Kavi Cheritra &c. (Page 521, Vol. VI The Journal of Asiatic Society of 1838), and that they were direct dessendants of the great Andra kings can be proved with equal satisfaction by refering to Col. Mackenzie's M. S. S. in the Introduction of A. D. Campbell's Telugu Grammer and James Prinsep's Indian Antiquities Useful tables on Andra kings, Pages 241 and 242 will shew that the Andras were immediate descendants of the well-known Yayathi Raja of the Lunar race.

I have also the honour to state that, in 1896 a tamil book called Balijavaru Puranam was published by me proving the above facts in the most incontestable manner. The book was circulated among learned Pundits and Brahmins, among whom may be mentioned M. R. Ry. Sabapathy Pillai Avl. Hd. Tamil Pandit of the Coimbatore College, M. R. Ry, Tiruchittrambalam Pillai Avl. Tamil Pandit L. M. High School, and Samakulam

Venkataramana Iyengar a well known Brahmin Pundit. These have not only commended the arguments in the book and acknowledged the truth of the line of reasoning but have also furnished me with சாற்றுக்கவிகள் to shew their appreciation of the work.

Besides the above mentioned gentlemen, the great Vaishnava Iyengar Brhmin priests (Attangi Thirumalay Vadabadra Sai Thatha Chariar, V. S. Kandadai Alaga Chariar of Y Marks, and Raiguru, Koti Kannikadanam, Keel Thirumaligai, Chinna Gopalasamy Thatha Charriar, Raiguru; Koti Kannikathanam, Sreenivasa Thatha Chariar of U Marks) of Srivilliputhur have also approved of it as authoritative history and sent in a ஸ்ரீமுகம் to all Balija Caste people advising them how to fill up the names, titles, castes &c. in the recent Census Forms. A copy of the book and the authentication ஸ்ரீமுகம், and a geneological chart of the Balija Caste are herewith submitted for your perusal.

Under these circumstances, I think it will only be just and reasonable that the Balija caste should be spared the ignominy of being placed lower than the Komitees and other similar classes when their (Balija's) real status is that of Kshatriyas,

I have the honour to be

Sir,

Your most obedient servant,

S. P. NARASIMMULU NAIDU,

*Editor of the Coimbatore Crescent,*

---

"The Coimbatore Crescent" 12th July 1901.

---

## இந்துஜாதியார் நியமனம்.

நமது நாட்டில் சமீபகாலத்தில் குடித்தொகை கணக்கெடுத்ததில்; அக்குடிகளுடைய ஜாதிவருணபேத அந்தஸ்துக்களை; அந்த குடித்தொகைப் புத்தகங்களில் பதிக்கக்கருதி, ஒவ்வொரு ஜில்லாவிலிருக்கும் சில பெரியமனுஷர்களை ஒரு சபையாகக்கூடிப் பேசித்தெரிவிக்க வேண்டுமென்று அந்த இலாகா

சூபிரெண்டெண்டவர்களுடைய கடிதத்தின்படி நமது கோயமுத்தூர் ஜில்லா கலெக்டரவர்கள், நமது நகரத்திலிருக்கும், கஸ்பா தாசில்தாரர் மகா-ள-ள-ஸ்ரீ, ஈ. டி. வேதநாயகம் பிள்ளையவர்களையும், முதல்கிரேட் பிளீடரும், அநேகவெளதீக வைதீக விஷயங்களை அறிந்தவருமான மகா-ள-ள-ஸ்ரீ, எச், இராமராயரிவர்களை யும், கோயமுத்தூர் காலேஜ் உபாத்தியாயரும், ஜாதிவிவாசரித்திரங்களை அறிந்த வருமான மகா-ள-ள-ஸ்ரீ, புஜங்கராயரவர்களையும், ஸமஸ்கிருத தெலுங்குபாஷை களில் மஹாபாண்டித்திய முடையவரான மகா-ள-ள-ஸ்ரீ, இராஜபுரோஹிதம் வெங்கடசுப்பு சாஸ்திரிகளையம், சே. ப. நரசிம்மலுநாயடு அவர்களையும், ஒரு கமிட்டியாராக நியமித்ததில்; அந்த மெம்பர்கள் கஸ்பா தாலூகாகச்சேரியில் இரண்டுவிசை, அதாவது ஜூலைமீ 13உ சனிக்கிழமையும், 10உ புதன்கிழமை யன்றும் கூடி வெகுநேரம்பேசி ஜாதிபட்டியில்கண்ட பெயர்களை வெகுஜாக்கிர தையாக தக்க இடங்களுக்கு மாற்றினார்கள். அந்த ஜாதிபட்டியில் பலிஜவாரை ச்சூத்திரரென்று கண்டிருப்பதைககருதி, அந்த ஜாதியாரை க்ஷத்திரியர் வகுப்பில் சேர்க்கத்தகுந்த நல்ல ஆதாரங்களிருப்பதாக ரிக்கார்டு செய்தார்கள, அதனமேல் அந்த மெம்பர்களுடைய கருத்தின்படி அவர்களில் ஒருவராகிய சே, ப. நரசிம்மலு நாயடு அந்த உண்மையை பிரசித்தப்படுத்த, இதனடியில் கண்ட கடிதத்தையும், அதற்கேற்ற ஆதாரங்களையும் ஒரு சிறுபுத்தகமாகப்பதிப்பித்து, சூபரிண்டெண் டவர்களுக்கு அனுப்பும்படி தாக்கல்செய்தார்.—அது இது.

சென்னை

## சென்சஸ் கானிஸ்வாரி இலாகா சூபரெண்டாண்டு,

கனம் W, பிரான்சிஸ் துரையவர்கள் சமுகத்திற்கு.

ஐயா,

கோயமுத்தூர் கலெக்டர் அவர்களுடைய 1—6—01 தேதியின் 206 நெம்பருள்ள கடிதத்துடன் அனுப்பலான, தங்களுடைய 1901ளு மேமீ 25உ 1018 நெம்பர் கடிதத்தையும், ஜாதிவருண வகுப்பாருடைய தாரா தர அந்தஸ்த் தைக்காட்டும் பட்டியையும் படித்துப்பார்த்தேன்.

1. அந்த ஜாதிவகுப்பு பட்டியில் 4-வது பக்கத்தில் பலிஜவாரை அவர் களுடைய சரியான 2-வது வகுப்பு க்ஷத்திரியர்கூட்டத்தில் சேர்க்காமல்; 4-வது கூட்டத்தில் சத் சூத்திரர் என்று எழுதி, கீழானதும் தப்பிதமானது மான இடத்தில் பதிப்பித்தது சரியல்ல என்று தோன்றுகிறது. ஏனெனில்,—

2. பலிஜவாரு சந்திர குல க்ஷத்திரிய வம்சத்தைச்சார்ந்த யயாதியின் சந்ததிகளென்று, பாகவதம் 9 வது ஸ்காந்தம், 23-வது அத்தியாயத்திலும்; விஷ்ணுபுராணம்; வாயுபுராணம், பிரமாண்டாதி புராணங்களிலும்; ஆசியா டிக்கு ஜர்னல்கள்; மதுரை, தஞ்சை முதலான டிஸ்டிரிக்டு மானியூல்கள், கர்னல்மெகன்சி, டெயிலர், இராபர்ட்ஸ்வெல் முதலானவர்களுடைய கிரந்தங் களிலும் ஸ்பஷ்டமாகிறது.

3. எப்படி எனில்—விஜயநகரம் நரபதி ஸமஸ்தானத்தைச் சார்ந்த அச்சுத தேவராயலுடைய மனைவி திருமலையம்மாளுடைய சகோதரி மூர்த்தி அம்மாளை அவர் இனத்தைச்சார்ந்த சேவப்பநாயடுகாரு விவாஹம்செய்து கொண்டதற்காக, தஞ்சாவூர் சமஸ்தானத்தை அவருக்கு ஸ்ரீதனமாக கொடுத்தும், அதை ஆண்டு அனுபவித்துக்கொள்ளும்படி அதிகாரமும் கொடுக்கப்பட்ட சங்கதி தஞ்சாவூர் சரித்திரம், 112 நெம்பர், கவண்டர்மார்க்கு 325லும், ஆசியாடிக்கு ஜர்னல் 6-வது வாலியம் 502,506-வது பக்கங்களிலும் மற்ற கிரந்தங்களிலும் ஸ்பஷ்டமாகிறது.

4. இந்த தஞ்சை சேவப்பநாயடு அவர்களுடைய குடும்பத்தைச்சார்ந்த, ஒரு பெண்ணை மதுரை திருமலைநாயடுகாரு விவாஹம்செய்துக்கொண்டதன்றியில், அந்தத்திருமலை நாயடவர்களுடையப் பேரனாகிய சொக்கலிங்கநாயடுகாரு, ஷை தஞ்சை சமஸ்தானம் சேவப்பநாயடுகாருடைய பேரனாகிய விஜயராகவநாயடுகாரின் குமாரத்தி மங்கம்மாளை விவாஹம் செய்துக்கொண்டதாக தஞ்சை சரித்திரம் 122 நெம்பர், கவுண்டர்மார்க்கு 325, ஆசியாடிக்கு ஜர்னல் 6-வது வாலியம் 502, 503-வது பக்கங்களிலும்; மதுரை, தஞ்சைஜில்லா மானியூல் முதலான கிரந்தங்களினாலும், ஸ்பஷ்டமாகிறபடியால்; தஞ்சை; திருச்சி, மதுரையில் அரசாண்ட விசுவநாத, திருமலை, விஜயரங்க சொக்கநாத நாயடுகார்களும், தஞ்சையிலாண்ட சேவப்ப அச்சுத விஜயராகவநாயடு அவர்களும் விஜயநகர நரபதி சமஸ்தானத்தைச்சார்ந்த நரசிம்ஹ, கிருஷ்ணதேவ, அச்சுத தேவராயர்களுடைய சந்ததிகளென்று ஸ்பஷ்டமாகிறது.

5 விஜயநகர நரபதி சமஸ்தானத்தார் சந்திரவம்ச க்ஷத்திரியர்கள் என்று மநுசரித்திரம், பாரிஜ தபஹரணம், கிருஷ்ணராஜ்யவிஜயம், பிரவுட பிரபந்தகவி சரித்திரம முதலான கிரந்தங்களினாலும்; கர்னல் மெக்கன்ஜி, இண்டியன் ரிவியூவ் சதாசிவ மாஹாராயர் கிரந்த எழுத்து தர்மசாசனம் நெம்பர் 17 லும், ஆசியாடிக்கு ஜானல் 6-வது வாலியம், 521-வது பக்கத்திலும் இதர கிரந்தங்களினாலும ஸ்பஷ்டமாகிறது.

6. இந்த விஜயநகர நரபதிகள்; விக்கிரமார்க்கருடைய குடும்பத்தைச் சார்ந்தவர்களென்றும், விக்கிரமார்க்கன் ஆந்திரவம்ஸ க்ஷத்திரியரென்றும், அந்த ஆந்திரர்கள் யயாதியின் சந்ததிகளென்றும்; ஆகவே பலிஜவாரும் யயாதி சந்ததியைச்சார்ந்த சந்திரவம்ச க்ஷத்திரியரென்பதும் ஸ்பஷ்டமாகிறது.

7. இத்தியாதி ஆதாரங்களைக்கொண்டு 1896ஞ்ல பலிஜவாருபுராணம் என்ற, பெயரால் நான் ஒருபுத்தகத்தைப் பதிப்பித்து; பிராம்ஹணாதி பலஜாதியார்களுடைய பார்வைக்கனுப்பியதில்; அது சரியான சரித்திரமென்று கோயமுத்தூர் காலேஜ்பண்டிதர் ஸ்ரீ சபாபதிபிள்ளை அவர்களும் ல. மி. ஸ்கூல் பண்டிதரான ஸ்ரீ திருச்சிற்றம்பலம்பிள்ளை அவர்களும், சைவ வைணவ மதங்களை கன்கறிந்த ஸ்ரீவைணவ பிராம்ஹணஜாதியார் சாமுககுளம வெங்கடரமணதாசரவர்களும் பின்னும் சிலரும் அதற்குச் சாற்றுக்கவிகள் பாடிக்கொடுத்திருப்பதுடன்

திருநெல்வேலிஜில்லா; ஸ்ரீவல்லிப்புத்தூரிலிருக்கும், மஹா வைஷ்ணவ தென்கலை வடகலை வைஷ்ணவ பிராமண ஆசாரியர்களாகிய ஸ்ரீ அத்தங்கி திருமலை வடப்பத்திர சாயி தாதாசாரியர், (2) கந்தாடை வீ. ஸ்ரீ அழகாராசாரியார், (3) இராயகுரு கோடி கன்னிகாதானம் கீழ்திருமாளிகை சின்ன கோபால சுவாமி தாதாசாரியார், (4) இராயகுரு கோடி கன்னிகாதானம் ஸ்ரீனிவாச தாதாசாரியார தென்கலை வடகலை குருசுவாமிகள் தங்கள் ஸ்ரீமுகத்தில் அடியிற் கண்டபடி எழுதியிருக்கிறார்கள்.

☞ அந்த ஸ்ரீமுகத்தை 8-வது பக்கத்தில் பார்க்கவும்.

ஆகையால், இத்தியாதி சாசனங்களைப் பார்வையிட்டு பலிஜவாரை கோமுட்டி முதலான ஜாதிகளுக்குக் கீழ்பதிப்பித்து, அச்சாதியாரை அவமானப்படும்படி செய்யாமல் க்ஷத்திரியர்களாக 2-வது கூட்டத்தில் சேர்ப்பதுதான் சரியான இடமும், நியாயமென்று தெரிவிக்கலானேன.

இப்படிக்குத் தங்கள் ஊழியன்.

சே. ப. நரசிம்மலு நாயடு,

கலாநிதி பத்திராதிபர்.

இந்தப்படி பலிஜவாருடைய சரித்திர விவரங்களை பல புராண சிரந்தங்களிலிருந்து மேற்கோள்களாக எடுத்துக்காட்டி எழுதிக்கொடுத்த புத்தகத்தைப் பார்த்து கோயமுத்தூர் கலெக்டரவர்கள் எமக்கு எழுதியகடிதமிது

To

M. R. Ry. S. P. Narasimmalu Naidu Garu,

*Editor of the Crescent, Coimbatore.*

Sir;

In acknowledging the receipt of your letter dated 28th current and the enclosures thereto- I have the honour to thank you much for the interesting information furnished by you regarding the Balija Caste-

I have the honour to be Sir,

Your most obedient servant,

(Sd) C. W. T. COTTON,

*For Collector.*

இதன் கருத்தாவது-பலிஜவாரு ஜாதியாருடைய மனோஹரமான சரித்திரத்தைப்பற்றி எழுதியனுப்பியதற்கு மிக்கவந்தனம் செய்கிறேன் என்பதாம்-கிற்க.

இந்தக்கடிதத்தையும், இதற்காதாரமான தஸ்தாவேஜுகளையும், சென்னை சென்ஸஸ் சூபரெண்டாண்டவர்களுக்கு அனுப்பியதில், அவர் இவைகளில் கண்டச்சங்கதிகளோடு, மற்றசரித்திர சாசனங்களையும் தழுவி, 1901ஹு பதிப்பித்த சென்ஸஸ் ரிபோர்ட்டு 15-வது வாலியம்; 144 பக்கத்தில்; பலிஜவாரைப்பற்றி அடியிற்கண்டபடி எழுதிப்பதிப்பித்திருக்கிறூர்.

## CENSES OF INDIA

## Vol XV—Part I. Report. Page 144.

**Balija**—(1,008,036 ; M. 10)—This is the chief Telugu trading caste and it is scattered throughout all the districts of the Presidency. It is said to have two main sub-divisions, Desa (or Kota) and Peta. The first of these includes those whose ancestors are supposed to have been the Balija (Nayak) kings of Madura, Tanjore and Vijayanagar, or provincial Governors in those kingdoms, and to the second belong those, like the Gazulu (Bangle-sellers) and Periko (salt-sellers), who live by trade. In the Tamil Districts Balijas are known as Vadugans ('Telugu people') and Kavarais. The descendants of the Nayak or Balija kings of Madura and Tanjore claim to be Kshatriyas and of the Kaśyapa gotra, while the Vijayanagar Rais say they are lineal descendants of the sage Bharadwaja. Others trace their ancestry to the Kauravas of the Mahabharata. This Kshatriya descent is not, however, admitted by other castes, who say that Balijas are an offshoot of the Kammas or Kapus, or that they are a mixed community recruited from these and other Telugu castes. The members of the caste none of them now wear the sacred thread or follow the Vedic ritual. (C. R. 1891, para 458; *Kurnool Man*, p. 137; Buchanan's Mysore, etc, Vol I, pp. 168-170; Madura Man, Part II, p 86; North Arcot Man. Vol. I. pp. 202-3)

## இரண்டாம்பதிப்பின் முகவுரை.

### இதன் கருத்தாவது.

### 1901ஹு சென்னை ராஜதானியிலிருந்த பலிஜவாரு 10,08,036 குடிகள் M-107.

இவர்கள் (பலிஜவாரு) விசேஷமாக வர்த்தகம்செய்யும் தெலுங்கு ஜாதியார்கள்-இவர்கள் இச்சென்னை ராஜதானியின் எல்லா ஜில்லாக்களிலும் பரவியிருக்கிறார்கள். இவர்களில்தேசபலிஜவாரென்றும், (கோட்டபலிஜவாரு என்றும்) பேட்டபலிஜவாரென்றும் இரண்டு முக்கியமான வகுப்பினர் இருக்கின்றனர்-இவ்விருவகுப்பார்களில் முதல்வகுப்பார், மதுரை, தஞ்சை, விஜயநகரஸமஸ்தானங்களை ஆண்ட பலிஜ அல்லது நாயக்கர் ராஜர்களுடைய சந்ததிகளைச் சார்ந்தவர்கள். இரண்டாவது வகுப்பார், வளையல்களைவிற்கும் காஜுலுவாரும், உப்புவியாபாரம் செய்யும் பெரிகவாருமான வர்த்தகவிருத்தி செய்பவராவர்.— தமிழ் ஜில்லாக்களில் பலிஜவாரை வடுகர் (தெலுங்கு ஜனங்கள்) என்றும், கவரைகளென்றும் சொல்லப்படும். மதுரை, தஞ்சைஸமஸ்தானங்களை ஆண்ட நாயக்கர் அல்லது பலிஜராஜாகளுடைய சந்ததிகள் க்ஷத்திரியஜாதியைச்சார்ந்த கஸ்யப கோத்திரத்தார்களென்றும்; விஜயநகர சமஸ்தான இராயலுகாருகள் பாரத்வாஜ மஹாமுனிவருடையகோத்திரசந்ததிகளென்றும்சொல்லுகிறார்கள். மற்ற பலிஜவார்கள் மஹாபாரதத்தில் கண்டிருக்கும் கவுரவர்களுடைய சந்ததிகளென்று சொல்லுகிறார்கள். சொன்னாலும், இவர்கள க்ஷத்திரியர் சந்ததிகளென்பதை மற்றஜாதியார் அங்கீகரிக்கிறதில்லை. பலிஜவாரு கம்ம, காபு ஜாதிகளிலிருந்துண்டானவர்கள், அல்லது கோமுட்டி ஜாதிகளிலிருந்தும், வேறுஜாதிகளிலிருந்தும் பிரிந்த கலப்பு ஜாதியாரென்றும் சொல்லுகிறார்கள்—இந்தஜாதியைசார்ந்தவர்களில் எவரும்இப்போது (எஞ்ஞோபவீதம்) பூநூல் தரிக்கிறதுமில்லை, வேதோக்தமாக கர்மங்களைசெய்வதுமில்லை. (விவரமாகஅறியவிரும்புவோர், 1891ஹு கானிஸ்வாரி ரிபோர்ட்டையும், கர்னூல் சரித்திரம் 137-வது பக்கத்தையும், பக்கானன், மைசூர்சரித்திரம் 1-வது வாலியம், 168, 170 பக்கங்களையும், மதுரை சரித்திரம் 2-ம் பாகம் 86-வது பக்கத்தையும், வட ஆற்காடு சரித்திரம், வாலியம 1-20-23 பக்கங்களையும் படித்துப்பார்க்கலாம், என்று எழுதியிருக்கிறார்.

இந்தமுகவுரையின் 11 முதல் 16 பக்கங்களில் காட்டியிருக்கும் எமது கடிதத்திலும், பலிஜவாருடைய ஜனஸ்திதிவிவரங்களை நன்

குறித்த பிராம்மண வைஷ்ணவ வடகலை, தென்கலை மடாதிபதிகளான ஆசாரியசுவாமிகளுடைய ஸ்ரீமுகத்திலும், பலிஜவாரை க்ஷத்ரியவம்சத்தாரென்று நிரூபித்திருந்தும்; 1901ஆம் சென்ச்ஸ் சூபிரெண்டெண்டாரவர்களாகிய, மேஸ்டர் பிரான்சிஸ் (W. Frances, Esq. I.C.S.) துரையவர்கள் மேல்கண்டபடி எழுதிப் பதிப்பித்திருக்கிறார். இது சில பலிஜவார்களுக்கு அதிருப்திகரமானவாசமாக இருந்தாலும் இருக்கலாம்— ஆயினும், இந்தசூபிரெண்டாண்டு துரையவர்கள் மேற்படி 1901ஆம் சென்சஸ் ரிபோர்ட் 15-வது வாலியூம், முதல் பிரிவின், 130-வது பக்கம், 22-வது பாராவின் கடைசியில்.

"Even as it is, there will be several castes which will be dissatisfied with the position accorded them. I drew up the table in accordance with the information available, neither extenuating anything nor setting down aught in malice, and committees of native gentlemen formed for the purpose in every district have criticised and amended the original draft, but I am well aware that the task has been a most delicate one."

இதன் கருத்து.

"ஜாதி அந்தஸ்துகளைப்பற்றி இப்போது நியமித்திருக்கும்
"ஸ்திதியிலகூட அநேக ஜாதியாருக்கு அதிருப்தியைத் தரக்
"கூடும். இதற்காக ஒவ்வொரு ஜில்லாவிலிருக்கும் சுதேச பெரிய
"மனுஷர்களைக் கமிட்டியாராக நியமித்தும், அவர்கள் சமூகத்தில்
"ஜாதிமூலக்குறிப்புப் பட்டிகளை அனுப்பி, சர்வேசெய்வித்தும்,
"அச்சபையார் எனக்குத் திருத்தியனுப்பியச் சங்கதிகளைத் தழுவி
"இதை தயார்செய்தேயாயிற்று; கெட்ட எண்ணத்தோடு ஒருஜாதி
"யாருக்குள்ள அந்தஸ்தைக் குறைத்தும், இல்லாததைச் சேர்த்
"தும் எழுதியதன்று; ஆயினும், இந்தவேலை அதிகநுட்பமும்
"தருமச்சங்கடமுமான வேலையென்று தெரிந்தவிஷயம்".

என்று எழுதி இருப்பதால், இந்த மேஸ்டர் பிரான்சிஸ் துரையவர்களும், இவரை இந்தக்கஷ்டமானவேலைக்குத் தலைவராக நியமித்த நமது இங்கிலீஷ் கவர்ன்மெண்டாரும், தமக்கு அகப்பட்ட சரித்திர சாசனங்களைக்கொண்டு, நல்ல எண்ணத்துடன் இவ்வளவு தூரம் கஷ்டப்பட்டு எழுதிப்பதிப்பித்ததற்காக நாம் யாவரும் நன்றியறிந்தவர்களாக விருக்கக்கடமைப் பெற்றிருக்கிறோமல்லவா? இதிற்க, ஆங்கிலேய கவர்ன்மெண்டார் ஜாதிசமயாசாரங்களிலும், வேஷ பாஷாதிகளிலும், நம்மவருக்கு வேறுபட்டவர்களாக இருந்தும்;

தம்குடிகளாகிய நமது ஜாதி அந்தஸ்துக்களைப்பற்றி தக்கபடி விசாரித்தும், அவரவர்களுக்குத் தக்கபடி மரியாதைசெய்தும், சுதந்தரமாகவும், சுகமாகவும் வாழ்விக்கப் பட்டுவரச்செய்த நமது சுதேசத்திலேயே பிறந்தும், சுதேசஜாதி சமயாசாரங்களையேதழுவியும், சுதேசவேஷபாஷாதிகளையே அனுஷ்டித்துவரும்சுதேசிகளிடம், இவ்விதமானதேச ஜாதி அபிமான தருமம் இலாமையால்; நம்மவர்களிற் சிலர் அனுபவிக்கும் கஷ்ட நிஷ்டூரங்கள் கொஞ்சமல்ல.—அதற்கோர் திருஷ்டாந்தரமாக கொச்சியிலிருந்துவந்த கடிதத்தை இதன் அடியிற் காணலாம்.

*Trichur 14th January* 1903.

To S. P. Narasimmalu Naidu Esqr.

Coimbatore.

Sir,

We the undersigned Nayudus are residents of Trichur, District under His Highness the Rajah of Cochin.

We sorrowfully narrate our greevainces to you in a few lines to find out a way for redress.

(1) It is nearly a century since we landed here from Tanjore and other places.

(2) Our forefathers and some of us were given full privilege of entering the Temples here, but after a certain time at the instigation of Nayars who are quite ignorant of our castes we were prohibited from entering on the ground that we are not Sudras and if at all we are not of good caste. Some time hence bathing in Tanks also were prohibited.

(3) Ever since that prohibition we fought with utmost energy to establish our caste system, but in vain What amount of evidence and what amount of facts submitted by us are of no avail, as almost all the offices in the state are occupied by Nayars who are quite ignorant of Nayudus.

(4) After several years' fight we succeeded in getting a permission to bathe in the Tanks.

(5) We produced certificates from Namboori Vydeekas (Malayali Brahmins) to show that we belong to High caste. But they also go without any use.

(6) After all we received an order from His Highness to produce a certificate from a Vydeeka of our parts (beyond the Cochin State) to show that we are High Caste Sudras.

(7) When we received this order we searched for a patron who will kindly and benevolently come forward and establish the Nayudu caste in this dark country where Malayalis alone are held in great respect although their caste system

* At last we came to know from a friend of ours that you have been taking the greatest effort in connection with the same thing to let our Nayudu brothern know to what caste they really belong and that you have also published a volume describing it after a thorough search of Shastras & Vedas.

(8) We therefore humbly and respectfully approach you and beg you to be gracious enough to extend your trials to these parts also and to establish our castes as it is and to give us that privilege to which we are justly entitled. Further we request you to be kind enough to furnish us with a detailed certificate from a Brahmin Vydeeka so that we may forward the same to His Highness with a petition (a copy of which should be kindly sent by you in English describing all that we have to say supported by facts and figures). &c., &c., &c.,

We beg to remain, Sir,—your obedient brethern (signed)

| | |
|---|---|
| 1. T. S Veeraswamy Naidu, Pensd Post Master. | 5 V. Perumal Naidu |
| | 6. S. P. Ramaswamy Naidu |
| 2. S. Raghavaloo Naidu | 7. T. P Gopalakrishna Naidu |
| 3. P. Venkataswamy Naidu | 8. V. Doraswamy Naidu |
| 4. V. Peddoo Naidu | 9. M. Venkatasubbia Naidu &c. |

இதன்கருத்து.

மகா-ஸ்ரீ, கோயமுத்தூர் சே. ப. நரசிம்மலுநாயடவர்களுக்கு,

ஐயா,

மாட்சிமைப்பொருந்திய கொச்சிராஜாவர்கள் சமஸ்தானத்தைச்சார்ந்த இருக்கூரிலிருக்கும், நாயுடுஜாதியாராகிய எங்களுடைய கஷ்ட நிஷ்டூரங்களைப்பற்றி அதிகவிசனத்துடன் எழுதிக்கொள்ளும் மனுவாவது.

1. சுமார் நூறுவருஷங்களுக்கு முன் தஞ்சை முதலானவிடங்களிலிருந்து எங்களுடைய முன்னோர்கள் இங்குவந்து குடிபுகுந்தார்கள்.

2. அப்படி குடிப்புகுந்த எங்கள் முன்னோர்கள் இவ்விடங்களில் கோயில்களிற்போய் கும்பிடும்படியான சுதந்திரத்தைப் பெற்றிருந்தனர்—பிறகு நம்முடைய ஜாதியின் பெருமையை அறியாத நாயன்மார்களுடைய தூண்டுதலின்பேரில் நாங்கள் க்ஷத்திரரல்லவென்றும், நல்லஜாதியாரல்லவென்றும், கோயில்களுக்குள் பிரவேசிக்கக்கூடாதென்றும், தடாகத்தண்ணீரில்; குளங்களில் ஸ்நானமும்செய்யக் கூடாதென்று தடுத்துவிட்டார்கள்.

3 அப்படிச்செய்ததுமுதல் நம்முடைய ஜாதியின் அந்தஸ்தை விவரங்களைப்பற்றி பிரபலநியாயங்களோடு எடுத்துக்காட்டியும்; இச்சமஸ்தானத்தின் உத்த

யோகஸ்தர்களில் பெரும்பாலர், நம்மஜாதியின் அந்தஸ்தைப்பற்றி அறியாத் தவர்களாக இருப்பதால், காரியசித்தி பெற்றோமில்லை.

4. இப்படி பலவருஷங்கள் போராடிய பிறகு, குளங்களில்மாத்திரம் குளிக்கும்படியான சுதந்தரத்தைப் பெற்றோம்.

5. நாங்கள் (நல்ல) சூத்திரஜாதியைச் சார்ந்தவர்களென்று மலையாள நம்பூத்திரி வைதீகபிராமணர்களிடமிருந்தும் நற்சாக்ஷிபத்திரங்களைப் பெற்று கொடுத்தும பிரயோஜனப்படவில்லை.

6. கடைசியாக-கொச்சி சமஸ்தானத்துக்கு வெளியிலிருக்கும் வேறு நாட்டு வைதீக பிராமணர்களால், நாங்கள் உயர் சூத்திரஜாதியாரென்று நற்சாக்ஷிபத்திரத்தைப்பெற்று காட்டும்படி மாட்சிமைப்பொருந்திய கொச்சி மஹாராஜாவர்களால உத்தரவைப்பெற்றோம்.

7. அந்த உத்திரவைபெற்ற உடனே, மலையாளத்தாரே சிரேஷ்டஜாதியாரென்றும், இதரஜாதியார் கீழென்றும எண்ணி இருக்கும்இவ்வந்தகாரமான ராஜியத்தில், நம்முடைய ஜாதியின் பெருமையை பிரசித்தப்படுத்த, எந்தபுண்ணிய புருஷன் முன்வருவாரோவென்று தேடுங்கால்; தாங்கள் இதுவிஷயமாக அநேக சாஸ்திரங்களை ஆராய்ந்து புராணமெழுதியும், இக்ஜாதியாருடைய ஆதிஅந்தஸ்தை முன்னுக்குகொண்டுவர உழைப்பவரென்று ஒரு அன்பரால் கேள்வியானோம.

8 ஆகையால், தாங்கள் தயவுசெய்து நமது ஜாதியாருக்குள்ள ஆதி அந்தஸ்து விவரங்களைப்பற்றி அந்த பிரதேசங்களிலிருக்கும வைதீக பிராமணர்களால நற்சாக்ஷி பத்திரிகைகளையும், அவற்றிற்காதாரமான நியாயங்களையும், சேர்த்துஇங்கிலீஷ்பாஷையில ஒருவிண்ணப்பத்தை மாட்சிமைப்பொருந்திய மஹாராஜாவர்களுக்கு அனுப்பிவைக்கும்படியாகச் செய்வித்தும; அவைகளால நமது ஜாதிக்குடைய சுதந்தரங்களை இந்த பிராந்தியங்களில் அனுப்பிவிக்கும்படி செய்வித்துதர பிரார்த்திக்கிறோம.

இப்படிக்கு தங்களன்புள்ள சகோதிரர்கள்,

1. டி. எல். வீராசாமிநாயடு பி.ஏ. பிளீடர் 2. என். ராகவலுநாயடு, 3. பி. வெங்கிடசாமிநாயடு, 4. வி. பெத்தநாயடு, 5 வி. பெருமாள்நாயடு, 6. வை. பி. ராமசாமிநாயடு, 7. டி. பி. கோபாலசாமிநாயடு, 8. வி. துரைசாமிநாயடு, 9. எம். வெங்கடசுப்புநாயடு, முதலானவர்கள்.

---

இம்மாதிரியாகவே பின்னும் பலர் இக்காலத்திற் தமக்கு சம்பவித்திருக்கும் பல கஷ்ட நிஷ்டூரங்களைப்பற்றி பலகடிதங்களை அனுப்பினார்கள். விரியஞ்சி பதிக்காமல்விட்டோம். இவர்களுக்கு இன்றியமையா சரித்திர சாதனங்களின்றும் வெளியாகாமலிருக்கு மிக்காலத்தில திருப்திகரமான புராணத்தை எப்படி எழுதுவதென்று ஏங்கிக்கொண்டிருக்கையில்,

" குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
" மடிதற்று தான் முந்துறும்"—அதாவது,

தம் குடியினை உயரச்செய்யவேண்டி முயற்சிகளைச் செய்வோருக்கு தெய்வம் உதவிசெய்ய முன்வந்து நிற்கும—என்றும,

" குற்றமிலனாய்க குடிசெய்து வாழ்வானை
" சுற்றமாச சுற்று முலகு"—அதாவது,

னதுபோல மற்ற கிரந்தங்களில் சொல்லக்காணோம். அன்றியும், அவைகளும் சைவ வைணவாதி மதத் துவேசமானவைகளாக இருக்கின்றன; மேலும், இந்த கலியுகத்தில் பிரபலமான ஜாதியார், சக்கிரவர்த்திகள், பெருநில குறுநில மன்னர்கள், மனுவான்களுடைய மகிமைகளைப்பற்றி எந்தக்கிரந்தத்திலும் வியக்தமாகச் சொல்லாமலிருப்பதற்குக் காரணம் மறிகிலேன்.

இதுநிற்க, இப்போது பிரம்ம க்ஷத்திரிய வைசியர் முதலானவர்களுடைய ஜாதிவிவர சரித்திரங்களை அச்சிட்டு வெளியாக்கி இருக்கையில்; பலிஜவாருடைய ஜாதியை விவரமாக்கும் சரித்திரத்தை மாத்திரம் அச்சிட்டு வெளியாக்காமல் இருப்பதற்குக் காரணமென்ன? இப்போது பலிஜவாரை சிலர், க்ஷத்திரியர் என்றும்; சிலர் சூத்திரரென்றும் சொல்லவேண்டிய காரணமென்ன? பலிஜவாரு க்ஷத்திரியர்களா? அல்லது சூத்திரர்களா? பலிஜவாரு க்ஷத்திரியரென்பதற்கு சுருதி ஸ்மிருதி புராண இதிகாசங்களில் ஆதாரங்களை அறிவிக்கப் பட்டிருக்கின்றனவா? அவர்கள் சூத்திரர்களாகில், அவர்களில் அநேகர் மகதம், மாளவம், விஜயநகரம், மதுரை முதலான இடங்களில் சக்கிரவர்த்திகளாகவும், இராஜாதிராஜர்களாகவும், தேசாதிபதிகளாகவும் பிரபலமாகி, பல நாடுகளை ஆண்டுச் செங்கோலை ஸ்தாபித்தல் தருமசாஸ்திர சம்மதமாகுமோ? ஆகவே, பலிஜவாருடைய ஆதிமுதல் பரம்பரை ஜாதிசரித்திரம் இன்னதென்றும், அவர்களுடைய மதஸம்பிரதாயங்கள் இன்னதென்றும், திட்டமாக அறியக் கூடவில்லை; மேலும்,

காலத்துக்குக்காலம் கலதேசவர்த்தமானங்களைத் தழுவிப் பதினெண் புராணங்களை எழுதியவர்கள், இக்கலியுகத்துக்காக பத்தொன்பதாவது புராணம் ஒன்று எழுதியிருப்பதாகத் தெரியவில்லை.

இடையில் தத்தாசாரியார் (R C Dutt) முதலானவர்கள் ஒருவாறு இந்திய சரித்திரங்களை எழுதினார்; அவைகளும் இந்நாட்டின் சில சரித்திரங்களைப்பற்றிமாத்திரம் விசேஷமாக அறிவிக்கின்றவைகளாக இருக்கின்றனவே யன்றி, விந்தியபருவதத்திற்குத் தெற்கு, கன்னியாகுமரிக்கு வடக்குமுள்ள மத்திய தேசங்களினுடையவும், சோழதேசங்களினுடையவும் சரித்திரங்களை அறிவிக்கக் காணோம்; அன்றியும், ஆங்கில துரைத்தனம் இந்நாட்டில் ஸ்தாபிதமான பிறகு சில ஆங்கில வித்துவான்கள் சில சரித்திரங்களை எழுதினும், அவைகளும் அவர்களுடைய ஜெயபராக்கிரமங்களைப்பற்றியவைகளாகவும், சமீபகாலத்தில் நடந்த சரித்திரங்களாகவும் இருக்கின்றனவே யொழிய, இத்தென்னாட்டின் மத்தியகாலத்தினுடைய சரித்திரத்தைத் தெரிவிக்கக்காணோம்—ஆகவே,— ஓ, பரமகுருவே!

புராணமென்றாலென்ன? அதன் லக்ஷணம்யாது? அது எக்காலத்தில் யாவராலியற்றப்பட்டது? அதன் உத்தேசமென்ன? இப்போது அது பதினெண்புராணங்களாகவும், பதினெண் உப புராணங்களாகவும், அநேகஸ்தலபுராணங்களாகவும்; அவைகளும் ஒன்றுக்கொன்று வித்தியாசமான [illegible]களை உடையனவாகவும் இருக்கவேண்டிய காரணமென்ன? அன்றியும்—இப்புராணங்களின்படி இந்நாட்டை அலங்கரித்த அரசர்கள், ஆசிரியர்கள், ஆசாரியர்கள்யாவர்? இடையில் இத்தேசத்தை ஆண்ட அரசர்களும், அறிவுடையார்களும் யாவர்? பிறகு இந்நாட்டிலாண்ட அரசர்கள் முதலானவர்களுடைய சரித்திரங்களையும், காலதேசவர்த்தமானங்களைத் தழுவி புராணங்களை எழுதாமல் விட்டகாரணம்யாது? இத்தியாதிச்சங்கதிகளை விவரமாகச் சொல்லவேண்டுமென விண்ணப்பம் செய்ய;"

அக்கலாநிதி யோகீந்திரர்கேட்டு, ஏ, குழந்தாய்! நீகேட்டகேள்விகள் நியாயமானவைகளே; இக்கேள்விகளுக்கு விடையாக, நாம் சாக்ஷியினாலும், கேள்வியினாலும் காலதேசவர்த்தமானங்களைத் தழுவிச்சொல்லும் சங்கதிகளை கவனமாய்க்கேள்? "யதிதம் கிஞ்ச ஜகத் ஸர்வம் ப்ராண ஏஜதி நிஸ்ருதம்"— "இதோ இருக்கிற இந்த உலகம் முழுதும் பரமாத்மாவினிடத்திலிருந்து வெளிப் "பட்டதாகிப் பிராணசுவரூபனுடைய அசைவினாலே அசைந்துகொண்டிருக்கிறது" என்றுகடோபநிஷத்தின் கருத்தை முன்னமே உபதேசித்திருக்கிறேனல்லவா? இப்படி அந்தரத்தில் அசைவாடிக்கொண்டிருக்கும் அண்டத்தில், அந்தப் பரமாத்மவே பிரம்மா என்னும் பெயரினால் பிராணிப் பிரஜைகளை சிருஷ்டித்தும்; அப்படி சிருஷ்டித்த பிரஜைகளை (அந்தப்பரமாத்மாவே) விஷ்ணு என்னும் பெயரால் பாதுகாத்தும்; (அவரே) ருத்திரன் என்னும் பெயரால் ஸம்ஹாரம் செய்தும் வருகின்றார்; பிரபஞ்சபிரஜைகளின் இகபரசுகங்களுக்கு நன்றியடையாதருமம், அர்த்தம், காமம், மோக்ஷமென்னும் சதுர்வித புருஷார்த்தத்தின் ஸ்வரூபத்தை (அந்தபரமாத்மவே) ஆதி புருஷனுக்கு நேராக அறிவித்தார்—அப்படி அறிவித்த ஞானத்திற்கே சுருதி என்றுபெயர்—அதாவது,

சுருதி என்றால்—ச்ருயதே—இதி ச்ருதி: கேட்கப்பெற்றதாலும் அதாவது பரமாத்மாவினிடமிருந்து நேராகக் கேட்கப்பெற்றபடியாலும்; சுரோத்திரேந்திரியத்தினால் சப்தரூபமாக அறியப்பெற்றபடியாலும்; சுருதியென்னும் பெயரைப்பெற்றது. இந்த சுருதிக்கே வேதம் என்றும், ஆம்னாயமென்றும் பின்னும் பலபெயர்கள் உண்டென முன்னமேசொல்லி இருக்கிறேனல்லவா?

இந்த வேதத்தின் வார்த்தைகளும், வாக்கியங்களும் க[illegible]ஷையிற் சொல்லப்பெற்றும்; ஆழ்ந்த தத்துவகருத்துக்களுடையவைகளாகையாலும்; அவைகள் சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கற்பமென்னும் ஆறு அங்கங்களை (ஆசாரியர் மூலியமாக) கற்றுத்தெரிந்த மஹா மஹரிஷிகளுக்கே யன்றி, மற்றவர்களுக்கு வியக்தமாக விளங்காமலிருக்கக்கண்டு; மஹாஞான

பிரோஹ்மணிகளாகிய மநு, விஷ்ணு, யமன், அங்கிரசர், வசிஷ்டர், தக்ஷர், ஸம்வர்த்தர், சாதாதபர், பராசரர், ஆபஸ்தம்பர், உசநசு, காத்தியாயனர், பிரஹஸ்பதி, கவுதமர், சங்கர், லிகிதர், ஹாரீதரர், அத்திரி, முதலான பதினெட்டுப் பெயர்கள் சுருதி என்னும் வேதத்தின் கருத்தையே (மனோராச்சியம்செய்து) (மனதில் நினைத்து) ஸ்மிருதிகளாகச் சொன்னார்கள்—

ஸ்மிருதி என்றால்—"வாசிஷ்டம்சைவஹாதம்", &c. என்ற வாக்கியத்தின் படி—சுருதிகளின் கருத்துக்களையே வசிஷ்டர் முதலானவர்கள் சொன்ன தரும சாஸ்திரங்களாம். காலவித்தியாசத்தினால் இந்த ஸ்மிருதிகளின் வாக்கியங்களின் பொருளையும் அறிந்துய்யும்படியான சக்தி ஜனங்களுக்கில்லாமற்போகவே, ஸ்ரீ வால்மீகர் இராமாயணத்தையும், வியாசர் பாரதத்தையும், கர்க்காசாரியர், கர்க்க சம்ஹிதையையும் இதிகாசங்களாக இயற்றினார்கள்.

இதிஹாசம் எனில்—"இதிஹாசபுரா விருத்தம்" என்னும் வாக்கியத்தின் படி, "முந்தி நடந்த சரித்திரங்களின் வாயிலாகத் தரும அர்த்த காம மோக்ஷ மென்னும் புருஷார்த்ததை போதிப்பதென்பதாம்.

இந்த இதிஹாசங்களையும் சரியாகப் படிக்கப் பொருளறியும் சக்தி கால வித்தியாசத்தினால் ஜனங்களுக்கு இல்லாமற்போய் விட்டபடியால், காலபேதத்தை யறிந்த பாமரர்களும், முக்கியமாக ஸ்திரீ சூத்திரர்களுடைய ஞானவிருத்தியைக் கருதி புராணங்கள் சொல்லப்பெற்றன.

புராணம் என்றால்—பழையது என்று பொருள். "ஸர்கஞ்ச பிரதிஸர்கஞ்ச வம்சமன்வந்தரானிச," &c. என்ற அமரஸிம்மஹருடைய வாக்கியத்தின்படி, சிருஷ்டி கிரமம், பிரளயகிரமம், முந்தி இருந்த மஹான்களுடைய வம்சாவளி, மநுவந்தரங்கள், முன்னிருந்த வம்சத்தாருடைய சரித்திரம் ஆகியபஞ்சலக்ஷணங்களோடு சொல்லப்பெற்றிருப்பதே புராணமாம்.

## புராணத்தின் பூர்வஸ்திதி.

அது கிருதயுகத்தில் பிரம்மாவினால் நூறுகோடி கிரந்தங்களுள்ள ஒரே நூலாக இயற்றப்பெற்றிருந்ததாகவும்; அதை திரேதாயுகத்தில், சில ரிஷிகள் 118 - சம்ஹிதைகளுள்ளதாகவும், 18 - பிரிவுகளுள்ள ஒரு கோடி கிரந்தங்களாக்செய்ததாகவும்; அவைகளை வேதவியாசர் துவாபரயுகத்தில் இலக்ஷம் கிரந்தங்களுள்ள, 18 - புராணங்களாகச் செய்ததாகவும்; மச்சபுராணம் 53 - வது அத்தியாயத்தில் விரிவாகச்சொல்லப்பெற்றிருக்கிறது என்றார்;" இதைக்கேட்ட அரங்கநாதன், ஏ, குருஸ்வாமி! சுருதி ஸ்மிருதி புராணங்களை உற்பத்தியான விதங்களைக்கேட்டுத் தெளிந்தேன். இனி இப்போது இந்நாட்டில் வழங்கும் புராணங்களின் பெயர்களையும், அவற்றின் சாராம்சங்களையும் அறியவேண்டுகிறேன்;" என்று வணங்கி கேட்க, அந்தயோகீந்திரர் அடியில் வருகிறபடி புராணசாரத்தை சொல்லலுற்றார்.

"ஏ, பிரம்மச்சாரியே, கேளாய்!—இப்போது இந்நாட்டில் பிரம்மம், பாத்துமம், வைணவம், சைவம், பாகவதம், பவிஷியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கேயம், பிரம்ம வைவர்த்தம், இலிங்கம, வராஹம், ஸ்காந்தம், வாமனம் கூர்மம, மச்சம், காருடம், பிரம்மாண்டமென்னும் பெயர்களையுடைய 18 - புராணங்களே பிரபலமானவைகள்—இவைகளில்—முதலாவது,

## 1. பிரம்ம புராணம்.

இது ஆதியில் 10,000 சுலோகங்களையுடையதாக இருந்து, இப்போது 7,000 முதல் 8,000 சுலோகங்களுள்ளதாக பிரகாசிக்கிறது-இதில் முக்கியமாக உலக சிருஷ்டி முதலான விவரங்களையும்; ஸ்ரீ ஜகந்நாதபுரியில் பிரகாசிக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய வைபவங்களையும்; பிரம்மாவினால் தக்ஷருக்கு உபதேசித்தவைகளையும் சொல்லப்பெற்றிருக்கின்றன—

## 2. பத்ம புராணம்.

இது, பிரம்மாவானவர், கமலாசனத்திலிருந்து சிருஷ்டிசெய்தவைபவத்தை புலஸ்தியருக்கு போதிக்க; அவர், பீஷ்மருக்குச் சொன்னதாக, ரோமஹரிஷியுடைய புத்திரராகிய சூதர், நைமிசாரண்ய ரிஷிகளுக்குச் சொன்ன 55,000 சுலோகங்களை உடையது. இதில் சிவபெருமான் விஷ்ணுவின் மகிமையைப்பற்றிப் பார்வதிதேவிக்குச்சொல்லியதையும்; அவ்விருவரும் விஷ்ணுவைக் கொண்டாடியதைப் பற்றியும்; ஜைனமதஸ்தர், மிலேச்சர்கள் வந்த சங்கதிகளைப்பற்றியும்; ஸ்ரீரங்கம், திருப்பதி, விஜயநகர ராயலுசரித்திரங்களைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றன. இதன் பூர்வபாகத்தை வைஷ்ணவர்களும், உத்தரபாகத்தை சைவர்களும பிரமாணமல்லவென்று சொல்வதனால்; இது ஒரு மதத்துவேஷமான புராணமென்று அநேகருடைய அபிப்பிராயம்—

## 3. விஷ்ணு புராணம்.

இது புராணங்களுக்கெல்லாம் சிரேஷ்டமானதாம்; ஏனெனில், புராணங்களுக்கு இன்றியமையா பஞ்சலக்ஷணங்களோடு கூடியபுராணம் இதுவேயாம்— இது ஆறு அம்சங்களையுடையதாகவும், அநேக அத்தியாயங்களை உடையதாகவும், 23,000 சுலோகங்களையுடையதாகவும், பராசரர், மைத்ரேயருக்கு போதித்த சிறந்தபுராணம்—இதன் முதல அத்தியாயத்தில் உலக சிருஷ்டி விஷயத்தைப்பற்றியும்; பிரஹலாதர் முதலானவர்களுடைய சரித்திரங்களைப் பற்றியும்; இரண்டாவதில் பிரபஞ்சத்தின் விவரம், சூரியசந்திராதிகளின் விவரம், பற்பல லோகங்களின் விவரம், பரதர் முதலானவர்களுடைய விவரங்களைப்பற்றியும்; மூன்றாவதில் மநு, மந்வந்தரங்களின் விவரம், வேதப்பிரிவுகளின் விவரம், பித்ருதிதி சிராத்தங்களைச்செய்யும் விவரங்களைப்பற்றியும்; நான்காவதில், சூரிய சந்திரவம்சங்களின் விவரங்களையும்; விஷ்ணுவானவர் கலிகாலந்தாரமெடுக்கும் விவரங்களைப்பற்றியும்; ஐந்தாவதில் ஸ்ரீ கிருஷ்ணாவதாரவைபவத்தைப்பற்றியும்; கலியுகதருமவிவரத்தைப்பற்றியும், ஆறாவதில் கலியுகதருமத்தைப்பற்றியும், மூன்றுவினாசங்களைப்பற்றியும், மோக்ஷசாதனத்தைப்பற்றியும், விஸ்தரித்துச்

சொல்லப்பெற்றிருக்கிற தன்றியில்; கலியுகத்தில் அரசுசெய்யும் சில இராஜ வமிசத்தாரைப்பற்றியும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது.

## 4. சிவ புராணம்.

இதுவே வாயுபுராணம். நைமிசாரணிய ரிஷிகளுக்கு சூதரால்சொல்லப் பெற்ற பிராகிரயா, உபாதகாத, அநுசங்கா, உபசம்ஹார, என்னும் நான்கு பாதங்களை உடையதாகவும்; 24,000 சுலோகங்களை உடையதாகவும் உள்ளது, இது சுவேத கல்பத்தைப்பற்றியும், சிவபெருமானுகிய ருத்திரமூர்த்தியின் மகுத்துவத்தைப்பற்றியும் சொல்லுகின்றது.

## 5. ஸ்ரீ பாகவத புராணம்.

இது அஸ்திஞபுரத்தின்அரசனும்,அர்ஜுனனுடைய பேரனுமாகியபரிக்ஷித்து மஹாராஜனுக்கு, வியாசருடைய புத்திரராகிய சு க தே வ ர் சொன்னத்தை; நைமிசாரணிய ரிஷிகளுக்குச் சூதரால் சொல்லப்பெற்றும்;12 ஸ்காந்தங்களாகப் பிரிக்கப்பெற்ற 332 அதியாயங்களில், 18,000 சுலோகங்களை உடைய சிறந்த புராணம்—ஹிமசேதுவரையிலுள்ள பேரும்பான்மையான இ ந் து க் க ளா ல் புகழ்ந்துக்கொண்டாடும் இந்தபுராணத்தில்,உலக சிருஷ்டி விமர்சனேயைப்பற்றி யும், இத்தேசத்தில் ஆண்ட சக்கிரவர்த்திகள், மநு மன்வந்தரங்கள் முதலான சரித்திரங்களைப்பற்றியும், விஷ்ணுபுராணத்தில் சொல்லியிருப்பதைப்போலவே விஸ்தரித்துச்சொல்லி இருப்பதோடு; பத்தாவது ஸ்காந்தத்தில் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியினுடைய ஜனனம்,லீலைமுதலானதுகளைப்பற்றி விஸ்தாரமாகஅறிவிக்க ப்பெற்றிருக்கின்றது—சிலர் இந்தபாகவத புராணத்தை பூ ப தே வ ர் என்னும் வியாகரணபண்டிதர் இயற்றியதாக அபிப்பிராயப்படுகிறார்கள் —அதுசரியான அபிப்பிராயமாகத் தோற்றவில்லை, இந்த பாகவதபுராணத்திற்கு ஸ்ரீதரசுவாமிகள் இயற்றிய வியாக்கியான மிருக்கிறது. பூ ப தே வ ர் இயற்றியது தேவிபாகவத மென்னும் சை வ ம த கிரந்தமாம்.

## 6. நாரதீய புராணம்.

இது நைமிசாரணிய ரிஷிகளுக்கு நாரதர் 25,000 சுலோகங்களில், பிரஹத் கல்பத்தைப்பற்றியும்; துருவர், பிரஹ்லாதர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும்; ருக்மாங்கதன், ஏகாதசிவிருதப்பலனைப்பற்றியும், சொல்லிய வைஷ்ணவபுராணம். இ ப் போ து அநுஷ்டானத்தில் 3,500 சுலோகங்கள்தான் இருக்கின்றன. மற்ற சுலோகங்கள் மறைந்திருக்கின்றன, மேலும், இதில் புராணலக்ஷணத்து க்குவேண்டிய உலகசிருஷ்டி விஷயத்தைப்பற்றியும்; ஆண்ட அரசர் சக்கிர வர்த்திகளுடைய சரித்திரங்களைப்பற்றியும் சொல்லப் பெற்றிருக்கவில்லை; அன்றியும் இந்த நாரதீய புராணத்தைப்போலவே; நாரதர், சனத்குமாரருக்கு போதித்ததென்று சூ த ர் உபதேசித்ததாக இப்போது அநுஷ்டானத்தில்

னன்றிருக்கின்றது. இது மார்க்கண்டேயர் உற்பத்தி, சாகரபுத்திரர்களுடைய வழிசநாசம், நாராயணஸ்தோத்திரங்கள் முதலானதுகளைப்பற்றி மாத்திரம் தெரிவிக்கின்றது.

## 7. மார்க்கண்டேய புராணம்.

இது மார்க்கண்டேய மஹாரிஷியால், தருமாதருமங்களைப்பற்றி ஜெயமுனிக்கு 9,000 சுலோகங்களில் சொல்லப்பெற்றிருக்கிறது. இதில் தேவலோகபக்ஷிகள், பிரம்மஞானத்தை போதிப்பதைப்பற்றியும்; பலதேவருடைய தபசைப்பற்றியும்; ஹரிச்சந்திரர் வைகுண்டத்தை அடைந்ததைப்பற்றியும்; வசிஷ்டருக்கும், விசுவகர்மாவுக்கும், உண்டானச் சச்சரவுகளைப்பற்றியும், துர்கா, காளி, சாமுண்டிதேவிகளுடைய மகுத்துவங்களைப்பற்றியும், உலக சிருஷ்டியாதி விஷயங்களைப்பற்றியும், பிரபலமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றது. இப்போது அநுஷ்டானத்தில் 6,900 சுலோகங்கள்தான் இருக்கின்றன, மற்ற 2,100 சுலோகங்கள் மறைந்திருக்கின்றன.

## 8. அக்கினி புராணம்.

இது ஈசானகல்பத்தைப்பற்றி அக்கினிபகவான், வசிஷ்டருக்கு 16,000 சுலோகங்களில் போதித்தது. இதை வியாசர் கற்று சூதருக்குபோதிக்க ; அவர் நைமிசாரண்ய ரிஷிகளுக்கு உபதேசித்தார். இப்புராணம் இராமகிருஷ்ணவதாரங்களைப்பற்றியும் ; சிவபூஜை மகுத்துவத்தைப்பற்றியும் ; பாணினி இயற்றிய வியாகரணத்தைப்பற்றியும் ; சாஸ்ருதரியற்றிய வைத்தியசாஸ்திரத்தைப்பற்றியும் ; மல்ல யுத்தம், முஷ்டி யுத்தம், வில்வித்தைகளைப்பற்றியும் ; விக்கிரமார்க்கன், சாலிவாஹனன, முதலான சில மன்னர்களுடைய சரித்திரங்களைப்பற்றியும் அறிவிக்கின்றன.

## 9. பவிஷியத் புராணம்.

இது அகோர கல்பகாலத்தில் இவ்வுலகமிருக்கும் ஸ்திதியைப்பற்றியும் ; பிராணிகோடிகளின் ஸ்திதியைப்பற்றியும் ; சூரியனுடைய பிரதாபத்தைப்பற்றியும் ; பிரம்மா, சுவயம்புமனுவுக்கு 126 அதியாயங்களில், 14,000 சுலோகங்களாகச்சொன்னது. இதின் ஐந்து அத்தியாயங்கள் பிர்மா, விஷ்ணு, சிவ அல்வாரதி தேவர்களைப்பற்றியும் ; 5-வது பிரதிசர்க்கம் சிருஷ்டியைப்பற்றியும் பிரஸ்தாபிக்கின்றது—மற்றப்பாகங்களில், சமயாசார சம்ஸ்கார சந்தியாவந்தனச் சடங்குகளைப்பற்றியும் ; குருபத்தி, ஜாதி, ஆசார தருமங்கள், விரதங்கள், நாகபஞ்சமி முதலானதுகளைப்பற்றியும் சொல்லப்பெற்றிருக்கின்றது.— இப்போது அநுஷ்டானத்தில் 7,000 சுலோகங்கள்தானிருக்கின்றன, மற்ற சுலோகங்கள் மறைந்தன—இதற்குச்சம்பந்தப்பெற்றதாகச் சொல்லும் பவிஷியோத்திரபுராணமென்று சொல்லும் ஓர் புராணம் 7,000 சுலோகங்களுடையதாக இருக்கிறது. இது இரத உற்சவம், மன்மதன், காமனுதிகளுடைய சரித்திரங்களைச் சொல்லுகிறது.

## 10. பிரம்ம வைவர்த்த புராணம்,

இது நாராயண ரிஷியானவர் நாரதருக்கும் ; அந்நாரதரால் வியாசருக்கும் ; அவ்வியாசரால் சூதருக்கும், அச்சூதரால் நைமிசாரண்ய ரிஷிகளுக்கும் சொல்லிய

பிரம்ம, பிரகிருதி, கணேச, கிருஷ்ண ஜனனமென்னும் நான்கு கண்டங்களாகி 18,000 சுலோகங்களால் பிரகாசிக்கிறது. இதில்பிரம்ம, தேவி, கணேசர், கிருஷ்ணருடைய பிரதாபங்களைப்பற்றிச் சொல்லியிருக்கினும், இராதாகிருஷ்ணருடைய லீலைகளையும், அவர் பிருந்தாவனத்திலும் கோகுலத்திலும்செய்தகிரீடைகளைப் பற்றியும், கோபிகளுடைய பக்தியைப்பற்றியும் பிரபலமாகவர்ணித்துச் சொல்லப் பெற்றிருக்கிறது,

## 11. இலிங்க புராணம்.

இது தருமார்த்தகாமத்தின் விலக்ஷணங்களையும்; அக்கினி கல்பகாலத்தில் மோக்ஷமடையும் விதத்தையும் பற்றி, பிரம்மாவுக்கு அக்கினிஸ்வரூபரான மஹாதேவர் 11,000 சுலோகங்களில் சொன்ன சைவமதகிரந்தம். இதில் சிருஷ்டியாதி விஷயங்களைப்பற்றியும், சிவபெருமானே விஷ்ணுவைப்போலிருந்து சிவதருமங்களை நியமிப்பதைப்பற்றியும், அசசிவபெருமான் கல்பங்கள்தோறும் 28 அவதாரங்களைச் செய்வதைப்பற்றியும், பயங்கரமான அக்கினி லிங்காவதாரமெடுப்பதைப்பற்றியும்; பிரம்மா விஷ்ணுவைவிட, சிவபெருமானே சிரேஷ்டரென்றுகாட்ட 1,000 வருஷகாலம் பலபக்கங்களில் திரிந்து, பிரமமா விஷ்ணுவை அலக்கழித்ததைப்பற்றியும்; பதமகல்பத்தையும், ததிசிமுனிவரைப்பற்றியும், சிவபிரார்த்தனை, சிவாங்கிர மகுத்துவங்களைப்பற்றியும்; யோகசாதனையை செய்யும் விவரங்களைப்பற்றியும் பிரபலமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றது.

## 12. வராஹ புராணம்.

இது விஷ்ணுவானவர் வராஹாவதாரமெடுத்து பூமியை மீட்டியதையும்; மானவகல்பத்தையும், மதுராபுரி மகுத்துவத்தையும், சுமந்திருமுனிவருடைய சரித்திரத்தையும், சிவபிரான், துர்க்காதேவதையின் சரித்திரங்களைப்பற்றியும்; தீர்த்தஸ்தலங்களின் மகுத்துவங்களைப்பற்றியும், 24,000 சுலோகங்களில் சொல்லிய சைவபுராணம்.

## 13. ஸ்காந்த புராணம்.

இது மஹேசுவரரால் தத்புருஷகல்பத்தின் சங்கதிகளை கந்தர், அதாவது ஆறு சிரசுகளையுடைய சுப்பிரமணியருக்கு உபதேசித்த 81,100 சுலோகங்களையுடைய சைவமத கிரந்தம். இது ஆறு சம்ஹிதைகளாகவும், 500 காண்டங்களாகவும், பிரிக்கப்பெற்ற 500,000 சுலோகங்களுடையதாக சிலகிரந்தங்களில் தெரிவிக்கப்பெற்றிருக்கின்றது.—இதில் சூதசம்ஹிதை, சநத்குமாரசம்ஹிதை, சவுரசம்ஹிதை, கபிலசம்ஹிதை என்றுதி பலசம்ஹிதைகளும்; பிரம்மோத்திரகாண்டம்—உத்கலகாண்டம், ரேவகாண்டம், சிவரஹசியகாண்டம், ஹிமவத்காண்டம் என்றுதி புலகாண்டங்களுமடங்கி இருக்கின்றன—இதில் காசிகாண்டம் ஒன்றுமாத்திரம், 15,000 சுலோகங்களை உடையதாயும்; அவைகளில் காசிக்ஷேத்திரத்தினுடையவும், அதையடுத்திருக்கும் க்ஷேத்திரங்களினுடையவும், மகுத்துவங்களையும்; அகஸ்தியருடைய சரித்திரத்தையும்; தக்ஷிணதேசத்தில் இந்துமதம் பரவிய விவரத்தையும்; காசிராஜனான திவதாசனுடைய சரித்திரத்தைப்பற்றியும் விவரமாகத்தெரிவிக்கப்பெற்றிருக்கிறது—வட இந்தியாவிலுள்ளவர்கள் பூமி ஜகந்நாதத்தின் பெருமையைப்பற்றியும், அதை அமைத்திருக்கும் புவனேசுவரருடைய சரித்திரத்தைப்பற்றியும் உத்கலகாண்டத்தில் விவரித்திருப்பதைப்பற்றி விசேஷமாகக் கொண்டாடி வருகிறார்கள்.

## 14. வாமன புராணம்.

இது திருவிக்கிரமருடைய இருப்பைப்பற்றியும்; சிவகல்பத்தைப்பற்றியும், பிரம்மதேவர் 10,000 சுலோகங்களில்சொல்லியதுபொதுப்புராணம். இப்போது அநுஷ்டானத்திலிருக்கும் புராணம் புலஸ்தியர் நாரதருக்கு போதித்த 7,000 சுலோகங்களையுடையதாயும்; இலிங்கபூஜையைப்பற்றியும்; தக்ஷருடைய யாகத்தைப்பற்றியும்; காசிநகருக்கடுத்திருக்கும் பாபவிமோசன தீர்த்தத்தைப் பற்றியும்; காமதேவனை எரித்தவிஷயத்தைப்பற்றியும்; ஹிமாசலத்திலிருக்கும் பத்திரிகாச்சிரமத்திலிருக்கும் கேதார ஈசுவரரைப்பற்றியும்; சரயுநதி குரு க்ஷேத்திரங்களைப்பற்றியும்; கோதாவரியைப்பற்றியும்; உமாசிவகலியாணத்தைப் பற்றியும்; கிருஷ்ணர் வாமனாவதாரமாகிப் பலிச்சக்கிரவர்த்தியை அடக்கியதைப்பற்றியும், மந்வந்தரங்களைப்பற்றியும் போதிக்கின்றது.

## 15. கூர்ம புராணம்.

இது விஷ்ணுவானவர் ஆமையாக அவதரித்து, பூமிக்குள்ளாண்டு, புருஷார்த்தத்தைசாகரதீர்த்தத்தினிடத்தில்இந்திரத்யும்மநுவுக்கு இலக்ஷ்மீகல்பத்தைப் பற்றி 17,000 சுலோகங்களில் சொல்லப்பெற்றிருக்கிறது. இப்போது அநுஷ்டானத்திலிருக்கும் கிரந்தம், பிரம்ம, பகவதி, சவுரி, வைஷ்ணவி என்னும் நான்கு சம்ஹிதைகளையுடையதாயும், 6,000 சுலோகங்களுடையதாயும்; சூதர் நைமிசாரணிய ரிஷிகளுக்கு போதித்த முதல் அத்தியாயத்தில், சிருஷ்டிவிஷயத்தைப் பற்றியும்; விஷ்ணுவின் அவதாரங்களைப்பற்றியும்; சூரிய சந்திரவம்சாவளியைப் பற்றியும், பைரவர்செய்த அண்டகாசுரன்வதையைப்பற்றியும்; மஹேசுவரி சிவ, சந்தி, ஹேமவதி என்ற நான்கு சக்திகளைப்பற்றியும்; சிவபெருமான் அவதாரங்களைப்பற்றியும்; காசிமகத்துவம், யோகவிஷயம், ஈசுவரகீதை, வியாசகீதை வைரவம், வாமம், அரஹதம், யாமலசாஸ்திரங்களைப்பற்றியும் தெரிவிக்கின்றது.

## 16. மச்ச புராணம்.

இது விஷ்ணுவானவர் மீன் அவதாரமெடுத்துப் பிரளயங்களையும், கல்பங்களையும்பற்றி மநுவுக்கு உபதேசித்த 20,000 சுலோகங்களையுடைய கிரந்தம்—இப்போது 14 முதல் 15 ஆயிரம் சுலோகங்கள்தான் இருக்கின்றன. இவற்றில் பிரளயகாலத்தில் மநுவைப்பாதுகார்த்த விஷயத்தையும்; விஷ்ணு புராணத்தில் சொல்லியிருப்பதைப்போல சிருஷ்டிவிஷயம், பிதுர்தேவதைகள் விஷயத்தையும்; இராஜவம்ச பரம்பரைவிஷயத்தையும்; இல்லறவிதானம், விரதாதிவிவரம், சிவபெருமான், பெருமான், திருபராசுரவதை, தாரகர், தைத்தியர்களுடையசண்டைசச்சரவுகள், கார்த்திகேயர் ஜனனம், உமாதேவியின் உற்பத்திவிவரம், காமனை எரித்தல், அசுரருடையமாய்கை, அந்தகன்வதை, விஷ்ணுவின் அவதாரங்கள், சிற்பசாஸ்திர சிறப்பு, விக்கிரக நியமனசாஸ்திரம்,

நீதிநெறி, சிரார்த்த விவரம், சாவித்திரி சத்தியவான் சரித்திரம், முதலானதுகளைப்பற்றி பிரபலமாக அறிவிக்கப்பெற்றிருக்கின்றது. இது பெயருக்குச் சைவபுராணமாகிலும், உண்மையிற் ஓர் பொதுபுராணம்.

## 17. கருட புராணம்.

இது கருட கல்பத்தில் விஷ்ணுவானவர் கருடனுடைய ஜனனத்தைப் பற்றி 15,000 சுலோகங்களில் சொன்னது. இப்போது 7,000 சுலோகங்கள் தானிருக்கின்றன. இவைகள் பிரம்மாவானவர் தேவேந்திரனுக்கு உபதேசித்தவைகளாம். இதில், சிருஷ்டி விஷயம், வாதங்களின் விஷயம், சிவன், சூரியன், விஷ்ணு பூஜைகளைச்செய்யவேண்டிய விவரங்களையும்;சோதிடம், வைத்தியம், சாமுத்திரிகம், இரத்தினபரிக்ஷை, பிரேதகல்ப முதலானதுகளைப்பற்றியும் விஸ்தாரமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றது.

## 18. பிரம்மாண்ட புராணம்.

இது பிரம்ம ஸ்ருஷ்டியைப்பற்றியும்; இனிவரும் கல்பத்தைப்பற்றியும், பிரம்மாவானவர் 12,200 சுலோகங்களில் சொன்ன கலப்பமான கிரந்தம். இப்போது இதில் 124 அத்தியாயங்களும், 18,000 சுலோகங்கள் மாத்திரம் இருக்கின்றன—இவைகள் அகஸ்தியர், காஞ்சிபுரத்தில் ஹயக்கிரீவாவதாரமாக இருக்கும் விஷ்ணு பராசக்தியின் பூஜையைப்பற்றி பிரபலமாக்கியதையும்; லலிதாதேவியின் மகத்துவம், பண்டாசுரன்வதை, சக்திபூஜையைச் செய்யும் விதங்களைப்பற்றியும்; ஸ்கந்த வாயுபுராணங்களில் சொல்லி இருக்கிற சங்கதிகள் முதலானவைகளைப்பற்றியும் சாங்கோபமாகச் சொல்லப்பெற்றிருக்கின்றது—இப்பதினெண் புராணங்களில் மச்சக் கூர்மாதி சில புராணங்கள் தாமச கிரந்தங்களென்றும்; விஷ்ணு பாகவதாதி புராணங்கள் சாத்வீகமானவைகளென்றும்; பிரம்மாண்டம், பவிஷியத்தியாதி புராணங்கள் இராஜசமானவைகளென்றும் சிலரானவர்களுடைய அபிப்பிராயம்—என்றுசொல்ல,

சௌனகாதன் கேட்டு, "ஏ, சூதேந்திரா! இதுவரையில் நாங்களது பதினெண் புராணங்களின் சரித்திர சாரங்களைக்கேட்டுத் தெளிந்தேன். இனி உப புராணங்கள் என்று சொல்லப்படுகிறவை எவை? அவற்றின் சாராம்சத்தையும் அறிவிக்கவேண்டுகிறேனென;" அம்முனிப்புங்கவர் சொல்லலுற்றார்—ஏ, சுதனே? கேள்! உப புராணங்களில் முக்கியமானவை சனற்குமாரம், நாரசிம்மம், நாரதீயம், சைவம், துர்வாசம், கபிலம், மானவம், அவசனசம், வருணம், கலிகம், சாம்பம், நந்தசவுரம், பராசரம், ஆதித்யம், மஹெஸ்வரம், தேவிபாகவதம், வசிஷ்டபுராணம் என்பவைகளே—இவற்றிற்சிறந்தவை சிவபுராணம், கலிகபுராணம் என்பவைகளாம் அவற்றில்.—

சிவபுராணம்—இது 6,000 சுலோகங்களில் சனத்குமாரர் வியாசருக்கு உபதேசிக்க, அவரால் நைமிசாரணியரிஷிகளுக்கு உபதேசம்செய்யப்பெற்றது. இது இலிங்கபூஜை, பிரம்மா, விஷ்ணு முதலானவர்களின் உற்பத்தி; யோக வித்தை, காசியாதி சிவக்ஷேத்திரங்களின் மகிமை; திரிபுராசுரன்வதை, தக்ஷனுடைய யாகம், கார்த்திகேயர், கணேசர், நந்தி, பிருங்கிரிஷியின் ஜனனம், சிவராத்திரியின்மகிமை முதலான விஷயங்களைப்பற்றி விவரித்துச் சொல்லுகின்றது.

கலிகபுராணம்—இது 93 அத்தியாயங்களில் 9,000 சுலோகங்களில் கிரிஜாதேவியை காளி பத்திரகாளி மஹாமாயி என்றுஇ பெயர்களால் சக்தி பூஜையைச்செய்யும் விவரங்களைப்பற்றியும்; சிவபார்வதி விவாஹவைபவத்தைப்பற்றியும்; வைரவிசரித்திரம், ஆசாமதேசத்திலிருக்கும் காமரூபமென்னுமிடத்தில், காமாக்ஷி என்னும்பெயரால் துர்க்கையின் கோவிலிருப்பதைப்பற்றியும் தெரிவிக்கின்றது. மற்றவைகள் மூர்த்தி ஸ்தல தீர்த்த மகிமைகளைப்பற்றி போதிக்கும் மஹாவைபவமான கிரந்தங்களேயாம்.

இத்தியாதிகளைகேட்ட அந்த யோகீந்திரன்: "ஏ, ஆசாரியரே! கேவலம் ஸ்திரீ சூத்திரர்களுக்கு சுருதி ஸ்மிருதிகளுடைய கருத்துக்களைச் சங்கிரகமாகவும், தெளிவாகவும், அறிவிக்கும்பொருட்டு புராணங்களை இயற்றியதாகச் சொன்னீர்களே; அப்படியிருக்க, இப்புராணங்களில் சில சைவமதத்தையும், சில வைணவமதத்தையும் கண்டித்து, தூஷிக்கவேண்டியகாரணமென்ன? பத்ம புராணத்தை ஒருவரே எழுதி இருக்க, அதில் பூர்வபாகத்தை வைணவர்களும்; உத்திரபாகத்தை சைவர்களும் பிரமாணமே யல்லவென்று ஒதுக்கிவிட்ட காரணமென்ன? மச்சிய கூர்மாதி சில புராணங்களை தாமசமானவை என்றும்; விஷ்ணுரூப கருடாதி புராணங்களைச் சாத்வீகமானவைகளென்றும், பிரமாண்ட பவிஷியத்யாதி புராணங்களை இராஜசமானவை என்றும் வைணவர்கள் சொல்வதற்குக்காரணமென்ன? அன்றியும் ஆதியில் ஒரே புராணமாக இருந்ததை இடையில், பதினெட்டுப்புராணங்களாகவும்; பிறகு உப புராணங்கள் என்னும் பெயரால் பதினெட்டு புராணங்களாகவும்; இப்போது இந்நாட்டில் ஸ்தல புராணங்கள் என்னும் பெயரால்கணக்கற்ற புராணங்களாகவும் இருக்கக்காரணமென்ன? இச்சந்தேகங்களை தீர்த்தருளவேண்டும் எனப்பிரார்த்திக்க" அந்தயோகீந்திரர் சொல்லுகிறார்—ஓ, சுமதி-"சுருதி என்னும் வேதத்திற்குறித்த ஒரே மூர்த்தியாகிய பரமாத்மாவை சிருஷ்டி விஷயத்தில் பிரம்மாவாகவும்; இரக்ஷணிய விஷயத்தில் விஷ்ணுவாகவும்; சங்கார விஷயத்தில் ருத்திரனாகவும்; அறிவு அல்லது ஞானவிஷயத்தில் சரஸ்வதியாகவும்; தனதானியப் பொருள் விஷயத்தில் இலக்ஷ்மியாகவும்; சவுரிய

சாமார்திய விஷயத்தில் சக்தியாகவும்; மழைமாரி விஷயத்தில் வருணனாகவும்; காற்று விஷயத்தில் வாயுவாகவும்; உஷ்ணம்தரும் விஷயத்தில் அக்கினியாகவும், ஆன்றோர்களாகிய ஆரியரிஷிகள் காலதேச வர்த்தமானங்களை அனுசரித்துப் பற்பலவிதமாக வாணித்துப் பிரார்த்தித்துவந்ததாக முன்னமே சொல்லியிருக்கிறோமல்லவா?

இந்த உண்மையான கருத்தை அறிந்த வியாசர் முதலானமஹாத்மாக்கள், அப்பரமாத்மாவின பல பெயர்களையும், அவற்றின் அருத்தங்களையும், அந்தப் பரமாத்மாவினால் நியமிக்கப்பெற்ற தருமார்த்த காம மோக்ஷமென்னும் புருஷார்த்தங்களை அடையும் சாதனங்களையும், விஸ்தரித்து புராணங்களினால் பிரபலமாக்கினார்கள். ஆனதுபற்றியே, ஜாபால ஸ்மிருதியில் "சுருதி ஸ்மிருதி விரோதேது சுருதி ரேவகரீயஸீ, அவிரோத சதாகாரியம் &c. என்றவாக்கியம் சொல்லப்பட்டிருக்கின்றது." அதாவது சுருதிக்கும் ஸ்மிருதிக்கும் விரோதமிருக்குமிடங்களில சுருதியே கௌரவ பிரமாணமாகும் என்பதாம்.

இப்படியிருக்க, இடையில் பவுத்தமதஸ்தருடைய கலகத்தினாலோ, மற்றெந்த மதஸ்தர்களுடைய சச்சரவுகளினாலோ; இப்போது சிவபூஜைசெய்யும் குருக்களும், விஷ்ணுபூஜைசெய்யும் பட்டாசாரியர்களும் வருமானத்தைக்கருதி "என் தெய்வம்பெரிது! உன்தெய்வம்சிறிது" என்று சண்டைச்சச்சரவுகளைசெய்வதைப் போல; பிழைப்புக்கு வழியற்றுத் தவித்த ஸமிஸ்கிருதக் கவிகளில் சிலர், சிவனை தூஷித்தும், சிலர் விஷ்ணுவை தூஷித்தும் புதுசுலோகங்களைப்பாடி பழய புராணங்களின் இடையில் நுழைத்தார்; சிலர் மதத்வேஷமானபுது புராணங்களையேபாடி, அவைகளுக்கு மகிமையும் மேன்மையும் உண்டாகக்கருதி (அப்புது) புராணங்களை வியாசபகவான் திருவாய்மலர்ந்தருளியதாகப் பொய்ப்பெயர்களை புனைந்தும், தானகெட்டதல்லாமல் சந்திரபுஷ்கரணியையும் கெடுத்ததைப் போல பெரியோர்மீதும் பழியைச்சுமத்திவிட்டார்கள்—அன்றியும்.

அக்காலத்தில் இந்நாட்டையாண்டுவந்த அறிவிலிகளான சில அரசர்களுக்கும் துர்ப்போதனை செய்து; அவர்களை தமவசமாக்கிக்கொண்டும், அவர்களுடைய மதக்குருக்களின்படி மடம் கோயில், கோபுரங்களைக்கட்டிவைப்பித்தும், அவைகட்குவேண்டிய மானியங்களையும், ஆடையாபரணங்களையும், உற்சவ வேடிக்கைகளையும்செய்வித்தும்; அநேகரைத் தமமதத்தைச் சேரும்படிசெய்வித்தும்; அப்படிச் சமண மதத்திற்குச் சாராமல் தாக்கிப்போரைப்பிடித்து கல் காணத்திற்போட்டு மூட்டி கொன்றும்; செக்குகளிற்போட்டு நசுக்கியும், கழு வேற்றியுமிட்டே; அப்போதிருந்த காட்டிலிருந்த சில தமிழ் வெறுங்காதி வித்வான்களும் அந்தக்கிரமங்களையே பின்பற்றி, தாங்களும் மதத்துவேஷமான கணக்கற்ற கிரந்தங்களையும், ஸ்தல புராணங்களையும்பாடி பிரபலமாக்கிவிட்டார்கள். அப்படியாகவிட்டே.

ஆரியர் நாடாகிய இதில் அநேக சமயபேதங்களும், ஜாதிபேதங்களுமேற்பட்டு, குடிகளுக்குள் கலகங்களும் சண்டைகளுமுண்டாகிவர, ஆதியிலிருந்த சமரச ஞானமும்; சகோதரவாஞ்சையும், அவற்றாலான சீரும் "ஒருமைப்பாடு" என்னும் ஒப்பற்ற காப்புமழியவே, இந்நாட்டாரின் க்ஷேமங்குன்றி, அதன்பயனாக, துக்கசாகரத்தில் தவிக்கும் துர்ப்பாக்கிய ஸ்திதியை அறிந்த அன்னிய நாட்டார், படையெடுத்துவந்து இந்நாட்டை வெகு சுலபமாகப்பற்றிக்கொண்டார்கள்—அந்தோ! ஆரியநாட்டிற்குவந்த அலங்கோலத்தைச் சொல்லநாகூசுகின்றதே—

இப்படி இந்நாட்டைக் கைக்கொண்ட அன்னியநாட்டார்கள், ஜாதி சமய ஆசாரங்களில் இந்நாட்டாருக்கு முற்றும் வேறுபட்டவர்களானபடியாலும்; அவர்களே அரசராகி, அதனால் ஆணவமுங்கொண்டிருந்தவர்களானபடியாலும்; இந்நாட்டாரைத் தம்மதத்திலும், ஜாதியிலும் சேரும்படி கட்டாயப்படுத்தியும்; இவர்களுடைய கோயில் கோபுரங்களை இடிப்பித்தும், அருமையான கிரந்தங்களை அக்கினிக் கிரையாக்கியும், படாதபாடுகளைப் படும்படி செய்தவாறே— இப்பரதகண்டத்தின் புத்திமான்களும், படிப்பாளிகளும், பக்திமான்களும், (பிளேகுபயத்தினாலோடுபவரைப்போல) தம்தம்நாட்டையும், வீட்டையும்விட்டு காட்டுக்குள்போய் காய்கிழங்குகளைத்தின்று, கள்ளரைப்போல் தவித்து காலம் போக்கி மறைந்தார்கள்—

இத்தன்மையான ஆபத்துகள் சம்பவித்தகாலத்தில், சேர சோழ பாண்டிய ராதிகளுடைய சரித்திரங்கள் மறைவு பெற்றதன்றியில்; ஆதி ஆந்திரர்களும், அவர்களுடையபின் சந்ததிகளாகிய சாலுக்கியரும், காலசூரியரும், கஜபதி, நரபதி ராயலுகளும், அவர்களுடைய சந்ததிகளாகிய பலிஜ நாயடுகார்களும் வீரதீரர்களாக வெளிவந்து; அன்னியநாட்டு குரூர ஜாதியார்களால் இந்நாட்டாருக்கு கஷ்ட நிஷ்டூரங்களதிகமுண்டாகாதபடி சுமார் 500 வருஷகாலங்களாக (அவ்வன்னிய நாட்டாரோடு சண்டைகள்செய்து) இந்து மதத்தையும், இந்துஜாதி சமயாசாரங்களையும் கெடாதபடி பாதுகாத்து செங்கோல்செலுத்திவந்தார்கள். அவர்களுடைய ஆதி உற்பத்தி விவரத்தை பாகவதாதி புராணங்களில் பரக்கக்காணலாம். அவர்களுக்குத் தனியாகஜாதி சமய சரித்திரங்களுமிருந்தன. இடையில் மகம்மதியராலுண்டான கஷ்ட நிஷ்டூரங்களினாலும், சொந்த பந்துஜன பொறாமைச்சண்டைகளினாலும், அவர்களுடைய ஆதி சரித்திரங்கள் மறைந்ததன்றியில்; காலதேச வர்த்தமானங்களைத் தழுவி ஜனசமூஹத்தாருக்குள் சமரசஞானமும், சஹோதரவாஞ்சையும், உண்டாகும்படி புதியபுராணங்களை எழுதி போதிக்கவும்; இந்நாட்டையாண்ட ஆதி அரசர், ஆன்றோர் சரித்திரங்களை வெளியாக்கவும் கையற்றுப்போகவே; இப்போது இந்நாட்டருக்குச் சரியான சரித்திரமே கிடையாதென்று அன்னியோர் நிந்திக்கச்சம்பவித்தது.

ஆ! என்ன காலவித்தியாசம்! ஆதியில் ஒரேசமயத்தாராகவும், ஒரேஜாதியாராகவும் இருந்து சகோதிர வாஞ்சையுடன் வாழ்ந்தும், எந்நாட்டாராலும் புகழ்பெற்றோங்கிய இந்நாட்டாருக்கு இடையில்வந்த சமயபேத ஜாதிபேதச்சண்டைகளினால், இந்நாட்டையும் இழந்து, பிறருடைய பஸ்சாத்தபத்திற்கும் பாத்திரராகிய துர்பாக்கிய தசையை என்னென்று சொல்லலாம்—இப்படிக்

கெல்லாம் உண்டான கஷ்ட நிஷ்டூரங்களை நீக்கக்கருதியே கருணாநிதியாகிய கடவுள் ஜாதிபேதம், சமயபேதத்தைப்பாராட்டாமல் நீதியைச்செலுத்தும் மங்காத மாக்ஷிமையைப்பெற்ற ஆங்கில அரசை இந்த ஆரியநாட்டில் நியமித்தார்; ஆகையால், இனி குடிகளுக்கு க்ஷேமமுண்டாகலாமென்று சொல்ல; அரங்கநாதன் கேட்டு—இந்நாட்டிற்குண்டான கஷ்ட தசையைப்பற்றி சிந்தித்துவிட்டு—ஏ! தேசாபிமானியே? இந்த ஆரியவர்த்தத்துக்கு ஆங்கில அரசை நியமித்த அருளானந்த மூர்த்திக்கு, ஹிருதயமறியவந்தனம் செய்கிறேன். இதுநிற்க—

ஏ, உத்தமகுருவே, இந்த உலகசிருஷ்டியைப்பற்றி இந்நாட்டார் சொல்லி இருக்கும் சங்கதிகளை எல்லாம் முன்னமே தங்களால் தெரிந்துகொண்டிருக்கிறேன். இனி இதுவிஷயமாக மேல்நாட்டு தத்துவசிகாமணிகள் சொல்லும் சங்கதிகளைத் தெரிவிக்கவேண்டுமென—அந்தக் கலாநிதி யோகீந்திரர் சொல்லுலுற்றார்—ஏ! சுபுத்திரா! சிரத்தையாகக்கேள்,

## (பிரபஞ்ச பிண்ட உற்பத்தி விவரம்.)

———)x(———

சிரசிற்குமேலிருக்கும் ஆகாயத்தைச் சுத்தமான இருட்டுக்காலத்தி லேறிட்டுப்பார்க்கில், அங்கு அநந்தகோடி நக்ஷத்திரங்கள் தம்தம்கதிகளிற் சுழன்று பிரகாசித்தல் பிரத்தியக்ஷமல்லவா?

அந்த நக்ஷத்திரங்களுக்கு மேலாக தூரதிருஷ்டி கண்ணாடி, சூக்ஷ்ம வீக்ஷணிகளைக் (Tolescopo & Spectorscope) கொண்டுப் பரிசோதிக்கில்; அங்கு, சில வெண்ணிறமாயும், சில வெளிரியசெந்நிறமாயும், சில மஞ்சள் நிறமாயும், சில வெண் மணல் நிறமாயும், பின்னும் பல வைர இரத்தினபொடிகளைப் போலவும் பிரகாசிக்கும் தாரகா கணங்கள் அநந்தம் தோன்றும்.

அவைகளுக்கு (நபிலியா Nebulea) பிரபஞ்சப்பரிணாமகிரப் படலாகிருதம் என்று பெயர்—அதாவது பிரபஞ்சங்களுற்பத்திக்கு காரணமான பகோளமண்டலங்களாம்—அவைகள், அனந்தகோடி மைல்கள் தூரங்களில், அநந்தகோடி வருஷங்களாக ஆவிரூபமாய்ச் சுழன்றுகொண் டிருக்கும் பிரபஞ்ச அஸ்திவார பிண்டங்களாம் — அப்பிண்டங்களே நாளாவட்டத்தில் நரர் வசிக்கத்தக்க இந்த உலகத்தைப்போல பலபிரம்மாண்டங்களாகின்றன—எப்படியெனில்.

ஜகதீசுவரனுடைய சுவாசங்களென்றச் சொல்லத்தகும் பிராணவாயுவும், (ஆக்ஸிஜன்—Oxygeu) ஜலவாயுவும், (ஐடிரிஜன்—Hydrogen) பின்னும் சில மூலகாரணபூதங்கள் (அவருடைய இச்சாசக்தியினால்) அவ்யக்தம் அல்லது மூலபிரகிருதியின் ஸ்வரூபமாகிய பரமாணுவை (ஈதர் Ether) த்தாக்க; அது, மின்

தாதுக்களாக (எலக்டிரன்ஸ் Electrons) மாற்றம்பெற்றும்; அம்மின்தாதுக்கள் பிரகாச அணுக்களாக (ரேடியமாக Radium) மாற்றம்பெற்றும், அந்தபிரகாசித அணுக்கள் சூக்ஷ்ம வஸ்து அணுக்களாக (ஆடோம்ஸ்—Atoms) மாற்றம்பெற்றும்; அவைகள் நாளாவட்டத்தில் அணுத்திரள்களாக (மோல்குலீஸ்—Molecules) மாற்றம்பெற்றும்; அவ்வணுத்திரல்கள்கூடி, முன்னுக்கும் பின்னுக்கும் இழுக்கும் கவர்ச்சி சக்திகளாற் பந்தப்பட்டு சுழல்வதனால், அக்கினிபிண்டங்களாக (திமொத்தை—Mosses) மாற்றம்பெற்றும்; அப்படியாகிய அக்கினிபிண்டங்கள் பல சூரியர்களாகி பகோளத்தின் பலபக்கங்களில் பறந்து, அக்கினிபுகைகளுடன் சுடர்விட்டெரிந்தும், கர்ஜித்துக்கொண்டும், அநேககோடிவருஷங்களாகச் சுழன்றுக்கொண்டிருக்க; அவற்றின் அக்கினி ஸ்வரூபமான ஆவிகளெல்லாம் திரண்டு சுழன்று வருவதனால் கோளாகார பிண்டங்களாகின்றன.

அக்கோளாகார பிண்டங்களே, பின்னும் பலகோடிவருஷங்களாகச்சுழல்வதனால், அக்கினிஜலபிண்டங்களாக மாற்றம்பெற்றும்; அவ்வக்கினி ஜலப்பிண்டங்களும் பலகோடிவருஷங்கள் சுழன்றுவருவதனால், அவற்றின் அக்கினிமயமான சூடுசற்றுத்தணிய, ஜலசமுத்திர பிண்டங்களாக மாற்றம்பெற்றும்;—அச்சமுத்திரமண்ட பிண்டங்களும் பின்னும் பல்லாண்டுகளாகச் சுழன்றுவருவதனால், அச்சமுத்திர ஜலத்தினாலுண்டான ஓர்விதப்பாசியினாலும், அதிலுற்பத்தியான கந்தமூல கிரிமிகீடாதி சவசத்துக்களாலும், ஓர்வித கிட்டம்—பிரகுருதி Matter தோன்றியபிறகு, அவை பசுபக்ஷி மனுஷர் வசிக்கத்தக்க மண்ணுலகங்களாகி விடுகின்றன,

நாம் இருக்கும் இந்தபூமியும் ஒருகாலத்தில் நமது சூரியாண்டத்திலிருந்து அக்கினிமய ஆவியாகக்கிளம்பி (Igneous fusion) தணல்விட்டெரிந்து உருகிய லோகங்களினால் மொத்தையாகி, பயங்கரமான அக்கினிப் புகைகளினாலும், மேகங்களினாலும், சூழப்பெற்றும் (Centripetal & Centrifugal) மத்தியாபிசார, மத்தியாதீத கவர்ச்சிகளினால் அநேக ஆயிரம்வருஷகாலங்களாகச் சுழன்று கோளாகார ரூபத்தைப்பெற்றது.

ஆதியில் அக்கினிமய பிண்டமாக இருந்த இந்த உலகம், குளிர்ந்து கட்டிமயமாக 80,000,000 எட்டுகோடி வருஷங்களான தன்றியில்; இது சூரியனிடமிருந்து பிரிந்தபோது 200,000. சென்டிகிரேட்டு உஷ்ணத்திலிருந்து, 200, சென்டிகிரேட்டு குளிர்ச்சிக்குவர, 350,000,000 முப்பத்தைந்துகோடி வருஷங்களாகியதாம்.

அப்படிக்காகியும், இந்த உலகத்தின் அடியில் ஆழமாகத்தோண்டிப்பார்க்கில், அங்கு பயங்கரமான அக்கினி ஜலம் சுடர் விட்டெரிந்துக்கொண்டு இருக்கிறது,

அப்படி எரியும் அக்கினியினால் பூமியின் பலபக்கங்களில் பூகம்பங்களுண்டாகி அவற்றின்மூலியமாக அக்கினிக்கங்குகளும், எத்னா, விசுவியஸ் முதலான அக்கினி பருவதங்களும் பீறிக்கொண்டுவந்து தணல்விட்டெரிந்து கர்ஜித்தல் பிரதியக்ஷம். சில அக்கினிபருவதங்களின் அக்கினிசுவரூபம் நாளாவட்டத்தில் தணிய, அவைகளின் கிட்டம் பெரும்பாறைக்கற்களாகவும், பெரும் பருவதங்களாகவும் மாற்றம் பெறுகின்றன.

இரவில் நமக்கு ஆனந்தகரமாக வெளிச்சத்தைத்தரும் நமது சந்திரனும் ஒரு காலத்தில் நமது பூமியின் மைய அக்கினியிலிருந்து பீறிட்டுக்கொண்டுபோய் பலவருஷங்கள் எரிந்து, பிறகு தணிந்துச்சுழலும் பெரும்பாறைக்கல் பிண்டமேயாம்.

## பிராகிருத பிரளயம்.

இனி இந்த பூமத்தியிலிருக்கும் அக்கினியினால் எத்தனையோ கங்கங்கள் பிண்டங்களாகப் பீறிக்கொண்டுபோகக்கூடும். அப்படி பீறிக்கொண்டுபோகப்போக பூமியின் பலபாகங்களில் பயங்கரமான பூகம்பங்களுண்டாகி, அவற்றால் பூமி பிளவுபட்டுப்போக, பூமியின் மேலிருக்கும் மலைகளும், விருக்ஷங்களும், வீடு வாசல்களும் இடிந்து முறிந்து சின்னாபின்னமாகி விழ; அவைகளில் வாழ்ந்துக் கொண்டிருக்கும பிராணிகோடிகள் பாழ்த்துப்போம்—அப்படியாவதற்கே பிராகிருதபிரளயம் என்று சொல்லப்பெறும்.

## ஜல பிரளயம்.

ஒருவேளை அப்படிப்பட்ட பல பூகம்பங்களினால் பூமையத்தில் எரிந்துக் கொண்டிருக்கும் பெரும்பாகமான அக்கினி சக்தியும், அதன் உஷ்ணமும் தணிந்துபோக; பூமியின்மேல் பெய்யும் பனியினாலும், மழையினாலும், ஜலபாகம் அதிகரித்து சமுத்திராண்டமாகிவிட; ஜந்துகோடிகள் அந்த ஜலத்தில் மூழ்கி பாழ்த்துப்போம், அப்படியாவதற்கே ஜலபிரளயம் என்று சொல்லப்பெறும்,

## அக்கினி பிரளயம்.

ஒருவேளை பூமையத்திலிருக்கும் அக்கினிசக்தியினாலும், காற்றினாலும், பூமியின் ஜலபாகம் தினே தினேச் சுண்டிப்போக, பூமியானது சுத்தமாகக்குளிர்ந்து தக்கைப்போலாகிக் கவர்ச்சி சக்திகளற்றுப்போவதனால்; பிராணகோடிகள் பாழ்த்தும், இந்தபூமி மறுபடியும் சூரியனிடம்போய்ச்சேர்ந்து அக்கினிமய பிண்டமாகக்கூடும். அப்படியாவதற்கே அக்கினிபிரளயம் என்று சொல்லப்பெறும்.

அத்தன்மையான பிரளயங்கள் எத்தனையோ சம்பவித்தன; இனி எத்தனையோச்சம்பவிக்கக்கூடும். இத்தியாதிகளுக்கு காரண கர்த்தாவாகிய ஜகதீசுவரனுடைய சக்தியை அறியவல்லார்யாவர்? என்றுசொல்ல,

அரங்கநாதன்கேட்டு "ஏ, தத்துவசிரேஷ்டரே! இனி பிரபஞ்ச பிராணிகளின் சிருஷ்டிவிஷயத்தில் மேல்நாட்டு தத்துவசிகாமணிகள்கொண்டிருக்கும் கருத்துகளைத்தழுவித் தெரிவிக்கவேண்டுகிறேன்;என."—கலாநிதி யோகீந்திரர் பின்வருகிறபடி சொல்லலுற்றார்.

# பிராணிகளின் உற்பத்தி விவரம்.

---

ஆதித்தனிடமிருந்து அக்கினி ஜலபிண்டமாகப் பிரிந்த இந்த பிரபஞ்சமானது பல்லாண்டுபல்லாண்டுகளாக பல சுவர்ச்சிகளினால் பக்குவப்பட்டுச் சுழல்வதால்; இதன்மேலிருந்த பெரும்பாகமான உஷ்ணம் படிப்படியாகத் தணிந்த பிறகு, மேல்புறணி அல்லது மேல்கிட்டம்தோன்றியதாக முன்னமே சொல்லி இருக்கிறோமல்லவா? அதாவது.—

ஒருவெங்காயத்தை எடுத்து அதன்மேல் தோல்களை உரித்துக்கொண்டே போனால், அது பல புரைகளால் மூடப்பட்டிருத்தல் பிரத்தியக்ஷமல்லவா? அது போலவே, இந்தபூமியும் அக்கினிமய ஸ்வரூபத்திலிருந்து இப்போதிருக்கும்படியான ஸ்திதியை அடைய, பல்லாயிரம்வருஷங்களையும், பல்லாயிரம் கனதியான கிட்டம் அல்லது புறணிகளையும் பெற்றிருக்கிறது.

இவைப்பற்றிய பூதத்துவசாஸ்திரிகள் இந்தப்பூமி, சூரியனைவிட்டுப் பிரிந்த பிறகு, இப்போதிருக்கும்படியான குளிர்ந்த தன்மையை அடைய அநேக காலாவதிகளையும், கிட்டத்தின் கனதிகளையும் கணித்து கணக்கிட்டிருக்கிறார்கள்—அந்த கணக்கின்படி,

இந்தபூமியின் (முதல்காலாவதியில் Eozoic) ஆழ்ந்த அடிப்புறணி அல்லது கிட்டம் 70,000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி (இரண்டாவது காலாவதியில்—Palaeozoic) 42,000 அடிகள் கனதியுள்ளதாகவும், அதற்கு அடுத்த மேற்புறணி (3-வது காலாவதியில்—Mesozoe) 15 000 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்த மேற்புறணி (நாலாவது காலாவதியில்-Tertiary) 3,060 அடிகள் கனதியுள்ளதாகவும்; அதற்கு அடுத்தமேற்புறணி (ஐந்தாவது காலாவதியில்—Post Tertiary) 600 அடிகள் கனதியுள்ளதாகவும் படிப்படியாக மாற்றம்பெற்றும்; அப்புறணிகளில் முறையே முதலில் கடற்பஞ்சைப்போன்ற பூஞ்சைகளையும்; பிறகு, பொனகை என்றும் கல்பாசி பூண்டுகளையும், பிறகு இலையற்ற செடி விருக்ஷங்களையும், பிறகு இலைகளோடு கூடிய செடிவிருக்ஷங்களையும் படிப்படியாக விளையும்படி செய்விக்கும்; அவைகளின் சுவாசத்துக்கேற்றகொண்டு, அவ்வப்பூண்டு பயிர் விருக்ஷங்களுக்கேற்றபடி முறையே முதலில (மனேரா—Monera) என்ற சூக்ஷ்மரூப ஜந்துக்களையும், பிறகு மச்சங்களையும், பிறகு ஊர்வனங்களையும், பிறகு பாலூட்டும்படியான பிராணிகளையும், பிறகு பக்ஷி மனுஷர்களையும் படைக்கப்பெற்றதாக ஸ்பஷ்டமாகிறது.—(எப்படியெனில்)

ஜீவமூலத்தோடு (Oxygen) ஜலமூலத்தை (Hydrogen) இரண்டளவாகச் சேர்ப்பதனால், ஜலம் உண்டாகிறதைப்போல; (சகல ஸ்தாவர ஜங்கமங்களுக்கும் சரீரியாகிய சாவேசுவரனது சுவாசமென்னச் சொல்லத்தகும்) மூலகாரண பூதங்களாகிய பிராணவாயுவையும், (Oxygen) கரிமூலவாயுவையும், (Carbon) ஜலவாயுவையும், (Hydrogen) உப்புவாயுவையும் (Nitrogen) பெரும்

பாகமாகவும்; அவைகளோசேர்ந்தகசந்த (Sulphur) பாஷ்பரசத்த (Phosphorus) முதலான மூலகாரணபூதங்களை சிறுபான்மையாகவும் சேர்த்து.மூலபிரகிருதியோடு கலக்க; அவைகள் காலாவட்டத்தில் திரண்டு, தாது கந்தமூல பிராணிகளாகி; அவற்றின் சவசத்துக்களால் புரோடபாசம் (Protoplasm) என்னும் பஞ்சுப் பாசைப்போன்ற பிராணோற்பத்திப்பொருளைத் தோன்றும்படி செய்விக்க, அதிலிருந்து பிராணிகோடிகள் ஜனிக்கின்றன,

அந்த பிராணோற்பத்தி பஞ்சுப் பகாசியபுரோடபாசம் என்னும்,ஜல ஜல்லி குழம்பை, தக்க சூக்ஷ்ம வீக்ஷணி என்னும் (Microscope) அணுதரிசிணி கண்ணாடியைக்கொண்டு சோதிப்போமாகில்; அதில்கணக்கற்ற செபிகளையும், அநேக வட்டவடிவான அறைகளையும்காணலாம். அந்தச்செபி அறைகளும், அவ்வறைகளுக்குள் சூக்ஷ்மாணுக்களாகக் காணுகிறவைகளும் பிராணிகளாம்.

அந்த அறைகளில் அந்த ஸ்திதியில் இருக்கும் பிராணிகளுக்கு மனேரியா (Monera) என சூக்ஷ்மாணு பிராணிகளென்றுப் பெயர்.அவைகளுககு உருவமும் வருணமுமில்லை.அவைகளிலிருந்து அமீயேபா (Amaobae) என்னும்(அடிக்கடி மாறுந்தன்மையுள்ள) சுழல் சூக்ஷ்ம ஜீவிகள்தோன்றுகின்றன—அவைகளிலிருந்து புரோடஜா (Protozoa) என்னும் (உருவமும் வருணமு மற்ற) சூக்ஷ்ம ஜல சரங்கள தோனறுகின்றன—அவைகளிலிருந்து ஸபாஞ்சி—கடற்பஞ்சைப்போன்ற பிராணிகள் (Sponges) தோன்றுகின்றன — அவைகளிலிருந்து பவளக்கொடியாக்கும் (Coral Builder) பிராணிகள்தோன்றுகின்றன; அவைகளிலிருந்து வெள்ளிமச்சங்களும், (Star fish) நத்தை ஞண்டு புழு பூச்சிகளுந் தோன்றுகின்றன ; அவைகளிலிருந்து ஊர்வனங்களும், அவைகளிலிருந்து பக்ஷிகளும, வௌவால்களும் ; அவைகளிலிருந்து மிருகங்களும் : அவைகளிலிருந்து வானரங்களும் ; அவைகளிலிருந்து வாலில்லாகுரங்குகளும தோன்றியபிறகு, கடைசியாக—மானவஜாதியாராகிய மனுஷர்தோன்றினர்— ஆ என்ன ஆச்சரியம்!கேவலம் தாதுகந்தமூலத்திலிருந்தும்,அணுரூபமான அற்ப பிராணிகளிலிருந்தும், பிரபல ஞானம்பெற்று பிரகாசிக்கும பிராணிகளை (Evoleve) தோனறச்செய்த சர்வேசுவரனுடைய சக்தியை வர்ணிக்க யாவரால் முடியும்? இக்கருத்தைக்கொண்டே இந்நாட்டு தத்துவஞானிகள் சித்து அசித்துக்களுககுச் சரீரியான சர்வேசுவரன் மச்ச, கூர்ம, வராஹ, நாரசிம்ம, வாமன,இராமாதி அவதாரங்கள் எடுத்து ஜகதகோடிகளையும், ஜந்துகோடிகளையும் வாழ்விக்கச்செய்கிறார் என்று வர்ணித்து எழுதி இருக்கிறார்கள் ; ஆகவே அப்படி உண்டான ஆதிமனுஷனால் பிரபஞ்ச பிரஜாவிருத்தியானபடியால் - அவனே பிரஜாபதியாம்-என-அரங்கநாதன் கேட்டு. ஓ, தத்துவோபதேசிகரே! உலகசிருஷ்டியைப்பற்றியும்,உலக ஜீவர்களுடைய சிருஷ்டியைப்பற்றியும், சொன்னசங்கதிகளால் என்சந்தேகங்கள்நீங்கின—இனி இந்த உலகத்துககு சிரோபூஷணமாக விளங்கும் இந்த இந்துதேசத்தின் ஆதிபிரஜாபதிகளையும், அவர்களுடைய சந்ததிகளையும்;இந்நாட்டை ஆதிகாலந்தொட்டு நாளதுவரையில் ஆண்டுவந்த பிரபலமான சக்கிரவர்த்திகள், பெருசில குரு சிலமன்னர்கள், ஆன்றோர், சான்றோர், சாதுக்கள் முதலானவர்களுடைய பெயர்கள் முதலான விவரங்களைப்பற்றியும சங்கிரகமாகச்சொல்லி, என் சந்தேகங்களை நீகக வேண்டுமென மனறாட;—அந்தக் கலாநிதியார் கேட்டு, அக்கேள்விகளுக்கு பின்வருகிறபடி சொல்லலுற்றார்.

## பிரஜாபதிகள்.

பிருகு, புலஸ்தியர், புலஹர், கிரது, அங்கிரசு, அத்திரி, தக்ஷர், வசிஷ்டர், நாரதர் என்னும், பத்துபிரஜாபதிகளைபிர்ம்மாசிருஷ்டித்தார்-இந்த பத்துபிரஜாபதிகளினால் அநேகமக்கள் பிறந்து; அவர்களை தருமநியமனங்களால், இரக்ஷிக்ககருதி பிர்ம்மா'தனது மேனி அம்சத்தினால் சுயம்புமநுவை சிருஷ்டித்தார். அந்த சுயம்பு மநுவினாலும் சந்ததி விருத்தியாக்கி தருமநியமனங்களைத் தழுவி நடக்க சத்ருபை என்கிற ஒருஸ்திரீயையும் சிருஷ்டித்தார். அப்படி சிருஷ்டித்த சதருபையை, சுவயம்புமநு விவாஹம்செய்துக்கொண்டதில், அவர்களுக்கு பிரயம்விரதன், உத்தானபாதன் என்ற ஆண்மக்களும், பிரசூதி-ஆகூதி என்னும் பெண்மக்களும் பிறந்தார்கள.

## பிரம்ம புத்திரரான சுயம்புமநுவின் சந்ததிவிவரம்

### உத்தாணபாதர் சந்ததி.

சுவயம்பு மநுவின் புத்திரனான, உத்தாணபாதன் என்னும் பாரதவருஷ சக்கிரவர்த்திக்கு துருவர், வட்சரர், புஷ்பாரணர், வியுவந்தர், சாவதேஜஸர், சாகுஷ்தியர், உலுமுகர், அங்கர், வேனதர்மர், பிருது, அந்தரத்தியானர், அவித்தனர், பிராசீனவர், பரிக்ஷித்தர், தக்ஷபிரஜபதி பிறந்து ஆண்டார்கள. அந்த தக்ஷபிரஜாபதிக்கு பத்துபெண்கள் பிறந்து - தருமரைக்கூடி பதிமூன்று பெண்களைப்பெற்று மரீசியின் குமாரராகிய கஷியபரை மணஞ்செய்துக்கொண்டார்கள். பிறகு அவர்கள் தானர், திதி அதிதி, மற்றும் இருபத்தேழு பெண்கள் பிறந்து சந்திரனை மணந்தார்கள்.

### பிரயம் விரதருடைய சந்ததிகள்.

சுவயம்புமநுவின் மற்றோர் குமாரராகிய பிரயம்விரதர் என்னும் ஜம்புத்தீவபத்தின் சக்கிரவர்த்திக்கு நபி, ரிஷபதேவர், பரதர், சமதி, விருத்தசேனர் தேவதாஜித்-தேவதூய்மன், பரமேஷ்டி, பிரதாஹர், பூமர், உத்கீதர், பிரஸ்தாரர், பிருது, பிராதுசேனர். நகதர், காயர், சித்தார்ததர், சுமரதர், யரீசி, பிந்துமர், மது, வீரவிரதர், மாந்து, பவுனர், துவஸ்த்தர், விராஜர் அவருடைய நூறு பிள்ளைகளும ; அந்த உத்தாணபாதர், பிரியம்விரதர், என்னும் இரண்டுசகோதிரர்களுடைய சந்ததிகள் அக்காலத்தில் ஜம்புதுவிப மென்னும் இந்தபாரதகண்டத்தையும; பிளக்ஷதீபம், சாமலதீபம், குசதீபம், கிரவுஞ்சதீபம், சாகதீபம், புஷ்கரதீபம் என்றுதி தேசங்களையும் ஆண்டுவந்தார்கள். அவர்கள் சந்ததியான ரிஷபதேவருடைய மக்களாகிய குசவர்ததர், இலவர்த்தர், பிரம்மவர்த்தர், மலேயர் கேதுபத்ரசேனர், இந்திரஸ்பிரிதி, விதர்பர், கேகயர், கவியபஜஹரி, அந்தரிக்ஷர் பிரபுத்தர், பிபினியாளர், அபிர்ஹோத்ரர், திராவிபர், குமஸர், காம்போஜனர் என்றவர்கள் தம்தம் பெயர்களால் அநேகஸமஸ்தானங்களை ஸ்தாபித்து; ஆண்ட அநேகவம்சத்தாரானார்கள்,

# சூரியவமிச சந்ததி விவரம்.

மரீசி பிரஜாபதியின் குமாரனாகிய கஸியபர், தக்ஷபிரஜாபதியின் குமார்த்தியாகிய அதிதியை மணம்புரிந்து; விவசுவானென்கிற சூரியனைப் பெற்றார். அவருக்கு வைவஸ்வத சூரியன் பிறந்து, ஐயோத்தியா அரசரானார். அவருடைய குமாரர் இக்ஷ்வாக்கு மஹாராஜர் பிறந்தது. (திரேதாயுகம் ஆரம்பத்தில்-அதாவது கிறிஸ்துபிறப்பதற்கு முன் 3,500 வருஷங்களுக்குமுன் அல்லது இப்போதைக்குச் சுமார் 55,000 வருஷங்களுக்குமுன்) ஐயோத்தியிலிருந்து அரசுசெய்தார். அவருக்குப்பிறகு.

## சூரியவமிசத்தில் ஐயோத்தியாவிலாண்டவர்களில்.

இக்ஷ்வாக்கு, நாபகன், செடிற்றிரன், கருசன் சந்ததிகளாகிய விகுஸ்கஷி-காகுஸ்தன் அல்லது பரஞ்சயன், அனேனசு, பிருகு, விட்டலாசன் அல்லது விசுவகந்தி, யுவனாசுவரன், பிருகுசாசுவரன், வலயாசுரன் திருஷ்டாசுவன் அரியாசுவன், நிகும்பன், அமிர்தாகவன், குருசாசுவன், பிரசன்னஜித்து, வனாசுவன், மாந்தாத, புருகூர்ச்சன், அம்பரிஷன், நாபகன், திரசதயன், அணரணியன், பிரசதாசன், அரியசன், வசுமனசு, திரிதன்வன், திரையருணி, சத்யவிருதன், அல்லது திரிசங்கு, ஹரிச்சந்திரன, உரோகிதன், அரிதன, சஞ்சன், விஜயன், விருகன், பிருகன், பாகுசஜிரன், அசுமஞ்சன், திலீபன, பகீரதன, சுகோத்திரன், நாபகன - அம்பரிஷன், சிந்துதீபன், அயுதாயு, உருதுவர்ணன, சர்வாகாமன், சுதாசனன், சுவிதாசன், அச்சுமகன், மூலகன, சசாதன, இளைபடன், விசுவசகாயன், கடகவாகுவன் தீர்க்கபாகு, இரகு, தசரதன், ஸ்ரீராமர், இலட்சுமணர், பரதர், சத்துருக்கினன், முதலானவர்கள் துவாபரயுகத்திலாண்டார்கள். அவர்களுக்கு பிறகு.

## அவர்களுடைய சந்ததிகள், திரேதாயுகத்தில.

குசன், அதிதி, நிஷகன், அனிலன், நபசு, புண்டரீகன், சோமதன்வன், தேவநீகன், அகிநாது, குரு, பரியத்திரன், பலன், சலன், உருக்கன் விசகிராபன், சங்கன், வியோசிதாசன, விசுவாகன், ஹிரணியநாபன, புஷியன், துருவசந்தி, சுதர்சனன், அக்கினிவர்ணன், சிகிரகன், சேகரன், மரு-பிராச்சுருக்கன், ரசசுருககன் சுந்தரி-அமர்சேனன - சகாசரவன்-மஹாசுவாது - இச்சுகாசுவன்- விசுவபாவன்-பிரசன்னஜித்து-தகஷ்கர்- விஹகபாலன் - விஹதசேனன் ஆண்டார்கள். பிறகு.

## அவர்களுடைய சந்ததிகளில், கலியுகத்தில்.

உருகக்ஷேபன்-வட்சரன்-வியூவன்-பிரதி-ஸ்ரீராமன்-பானு-தீவாகரன்-சஹாதேவன் வீரன்-பாநுமந்-பரிதஸ்வரன - சுபரதீரதர்- மாருதேவன் -சுனக்ஷேத்திரன்-கின்னரன்- அந்தரீக்ஷன்- சுதபசு-அமிர்தஜித்து- விரஹத்ராஜன்-பராஹிசருமன்-கிருசஞ்சயன் - (சவராஷ்டிரத்தில் - சூரியவமிசத்தை-ஸ்தாபித்தவன்) -இரணன்-ஜயன் - சஞ்சயன, சாக்கியன் - சுதம்தாதனன்- இராகுலன் - பிரசன்னஜித்து; ரோமிகன் - குண்டகன் - சரிதரன் - சுமித்திரன் ஆண்டுவந்தார்கள் - அவர்கள் சந்ததிகள்தான கலியுகத்தில சவராஷ்டிரநாட்டில் சூரியவமிசத்தை ஸ்தாபித்தவர்கள்.

## சூரியவமிசத்தில் மிதலாபுரியில் ஆண்டவர்கள்.

இக்ஷ்வாக்கின் சந்ததிகளான நிமி, ஜனகன், உதகவசு, நந்திவர்த்தனன், சுகேது, தேவராதன், பிருகுதத்தன், மகாவீரியன், சுதிருதி- திருஷ்டகேது- அரியசுவன், மரு- பிரதியக்ஷன்- கிருதிரதன்- தேவமீஷ்டன், விபுதன்- மகாதிருதி, கிருதிராதி- மகாரோமன்- சுவர்ணரோமன்- இரசுரோமன், சீரத்துவஜன்- அல்லது ஜனகன் சீதை- பானுமன்- சத்தியமான்- சுசி உபர்ஜனன், சததுவசன்- கிருதி- அஞ்சன்- புரைஜித்து- அரிஷ்டநேமி- சுருதியாயு, சுபாரிடன், சிருஞ்சயன், க்ஷேமாவி; அன்னேநசு, மீனரதன், சத்தியரதன, உபாகு, உபாகுபாதன், சுவாகதன, சுவர்ச்சன; சுவர்ணன், சுவ்வசக, சுபாஷன், சுசுருதன், ஜயன், விஜயன், இருதன், சுனயன், வீதிகவியன், திருதி, பகுலாசுவன், கிருதி என்பவர்களாம்.

### சூரியவமிசத்தில (ஆனர்தத) குஜராத்தில் ஆண்டவர்கள்.

இக்ஷ்வாக்கின் சந்ததியாகிய சருயாதி, சுகனியா, அனர்த்தன், ரேவதன், குகுஸ்தன் என்பவர்களே—

### சூரியவமிசத்தாரில் வைசால நாட்டில் (அலஹபாத்தில) ஆண்ட அரசருடைய சந்ததிகள்.

இக்ஷ்வாக்கின் வமிஷத்தைச்சார்ந்த நெடிர்றிரன் சந்ததியாராகிய நாபகன, பலந்தன், வத்ஸ்பரி, பரஞ்சயன், பாராசானி, கனித்திரன், சுடாகபன் காகுஸ்தன், விம்மிதன், விஞ்சன், விவஞ்சாதி, காளிநேத்திரன், தாமீசன், அதிவிபூதி, கருந்தைமன், ஆவிசித்து, மாருதி,—மருத்தி, ஈரிசந்தன், தமன, இராஜ்வர்த்தனன், சுவிருத்தி, கேவலன், சதிருதி, ஈரன், சந்திரன், கேவலன், பந்துமானன், வேகவன, புதன், திரணவிந்து, விசாலன், ஹேமசந்திரன், சந்திரன், தூமிராகன், சிர்சயன, சஹதேவன், கிருசாஸ்வதன், சோமதத்தன், சுமதி, ஜெனமேஜயன், என்பவர்கள் ஆண்டார்கள்.

### சூரியவமிசத்தில கபிலைநாட்டில் பவுத்தமதத்தை ஸ்தாபித்து ஆண்டவர்கள்.

இக்ஷ்வாகின மூத்தகுமாரர்கள் ரோகிணி நதிக்கரையில் கபிலாஜியத்தை ஸ்தாபித்தார்கள். அவர்கள் சகோதிரி பிரியை என்பவளை அரிவாக்கினார்கள், அந்த ஜியத்தாருக்கு சாக்கியபிரபுக்களெனப்பெயர். அந்தசாக்கிய குலத்தில் சுதயோதனன என்னும் குமாரர் பிறந்தார்- அவர் கபிலையிலாண்டுவருகிறபோது, கோலிபிரபுக்களுடைய சந்ததியைச்சார்ந்த மாயாதேவியை மணம்புரிந்தனர்; கௌதம சாக்கிய சித்தார்த்த புத்தர் பிறந்தார்—அந்த புத்தர், கோலி வமிசத்தைச் சார்ந்த சுபத்துரை என்னும் யசோதரையை மணம்புரிந்து இரண்டொருவருஷம் அரசுசெய்து பிறகு சந்நியாசியாகிவிட்டார். அவர் பிறப்பு கி-மு 623-வருஷத்துக்கு முன் என—சிலர்கருத்து.

இத்தியாதிகளைக்கேட்ட அரசகாரன்! ஏ, எ கிரா ஜா! "இனிச்சந்திர வமிசத்தாருடைய பெயர்களைச்சொல்லவேண்டுமென வேண்ட"; கலங்கியார் சொல்லலுற்றார்—சுதனே, கேள்!

## சந்திரவமிசத் தரசர்கள்.

பிரம்மாவின் குமாரர் அத்திரி என்னும் முனீந்திரருக்கும், அநுசூயாவுக்கும் சோமன், துர்வாசன், தத்தாத்ரியன் என்னும் குமாரர்கள பிறக்க; அவர்களில்

சோமன் என்னும் சந்திரன் பிரகஸ்பதி மனைவியாகிய தாரையைச் சேர்ந்ததில் புதன் பிறந்தான்; அவன்சந்ததிகளுக்கே சந்திரவமிசத்தாரென்றுபெயர். அந்தப் புதன் சூரியவமிசத் திலகராகிய இக்ஷ்வாக்கின் சகோதரி இளை என்பவளை மணந்து புரூரவன், ஆயு, நகுஷன், யயாதி முதலியோர்களைப்பெற, அவர்களில் ஆயுவின் சந்ததிகள் காசிராஜாக்களானார்கள்—அவர்களாவன—

## சந்திரவமிசத்தில காசியில் ஆண்ட அரசர்கள்.

புரூரவன் குமாரன் ஆயுவின் குமாரர்களாகிய நகுசன், சத்திவிருத்தன், இரம்பன், இரசி, அன்னேநசு, சதிரவிருத்தன் குமாரனாகிய சகோத்திரன், அவன்குமாரர்களாகிய காசன், காசிராஜன், தீர்க்கதபுசு, தன்வந்திரி, கேசிமதன் வீமரதன், தேவதாசன், பிரதத்தனன், அழற்கன், சந்ததி, சுநீதன், சுகேது, தருமகேது, சதியகேது, விபு, சுவிபு, சுகுமாரன், திருஷ்டகேது, வயான கோத்திரன், பார்க்கன், பார்க்கபூமி என்பவர்களாம்.

## சந்திரவமிசததி லுதித்த கவுசிக வமிசத்தார்.

புரூருவன் குமாரனுகும் அமானவசுவின் சந்ததிகளாகிய வீமன், காஞ்சானன், சுகோதிரன், சந்தன சுமந்தன், அச்சகன், பாலகாசன், குஜன், குசாம்பன், ஜோதி, விசுவாமித்திரன், ஜமதக்கினி, என்பவர்களாம்—அந்தஜமதக்கினி, சூரிய குலதிலகனாகிய இரேணு என்னும் அனுமகாராஜன் குமாரி இரேணுகை என்பவளை மணந்து பரசுராமரைப்பெற்றார்—அந்தப்பரசுராமர் சேர நாட்டுக்கு முதலரசரானார்.

## சந்திரவமிசத்தில் பிறந்த மதுக்கள் அல்லது யாதவர்கள்.

யதுவின் சந்ததிகளுக்கு யர்தவர் என்னும் பெயர். அதாவது புரூருவன் குமாரனாகிய ஆயுவின் சந்ததிகளான நகுஷன், யயாதி, சம்யாதி, வியாதி, கிருதியுமன்; யயாதியின் மக்களாகிய, துருவசு- திர்க்காயிசு- அனுு- புரு; என்பவர்களும்; யதுவின்- சந்ததிகளாகிய சகஸ்ரசித்து- குரோஷ்டு- நளன்- நகுஷன் என்பவர்களும்: சகரசித்து சந்ததிகளாகிய சதசித்து- கேகயன்- தருமன்- தருமேந்திரன்- குந்தி- சகஸ்ரசித்து மகிழ்மன்- பத்திர சிரேணியன்- துர்த்தமன்- தனகன்- கார்த்தவீரியன்; அனன்: அந்த அர்ஜுன னுடைய மக்களாகிய சூரன்- சூரசேனன்- விருஷசேனன்- மது- ஜயதுவஜன்- அந்த ஜயதுவஜன் மக்களாகிய தாளசங்கன்- பரதன்- விருக்ஷன்- மது- என்பவர்களாம்—அந்தமதுவின் சந்ததியாருக்கு மதுகுலத்தார் என்று பெயர்.

## சந்திரவமிசத்தில் பிறந்த சைத்தியர் என்னும் யாதவராஜர்கள்

புரூருவன் குமாரனாகிய ஆயுவின் மகன், யாது- சக்கிரசித்து; குரோஷ்டு- நளன்- நகுசன்- என்பவர்களும்; அந்தகுரோஷ்டுவின் சந்ததிகளாகிய துவசு நீயான்- சுவாதி; உஞ்சகன்; சித்திரார்தன்; சசிபிந்து; பிரீதிகீர்த்தி; பிரீதிதமன் உசானன்; சிதம்பன்; உருகமகவசன், பராவிருத்தி; ஜயமகன்; விதர்ப்பன்; அந்த விதர்ப்பன் சந்ததிகளாகிய கிருதன்; உரோமபாதன்; கேசிகன்; உரோமபாதன்; சந்ததி களாகிய பப்புரு; திருதி; கேசிகன்; சேதி; என்பவர்களாம்— அந்தச்சேதியின் சந்ததிகளுக்கே சைதியர் என்றுபெயர்— அந்தச்சேதியின் சந்ததியிற் சேர்ந்த தமகோசன் பாண்டவர்களுடைய தாயாராகிய குந்தியின் சகோதிரி சுரதி; சிரவசு என்பவளை மணந்து சிசுபாலனைப்பெற்றான்.

சந்திரவமிசத்தைச்சார்ந்த சாத்துவதர் என்னும் யாதவராஜர்கள்.

புரூரவன் சந்ததியான உரோமபாதன் சகோதிரன் இருதனுடைய சந்ததியான சாத்துவதர்-அவர்களாவன—இருதன்; குந்தி; திருஷ்டி; விதிருசு; நசருக்கன்; வியோமன்; நீமூதயன்; விகுருதி; வீமரதன்; நவரதன்; தசரதன்; சகுனி, காம்பி; தேவரதன்; தேவக்ஷத்திரன்; மது; குருவமிசன்; அன்னு; பூர்வோத்திரன்; அஞ்சனன். சத்துவதன்; அவனால்தான் அந்த சந்ததிக்கு சாத்துவதர் என்றபெயர்வந்தது.

சந்திரவமிசத்தைச்சார்ந்த போஜர் என்னும் யாதவராஜர்கள்.

புரூரவின சந்ததியாகிய மேல்சொன்ன சாத்துவாதியின் ஏழு குமாரர்களில் ஒருவனாகிய மஹாபோஜன் என்பவன் சந்ததியில் தோன்றியவர்கள். அவர்களுடைய பிரதானப்பட்டணம் மிருதியகாவு என்பதாம்.

சந்திரவமிசத்தைச்சார்ந்த சேய்நேயர்களாகிய யாதவராஜர்கள்.

புரூரவன் சந்ததியாகிய சத்வாதன், விருஷ்ணி, சுமித்திரன்; அன்னேயன்; நின்னன்; சத்தியகன்; சாதியகி; சஞ்சயன்; குணியுசந்தான் என்பவர்களாம்—

சந்திரவமிசத்தைச்சார்ந்த ஸ்ரீகிருஷ்ணவமிச யாதவராஜர்கள்.

புரூரவன் சந்ததியாகிய சத்துவதன் குமாரன் அந்தகன் மக்களில். பசைமானன் மரபில் ஸ்ரீகிருஷ்ணருடைய தந்தை வாசுதேவரும். அவருடையசகோதிரியும்; பாண்டவர் தாயாராகிய குந்திதேவியும் தோன்றினர்—அந்தப்பசைமானன் சகோதிரனாகிய குகுரன் மரபில் ஸ்ரீகிருஷ்ணருடைய தாயாராகிய தேவகியும் ஸ்ரீகிருஷ்ணருடைய மாமனாராகிய கம்சனும் தோன்றினர். அவர்களுடைய சந்ததிகளாவன.

அந்தயாதுவின்சந்ததியான சத்துவாதனுக்கு அந்தகன் என்ற குமாரனிருந்தான் அவனுக்கு பசைமானன்; குகுரன் என்ற இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள்.—அவ்விருவரில் பசைமானன் சந்ததியில் விதூரதன், சூரன், சமீ, பிரதச்சந்திரன் போஜன், இருஷ்டிகன், தேவகர்பன், சூரன் என்பவர்கள் பிறந்தார்கள். அவர்களில் சூரனுக்கு குந்திதேவியும், வாசுதேவரும் பிறந்தார்கள்.—மற்றோர் மகனாகிய குகுரன் மரபில் திரிஷ்டன், கபோதராமன், விலோமன், அன்னு, ஆனகதுந்துபி, அபிஜித்து புநர்வசு, ஆகுகன் என்பவர்கள் பிறந்தார்கள்—அவர்களில் ஆகுகனுக்கு தேவகன், உக்கிரசேனன் பிறக்க; அந்ததேவகன் மகளாகிய தேவகியை மேல்சொன்ன வாசுதேவர் மணந்து, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப் பெற்றார்; உக்கிரசேனனுக்கு கம்சன் பிறந்தான்.

சந்திரவமிச துருவவசு அரசர்கள்.

யயாதியின் இரண்டாவது குமாரனாகிய துருவவசுக்கு வஹ்னி, பார்க்கன். பானு, திரையீசன், கரைந்தமன், மருதன் என்பவர்கள் பிறந்தார்கள்—கூர்மபுராணத்தின்படி தக்ஷணநாட்டிலாண்ட தென்னவன் என்னும் பாண்டியர்களும் அவர்கள் சந்ததிகளாம்—

சந்திரவமிசத்து காந்தாரக அரசர்கள்.

யயாதியின் மூன்றாவது குமாரனாகிய துருக்காயுவின் சந்ததிகளான பப்பு, சேது; ஆரப்பதன், காந்தாரன், கருமான், இருதன், துர்த்தமன், பிரசதன், சத்தரு

மன், என்பவர்களாம்—அவர்கள் காடுகளைவெட்டி நாடுகளையுண்டாக்கியதால், காந்தார் என்று பெயரைப்பெற்றார்கள்,

சந்திரவமிசத்து ஆந்திர அங்க வங்க கலிங்க சிம்ஹள

பவுண்டர அரசர்கள்.

யயாதியின் நான்காவது குமாரனாகிய அனுவின் சந்ததிகளான, சபாநலன் காலாநலனை, சிருசயன், புரஞ்சயன், ஜனமேஜயன், மஹாசலன், திதிக்ஷு, உருசத்திருதன், ஹேமன், சுதவசு, பலி அல்லது பலிஞ்ஜன்; ஆந்திரன் என்பவர்களாம்-அந்தப் பலிஞ்ஜன் சந்ததியிலிருந்து அங்கன், வங்கன், கலிங்கன், சிம்ஹளன், பவுண்டிரன் என்னும் அரசர்கள் ஜனித்தார்கள்—அந்த அங்கவமிசம் அதிரதனோடுமுடிவுபெற, பாண்டவருக்கு முன்பிறந்த கர்ணன் அங்கதேசத்துக் கரசனானான்.

சந்திரவமிசத்தைச் சார்ந்த அங்கவமிசத் தரசர்கள்.

அங்கன், அன்னபானன், திவிரதன், தருமரதன், சித்திரரதன், சதுரங்கன், பிருதுவிலக்கன், சம்பன், அரியங்கன், பத்திரரதன், பிருகுதிரதன், பிரகத்கருமன், பிரகத்பானு, பிரகன்மகன், சயத்ரதனை, விஜயன், திருதி, திருதவிருதன், சத்தியகருமன், அதிரதன், (கர்ணன்குமாரன்) விருக்ஷசேனன், என்பவர்களாம்.—

சந்திரவமிசத்தில் பாஞ்சாலதேசத்தையாண்ட அரசர்கள்.

யயாதியின் சந்ததிகளான புரு, ஜனமேஜயன், பிராணவதன், பிரவீரன், மனசியு, பயதன், சுதியுன்னன், பஹுகாலன், சம்யாதி- அகம்யாதி, இரட்டாசுவன், இரீதியு, இரந்திநாரன், அபிரதிரதன், கானவன், தஞ்சன், அசிலன், துஷியந்தன், என்பவர்களாம்—பரதன் விதாதா, பவமன்யன், விகிரதன், சுஹோத்திரன், அஸ்திகன்- அஜமீடன், நீலன், இரிக்ஷன், சந்தி, சுசந்தி, புருஜன், சுகசு, அரியசுவன், முத்கலன், சிருஞ்சியன், விரிகதசுவன், பரவீரன், சப்பிரியன், என்பவர்களாம்.

சந்திரவமிசத்தில் அஸ்தினாபுரியில் ஆண்ட

பஞ்சபாண்டவர்களின் விவரம்,

யயாதியின் சந்ததியாகிய புரு; சுகோத்திரர்; அஸ்தினர்; அஜமீடர்; நீலன்; பாஞ்சாலன்; இரிக்ஷர்; சம்பரணர்; குரு; ஜன்னுசர் சந்ததிகளாகிய சுரது; சுரதர்; விதூரர்; சார்வபௌமர்; ஜயசேனர்; அயுதாயு; அக்ரோதனர்; தேவாதிதேசர்; திலீபர்; பிரதீபர்; சந்தனு; அந்தசந்தனுவுக்கு கங்கையால் பீஷ்மர் பிறந்தார். பிறகு வியாசருடைய தாயார் சத்தியவதியை மணந்து சித்திராங்கதர்; விசித்திரவீரியர் பிறந்தார்கள்.—அந்தவிசித்திர வீரியர் காசிராஜமக்களாகிய அம்பிகை; அம்பாலிகையை மணந்தும்; புத்திரசந்தானமற்று இறந்ததில், வியாசர் அவர்களை மணந்ததில் திருதராஷ்டிரனும்; பாண்டுவும் முறையே பிறந்தார்கள்—அந்த திருதராஷ்டிரனுக்கு துரியோதனாதி நூறுமக்களும்; பாண்டுவுக்கு குந்தியினிடம் யுதிஷ்டிரர்; பீமன்; அர்ஜுனனும்; மற்றொரு மனைவியாகிய மாத்திரையினால்; நகுலன்; சகாதேவன் பிறந்தார்கள்—அந்த பஞ்சபாண்டவர்களன்றியில் குந்திதேவிக்கு விவாஹமாவதற்கு முன் கர்ணன் பிறந்தான்,

"இந்த இராஜதானியின் வடபாகங்களை ஆதியில் ஆண்ட அரசர்களைப் பற்றி விசாரிப்போமாகில், அப்படி ஆண்டவர்கள் ஆந்திர வமிசத்தாரேயாம். வட தேசத்திலாண்ட மஹா மவுரியருக்குப் பிறகு புராணரீதியாகப் பார்க்கும்போது, சங்கமஜாதியாரும், அந்தச்சங்கமருக்குப் பிறகு கன்னுவ ஜாதியாரும் ஆண்டார்கள். அந்தக் கன்னுவஜாதியிலாண்ட கடைசிமன்னனான சுஸ்ரமன் அல்லது சிசுமானை அவனுடைய மந்திரியாகிய சுத்தாரிகன் அல்லது சிப்ரகன் கொன்று சிங்காசனமேறி தனது ஆந்திரசந்ததியை பிரபலமாக்கினான். அந்த ஆந்திரர்களையே கிரீக்குதேச பூமிசாஸ்திரிகள் "அண்டரியா" என்று வழங்கிவந்தார்கள்.

அந்த ஆந்திரர்கள் தமது விஸ்தீரணமான நாடுகளை வெகு பராக்கிரமத்தோடு ஆண்டார்கள். அவர்கள் தான் சரியான ஆந்திரஜாதியார்கள். அவர்களுக்குள் ஆந்திரஜாதிகர் அதாவது அந்தார்களுடைய "பந்துக்கள்" என்றும், "ஆந்திர புருதியர்" அதாவது ஆந்திரருடைய உத்தியோகஸ்தர்கள் அல்லது வேலைக்காரர்கள் என்றும் மூன்று வகுப்பினர்களாக இருந்தார்கள். அவர்களில் சரியான ஆந்திரருடைய ஸமஸ்தானம் பல்கி பெருகியிருந்தகாலத்தில், அவர்களுடைய உத்திரவின்படி அவர்களுடையபந்துக்கள் அவர்களுடைய பிரதிநிதிகளாகப் சிலபல நாடுகளை ஆண்டுவந்தார்கள்.

சென்னை இராஜதானியின் வடபாகங்கள் முழுதும், கிருஷ்ணாநதிக்கு தெற்கே வெகுதூரம் வரையிலுள்ள நாடுகளும் அந்த ஆந்தரருடைய அதிகாரத்துக்குட்படிருந்தன. அவர்கள் வழங்கிவந்த பலவித நாணயங்கள் கங்கை கிருஷ்ணா கோதாவரி முதலான பெருநதிக்கரை தீரங்களில் இப்போதும்பரவியிருக்கின்றன அவர்கள் புத்தமதஸ்தர்கள். கிறுஸ்துசகாப்தம் ஆரம்பகாலத்தில் ஆந்திரர்கள் மஹாபராக்கிரமசாலிகளாகியும், அதிகதிரளான தண்டுகளாதிகளை உடையவர்களாகியும் இருந்தார்கள் என்று (Pliny) பிளினி என்னும் யாத்திரை சாஸ்திரியார் எழுதி இருக்கிறார். களிங்க நாடுமுழுதும் அந்த ஆந்திரர்களுடைய அதிகாரத்துக்குட்பட்டிருந்தது.

The earliest Kings of whom we have any trace who ruled the north of this Presidency are the Andhras. The great Mourya dynasty of the north were, according to the Puranas, succeeded by Kings of the Sanga family, and these again by the Kanavas. The last Kanva Susaraman, or Sisuman was murdered by his minister Sudaraka or Sipraka, who seized the throne and founded a dynasty which was called after the name of his tribe, the Andhras. These are the Andorae of the Greek Geographers. Three dynasties successively ruled over their widely extended territories. These were the Andhras-Proper, The Andhara-jatikas or the relatives of the Andhras, and the Andhra-brityas or servants of the Andhras.

The whole of the north of the Madras Presidency down at least to the Kristna river, and probably considerably to the south of it,

belonged to them, and many of their leaden coins are found in the tracts near the great rivers. They were Buddhists in relegion. About the begining of the Christian era the Andhras were exceedingly powerful, possessing, according to Pliny, very large armies. They held the whole Kalinga &c The Archaeological Survay Vol.II Pages 144 to 146 By Mr. Robert Sewell

**ஆந்திரர்களைப்பற்றி பிரபலசரித்திரகராகிய ஜேம்ஸ்பிரன்சிப் அவர்கள் எழுதியவிவரமாவது.**

---

ஆந்திரர்களுடைய இராஜதானியைப்பற்றி இருந்த சந்தேகத்தைப் போலவே, அவர்களுடைய ஆளுகை செய்தகாலத்தைப்பற்றியும் இதுவரையிலும் சந்தேகமிருந்தது. ஆந்திரராஜகள் 800 வருஷங்களுக்குமேல், கங்கைநதிக்கரையோரத்தில் மஹாபராக்கிரமசாலிகளாக ஆண்டுவந்தார்களென்றும், ஆந்திரரும் களிங்கத்துக்கடுத்த கோசலநாட்டாரும் ஒரேகுப்பினரென்றும், அவர்களில் ஒருவரான ஸ்ரீகாரணதேவர், திரிகாலிங்க அரசன் (அதாவது இத்தேசத்தின் கிழக்கு மேற்கு தெற்கு எல்லைகளுக்குட்பட்ட நாடுகளை ஆளும் அரசனென்றும்) பட்டாபிஷேகம் பெற்றுக்கொண்டதாகவும் வில்போர்டு சாஸ்திரியார் சொல்லி இருக்கிறார்—இக்கருத்தை குஜராத்துக்கருகிலிருக்கும் கிர்ணரில் அகப்பட்ட சிலாசாசனத்திற் கண்டிருக்கும் சங்கதியோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது, தக்ஷணபாதத்திற்கு முன்சொன்ன எல்லைக்குறிவரையறைச் சரியாக இருக்கிறதென்றும், அதிலகண்ட சதகர்ணி என்னும் ஆந்திரவம்சத்தான் இத்தேசத்துக்கு அரசனாக இருந்தானென்றும் உறுதியாக நம்பலாம்; மேலும் ஆந்திரருடைய காலத்தைப்பற்றி விசாரிக்கையில், அந்த ஆந்திரர் காலத்தாராகிய நந்திரமா என்பவன் அசோகனுடன் தொடர்ந்ததாகத் தெரியவருகிறது, அவர்கள் (ஆந்திரர்கள்) கி-பி மூன்று அல்லது ஆறாம் நூற்றாண்டில் (அதாவது) ஆந்திரருடைய கடைசி சந்ததியாகிய புலோமரிஷி அல்லது புலோமாவினுடைய காலத்தில்) பிரபலமாய் இருந்ததாக வில்போர்டு சாஸ்திரி கணக்கிடுகிறார்: ஆயினும்-ஆந்திர அரசர்கள் இந்தியாவில் மஹாவீரர்கள் என்றும், அவர்கள் சுவாதீனத்தில் 30 அரணான கோட்டைகளையுடைய பட்டணங்களும் 1,00,000 இலக்ஷம் சேனைகளும், 1000 யானைகளும் இருந்தனவென்றும், பிளினி சொல்லி இருப்பதால், ஆந்திரர்கள் கிறிஸ்து சகாப்தம் பிறப்பதற்கு முந்திய மகோன்னத ஸ்திதியிலிருந்ததாக அங்கீகரிக்கவேண்டியது என்றும் மேஸ்டர் ஜேம்ஸ் பிரன்சிப் சாஸ்திரியார் எழுதி இருக்கிறார்.

"The locality of the Andhara dominion has hitherto been as uncertain as the period of its sway-Wilford says in one place that the Andhara princes, made a most conspicuous figure on the banks of the Ganges for above 800 years; again that Andhra and Kosala

(near Kalinga) that Sree Karana Deva took the title of King of Sri Kalinga or of the three shores to the east, west, and south of India—From our inscriptions we perceive that the general term of Dakshini Patha agrees well with the latter definition, and we may rest content with denoting the Satakarnies(Andhras)as the Kings of the Peninsula

Further, as to their age, we find one of the name contemporary with Rudrama who followed Asoka—Wilford brings them much lower down from the third to the sixth century after Christ.

He is forced to confess, however, that there were Andhras at the begining of the Christian era, when,says Pliny, the Andarea Kings were very powerful in India, having no less than thirty fortified cities, an army of 1,00000 men and 1,000 Elephants (vide pages 66-67 Essays on Indian Antiquities by Mr. James Prinsep.

மேஸ்டர் ஜேம்ஸ் பிரின்சிப் சாஸ்திரிகளுடைய ஆராய்ச்சியினுல்அகப் பட்ட சிலாசாசனங்களில் கண்டஆந்திர அரசர்களாவன.

---

1. சிப்ரகன் கி. மு. 21வருஷம்
2. பலீன் அல்லது பலிஞ்சன்
3. கிருஷ்ணன்
4. ஸ்ரீசத்காருணன்
5. பூர்ணோத்சங்கன்
6 சத்காரணன்
7. லம்போதரன்
8. இவிலிகன்
9. மேகஸ்வாதி
10. புதுமத்தன்
11 அரிசாலகர்மன்
12 ஹாலன்
13. திலகன்
14. பிரவலேசனன்
15. சுந்தரன்
16. சகிர சத்கரணன்
17. சிவசுவாதி
18. கோமதிபுத்திரன்
19. பூரிமதன்
20. சத்காரணன்
21. சிவசுவாதி
22. யாகஸ்ரீ?
23. விஜயன
24. சந்திரஸ்ரீ
25 புலோமாரிஷி-என்பவர்களாம்

Table XXI-Andhara or Vrispala Dynasty of Andhra or Telengana and in continuation of the Magadha Line.

(See Wilford's comparative list from the Bhagavat, and three other Puranas in the 9 th Vol of As. Res) (These thirty Andhra Bhirtya Kings will reign 456 years—Vishnu Purana. Prof. Wilson adds in a Note—The Vayu and Bhagavat state also 30 Kings and 456 years; The Matsya has 29 Kings and 460 years. The actual enumeration of the

text gives but 24 Names; that of Bhagavatas but 23, that of the Vayu but 17-The Matsya has the whole 29 Names, adding several to the list of our text (V. P.) and the aggregate of the reigns amounts to 435 years and 6 Months B. C. 21—Sipraka a powerful Minister of Susramon, kills the latter and founds the Andra Bhrutya dynasty.

1. Balin, Balekeita B. C. 908 J. A D. 190. W. D.
2. Kristna,
4 Srisatkarani
5. Purnot sanga, Parvamasu
6. Satakarana 11
7. Lambodara
8. Ivilaka, Apilica. W. D.
9. Mega Swati
10. Putumata
11. Arishlakarman. Car Bag Puranam
12: Hala
13. Talaka or Tilaka
14. Pravelasena
15. Sundara named Satkarana
16 Chakara Satakarana
17. Sivaswati
18. Gomatiputra or Gowtami A. D. 500
19. Pulimat or Purimat
20 Satakaranvi IV. Car B Puranam
21. Sivasri
22 Sivaskanda
23. 408 Yagavasri (Yeyne of Chinese)
24. Vegien
25. A. D. 428. Chendrasri or Vijia last Mahgada King 300 J. 546-T
26. Pulomarishi (Pulomeen of Chinese) Mr D. Dies 648 A. D. Salanead[i] T. Cot of Soppa Bowal of Mewar A. D 720—(Vide Page 241 Geneological Tables by Mr. James Prinsep in Indian Antiquity.)

அப்படி ஆண்ட ஆந்தார்களுடைய பெயர்களைப் பற்றி காலபேதத்தினால் இரண்டோரு பெயர்கள் வித்தியாசப்பட்டிருப்பதால் பாதகமில்லை, விஷ்ணு வாயு பிரம்மாண்டாதி புராணங்களில் கண்டிருக்கும்.

விஷயங்களை விசாரித்து எழுதிய

## மகதநாட்டில் ஆண்ட சந்திரவம்ச ஆந்திர சக்கிரவர்த்திகளுடைய பெயர்கள்.

| பாகவத புராணத்தின்படி. | விஷ்ணு புராணத்தின் படி. | வாயு புராணத்தின் படி. | பிரம்மாண்ட புராணத்தின் படி. |
|---|---|---|---|
| பலஹிதன | சுப்ரகன் = சுதரகன் | சிந்துகன் 23 | சிஷ்முகன் 23 |
| * கிருஷ்ணன் | கிருஷ்ணன் | கிருஷ்ணன் 18 | கிருஷ்ணன் ஹ்ரு 18 |
| ஸ்ரீசத்காரணி | ஸ்ரீசத்காரணி | ஸ்ரீசத்காரணி | ஸ்ரீசத்காரணி 10 |
| பவுர்ணமாசன் | புரோந்நதசங்கன் | புரோந்நதசங்கன் 18 | புரோந்நதசங்கன் 18 |
| தெரியவில்லை | சதகாரணி | சதகாரணி 56 | சதகாரணி 56 |
| லம்போதரன் | லம்போதரன் | லம்போதரன் 18 | லம்போதரன் 18 |
| இவிலேகன் | இவிலேகன் | பிலேகன் 12 | ஆபிலேகன் ஹ்ரு 12 |
| மேகசுவாதி | மேகசுவாதி | தெரியவில்லை | சவுந்தசன 18 |
| ஆத்மானன் | பதுமாதன் (பதுமாய் | புதுமாபி 24 [52 | அபி ஹ்ரு ம 12 |
| தெரியவில்லை | அரிஷ்டகர்மன் | நேமிகிருஷ்ணன் | தெரியவில்லை |
| ஹாலியன் | ஹாளன் | ஹாளன் 1 | ஸ்கந்தஸ்வாதி 28 |
| தாளகன் | பட்டலகன் | புலகன 5 | ராலகன் 5 |
| புஷ்பமான் | பிரவிலசேனன் புருக்சேனன் | புருக்சேனன் 21 | பிரவிசேலசனன் 12 |
| சுந்தனன் | சுந்தரசதகாரணி | சதகாரணன் 1 | சுந்தரசதகாரணி 1 |
| சகோரன் | சகோரசத்காரணி | சகோரசத்காரணி ½ | சகோரசத்காரணி 6 |
| தெரியவில்லை | தெரியவில்லை | தெரியவில்லை | மஹேந்திர சத்காரணி 3 |
| ஷை | ஷை | ஷை | குண்டல சத்காரணி 8 |
| வேதகன் | ஷை | ஷை | ஷை |
| சிவசுவாதி | சிவசுவாதி | சிவசுவாமி 28 | சிவசேனன் 1 |
| கவுதமிபுத்திரன் | கவுதமிபுத்திரன் | கவுதமிபுத்திரன் 21 | பத்திரமதி 34 |
| பூரிமான் | புலிமான் (புலோமாப் | தெரியவில்லை | தெரியவில்லை |
| மாதசிரன், | சிவாஸ்ரீ | ஷை | சபி 4 |
| சிவஸ்காந்தன் | சிவஸ்காந்தன் | ஷை | சிவஸ்காந்த சத்காரணி 2 |
| யாஜஞஸ்ரீ | யாஜஞஸ்ரீ | { யாஜஞஸ்ரீ 29 }<br>{ வதகாரணி 60 } | யாஜஞ சத்காரணி 19 |
| விஜயன் | விஜயன் | தெரியவில்லை | தெரியவில்லை |
| சந்திரவிஜயன் | சந்திராசி (தண்டா | தண்டாஸ்ரீ 3 | தண்டாஸ்ரீ சத்காரணி 3 |
| லோமாதி | புலோமாரிஷி (புலேபிரவி | புலோமன் 7 | புலோமன் 7 |

* இந்த கிருஷ்ணன் சிப்ரகனுடைய சகோதிரன். மற்றவர்கள் யாவரும் கோர்மன் ஆண்சந்ததி வார்சுகளாக வந்தாண்டார்கள் அந்த ஆந்தரர்களுடைய வம்சாவளியைப்பற்றி பிருஹத் சம்ஹிதையைப்(T. R. A. S. Vol V-P-82.) பார்க்கவும்? மச்சிய புராணத்தில் 29 ஆந்திரர்களை குறித்திருக்கிறது.

பிறகு ஆங்கிலேயருடைய அரிய முயற்சிகளினால் ஆங்காங்குத்தேடி அகப்பட்ட செப்பேடு சிலாசாசனங்களை பரிசோதித்து எழுதிய (Asiatic Reserches Vol. IX. P. 101-106) ஆசியாடிக்கு சரித்திர கிரந்தம் 9-வது வாலியம் 101-106 பக்கங்களில் மேஸ்டர் (Wilford) வில்போர்டவர்கள் எழுதிய சரித்திரத்தினாலும், மேஸ்டர் பெர்கூஸன் (Mr. Ferguson's The Indian and Eastern Architecture Page 716) எழுதிய சரித்திரம் 716-வது பக்கத்தில் கண்ட விவரங்களினாலும், மற்றும் அநேக சிலாசாசனங்களையும் பரிசோதித்து மேஸ்டர் சுவெல் (Robert Sewell) அவர்கள் எழுதிய ஆர்கியோ லாஜிகல் சர்வே சரித்திர புத்தகம் 2-வது வாலியம், 144 - 45-வது பக்கங்களில் பதிப்பித்திருக்கிற மகத தேசத்தை யாண்ட ஆந்திர அரசர்களுடைய பெயர்களையும், அவர்கள் ஆண்ட காலத்தையும் இதனடியில் பதிப்பித்திருக்கிறோம்.

## மகததேசத்திலாண்ட ஆந்திரர்களுடைய விவரம்.

| அரசர்களின் பெயர்கள். | | ஆண்ட காலம். கிறிஸ்து பிறப்பதற்கு முன் | ஆண்ட காலம். கிறிஸ்து பிறந்த பின். |
|---|---|---|---|
| 1. பலின் அல்லது பலின்ஜா அல்லது சுபகான் | | 31 — | 8-வரு |
| 2. கிருஷ்ண ராஜா | கி-பி | 8 | 10 ,, |
| 3. சத்காருணியன் | கி-பி | 10 | 28 ,, |
| 4. பிரனோத சங்கான் | ... | 28 | 46 ,, |
| 5. சிவசுவாமி | ... | 46 | 64 ,, |
| 6. சதகாருண்யன் (2-வது) | ... | 64 | 120 ,, |
| 7. இலம்போதரன் | ... | 120 | 138 ,, |
| 8. அபிதாகான் | ... | 138 | 150 ,, |
| 9. சங்கான் | ... | 150 | 68 ,, |
| 10. சத்காருண்யன் (2-வது) | ... | 168 | 186 ,, |
| 11. ஸ்கந்தாஸ்வதி | ... | 186 | 193 ,, |
| 12. மிருஜேந்திரன் | ... | 193 | 196 ,, |
| 13. குண்டலஸ்வாதி | ... | 196 | 204 ,, |
| 14. ஸ்வாதிகரன் | ... | 204 | 205 ,, |
| 15- புலோமவிதுரன் | ... | 205 | 241 ,, |
| 16. கோரஸ்யசு | ... | 241 | 266 ,, |
| 17. ஹலா ராஜா | ... | 266 | 271 ,, |
| 18. மண்டலாகரான் | ... | 271 | 276 ,, |

| | | | | |
|---|---|---|---|---|
| 19. | புரந்தரசேனன் | ... | 276 | 281 ,, |
| 20. | சுந்தரன் | ... | 281 | 284 ,, |
| 21. | இராஜசுவாதி | ... | 284 | 6மீ ,, |
| 22. | சிவஸ்வாதி (2-வது) | ... | 284 | 312 ,, |
| 23. | கவுதமிபுத்திரன் | ... | 312 | 333 ,, |
| 24. | வசிஷ்டபுத்திரன் | ... | 333 | 335 ,, |
| 25. | புலோமதன் | ... | 335 | 363 ,, |
| 26. | சிவாஸ்ரீ | ... | 363 | 370 ,, |
| 27. | ஸ்கந்தாஸ்வாதி (2-வது) | ... | 370 | 377 ,, |
| 28. | யஜானன் | ... | 377 | 406 ,, |
| 29. | விஜயன் | ... | 406 | 412 ,, |
| 30. | சந்திரகேசன் | ... | 412 | 422 ,, |
| 31. | புலோமரிஷி | ... | 422 | 429 .. |

அந்த ஆந்திரரும், அவர்களுடைய பிரதிநிதிகளும் வழங்கிவந்த நாணயங்களை டாக்டர் காடிரிங்குடன், பகவன்லால் இந்திராஜி (Dor. Codrington and Bagavan Lal Indragee) என்ற இரு சாஸ்திரிகள் பரிசோதித்ததில், அவைகளில் சிலதில் வசிஸ்டர் குமாரன் வாஸிவாயுவன் என்றும், சிலதில் மஹீதாரீமகன் சிவாலேயன் என்றும், சிலதில் கவதமி புத்திரன் விதியாவான் என்றும் பின்னும் சில நாணயங்களில் வேறு இராஜர்களுடைய பெயர்களையும் பதிப்பித்திருக்கிறதைக் கண்டு ஆசியாடிக்கு சரித்திரம் 303-வது பக்கத்தில் (Vide J. B. B. R. S. S. XIII-303) எழுதி இருக்கிறார்கள். அப்படி ஆண்ட ஆதி ஆந்தரர்கள் ஆதியில் பவுத்தமதஸ்தர்களாயும், பிறகு சக்தி, சைவ, வைணவமதஸ்தர்களாயும் இருந்ததாக அநேக சரித்திரங்களால் ஸ்பஷ்டமாகிறது.

ஆதி ஆந்திரர்கள் புத்தமதஸ்தர்களாக இருந்ததில், பிராம்மண மதஸ்தர்களுக்கும், அவர்களுக்கும் அடிக்கடி சமய விஷயமாகச் சண்டைசச்சரவுகள் நடந்துவரக் குடிகளுக்குள் ஐகமத்தியம் என்னும் ஒருமைப்பாடுகெட்டும், அதனால் தேசாபிமானமும் அற்றுத் தவிக்குங்காலத்தில், இத்தேசத்தின் செல்வச்செருக்கையும், சமயபேத ஜாதிபேதச் சண்டைச் சச்சரவுகளையும் கேட்டும், தக்கச்சமயம் பார்த்திருந்த ஏனையநாட்டார் படை எடுத்து வந்து தாக்கிப் பிடித்துக்கொள்ள பிரவர்த்தித்தார்கள். அதாவது ஆந்திர ராஜர்களில் 'புலோமருடைய' தந்தை 'சந்திரகேச' இராஜன் காலத்தில், கிரேக்கர், பாகதாதியர், பாரசீகர் முதலான ஏனைய நாட்டார் இந்தியாவின்மீது படை எடுத்துவந்ததை, அக்காலத்தில் பாணினி வியாகரணத்துக்கு வியாக்யானம் செய்த பதஞ்சலியார் பிரத்தியக்ஷமாகப் பார்த்தவர். புராணரீதியாகப்பார்க்கையில், ஆந்தரசக்கிரவர்த்திகளின் கடைசிகாலத்தில் அலெக்சாந்தர்படை எடுத்துவந்திருக்கவேண்டும். அன்றியும்,

அந்தக்காலத்தில் மகமதியரும் படையெடுத்துவந்து இந்தியாவின் மத்திய நாடுகளைத் தாக்கினார்கள். அப்படி சித்தியர் முதலான யவனர்கள் இந்தியாவின் மீது படை எடுத்துவந்து எட்டுதரம் தாக்கி, கோயில் கோபுர விக்கிரகங்களை எல்லாம் இடித்தும், வேதாதி கிரந்தங்களையெல்லாம் பொசுக்கியும், ஜாதிபேதம் குலபேதங்களைக் கெடுத்தும், மங்கையரை மானபங்கஞ் செய்தும் வந்ததனால்; இயற்கையிற் சாதுக்களான இந்துக்கள் அவர்களுக்கு பயந்து, (பிளேக்முதலான கொடிய விஷவியாதிகள் பிரவேசிக்கும் காலத்தில் குடிகள்பயந்து நாட்டையும், வீட்டையும், காட்டையும் விட்டோடுவதைப்போல;) நாட்டிலுள்ள நல்லபிராம்மணர் முதலானவர்கள் காட்டுக்குள் போய் கடுந்தவஞ்செய்ய ஆரம்பித்தனர். அப்படி ஆரம்பிக்கவே, இந்நாட்டில் சுமார் 250 வருஷகாலம் சரியான சக்கிரவர்த்திகளும், இராஜர்களும் இல்லாமல் குடிகள் தவித்து நாட்டின் நாலாபக்கங்களில் ஓடியும், மலை முதலான மறைவான விடங்களிலும் குடிபுகுந்தார்கள்.

(The Andhras end in Puloma or Pulomarishi A. D. 436 and from thence forward the chronology of Magada relapses into confusion (Page 151. History of India by the Hon. Mount stuart Elephanston.)

ஆகவே, ஆந்திரருடைய சந்ததி வம்சாவளி புலோமரிஷிகாலத்தின் முடிவு வரையில், அதாவது கி. பி. 436 வருஷம் வரையில் தெரிய வருகிறதேயன்றி அந்தபுலோமரிஷிக்குப் பிறகு மகததேசத்திலாண்ட ஆந்திரருடைய வம்சாவளி குழப்பமாகவே இருக்கிறது என்று கனம் மவுண்டெஸ்டுவார்டு எலிபன்ஸ்டன் அவர்கள் எழுதிய இந்துதேசசரித்திரம் 157 வது பக்கத்தில் எழுதினார். அப்போது புத்தமதஸ்தர்களாக இருந்த ஆந்திரர்களுடைய வம்சாவளி முதலான சரித்திரங்களை படிப்பாளிகளான பிராம்மண மதஸ்தர்கள் மதாவேசத்தினால் எழுதாமல் விட்டு விட்டார்களோ, அல்லது அவர்கள் எழுதிவைத்திருந்த சரித்திரங்களை அபேர்து இந்நாட்டின் மீது படையெடுத்து வந்துபிடித்த பாரசீகர், கிரேக்கர் மகமதியர் முதலானவர்களால் பொசுக்கப்பட்டு பஸ்பமாகிவிட்டனவோ உண்மை இன்னதென்று விவரமாக நாளது வரையிலும் விளங்கவில்லை.

ஆயினும், ஆந்திரர்கள் பிராம்மணமதஸ்தருடைய சச்சரவுகளுக்கும், பாரசீகர் கிரேக்கர் முதலான யவனர்களுடைய படை எடுப்புக்குப் பயந்தோ, மற்றெந்த காரணத்தைப்பற்றியோ, இனி மகததேசத்திலிருந்து ஆளுவதில்சுகமில்லை என்று கண்டு மகதநாட்டிற்கு தெற்கே மலைகள் அடர்ந்த மறைவான விடங்களுக்கும், நீர்வளம், நிலவளம் பொருந்திய நாடுகளுக்கும் குடியேறி தம் தம் பெயர்களால் சில ஸமஸ்தானங்களை ஸ்தாபித்து ஆண்டுவர ஆரம்பித்தார்கள்.

அப்படி வந்தவர்கள் ஐந்து ஆறு ஆந்திர சகோதிரர்கள் என்று, விசாகப்பட்டணம், கோதாவரி ஜில்லா சரித்திரங்களினால் தெரியவந்தாலும், வடக்கே மேஸ்டர் ஜேம்ஸ் பிரின்சிப்பவர்களுக்ககப்பட்ட சிலாசாசனங்களினால், மகதநாட்டிலாண்ட மாருதி இராஜனுடைய சந்ததியார்களில் ஏழு பெயர் மகத

வீட்டை விட்டுப்புறப்பட்டு மாளவ நாட்டிலும், ஓரங்கல், கொண்டவிடு ஆனைகுந்தி, விஜயநகரம் முதலான விடங்களிலும் காலதேசவர்த்தமானங்க ளைத்தழுவி ஆந்திர ஸமஸ்தானங்களைஸ்தாபித்து ஆண்டுவந்ததாகத் தெரியவரு கிறது. அவர்களில் மாளவ நாட்டிலாண்ட உஜ்ஜினி (1) விக்ரமார்க்கனுடைய, குடும்பத்தாரும் (2) கால சூரியராயலு குடும்பத்தாரும் (3) தக்ஷணத்தின் வட மேற்கு கீழ்க்கரை நாடுகளையாண்ட சாலுக்கியரும் (4) ஓரங்கல் நாட்டிலாண்ட கணபதிராயலும் (5) கொண்டவிடுவிலாண்ட கஜபதிராயலும் (6) ஆனைகுந்தி விஜயநகரத்திலாண்ட நரபதிகளும் ஆக (6) ஆறுஆந்திர குடும்பத் தாருடைய சாசன சரித்திரங்கள் மாத்திரம் இதுவரையில் அகப்பட்டிருக்கின் றன. மற்றொரு ஆந்திரகுடும்பத்தாருடைய சரித்திர சாசனங்கள் இன்னும் அக ப்படவில்லை. ஒருவேளை சங்கம ஜாதியாரும் ஒரிசா நாட்டிலாண்ட கேசரி வமி சத்தாரும் அந்த அந்த ஆந்திர குடும்பத்தாராக இருந்தாலும் இருக்கலாம்.

சில சரித்திரங்களினால் சங்கஜாதியார், ஒரிசாவிலாண்ட கேசரி ஜாதி யார்,கொண்டவிடு ரெட்டி ஜாதியார்,வேலாதிராஜர்கள்,களிங்கஜாதியார் கபிலே சுவர ஜாதியர் முதலான பிரபலமான சில ஜாதியார்களும் ஆந்திரவமிசத்தைச் சார்ந்தவர்கள் என்றும்;வடக்கே கஞ்சம், கோதாவரி, விசாகப்பட்டணம், இராஜ மஹேந்திரம், நெல்லூர் முதலான விடங்களிலிருக்கும் ஜயபூர், போபுலி, மடு கொலி, சாலூர், ஆந்திரிகம், பஞ்சபேட்ட, சேகு, சங்கம் விலாசம், வெல்காம், மேரங்கி, குரியம், அனகபல்லி, நக்கபல்லி, பாலகொண்ட, குண்டவி மந்தி ரவு, முதலான குருநில மன்னர்களும், ஜமீன்தாரர்களும் ஆந்திரவமிசத்தைச் சார்ந்த கணபதி, கஜபதி, நரபதிகளுடைய ஜாதியார்களென்றும், சந்ததிக ளென்றும் சில தெலுங்குக்கவிவாணர்களும், சரித்திரக்காரர்களும் சொல்லி இருக்கிறார்கள்.

அப்படிக்கவிகள் சொல்லும் வாக்கியங்களையே உண்மையான சங்கதி களாகநம்பி சரித்திரம் எழுதுவதைப் பார்க்கிலும்; கவிகளாலும், சரித்திரக் காரர்களாலும், கல்சிலாசாசனம், தாம்பிரம் செப்பேடு முதலான சாசனங்களை யும், காலதேசவர்த்தமானங்களையும் தழுவி எழுதுவதே நம்பத்தக்க சரித்திர மாகுமாகையால்; இன்றுவரையிலும் ஆந்திரஜாதியாருடைய சரித்திரத்தைப் பற்றி வேதபுராண இதிகாசங்களினாலும், சிலா செப்பேடு சாசனங்களினாலும், சர்க்கார் சோதனை சரித்திர கிரந்தங்களினால் அகப்பட்ட ஆதாரங்களினாலும், ஆந்தரர்கள் என்றுஸ்திரப்படுத்தப் பட்டவர்களுடைய சரித்திரங்களைமாத்திரம் எழுதலானோம்—அப்படி நாளதுவரையிலகப்பட்ட சிலாசெப்பேடு முதலான சாசனங்களினாலும், புராண இதிகாசங்களினாலும் ஸ்திரப்படுத்தலானவர்கள் (1) தாராநகரத்தை ஆண்ட விக்கிரமார்க்கன் குடும்பத்தார்களும் (2) சாலு க்கியஜாதியாரும்,(3)ஓரங்கல் கணபதிராயர்களும்,(4) கொண்டவிடு கஜபதிரா யர்களும்,(5)விஜயநகர நரபதிராயர்களும் ஆந்திரவமிசத்தாரில் முக்கியமான வர்களென்று ஸ்பஷ்டமாகிறபடியால் அந்த ஐந்துகுடும்ப ஆந்திரர்களுடைய

சரித்திரங்களை மாத்திரம் சங்கிரஹமாக வெழுதத் தீர்மானித்தோம்—அவர்களில் முக்கியமானவர்கள் மாளவ நாட்டில் உஜ்ஜினியிலாண்ட விக்கிரமார்க்க மஹாராஜனுடைய குடும்பத்தார்களே.

## இரண்டாவது அத்தியாயம்.

## விக்கிரமார்க்கனுடைய சரித்திரம்.

மேஸ்டர் ரோபர் லித் பிரிட்ஜி அவர்கள் எழுதிய இந்துதேச சரித்திரம் 174-வது பக்கத்தில், "நாம் சொல்லுகிற சில நூற்றாண்டுகளில் இந்தியாவில் அதிக பராக்கிரமசாலிகளும், இராஜபுத்திரர்களுக்குள் சிறந்தவர்களுமாகிய ஆந்திரர்களும் அவர்களுடைய சந்ததிகள் மகதநாட்டிலாண்டு வந்தபோது புத்தமதவிஷயமாகத் தாக்கப்பட்டு ஒரிசா நாட்டின் தெற்கே தெலுங்கானா வென்னும் ஓரங்கலுக்கும், அக்காலத்தில் இந்தியாவில் சிறந்திருந்த மால்வாவைச்சார்ந்த உஜ்ஜினி நகரத்துக்கும் வந்தாண்டார்கள். ஆந்திரர்களுக்கு சிறந்த மன்னனும், வீரபராக்கிரமமுடையவனும், உஜ்ஜினி நகரத்திலிருந்து ஆண்டவனுமான விக்கிரமார்க்க மஹாராஜன் என்று சொல்லி இருக்கிறார்; ஆகவே, இனி அந்த விக்கிரமார்க்கனுடைய சரித்திரத்தைப்பற்றி விசாரிப்போம்.

"For Some centuries during the period of which we are speaking the most powerful family in India, and the greatest of all the Rajaput Dynasties, was called Andhra Branches of this great family reigned in Magada (whence they had expelled the Buddist kings) in Warangel in that part of the Deccan called Telingana, south of Orissa and also in Ujjain in Malwa, which was the most famous city of India at that time. The greatest king of the Andra dynasty was the heroic Vickramaditya king of Ujjain. Mr. L. Lrthbrdge.

விக்கிரமார்க்கனுடைய சரித்திரத்தைப்பற்றி தென்தேசத்தில் வழங்கிவரும் முப்பத்திரெண்டு பதுமைக்கதை முதலானதுகளில் சொல்லி இருக்கும் சங்கதி சங்கிரஹமாவது:—

நந்தியாபுரவாசியாகிய சந்திரவர்ணன் என்னுமோர் அந்தணர், தாம் கற்றுத்தெளிந்த கல்வியோடு, பின்னும் பலகலைகளைக் கற்றுத்தெளிய தக்க ஓர் குருவை நாடி தேசசஞ்சாரம் செய்துகொண்டு ஒரு வனத்தில்போய் ஓர் அரசமரத்தடியிற் படுத்திருந்ததாகவும், அப்போது அந்த மரத்திலிருந்த ஓர் பிரம்மராக்ஷஸி அந்த அந்தணருக்கு பிரத்தியக்ஷமாகி ஒவ்வொரு இலையிலும் ஒவ்வொரு ஞானத்தையும் எழுதிப்போட, அவைகளை அந்த அந்தணர் (உபவாசத்தோடிருந்து) படித்துத் தெளிந்தபிறகு, அக்காட்டைவிட்டு கன்னியாபுரத்துக்குவந்து ஆறுமாதகாலமாகவிருந்த உபவாச கஷ்டத்தினால் அங்கிருக்கும் அலங்காரவல்லி என்னும் தாசி வீட்டின் நடையில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்ததாகவும்;

அப்படித் தூங்கிக்கொண்டிருந்தவரை அந்த அலங்காரவல்லி வந்துப் பார்த்து மெய் அன்னம் வேது செய்து எழுப்பித் தன்னை கலியாணம் செய்துக் கொள்ளும்படி வருந்திய தாகவும், அதற்கவர் சம்மதிக்காமையால் இருவருக்கும் சண்டைசச்சரவுகளுண்டாகி அந்நாட்டுக்கரசனான சுத்தவர்மாவினிடம் போய் முறையிட, அவ்வரசன் தனது மந்திரிபிரதானி புரோகிதர்களிடம் அதைப்பற்றி யோசிக்க தனது குமாரத்தியாகிய சித்திரரேகையையும், புரோகிதன்மகளாகிய கலியாணியையும, செட்டிமகளாகிய கோமலாங்கியையும், தாசிமகளாகிய அலங்காரவல்லியையும் சேர்த்து ஒரே காலத்தில் விவாகம் செய்வித்தல் சாஸ்திர சம்மதமென; அந்த அரசனும் அப்படியே செய்வித்ததாகவும்; அப்படி விவாஹம் செய்வித்த, சுத்தவர்மா அரசன் சாகும்தருவாயில் தனக்கு ஆண் பிள்ளைகளில்லாக்குறையினால் சமஸ்தானத்தைச் சந்திரவரணனுக்குபட்டாபிஷேகம் செய்துவிட்டதாகவும், அப்படி பட்டாபிஷேகம் செய்துக்கொண்ட சந்திரவரணனுக்கு முதல் மனைவியாகிய சித்திரரேகையினால் விக்கிரமார்க்கனும், கலியாணியினால் வல்லவரிஷியும், கோமலாங்கியினால் பட்டி என்பவனும், அலங்கார வல்லியினால் பிரித்துலஹரி என்பவனு மாக நான்குமக்கள் பிறந்ததாகவும், அப்படிப் பிறந்த நான்கு குமாரர்களில் வல்லவரிஷி துறவியாகிவிட்டதாகவும, சிலகாரணங்களைப்பற்றி பிரித்துலஹரி சிங்காசனத்தைப் பெற்று 120 மனைவிகளை விவாஹம் செய்து அரசுசெலுத்தி வருங்காலத்தில், சாந்தயோகரிஷி கொடுத்த கொம்மட்டி மாதுளம்பழத்தினால் தன்மனைவிமேல் சந்தேகமுற்று ஸமஸ்தானத்தைவிட்டு சந்நியாசியாகிவிட்டதாகவும், பிறகு அந்த சிங்காசனத்துக்கு விக்கிரமார்க்கன் வந்து தனது சகோதிரன பட்டியை மந்திரியாக நியமித்துக்கொண்டும், தானிருக்கும் கன்னியாபுரியைவிட்டு உஜ்ஜினி புரத்தை இராஜதானியாக்கிக் கொண்டும், அங்குப்போய்பத்திரகாளியம்மனுடைய தரிசனையையும் வரத்தையும் பெற்றும், அங்கிருக்கும் 7 உரிகளை வெட்டி பொக்கிஷத்தைப் பெற்று தன் நாட்டை அலங்கரித்தும், ஏலகாரம்பை யாதி 1008 மனைவிகளை விவாஹம் செய்துகொண்டும் மஹாபராக்கிரமத்தோடு ஆண்டுவந்ததாகவும்; அப்படி ஆண்டுவருகையில், தேவலோகத்தில் அரம்பை ஊர்வசி மார்களுடைய நடன யோக்கியதையை அறிந்துச் சொல்லும்படி தேவேந்திரனால் அழைக்கப்பட்டுப்போய் அத்தேவேந்திரனுக்கு திருப்தி யுண்டாக்க, அத்தேவேந்திரன் வியந்து 1000 வருஷ ஆயுளும், தேவலோக சிங்காசனத்தையும் கொடுத்தனுப்பியதாகவும், அவைகளைப் பெற்று பூலோகத்துக்கு வந்து பத்ரகாளியினால் நாடாறுமாதமும் காடாறுமாதமுமாக 2000 வருஷ ஆயுளைப்பெற்றும் ஐம்பத்தாறு தேசங்களுக்கதிபதியாகி செங்கோல் செலுத்தியதாகவும், அந்த சிங்காசனத்தை

ஏறவிரும்பிய போஜனுக்கு 32 பதுமைகள் சொன்னகதைகளை டை புத்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

## சாலிவாஹனனுடைய விவரம்.

காவேரிதீரத்தில் பல்லாண்டு புரிவாசிய இராமகிருஷ்ண அவதானி தன் மனைவிதிவ்விய சிந்தாமணியை சித்திராபர்வம் 15-ம திதி இரவு 12நாழிக்குமேல் ரோகிணி நக்ஷத்திரத்தில் கூடினால் அற்புதப்பிள்ளை பிறக்குமென்று கண்டுப் போவகையில், இடையில் ஆற்றின் பெருவெள்ளத்தைக்கண்டுத் தவித்ததாகவும், அப்போது அருகிலிருந்த குடகுநாட்டுக் குயவன் இராம வேளாளன் தன் குமாரத்தியாகிய அன்ன பூரணியை அணையும்படிவேண்ட, அந்த அந்தணரும் சம்மதித்து சேர்ந்ததில், சாலிவாஹனன் பிறந்ததாகவும், அந்தச் சாலிவாகனன் கல்விகேள்வி மந்திர தந்திரங்களால் மைசாபுரி (மைசூர்) அரசன் விக்ஷவநாதனுக்கு மந்திரியாகி ஆண்டுவருகும்போது, மேலேசொன்ன விக்கிரமார்க்கனுக்கு மாமூல்படிகப்பம் கட்டாமலிருந்ததனால், அந்த விக்கிரமார்க்கனும பட்டியும்பலமான தண்டுதளாதிகளோடு படையெடுத்துவந்ததாகவும், அப்படி வந்த விக்கிரமார்க்கனை சாலிவாஹனன் மந்திர தந்திரங்களினால் கொன்று அந்த சிங்காசனத்தை அந்தச் சாலிவாஹனன் கட்டியாண்டதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

விக்கிரமார்க்கனைப்பற்றி வடதேசத்தில் முக்கியமாக சிலாசாசனசெப்பேடுகளில் கண்ட சரித்திரங்களைக் கொண்டு ஆசியாடிக் ரிசெர்சஸ் என்னும் சரித்திரம் 9-வது வாலியம் 131-135-146-147-வது பக்கங்களிலும், டைபத்தாவது வாலியத்திலும் வில்போர்டு (Wilford) சரித்திரம் 1-வது வாலியம், 274-வது பக்கத்திலும், மேஸ்டர் ஜேம்ஸ் பிரின்செப் (James Prinsep) இந்தியன் அண்டி குட்டி சரித்திரம் 249-250 பக்கங்களிலும் பின்னும் பல சாசன சரித்திரங்களில் பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது.

## பாடலீபுரத்து விக்கிரமார்க்கன்.

அவர்களில், பாடலீபுரத்தில் ஒரு விக்கிரமார்க்கன் பிறந்து விக்கிரமகேசரி யென்ற பெயரால் பிரபலஞ்சி ஒரு சாலிவாஹனனால் கொல்லப்பட்டதாக சொல்லப்பட்டிருக்கிறது. மற்றொரு விக்கிரமார்க்கனைப்பற்றி பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது.

அதாவது

மால்வா நாட்டில் திருபுரநாதனென்ற சிவபெருமானே விக்கிரமார்க்கன் என்றப் பெயரால் பிரபலஞ்சி அப்போது இந்தியாவின்மீது படை எடுத்து வந்த மிலேச்சரைத் துரத்தியடித் தோட்டினனும். அந்த விக்கிரமனுக்கு விகிரமசக்தி என்ற ஒரு மந்திரி இருந்ததாகவும், அவன் மஹாமதியூகி என்றும் அந்த

விஜயன் உஜ்ஜினியில் குணவதி, சந்திரவதி, மதனசுந்திரி என்ற மூன்று மனவிகளை விவாஹம் செய்துக் கொண்டிருந்ததன்றியில், இலங்கை மன்னனாகிய வீரசேனசிம்ஹலேசுவரன் குமாரத்தி குட்டக்காளையும், களிங்கநாட்டு மன்னன்குமாரத்தி விசுவகர்மினியையும் விவாஹம் செய்துக்கொண்டிருந்தான் என்றும், அப்படி பலமனைவிமார்களை விவாஹம் செய்து வாழ்ந்துவருங்காலத்தில் அவனது சமஸ்தானத்திலிருக்கும் புரந்தசபுரவாசியாகிய ஒரு பிரபல தனவான் தான் சாகும்போது தனது நான்கு குமாரர்களை அருகில் தருவித்து அந்த நான்கு குமாரர்களுக்கும் நான்குப் பானைகளைக்கொடுத்து இறந்தானென்றும்; அந்த நான்கு பானைகளில் முதற்பானையில் மண்ணும், 2-வதில் அடுப்புக்கரியும், மூன்றாவதில் எலும்புகளும், நான்காவதில் தவிடும் போட்டிருக்கக் கண்டு அதன் பொருள் தெரியாமல் தவித்து அதின் விஷயத்தைப்பற்றி அரசனாகிய அந்த விக்கிரமார்க்கனுக்கு அறிவிக்க; அந்த விக்கிரமார்க்கனும் அவன் மந்திரி முதலானவர்களும் அதைப்பற்றிச் சிந்தித்துச் சித்தித்தும் பொருள் விளங்காதவர்களாகி அந்தப்பொருளை அறிவிப்போருக்கு நல்ல பஹுமானம் தருவதாக விளம்பரம் செய்வித்ததாகவும், அப்போது அடுத்த கிராமத்தில்வசிந்த அந்தணர் இருவருக்கு ஒரு விதந்துவான சஹோதிரி இருந்ததாகவும், அந்த விதந்துவான பிராம்மணஸ்திரி எப்படியோ கர்பவதியாகியதை அவளுடைய சகோதரர்கள் கண்டு வெட்கப்பட்டு அவளை வீட்டை விட்டு ஓட்டிவிட, அவள் போய் ஓர் குயவன் வீட்டில் அடைக்கலம் பெற்று அந்தக்குயவன் வீட்டில் சாலிவாஹனன் என்ற பெயரால் ஒரு குமாரனைப்பெற்று வளர்த்ததாகவும், அச்சாலிவாகனன் 12-வயது பையனாகியபோது அந்தப்பயன், அந்த ராஜ விளம்பரத்தைப்படித்துப் பார்த்துச்சிரித்து இறந்துபோன தனவந்தன் தன்மக்களுக்குக் கொடுத்த நான்குபானைகளில், மண்போட்டுவைத்திருந்த பானையைப் பெற்றமகன் தன்தந்தையின் பூஸ்திதிகளையும், கரிப்போட்டுவைத்திருந்த பானைக்குடையவன் தன் தகப்பனுடைய மர முதலான சாமான்களையும், எலும்புகள் போட்டுவைத்திருந்தப் பானைக்குடையவன் ஆனை எருது முதலானமிருகங்களாகிய சொத்துக்களையும், தவிடுபோட்டிருந்தப்பானைக்குடையவன் தானிய முதலான சொத்துக்களையும் அடையவேண்டியதென்று ஒருசீட்டில் எழுதிராஜனுக்கு அனுப்ப இராஜன்படித்துப்பார்த்து. சந்தோஷப்பட்டு அந்தப்பையனை நேரில்பார்க்கக் கருதிசொல்லியதால்; அப்பையன்வராமல் உன் இராஜனைவந்து என்னைப்பார்க்கச்சொல், என்று அவமானமாகச்சொல்லி அனுப்பியதாகவும், அதைக்கேட்டு இராஜன் அதிக கோபமூண்டு தனது தண்டு தளாதிகளோடுப்போய் சண்டைப்போட, அந்தப்பையன் மண் முதலானதுகளால் வேடிக்கைக்குச் செய்துவைத்திருந்த குதிரை ஆனைகளுக்கு உயிரைக் கொடுத்து அவைகளைக் கொண்டு விக்கிரமார்க்கமஹாராஜனோடுச் சண்டை செய்து, ஜயித்தானென்றும் சொல்லப்பட்டு இருக்கிறது.

அக்கினிபுராணத்தின்படி விக்கிரமார்க்கன் சந்திரவமிசக்ஷத்திரிய ஆந்திரகுலதிலகனென்றும், அவன் பாண்டவரைச்சார்ந்த அர்ஜுனனுக்கு 785 வருஷங்களான பிறகு உஜ்ஜினியிலாண்டவனென்றும், அந்த ஆந்திரசந்ததி

யில் விக்கிரமார்க்கனுக்கு முன்பு உஜ்ஜினியில் அடியில்கண்ட அரசர்கள் ஆண்டார்களென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## உஜ்ஜினியில் விக்கிரமார்க்கனுக்கு முன்பு ஆண்ட ஆந்திர அரசர்களின் விவரம்.

| அரசர்களின் பெயர்கள். | | ஆண்ட காலம். |
|---|---|---|
| தனஞ்சயன் | கி-மு | 840-வருடம் |
| ஜிதச்சந்திரன் | ... | 760 ,, |
| சமுத்திர பாலன் | ... | 670 ,, |
| நரவாஹனன் | ... | 680 ,, |
| பூதிராஜன் | ... | 580 ,, |
| ஆதித்யபுவனன் | ... | 400 ,, |
| பிரம்மராஜன் | ... | 390 ,, |
| ஆதிபிரம்மன் | ... | 360 ,, |
| சதாசிவசேனன் | ... | 271 ,, |
| ஹமீரதன் | ... | 191 ,, |
| கந்தரூபன-கார்த்தபரூபன் | ... | 91 ,, |
| விக்கிரமார்க்கன் | ... | 56 ,, |
| அந்த விக்கிரமார்க்கனுக்கு பிறகு. | | |
| சந்திரசேனன் | கி-பி | 44 ,, |
| சூரியசேனன் | ... | 135 ,, |
| சந்திரசேனன் | ... | 215 ,, |
| கனகசேனன் | ... | 216 ,, |
| சந்திரபாலன் | ... | 302 ,, |
| மஹேந்திர பாலன் | ... | 402 ,, |
| கர்மசந்திரன் | ... | 409 ,, |
| விஜயாநந்தன்-அவனுக்குபிள்ளைகளில்லாமையால் | | |
| சிந்துலாவை தத்துவாங்கினான் | ... | 410 ,, |
| முஞ்சன் (சிந்துலாவின் சகோதிரன்) | ... | 470 ,, |
| அந்த சிந்துலாவுக்கு போஜன் பிறந்தான் சகாப்தம் | | 540 வருடம் |
| போஜன் | ... | 483 ,, |

அந்த போஜராஜனுக்குப் பிறகு 45 அரசர்கள் கி. பி. 1210 வருஷங்கள் வரையில் மாளவ உஜ்ஜினிப்பட்டணத்திலிருந்து ஆண்டார்கள் (அந்த 45 அரசர்களின் பெயர் முதலான விவரங்களை இந்நூலின் நூன்முகத்தில் மாளவாவில் ஆண்டவர்களின் பட்டியிற்பார்க்க) அப்படி ஆண்ட அரசர்களெல்லாரிலும் விக்கிரமார்க்கன் ஆந்திரவம்சதிலகனென்றும், கந்தரூபனுடைய குமாரனென்றும், அந்தகந்தரூபனும் அவனுடைய முன்னோர்களும் புத்தமதஸ்தர்களாக இருந்தார்களென்றும், விக்கிரமார்க்கன் தன் முன்னோருடைய புத்தமதத்தை விட்டு, இந்து (பிராம்மண) மதத்தைத் தழுவி சந்திபூஜை சிவபூஜைகளில் ஈடுபட்டவனாகி; அநேக பிரம்மாலயங்களையும், மாடமாளிகை கூடகோபுர அகிரஹாரங்களையும், ஆலிகூபதடாகாதி தருமங்களை நியமித்தும்; சகலரிடத்திலும் சமரசஞானியாகவிருந்துத் தழுவியும், துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் செய்தும், அக்காலத்தில் இந்தநாட்டை நாடித் தாக்க வந்த சீத்தியர், யுவனர் மகமதியர் முதலானவர்களைத் தடுத்தும், அவர்களை காரூர் என்னுமிடத்தில் மடக்கியடித்தும்; வடக்கே ஹிமாசலபர்வதஅடிவாரம்வரையில் இராஜ்ஜியத்தைப் பரவச்செய்தும், மஹாபராக்கிரமசாலியாகியும், தன்னுயிரைப்போல் மன்னுயிரைப்பாதுகாத்தும் வரருசி, வராஹமீரர், தனவந்திரி, சபாநாதன், அமரகோசன், விட்டலபட்டர், கடகர்பர், சங்கர், சதாநந்தன் என்னும் ஒன்பது வித்வத்சிங்கங்களையும், மற்றும் அநேக கற்றோர் கவிகளையும் தக்கபடி ஆதரித்தும், தாராநகர அரசனாகிய இராஜேந்திரனுடைய குமாரத்தியைமணந்துபுத்திரசந்தானம்பெற்றும், அனைவராலும் கொண்டாடும்படியான ஓர் அவதார புருஷனாக இருந்தும், 135 ௵ ஆண்டபடியால்; அந்த விக்கிரமனுடைய நல்ல பெயரை உலகோர் என்றும் புகழும்படி அவனுடைய ஆளுகை முதல் ஒரு புதுசகாப்தத்தை ஏற்படுத்த, அதற்கு விக்கிரமாதித்யஸம்வத்ஸரமென்றும், அது கி. மு. 56¾ ௵ம் மார்ச்சு மாதம் முதலாரம்பித்ததென்றும், அப்படி புகழ்பெற்ற விக்கிரமார்க்கன் தனது 130 வயதாகிய கலியுகாப்தம் 3044 ௵ம் மரணமடைந்தான் என்றும்; ஆகவே, அந்த விக்கிரமார்க்கனுக்கு பலவருஷங்களுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த சாலிவாஹனன் அவனைக்கொன்றதாகச் சொல்லுவது பிசகான சரித்திரம் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அதற்கொரு திருஷ்டாந்தமாக- விக்கிரமார்க்கன் சகாப்தம், கிறிஸ்து பிறப்பதற்கு முன் 56¾ வருஷங்களுக்குமுன் ஆரம்பிக்கிறது, சாலிவாஹன சகாப்தமோ கிறிஸ்து பிறந்த பிறகு 79 வருஷங்களுக்கு பின்பு ஆரம்பிக்கிறது; ஆகவே, இருவருடைய காலவித்தியாசம் அதிகமாக இருக்கிறது. இருக்கவே, சாதாரணஜனங்கள் நம்புவதைப் போல சாலிவாஹனனே விக்கிரமார்க்கனை கொன்றான் எனில், விக்கிரமார்க்கன் பெயரால் பல ராஜர்கள் ஆண்டுவந்ததாக இப்புத்தகத்தின் 13-14 பக்கங்களில் தெரிவித்திருக்கிறபடியால், அவர்களில் யாரோ ஒரு விக்கிரமார்க்கனைக்கொன்றிருக்கலாமே யொழிய, (32) பதுமைக்கதையில் சொல்லி இருக்கும் காவிரி தீரத்திலுள்ள, மைசூர் நாட்டை ஆண்ட சாலிவாஹனன், வடக்கே வெகுதூரத்திலிருக்கும் உஜ்ஜினி நாட்டையாண்ட விக்கிரமார்க்கனைக் கொன்றதாகச் சொல்லத்தக்க ஆதாரசாதனங்களில்லை.

சிலாசாசன சரித்திரங்களினால் தெரிவிக்கப்பட்ட

# போஜ மஹாராஜன்.

---

விக்கிரமார்க்கன் என்ற பெயரால் நான்கைந்து விக்கிரமார்க்கன்மார்கள் பிறந்து பிரபலப்பட்டதாக சரித்திர சாசனங்கள் சொல்வதைப்போலவே, போஜராஜன் என்ற பெயரால் இரண்டு மூன்று போஜர்கள் இருந்ததாகச் சரித்திர சாசனங்கள் சொல்லுகின்றன, அதில் ஒருபோஜனையே விக்கிரமார்க்கனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் பெரும்பான்மையான சரித்திர சாசனங்களில் மாளவ தேசத்துக்கரசனாகி, தாராநகரிலாண்ட ஆந்திர போஜனையே சரியான போஜனாக ஸ்தாபிக்கின்றது.

அந்த போஜராஜன் மாளவ நாட்டைச்சார்ந்த தாராநகரத்தில் ஆண்ட சிந்துல ராஜனுடைய மகன். அந்த போஜனுடைய மனைவி லீலாவதி. அவனுடைய மந்திரி புத்திசாகரர். அவனுடைய சமூகவித்துவான்கள்- காளிதாசன், பவபூதி, தண்டி, பாணன், வரருசி, சுபந்து, கிராடாசந்திரன், கவிசேகரன், விஷ்ணு, மாயூரன் முதலானவர்கள். அந்த போஜராஜன் சைவமதஸ்தனாக விருந்தும், தருமராஜிய பரிபாலனம் செய்தும், சகலமதஸ்தர்களிடத்தும் சமரசசிநேகிதனாகவிருந்தான். அந்த போஜன் காலத்தில் ஸம்ஸ்கிருத வித்தியா விஷயம் விருத்தியானதைப் போல அவனுக்கு முன்னுமில்லை, பின்னுமில்லை. போஜராஜனும் மஹாவித்வானாக இருந்து போஜச் சொம்பு, போஜபிரபந்தம் முதலான கிரந்தங்களை இயற்றினான். அந்த போஜராஜனே ஆகம வேதபுராண இதிகாசங்களைத் தக்கபடி ஆராய்ந்து தெளிந்தவனாக இருந்ததன்றியில், அவன் காலத்தில் வாகடவைத்திய நூல்களும் விருத்தியாயின. அவன்காலத்தில் மானுஷவைத்தியத்தோடு அசுரவைத்திய மாகிய(சர்ஜரி)சத்திரவைத்தியமும் விருத்தியாகி இருந்ததென்பதற்கு திருஷ்டாந்தமாக, அந்தபோஜனுக்கே ஒருகாலத்தில் பயங்கரமான தலைவலியுண்டாகித்தவிக்க, சலிய சாஸ்திரத்திரத்திற்ச் சிறந்த சகோதிரர்கள் இருவர் வந்து அவனைப்பார்த்தும், சம்மோஹினி என்னும் மருந்தினால் அந்த அரசனை மூர்ச்சைஅடையும்படி செய்தும், அவன் கபாலத்தைக் கத்தியினால் பிளந்தும், மூளையிலிருந்த விஷத்தை நீக்கி சுத்திசெய்தும், மறுபடியும் கபாலத்தைப் பழமைப் போலப் பொருத்தி சந்தைத்தைத்தும், சந்தானகரணி என்னும் மருந்தைக் கொடுத்தும், மூர்ச்சையைநீக்கி நீடுழிவாழச் செய்ததாகவும் அவனுடைய பிரபந்தமொன்றில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த போஜனுக்கு வயது 114வருஷங்கள். போஜனுக்குப்பிறகு அவனுடைய குமாரன் ஜயாநந்தன் 21 வருஷங்களாண்டான். அந்த ஜயாநந்தன் போஜனுடைய குமாரத்தி பானுமதியை விவாஹம் செய்துக்கொண்டவன் என்று(A. R. S. Vol. 9) ஒரு சாசனத்தினால் வெளியாகிறபடியால்; அவன் போஜனுடைய மருமகனாக இருந்தாலும் இருக்கலாம். பிறகு சாலிவாகனன் மாளவநாட்டை மஹாராஷ்டிர

நாட்டுடன் சேர்த்து 21 வருஷங்களாண்டு இருந்தபோது, மகமதியர்கள் முக்கிய மாக, மகமதுகஜினி கூர்ஜரநாட்டின் மேல் படை எடுத்து வந்து சோமநாத புரத்தையும், அதன் கோயிலேயும் இடித்து குட்டிச்சுவர்களாக்கி அங்கிருந்த அளவற்ற திரவியத்தை ஆனை ஒட்டைகைகளின் மேலேற்றிக்கொண்டு போனான்.

---

மூன்றும் அத்தியாயம்

# சாளுகிய ஜாதியார்.

பாலபாகவதம், வசுசரித்திரம், நரசபூபாலியம், நரபதி விஜயம் முதலான கிரந்தங்களின்படியும், வேறுசாசனங்களின் படியும சந்திரவமிசப் பாண்டவரில் ஒருவன் அர்ஜுனனுடைய 83 வது சந்ததி நந்தராஜன் என்றும், அந்த நந்த ராஜனுடைய 9-வது சந்ததி சாளுகியன் என்றும, அந்த சாளுகியரில் கலியாண்புரியிலாண்டவன் விஜ்ஜலராஜன் என்றும், அவன் பேரன் வீரஹெம்மல ராயன் என்றும், அந்த ஹெம்மலராயன் மகன் தபீனன என்றும், அந்த தபீனன் சந்ததியில் இராமராஜாபிறந்தான் என்றும், அந்த ராமராஜா கிருஷ்ண தேவராயனுடைய மருமகனென்றும், டாக்டர் கஸ்டவ அப்போர்டுக்கு அகப்பட்ட சாசனத்தை அவர் தென்னிந்தியா சரித்திரம் 73-வது பக்கத்தில் எழுதி இருக்கிறார்.

(Inscription) "From Naryana, Brama, Atri, Chendra, Buda, Pururavas, Ayu, Nahasa, Yayati, Puru &c. are descended the Bahratas and as the 83rd. in descent from Arjnna is given in the Narpati Vijiam *Nanda* his 9th descendent is Chalukya and from is descended Vijjal or Bijjala of Kalyana" &c. Geniological Tree of the Narapatis contributions to the Southeren India inscriptions Part 1, Page 73. By Dr. Gustav Oppert, Ph. D. Professor of Sanscrit Presidency College Madras. &c. &c. &c.

சந்திர வமிச க்ஷத்திரிய ஆந்திரர்களில் ஒரு வகுப்பாராகிய சாளுக்கியர் கி. பி. ஆறாவது நூற்றாண்டு முதல் பன்னிரெண்டாம நூற்றாண்டுவரையில் அதாவது ஆறு நூற்றாண்டுகள் வரையில் ஸமஸ்தானத்தை ஸ்தாபித்து பிரபல ராக ஆண்டவர்கள் என்றும், ஆதியில் அவர்களில்59 அரசர்கள் ஐயோத்தியாவை பிரதான பட்டணமாகக் கொண்டு ஆண்டதாக அநேக சாசனங்களிருக்கினும், அவர்களில் மூனாறாவது அரசன் கி. பி. 566 ஹூம் தக்ஷணதேசத்தில் ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தாண்ட சங்கதி முதல் அநேக சரித்திர சாசனங்களினால் ஸ்பஷ்டமாகிறது. அவர்களில் விஜயாதித்தியன் தக்ஷண நாடுகளை நாடி ஸமஸ்தானங்களை ஸ்தாபிக்க வந்த போது, ஒரு உயுத்தத்திற் கொல்லப்பட்டான்.

அவன் மனைவி அப்போது பூர்ணகர்ப்பவதியாக இருந்தமையால், ஓர்ந்தணா வீட்டில் அடைக்கலம் புகுந்து,விஷ்ணுவர்த்தனனென்னும் மகனைப்பெற்றாள். அந்த விஷ்ணுவர்த்தனன் பல்கிப் பெருகி பராக்கிரமசாலியாகி காஞ்சிபுரத்தி லாண்டுவந்த பல்லவராஜனை ஜயித்து, அவனுடைய குமாரத்தியை விவா ஹம் செய்துகொண்டான். அவர்களுக்கு விஜயாதித்யனும், அவ்விஜயாதித்ய னுக்கு புலிகேசி வல்லடனும் பிறந்தார்கள். அந்தப் புலிகேசியின் பேரன்மார் கள் பிரபலமானபோது,அவர்களில் மூத்த குடும்பத்தார்கள்,மேற்கு தக்கணத் திலும்,இளையவனான குப்ஜவிஷ்ணுவர்த்தனன் கிழக்குக் கரையோரங்களிலும் படை எடுத்துப்போய் வேங்கிநாட்டிலிருந்த பல்லவ சாலான் கியானர்களை ஜயித்தான். அப்போது வெங்கிநாட்டிலாண்ட ஆந்திர பிருதியர்கள் புத்தமதஸ் தர்கள், சாளுகஜாதியாரோ வைணவ மதஸ்தர்கள்.

அந்தச் சாளுகியருடைய வம்சாவளியைப்பற்றி டாக்டர் பர்னல் (Dr.-Burnel's) South Indian Palaeography Page 18 & Mr. Fleets Dynasties of Kanara District P. 18) மேஸ்டர் பிளீட்டவர்களுடைய சரித்திர கிரந்தங்களையும் அனுசரித்து எழுதினோம். அந்த வமிசத்திற்கு ஆதிபிதா தைலேபர் என்று இரண்டொரு சாசனங்களினால் தெரியவரினும், பெரும் பான்மையான சாசனங்களில் அடியில் கண்டபடி எழுதப்பட்டிருக்கிறது.

---

## சாளுக்கியருடைய வம்சாவளி.

---

1. ஜயசிம்ஹன்.
2. புத்தவர்மன்.
3. விஜயவர்மன், அல்லது விஜயராஜன்
   (சாலிவாகனசகாப்தம் 394வருஷம் கிறுஸ்து சகாப்தம் 472
4. இரணராஜன்.
5. புலகேசிவல்லபன்.
6. கீர்த்திவர்மன்.
7. பிருதுவி வல்லபன்
   சாலிவாகனன் சகாப்தம் 489 கி. பி. 567
8. மங்கலீசராஜன்.
   கி. பி. 567 சிங்காசனமேறி 610வருஷம் ஆண்டான்.
9. சத்யஸரிய இந்திரவர்மன்.
   சகாப்தம் 532 கி. பி. 610

10. வல்ல பேந்திரன் அல்லது 2-வது புலகேசி வல்லபன்.
இ. பி. 610 முதல் 634வரும் ஆண்டான்.

11: குப்ஜவிஷ்ணுவர்த்தனன்.
கிழக்குநாட்டு அரசன் இ. பி. 615-633வரும் ஆண்டான்.

12. 2-வது ஜயசிம்ஹன். 633-663

13. நாகவர்த்தனன்=இந்திரபட்டகன். 663

14. ஆதித்யவர்மன்.

15. விஜயபதிரன்.

16. விக்கிரமாதித்யன் = அம்பிரம்மாள். ஆதி சங்கராசாரி
வதிந்தகாலம். சகாப்தம் 592-602 இ. பி. 670-681.

17. விநயாதித்யன்.
சகாப்தம் 603-618 இ. பி. 681-696

18. விஜயாதித்யன்.
சகாப்தம் 618-655 இ. பி. 696-733.

19. விக்கிரமாதித்யன். 2-வது லோகமாதேவியின் கணவன்.
சகாப்தம் 655-669 இ. பி. 733-747.

20. கீர்த்திவர்மன். 2-வது
சகாப்தம் 669-679 இ. பி. 747-757.

21. 1-பீமராஜன்.

22. 3-கீர்த்தி வர்மன்.

23. 3-விக்கிரமாதித்யன்.

24. 2-பீமராஜன்.

25. ஜபானன்.

26. 4-வது விக்கிரமார்க்கன். பூகதேவியின்கணவன்.
சகாப்தம் 895-919 இ. பி. 973-997.

27. 4-வது விக்கிரமார்க்கன்.

28. 2-வது தைலபூபன்.

29. சத்யசிரேயன். அம்பிகாதேவியின் கணவன்.
சகாப்தம் 919-930 இ. பி. 997-1008

30. தாசவர்மன். பாகியவதியின் கணவன்.

31. விபுவிகிரமன்.
சகாப்தம் 930-940 இ. பி. 1008-1018

32. ஜயணன்.

33. அக்கதேவி.

சகாப்தம் 944-969 கி. பி. 1022-1047

34. 3- ஜயசிம்ஹன்.

சகாப்தம் 940-964 கி. பி. 1018-1042

35. சோமேசுவரன்.

சகாப்தம் 964-990 கி. 1042-1068

36. 2-சோமேசுவரன்.

சகாப்தம் 990-997 கி. 1068-1075

37. 6-வது விக்கிரமாதித்யன்.

சகாப்தம் 997-1048 கி பி. 1075-1126

38. 4-வது ஜயசிம்ஹன்-பானவாசியிலாண்டவன்

சகாப்தம் 1001-1003 கி. 1079-1081

39. ஜயகாரணன்.

40. 3-வது சோமேசுவரன்.

சகாப்தம் 1048-1060 கி. 1126-1138

41. மையிலாலதேவி-கதம்பஜயகேசிரியை மணந்தாள்.

42. ஜகத்காமலன்.

சகாப்தம் 1060-1072 கி. 1138-1150

43. 3-வது திரிலோகமல்லன்.

சகாப்தம் 1702-103 கி. 1150-1162

44. 4-வது வீரசோமேசுவரன்.

சகாப்தம் 1104-1111 கி. 1182-1189

அவர்களில் புலிகேசிவல்லபன் கதம்பருடைய தலைநகரமாகிய பானவாசியைப்பிடித்து பாதாமிகோட்டையை வசமாக்கிக்கொண்டான்.

கீர்த்திவர்மன் (1) கதம்பரைஜயித்து பிரபலனானதன்றியில், அவன் தம்பி மங்கலீசன் காலசுரிஜாதியாரை ஜயித்து கொங்கணநாட்டைச்சார்ந்த ரேவதி தீபம், மதங்கம் முதலான கோட்டைகளை பிடித்தான். சத்யாஸ்ரயன் மஹாபராக்கிரமசாலியாகி கனோஜி நாட்டு அரசனாகிய ஹர்சவர்த்தனனையும், ரஸ்தரகூட ஜாதியைச்சார்ந்த கோவிந்தனையும், கோரரோண மவுரியரையும், கூர்ஜரமால்வ அரசர்களையும் ஜயித்தும், மஹாராஷ்டிரருடைய பிஷ்டபுரத்தைப் பிடித்தும், களிங்கரையும், கோசலரையும், அடக்கியும், பல்லவரை காஞ்சிபுரம் வரையிலோட ஓட்டியும், சோழர்களையும் ஜயித்தாருவதற்காகப் பெரிய சேனையை அனுப்பினான். அந்த சத்ய சிரேயனுடைய பராக்கிரமத்தையும், தருமராஜாங்கத்தையும் பற்றி அநேக கவிகள் புகழ்ந்தும், அவன் குடும்பத்துக்கே "சத்யசிரேஷ்டர்கள்" என்று பெயரிட்டதன்றியில், அவன்

காலத்திலுண்டான கல்விசீர்திருத்தத்தை நேரில்கண்டுகண்ட Hewen Thsang எவன்தீசாங்கு என்னும் சைனா நாட்டு யாத்திரைகாரரும் கொண்டாடி எழுதி இருப்பதோடு, பாரசீக நாட்டின் அரசன் Khosru II கொச்ருராஜன் வியந்து விலையற்ற வெகுமதிகளைக் கொடுத்துப் புகழ்ந்தான்.

அந்த சத்யாசிரேயனுக்குப் பிறகு பட்டத்துக்குவந்தவர்கள், அதிக பிரபலராக இராவிடினும், அவன் பட்டத்தையடைந்த விக்கிரமாதித்யன் முதலில் பல்லவருடைய மூக்கட்டுச்சண்டைகளினால் சற்று சலித்தாலும், கடைசியில் அவர்களை ஜயித்து காஞ்சிபுரத்தைப் பிடித்தான். அப்போது சந்திரகாசாவில் ஆண்ட தேவசக்திராஜன் அந்த விக்கிரமார்க்கனுக்கு கப்பம்கட்டிவந்தான்.

அந்த விக்கிரமார்க்கனுடைய குமாரன் வினயாதித்யனும் பல்லவரைக் கண்டித்தடக்கியதன்றியில், அவன் சமஸ்தானம் தக்கரணத்தில் தென்னாடு களிலைபலவிடங்களிற்பரவச்செய்தும் காலம்பரர்,கேரளர்,ஐயசலார்,விலாசர், மாலவர், சோழபாண்டியர்களையும் ஜயித்ததாக சிலசாசனங்களால் தெரியவருகிறது. அவன குமாரன் விஜியாதித்யன் காலத்தில் ஸமஸ்தானத்தில் சண்டைசச்சரவு களின்றி சமாதானமாக இருந்தது. அவன் குமாரன் 2-வது விக்கிரமார்க்கன் பல்லவரை மூன்று தரம் ஜயித்து காஞ்சியைக் கைப்பெற்றான்.

2-வது கீர்த்திவர்மன்-2-வது திரிலோகவல்லபன் காலத்தில் விசேஷ விகல்பங்களில்லையாயினும், 3-வது ஜயசிம்ஹன் சேரசோழர்களைத் தாக்கினான். (2) சோமேசுவரன், குலத்துங்கசோழனை ஜயித்தான். அவனுக்கு பக்தலா தேவி, சந்திரகதேவி, மைலதேவி என்ற மூன்று மனைவிகளிருந்தார்கள் (2) சோமேசுவரன் கதம்பரை ஜயிக்க அவர்களுடையநாட்டின் பாதிபாகத்தை அவன் சகோதிரன் (4வது) விக்கிரமாதித்தன் ஆண்டான்.

அந்த (4-ம்) விக்கிரமாதித்தன் சோழராஜனுடைய குமாரத்தியை விவாஹம் செய்துக்கொண்டதன்றியில்,தன் குமாரத்தியை கதம்பராஜனுக்கும் கொடுத்தான். அப்படி மஹாபராக்கிரமசாலியாக ஆண்டுவரும்போது 1189ஹ்ம் பிஜ்ஜாலர், காலசூரியர், கணபதிராயலு, பல்லாளராஜர்கள் பிரபலமாகி வந்தபோது அந்த மேற்குநாட்டு சாளுகியருடைய மகிமைமங்கியது.

சாளுகிய ஜாதியில் இரண்டு கிளைபார்களென்று முன்னமே சொல்லி அவர்களில் மேல் பிரிவு சாளுகியரைப்பற்றி விவரித்தோம், இனிகீழ்பிரிவு சாளுகியரைப்பற்றி சற்றுச்சங்கிரஹமாகச் சொல்வோம். சாளுகிய குடும்பத்தில் சிரேஷ்டனான குப்ஜவிஷ்ணுவர்த்தனன், கீழ்கரைநாடுகளை நாடிவந்து வெங்கி நாட்டிலிருந்து சாலங்கியானனை ஜயித்து ஸமஸ்தானத்தை ஸ்தாபிக்க, அது ஒரிசாமாகாணம் வரையில் பரவி இராஜமஹேந்திரத்தை பிரதான பட்டணமாக்கிக்கொண்டு நந்நூறு வருஷகாலங்களாக அந்த களிங்கநாட்டை ஆண்டார்கள். டாக்டர் பர்னல் (The S. I. Pilaeagraphy P. 21-22) சாசனத்தின்படி அவர்களுடையவம்சாவளி.

1. குப்ஜவிஷ்ணுவர்த்தனன் 18வரு'ம் ஆண்டான்?
2. ஜயசிம்ஹவல்லபன் 30 ,, ,,
3. இந்திரராஜன்
4. இராஜநந்தன விஷ்ணுவர்த்தனன் 9 ,,
5. மங்கியுவராஜன் 25 ,, ,,
6. 2-வது ஜயசிம்ஹவல்லபன் 13 ,, ,,
7. கோகிலிராஜன் 6 மீ ,,
8. (3) விஷ்ணுவர்த்தனன் 37 வரு ,,
9. சக்திவர்மன் (விஜியாதித்திய பட்டான்) 16 அல்லது 18 வரு
10. (4) விஷ்ணுவர்த்தனன் 30 வரு ஆண்டான்
11. (2) விஜயாமேந்திரமிருகராஜன் 40 அல்லது 48 வருஷம்
12. (5) காளிவிஷ்ணுவர்த்தனன் 1½ வரு ஆண்டான்
13. (3) குணப்பெண விஜியாதித்தியன் 10-48 ,, ,,
14. விக்கிரமாதித்யயுவராஜன்
15. சாளுக்கிய பீமன் 30 ,, ,,
16. ஊயுத்தமல்லன், தாபப்பன், யுத்தமல்லன் 7 வரு. ஆண்டான்
17. கொல்லபிகா விஜியாதித்தியன் 6 மீ ஆண்டான்
18. விக்கிரமாதித்தியன் 11 ,, ,,
19. அம்மராஜ விஷ்ணுவர்த்தனன் 7 வரும். ,,
20. விஜியாதித்தியன்
21. இராஜபீமன் 12 வரும். ஆண்டான்
22. அம்மராஜன் 25 ,, ,,
23. தானாராஜன் 3 வருஷம் ஆண்டபோது பிரபலசண்டைகள்
24. சந்திரவர்மன் 12 வரு ஆண்டான்
25. விமலாதித்தியன் 7 ,, ,,

அவர்களில் விமலாதித்தியன் சூரியவமிச க்ஷத்திரியனாகிய இராஜராஜேந்திர சோழனுடைய தங்கையாகிய குந்தியை விவாஹம் செய்தான். அவன் குமாரன் சந்திரவமிச க்ஷத்திரியனாகிய இராஜராஜனுடைய குமாரத்தி இருமாங்கியை 1022 வரும் விவாஹம் செய்தான். அவர்களுக்குப் பிறந்த இராஜேந்திரசோழன் 1064 வரும் வெங்கிநாட்டிற்கு முதற்சோழராஜனானான். அப்போது வெங்கிநாடு சோழநாட்டிற்கு வடக்கெல்லையாகியது. இராஜேந்திரகுலத்துங்கன் (1) தன் குமாரனை சாளுக்கிய நாட்டிற்கு பிரதிநிதி யாக்கினாலும், ஒருவருஷம் கடந்த பிறகு இராஜியத்தை தன் சிற்றப்பன் விஜியாதித்தியனிடம் கொடுத்து விட்டு தெற்கே வந்து விட்டான்.

அந்த விஜியாதித்தியன் களிங்கநாட்டை 15 வருஷகாலம் ஆண்டு இறந்த

பிறகு, குலத்துங்கன் தனது துவிதியகுமாரனாகிய வீரநாதனுக்கு பிரதிஷ்டி அரசுரூக்க, அவன் கி. பி. 1102 வருஷம் வரையில் ஆண்டான். பர்னல் சாஸ்திரியின் சாசனத்தின்படி சோழர்கள் அந்த நாட்டை கி. பி. 1228 வருஷம் விட்டுவிட நேர்ந்தது. குப்ஜவிஷ்ணுவர்த்தனனுடைய ஜயம் கி. பி. 605 வருஷம் ஆரம்பித்தது கி. பி. 610 வருஷம் தன் சகோதிரரை விட்டுப்பிரிந்தான்.

மங்கியுவராஜன், அவனுடைய சகோதிரன் கோக்கிலிராஜனும் பட்டத்துக்குச் சண்டைப்போட்டுக் கடைசியில் மங்கியேபட்டத்தை வகித்தான். பிறகு தாரப்பனுக்கும் விக்கிரமார்க்கன் மகன் அம்மராஜனுக்கும் இராஜ்ஜியத்தைப்பற்றி சண்டைசச்சரவுகளுண்டாகி இராஜபீமனுக்கே ஜயம் கிடைத்து 12 வருஷகாலம் ஆண்டான். 2வது அம்மராஜன் கி.பி 945 வருஷம் பட்டத்துக்கு வந்தபோது பிரபலராஜகலகங்களுண்டாகி நாட்டில் சுமார் 27 அல்லது 30 வருஷம் நாசமுற்று குடிகள் தவித்தார்கள். அந்த சாளுக்கியர்களில் இராஜமஹேந்திரத்திலிருந்த விஷ்ணுவர்த்தனன் நன்னயபட்டு என்ற தெலுங்கு கவிவாணரைக்கொண்டு ஸமஸ்கிருத மஹாபாரதத்தை தெலுங்கில் பாடும்படி செய்வித்தான். அப்படி பிரபலமாக நானூறு வருஷகாலங்களாக வெங்கிநாட்டையும், களிங்கநாட்டின் பெரும்பாகத்தையும் சமாதானத்தோடு ஆண்டுவந்த சாளுக்கியரை ஒரிசா நாட்டு கஜபதிகளும், ஓரங்கல்நாட்டு கணபதிராயலுகளும் பிரபலராகவந்துதாக்க கி-பி 1223 வருஷம் மங்கலமடைந்து மறைந்தது. அந்த சாளுக்கியர் ஒரு காலத்தில் கலியாணிபுரத்தையும் பிரதான பட்டணமாகக்கொண்டு ஆண்டுவந்தார்கள் என்றும், ஆனகுந்தி நரபதி ஸமஸ்தானம் கிருஷ்ணதேவராயலுடைய மருமகன் இராமராஜா, அந்த சாளுக்கிய குடும்பஸ்தானென்றும் சாசனங்களால் பிரத்தியக்ஷமாகிறது (Vide Page 105-Vol 8-Indian Autiquity by Mr. Fleet)—Vide Pages 1481 to 53-155, 156 157 158 The Archaeological Survay of S. I. Vol II by Robert Sewell M L S

## சாளுக்கிய மேற்குப்பிரிவு ராஜர்களுடைய காலத்திலுண்டான சாசனங்களின்

| வருஷம் கி—பி. | இராஜர்களுடைய பெயர்கள் | சாசனங்கள் இப்போதிருக்குமிடம் | வகரா |
|---|---|---|---|
| 650 | அம்பர ராஜன் | ஒருா | தாம்பிரசாசனம் |
| 652-3 முதல் 690 வரை | சதிப ஸ்ரீரியன்குமாரன் | கர்னூல் | ஷை |
| | விக்கிரமார்க்கன் | ஷை | ஷை 5 சாசனங்கள் |
| 690 முதல் 95 | விக்கிரமாதித்தியன் | பெல்காம், சோராம். ஹரிலே | சிலாசாசனம், தாம்பிரம் |
| 758 | கீர்த்திவர்மன் | ஒக்கலேரி | தாம்பிரசாசனம் |
| 997 | ஆபாவமல்லன | தாலடகுண்டி | சிலா சாசனம் |
| 1019 | ஜயசிம்மன | பெல்காம் | ஷை |
| 1020 to 1035 | ஜகதேவமல்லன் [ன் | ஷை | ஷை |
| 1145 to 1048 | சோமேசுவர தேவ | தாலிடகுண்டி, பெல்காம் | ஷை |
| 1066 | விஷ்ணுவர்த்தனன் | தேவன்கிரி | ஷை |
| 1068 | திரிலோகமல்லன் | பணவாசி | ஷை |
| 1070-1075 | புவனைகமல்லன் | பெல்காம் | 4 ஷை |
| 1077-1125 | விக்கிரமாதித்தியன் 5வது | ஷை அநந்தப்பூர், கோராபுரு தேவன்கிரி முதலான விடம் | 15 சாசனங்கள் |
| 1029 to 1142 | பூலோகமல்லன் | பெல்காம், இத்திகிரி தேவன்கிரி | சிலா சாசனம் |
| 1147 | ஜகதேவமல்லன் | ஹரிஹர | ஷை |
| ஷை | தைலபராஜன் | ஷை | ஷை |
| 1154 | திரிலோகமல்லன் | பெல்காம் | ஷை |

## கீழ்ப்பிரிவு சாளுக்கியருடைய சாசனங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 650 | 1 ஜயசிம்மன் | கிருஷ்ணாஜில்லா, | தாமிரசாசனம் |
| ,, | | பெத்தமாத கிராமம் | ஷை |
| ,, | இந்திரபாதிரிகா | சென்னை விநோதசாலையில் | ஷை |
| ,, | சாளுக்கியபீமன் | கோதாவரி, மண்டலம் | ஷை |
| ,, | அம்ம ராஜன் 1 | கிருஷ்ணாஜில்லா | ஷை |
| ,, | ஷை | ஏரூரு, கிருஷ்ணா: சென்னை | ஷை |
| ,, | ஷை 2-வது | கிருஷ்ணா ஜில்லா | |
| ,, | ஷை ஷை | ஷை | ஷை |

இந்த சாசனங்களினால் அந்த சாளுக்கியாருடைய ராஜ்ய பரிபாலனம் பிரத்தியக்ஷமாகும்.

நான்காவது அத்தியாயம்.

# காலசூரிய ஜாதியார்.

சாளுக்கிய ஜாதியாரின் சந்ததியாகிய் கலியாணபுரியிலாண்ட விஜ்ஜலன் அல்லது பிஜ்ஜலன் அல்லது விஜயன் என்னும் அரசன் முதலில் காலசூரிய ஜாதியைச் சார்ந்தவனாகவும் அதற்குத்தலைவனாகவும் இருந்து, பிறகு சாளுக்கிய நாராயணன்,என்றும் வெங்கித்திரு புவனமல்லன் என்றுதிப்பெயர்களைப் பெற்ற தாக டாக்டர் ஆபோர்ட்டரவர்களுக்கு தேவணஹள்ளிலும், ரெயிசூரிலும் அகப் பட்ட சாசனங்களினாலும், பாலபாகவத முதலான சரித்திரங்களினாலும் ஸ்பஷ்டமாகிறது.

"From Calukya descended in course of time the well-known Vijjala or Bijjala of Kalyana. This Vijjala who belonged to the family of the Kilacuryus, though he usurped the throne of the Chalukyas of Kalyanee

We hope further to have brought to light * * The Chalukyas, through Vijjala the Head of the Kalasurya dynasty Pages 25-25-44 T.J. History by Dr. Oppert.

அவர்களுடையவம்சாவளி.

1 பத்தமஹாராஜன்
2 சங்கரன்
3 கானன்
4 ஜோதிசிங்கன்
5 பிரமாதி-1128
6 விஜ்ஜலன்-1161-1162
7 சைதேவி-1164
8 சோமேசுவரன்-1167-1175
9 சங்கம்மான் 1175-1180
11 ஆஹமல்லன் 1186-1188
12 சிங்கன்னன் 1189

ஆந்திர ஜாதிவகுப்பைச் சார்ந்த காலசூரியவு ஜாதியார் கி-பி 567முதல் 660ஹூ வரையில் ஆண்ட ஒரு பிரபலமான ஜாதியார்கள் என்று மேஸ்டர் பிளீட் (Mr. Fleet) அவர்களுக்கு அகப்பட்ட சாசனங்களைக் கொண்டு தமது கனரிஜாதி சரித்திரம் 10-11 பக்கங்களில் எழுதி இருக்கிறார்.

அந்த ஜாதியின் ஆதித்தலைவர் புத்தமஹாராஜன். அவனுக்கு சங்கார், கானர் என்ற புத்திரர்கள் பிறந்து, ஒருவன் வடதேசங்களிலும், மற்றொருவன் தென்தேசங்களிலும் ஆண்டார்கள். அந்த சங்காருக்கு, ஜோதிசிங்கனும், அவனுக்கு பிரமாதியும் பிறந்து 1128ஹூமேற்கு சாளுக்கியருக்கு அடங்கி ஆண்டார்கள். அவனுக்குப் பிறகு அவன் குமாரன் விஜ்ஜலன் 1161 முதல் 1162 வரு ஷம் வரையிலும், பிறகுஸ்ரீவசுதேவியும், பிறகு சோமேசுவரன் 1167 முதல்

1175 வரையிலும், பிறகு சங்கம்மாள் 1175 முதல் 118 வரையிலும், பிறகு ஆஹவமல்லன் 1186 முதல் 1188 வரையிலும், அநந்தரம் சிங்கன்னன் 1189 வருஷம் வரையிலும் ஆண்டுவந்தார்கள். அவர்கள் ஆண்டுவந்த இடங்களையும், அவர்கள் காலத்தில் நடந்த விசேஷங்களையும் விவரமாகக் காட்டும் சாசன சரித்திரங்கள் இது வரையிலும் கிட்டவில்லை. டாக்டர் ஆபோர்டுக்குரெய்குரில் கிடைத்த கல் சாசனங்களினாலும், சரித்திரங்களினாலும் அந்த காலசூர ராயலைச்சார்ந்த விஜ்ஜாள் சாலுக்கிபஜாதிக்கும் தலைவனென்றும் அவன் கலியாணபுரியைக்கட்டி. ஆண்டு, லிங்காயத்து மதத்தை ஸ்தாபித்த பசுவரை தனது மந்திரி பிரதானியாக நியமித்துக்கொண்டும், அவர்சகோதரி பத்மாவதியை விவாஹம் செய்துக்கொண்டதாகவும், கடைசியில் அந்த பசுவருடைய ஏவுதலினால் விஜ்ஜலன் சொல்லப்பட்டானும். அந்த விஜ்ஜலனுடைய சந்ததிதான் விஜயநகர கிருஷ்ணதேவராயலுடைய மருமகனாகிய இராமராஜாவாம். அவர்களின் வீட்டின் பெயா பூசப்பாட்டிவராம்.

டேபில் X L II-தெலுங்கானாவின் பிரதான பட்டணமாகிய ஓரங்கல் வில்ஆண்ட ஆந்திர (துளுவ) ஆதேவராஜர்கள் பிரதாபருத்திரருக்குமுன் ஓரங்கள்ளில் ஆண்ட 19 இராஜர்களில் 18 பெயர் 370 வருஷ காலம் ஆந்திர ஆதேவராஜர்கள் ஆண்டார்கள், என ஓங்கல்லின் ஒரு கோயிலில் கட்டப்பட்ட சாசனத்தில் கண்டிருப்பதாக ஆ-ரி கிரந்த முதல் வாலியத்தில்கண்டிருக்கிறது. அவர்களில் 1 திருபுவன மல்லராஜா ஓரங்கல்லை ஸ்தாபித்தான்.

கி-பி 1162 வருஷம் பிரதாபருத்திரன் கோயிலைக் கட்டிவைத்தான். அவன் காலத்தில் அந்த சமஸ்தானம், கிழக்கு சமுத்திரக்கரை, ஐதராபாதின் தெற்கு ஸ்ரீசைலமலை, மேற்கு வேங்கடமலை, வடக்கு கோதாவரி மாகாணமாம்.

அங்கு ஆண்ட ஆந்திரர்கள்.

| | | | |
|---|---|---|---|
| கி. பி. 800 வ. ஸ்ரீரங்கராயன் | 25 வருஷம் | நரசிம்மஹன் | 8 வருஷம் |
| வீரநாராயணன் | 23 ,, | துய்யமஹாராஜன் | 12 ,, |
| ஒபிளிராஜன் | 21 ,, | ஸ்ரீபாண்டியன் | 9 ,, |
| ஸ்ரீரங்கநாயகன் | 22 ,, | வாசுதேவன் | 12 ,, |
| பிரங்கிஎண்டயன் | 15 ,, | ஸ்ரீவீரநிதி | 15 ,, |
| சந்திரகோபாலன் | 32 ,, | குப்ஜயவேலன் | 14 ,, |
| நரசிம்மஹன் | 13 ,, | இராஜவிஜயபுஜங்கன் | 12 ,, |
| கம்பீரன் | 15 ,, | சாலிநாராயணன் | 10 ,, |
| பக்கள்ளன் | 22 ,, | பிரதிவாதிபயங்கர சாலிகன் | 87 ,, |
| வீரநரசிம்மன் | 12 ,, | | |

ஊரகண்டி பிரதாபருத்திரன் 58 அல்லது 54 வருஷம் ஆண்டு 1221க்கு முடிந்தது பிறகு மிலேச்சராகிய மகமதியர் வந்து தாக்க, பிரதாபருத்திரனுடைய

சேனாதிபதிகளாகிய, ஹக்கர், புக்கர், விஜயநகரத்துக்குப் போய் சமஸ்தானத்தை ஸ்தாபித்தார்கள். (மேஸ்டர் பிரின்ஸிப் அவர்கள் எழுதிய வம்சாவளி சரித்திரம் 278-279-வது பக்கங்களில் காணலாம்.)

**Table X L II Adeva Rajas of Tuluva, Andra or Telingana Capital Werangalli or Warancal.**

**Ninteen Adeva Rajhas** reigned 370 years supposed to be the eighteen **princes of Andra descent,** prior to Pratapa Rudra (See As Res Vol, Saca **1113,) Sasanam** from a temple at Warangall & Trans Lip So A Vol III **I. Tribuvana** Mall **Raja** of Warangolli Poli Raja, his son A. D. 1162 **Pratapa Rudra** built a temple.

**East** boundry the **Sea** Shore, Sri Sela Hills (South of Hydrabad **West Venketa** country, North Countries Godavery,

| | | | | |
|---|---|---|---|---|
| **830 Sri Ranga** A. R. | 25 Years | | Narasimha | 8 Years. |
| Viranarayana | 23 | ,, | Dvia | 12 ,, |
| Woalaa | 21 | ,, | Sri Pandia | 2 ,, |
| Sriranga Nayaken | 22 | ,, | Vasa Deva | 12 ,, |
| Perunge Enden | 15 | ,, | Sri Virandi | 15 ,, |
| Canda Gopala | 32 | ,, | Cutia Deva | 14 ,, |
| Narasimha | 13 | ,, | Raja Visio Bajanga | 12 ,, |
| Cambale | 15 | ,, | Sahca Narna | 19 ,, |
| Bucana | 2 | ,, | PridivodiBayanankam Sadican 87 | |
| Viranarasimha | 12 | ,, | | |

1167 Uracondi Pratapa Rndra 58 or 54 ended 1221. The milichas (Mahamadans) followed and Pratapa Rudra, whose officers Hacca & Bucca raised the Vigianagar dynasty &c. Vide Pages 278-279 Genealogical Tables of James Prinsip &c

மேஸ்டர் ஜே. ஸி. மார்ஸ்மேன் எழுதிய இந்துதேச சரித்திரம் 13 வது பக்கத்தில் ஏறக்குறைய கி. மு. 56 வருஷம் ஆந்திர வம்சத்தார் மகத ராஜ்ஜியத்தைப்பெற்று 436 வருஷம் ஆண்டார்கள் அவர்களுடைய சமஸ்தானம் தெற்கே அவர்களுடைய பிரதான பட்டணமாகிய ஓரங்கல் வரையிலும், வடக்கே புகழ் பெற்ற உஜ்ஜினிபட்டணம்வரையிலும் பரவி இருந்ததாக எழுதியிருக்கிறார்.

**About the year 56 B. C. The Andra Dynasty obtained possession of the throne of Magada and flowriested till 436 A. D. Their dominion extended into the Deccan with Warangal for their capital and Ojjein as the great metropolis of their power** in the north (The History of **India Page 13-by J. L. Marshman.)**

ஐந்தாவது அத்தியாயம்.

## சந்திரவம்ச ஆந்திர ராஜர்களில்

மற்றொருபிரிவாராகிய

# ஓரங்கல் கணபதி (ஞானபதி) இராஜர்கள்.

அவர்களை காகத்திய ஜாதியாரென்று சொல்வதுமுண்டு. சந்திர வம்ச ஆந்திரர்களில் மற்றொரு பிரிவாராகிய ஓரங்கல்கணபதி இராஜர்களுடைய சரித்திரத்தைப் பற்றி மேஸ்டர் பிரின்செப் (Prinsep) டாக்டர், வாகர் (Dr. Walker) கனம் டெயிலர் (Rev. W. Taylor) கர்னல் மெக்கன்சி (Col. Mckanzie) முதலானவர்கள் பிரபல பிரயத்தனப்பட்டு சாசனங்களைத்தேடி எழுதி இருக்கினும், திருப்திகரமான சரித்திரம் இன்னமும் அகப்படவில்லை. ஆயினும் அந்த சமஸ்தானத்தை ஸ்தாபித்த அரசன் கோதாவரி தீரத்தில் நந்தாவனம் என்னும் பெயரால் இராஜதானியை ஸ்தாபித்தும், சோழர்களை ஜயித்தும், இலங்கை மன்னனுடைய குமாரத்தியை விவாகம் செய்துகொண்டதில், பிறந்த குமாரன் புத்திசுவாதீனமற்றவனாய் இருந்ததைக் கருதியும், அவனுடைய இரண்டு பேரன்மார்கள் இராஜ்ஜியத்தை ஆண்டு வந்ததாகவும், அவர்களுக்குப் பின் ஆண்ட பத்து (10) இராஜர்களுடைய பெயர்கள் திருப்தி கரமாக தெரியவராவிட்டாலும், அவர்களுடைய அன்சந்ததியாகிய புரோளராஜன் பட்டத்துக்கு வந்ததாகவும், டாக்டர் வாகர் சாஸ்திரியாருக்கு அகப்பட்ட சாசன சங்கதியினால் தெரியவருகிறது.

## அந்த கணபதிராஜர்களுடைய வம்சாவளி.

1. திரிபுவன மல்லன்
2. புரோளராஜன் (அவன் மனைவி முப்பம்மதேவி)
3. பிரதாபருத்திரன்
4. கணபதிதேவராஜன்
   அவன் விதர்து
5. ருத்ரம்மகாரு கி. பி. 1257-1295 38 வருஷங்கள் ஆண்டார்
6. ஜேஷ்டி குமாரத்தி
7. பிரதாபருத்திரன் 2-வது கி. பி. 1295-1323
8. கிருஷ்ணன்
9. விநாயகன் அல்லது காகதேவன்

அந்தத் திருபுவனமல்லன் அனுமகொண்டாவில் அகப்பட்ட சாசனத்தின் படி (VideMr.Fleets)புரோளிஇராஜனுடைய தந்தை என்று மாத்திரம் தெரிய வருகிறதேயன்றி மற்ற சங்கதிகள் தெரியவரவில்லை.

2. புரோளிராஜனும் அவனுக்கு முன்னிருந்த 8 பெயர்களும் அனுமகொண்டாவிலிருந்து அரசு செய்தாலும், அது வசதியாக இராமையால், புரோளிராஜன் ஓரங்கல் அதாவது ஓரே கல்லில் 12,546 கஜ மண்மதில் சுற்றளவுள்ள பலமான கோட்டையையும், அதைச்சுற்றி அழகான பட்டணத்தையும் கட்டுவித்து ஆண்டான். அவனுடைய பிதா இறந்தபோது புரோளிராஜன் பாலியனாக இருந்தும் தக்கக் கல்வியறிவைப் பெற்றும் ஒரிசாகஜபதி மன்னனோடு சண்டை செய்து ஜயித்ததாகவும், சாளுக்கிய வமிசஸ்தனாகிய தைலப்பதேவனையும், மைசூரை சார்ந்த அரசர்களையும் ஜயித்ததாகவும், தற்செயலாக தன் குமாரனால் கொல்லப்பட்டான் என்றும் அனுமகொண்ட சாசனத்தினால் தெரியவருகிறது.

3. (1) பிரதாபருத்திரன் 1162 வருஷம் பட்டத்துக்கு வந்து பீமராஜனையும், சோழர்களையும் ஜயித்து பராக்கிரமசாலியானான்.

4. கணபதிதேவன் 1190முதல்1258 வருஷம் வரையில் ஆண்டான். ருத்திரம்மகாரு அவனுடைய மனைவி, அவர்களுக்குப் பிறந்த ஞானம்பாள் என்னும் குமாரத்தியை அப்போது தாரணிகோட்டைக்கரசனாகிய கோட்டபேட்ட ராஜனுக்கு விவாஹம் செய்துக்கொடுத்தார்கள். அந்த கோட்டபெட்ட ராஜன் ஜயினமதஸ்தனாக இருந்தும், இராஜரீகய விஷயத்தைக்கருதி பெண்ணைக் கொடுத்தார்கள் போலும், அப்படி விவாஹமானவர்களுக்கு புகழ் பெற்ற (2) பிரதாபருத்திரன் பிறந்தான்.

5. ருத்திரம்மகாரு,கணபதிதேவனுக்கு ஆண்சந்ததி இல்லாமையால்,அவன் மனைவி ருத்திரம்மாள் 1290 வருஷம் பட்டத்துக்கு வந்து சுமார் 1323 வருஷம் வரையில் 40 வருஷகாலங்களாக அதிக தரும ராஜியபரிபாலனம் பண்ணினதை மார்கபோலோ (Marco Polo) என்ற யாத்திரகன் நேரில் பார்த்து புகழ்ந்து எழுதியிருக்கிறான். அப்போது மஹாவீரதீரனான கங்கைய்ய ரெட்டி ருத்திரம்மாளுடைய புகழ்பெற்ற தளர்த்தனாக இருந்தான்.

6. 2-வது பிரதாபருத்திரன் ருத்திரம்மாளுடைய பேரனானபடியால் தன் பாட்டன் பாட்டியின் பிரபுத்துவதனை வகித்தான். அவன் தந்தை ஜயினமதஸ்தனாக இருந்தாலும், பிரதாபருத்திரன் தன் தாய் வர்க்கத்தாருடைய இந்து மதத்தை அநுஷ்டித்து அதிக பிரபலனாகி ஸமஸ்தானத்தை கன்னியாகுமரி வரையில் பரவச்செய்தான். அவன் புகழ் எங்கும் பரவியது. அந்தக்காலத்தில் ஐயோதியாவிலாண்ட கபாபின் சேனைகள் படையெடுத்து வந்து, ஓரங்கல்லுக்கு அடுத்த தேவகிரிகோட்டையையும் தாக்கி, ஏராளமான பொருள்களை வாரிக்கொண்டுபோன தன்றியில்; கி. பி, 1306 வருஷம் அலாவுதீன், மாலிக்கபூர் என்னும் சேனைத்தலைவனை அனுப்பி தேவகிரியைத் தாக்கச் செய்தும், கப்பம்

கட்டாதிருந்த (பிரதாபருத்திரனை) சிறைப்பிடித்து டில்லிக்குக் கொண்டு போனன். பிறகு மகமதியர் 1309 வருஷம் ஓருங்கல்லின் மேல் படையை அனுப்பிப் பிடித்து டில்லிக்கு அடங்கி ஆளச்செய்தார்கள். 1310 வருஷம் மகமதியர் மறுபடியும் மலிக்கபூரை அனுப்பி கொள்ளை யிடச்செய்தார்கள். 1326 வருஷம் பிரதாபருத்திரன் தேவகிரி அரசனோடு சமாதானமாகி தக்க சேனைகளைச் சேர்த்துவைத்துக்கொண்டு, தான் டில்லி மகமதியருக்குக் கட்டும் கப்பத்தை நிறுத்திவிட, 1321 ஹூ டில்லி மகமதியர் மஹா கோபங்கொண்டு மறுபடியும் ஓரங்கல்லுக்கு ஒரு சேனையை அனுப்ப, மகமதியர் சேனைகள் கொடிய வியாதிகளால் தாக்கப்பட்டு டில்லிக்குத் திரும்பினாலும்; 1323 ஹூ மகமதியர் மறுபடியும் பலமான சேனையை அனுப்பி ஓரங்கல்லைப் பிடித்தும் பிரதாப ருத்திரனை டில்லிக்கு கொண்டுபோய் விட்டார்கள்.

7. அந்த பிரதாப ருத்திரனுடைய குமாரனாகிய வீரபத்திரனென்னும் கிருஷ்ணன், 1425 ஹூ பட்டத்துக்குவந்து, 1344 ஹூ அடுத்திருந்த இந்து ராஜர்களை சமாதனப்படுத்தி பெருஞ் சேனையைத் திரட்டி மகமதியரை துரத்தி அடித்தாலும்; 1358 வருஷம் மகமது ஷா பாமினி படை எடுத்துப்போய் கொள்ளையடித்து உயுத்தச் செலவை வாங்கிக்கொண்டு திரும்பினன்.

8. அந்த கிருஷ்ணனுக்குப் பிறகு அவன் குமாரன் விநாயகதேவன் அல்லது நாகதேவன் பட்டத்துக்கு வந்து கொஞ்சகாலம் ஆண்டாலும், சிலசாசனங்களில், அவன் குமாரன் கிருஷ்ணராயடு ஆண்டதாக தெரிவிக்கப்பட்டிருக்கிறது. 1371 ஹூ மறுபடியும் மகமது பாமினி வமிசத்தாருக்கும், ஓரங்கல்லாருக்கும் சண்டையுண்டாக, பெலலம் பட்டணம் பிடிப்பட்ட தன்றியில், நாக தேவனும் கொல்லப்பட்டபடியால், இந்துக்கள் மகமதியரைச் சின்னபின்னமாக அடிக்க, மூன்றில் ஒரு பாகச்சேனை மாத்திரம்தான் குல்பர்காவுக்குப் போக நேர்ந்தது. அந்தக்காலத்தில் இந்து மன்னருக்கு சிநேகிதரான டில்லிமகமதியர் இந்தராஜருக்கு உதவிசெய்யாமல் விட்டது சதிமோசமே. 1424 ஹூ மறுபடியும் மகமதியர் ஓரங்கல்லின்மேல் படை எடுத்து வந்து பிடித்தாலும், ஓரிசா கஜபதி மன்னர்களும், மற்ற இந்து மன்னர்களும் தேசாபிமானமும் ஜாதியபிமானமுமற்று ஒருவரொருவரைத் தாக்கிச் சண்டைசச்சரவுகள் செய்ததால்-ஓரங்கல்லின் மகிமை மங்கலடையச் சம்பவித்தது.

## ஓரங்கல் கணபதிராயர்களுடைய காலத்திலுண்டான சாசனங்கள், இப்போது இருக்கும் இடம், காலம் முதலானதுகளைக்காட்டும் ஜாப்தா.

| வ-ம் | இராஜாக்களுடைய பெயர் | சாசனங்கள் இருப்பிடம் | ஷரா |
|---|---|---|---|
| கி-பி 1175 | கணபதிருத்திரன மருமகன் | ம்கட்தாமரி தாக்ஷாராமம | சிலா சாசனம் |
| 1179 | காகதிய பிரதாபருத்திரன் | ஹனுமகொண்டை ஷை | 8 சாசனம் |
| 1201 | கணபதிதேவர் மச்சினர் | பெஜ்வாடா, சொபர்லு | 2 ஷை |
| 1248 | கணபதிதேவன் | இராஜமஹேந்திரம் | ஷை |
| 1249 முதல் 1254 | ருத்திரதேவன் ஷை | காஜா, கிருஷ்ணா, துக்கி, பட்டி பெனுமன் பாடு, இலிமல் | ஷை 5 சாசனம் |
| 1255 | பிரதாபருத்திரன் | தர்கி-கிருஷ்ணா | ஷை |
| 1258 | கணபதிதேவன் | ஷை | ,, |
| 1264 | ருத்திரம்மாள் | காம்பொடி கிருஷ்ணா | ,, |
| 1268 | ருத்திரமஹாதேவன் | குடிமெட்டல-கிருஷ்ணா | ,, |
| ஷை | சாயிணிஞான நாயுடு தனகர்த்தர் | பெத்தகர்ம ஷை | ,, |
| 1268 | ருத்திரதேவன் | முதுகூரு ஷை | ,, |
| ஷை | கணபதிதேவன் | தர்கி ஷை | ,, |
| 1270 | ருத்திரம்மதேவி | ஷை ஷை | ,, |
| 1278 | ருத்திரதேவன் | கோதாவரி தாக்ஷாராம் | ,, |
| 1279 | பிரதாபருத்திரன் | கர்னூல் | ,, |
| 1292 | குமாரருத்திரதேவன் | பெதககளளபல்லி | ,, |
| 1298 | பிரதாபருத்திரன் | மச்சர்லா-கிருஷ்ணா | ,, |
| 1295 | ருத்திரதேவன் | குடிமெட்டலா ஷை | ,, |
| 1247-99 | பிரதாபருத்திரன் | தர்க்கி, தாடாயி, ஸ்ரீகாகுளம | ,, |
| 1304 | ஷை | சிந்தபல்லி கிருஷ்ணா | ,, |
| 1305 | ஷை | கொரம்பூடி ஷை | ,, |
| 1306 | ஷை | ஸ்ரீகாகுளம் | ,, |
| 1307 | ஷை | கர்னூல், பில்கலகுருடு | ,, |
| 1310 | ஷை | நெல்லூர் கொசிரலகேபட | ,, |
| 1311 | ஷை | கர்னூல் தாம்கபடல | ,, |
| 1312 | ஷை | ஷை தாடிபட | ,, |
| 1313 | ஷை | நெல்லூர்-தார்சி | ,, |
| 1317 | ஷை | காரமபாடி, கிருஷ்ணா | ,, |
| 1318 | ஷை | கோலாகருஞ்சி ஷை | ,, |
| 1319 | ஷை | தாரிவிழுல, ஷை | ,, |
| ஷை | ஷை | மாச்சரல ஷை | ,, |
| ஷை | காகதியகணபதி [ன் | பெத்தசெருகூரு | ,, |
| ஷை | காகதிய பிரதாபருத்திர | கோதாவரி, பாலிவேறு | ,, |
| | | கிருஷ்ணாகுடிமெட்டலா | ,, |
| | | கந்திவெலூரு, செபரோலு | ,, |
| | | என்ற விடங்களில் | |

கனம் மவுண்டு ஸ்டுவார்டு எலிபன்ஸ்டன் இந்துதேச சரித்திரம் 248-வது பக்கத்தில் ஓரிசா கொண்ட விடு ஜாதியாரைப்பற்றி எழுதுகையில், "ஓரிசா நாட்டு சரித்திரமும் மற்ற தக்ஷணநாட்டினரைப்போல மஹாபாரதத்தில் கண்ட அரசர்களுடைய சந்ததிகளைப்பற்றியே ஆரம்பிக்கிறது; என்று எழுதி இருக்கிறார். (The history of Orissa likeall others in the Deccan, begins with princes connected with the Mahabarata &c Page 243. The History of India by M. S. Elphinston-Edited by Mr. E. B. Cowell. M. A. &c.

---

ஆறுவது அத்தியாயம்.

---

# ஒரிசாகொண்டவிடு கஜபதிராஜர்கள்.

சந்திரவம்ச ஆந்திரர்களில் ஒரு பிரிவாராகிய கஜபதிராஜர்கள் கொண்டவிடுபட்டணத்தை கெடிஸ்தானமாகக் கொண்டு ஆண்டார்கள். அந்த கொண்டவிடு, கிருஷ்ணா ஜில்லாவில் கிருஷ்ணாநதிக்குத் தெற்கே குண்டூருக்கு 8மைல் தூரத்தில் இருக்கும் அரணானமலைக்கோட்டை. மகமதியர்களால் ஓரங்கல் கணபதிராஜியம் மங்கலடைந்தபோது, கிழக்குகரையோரமாக இருந்தசில ரெட்டிகள் கிளம்பி அதைப் பிடித்து கி-பி-1328 முதல் 1427 வரையில் ஆண்டுவரச்சே; அவர்களையும் மகம்தியர்கள் தாக்கினார்கள்-பிறகு அதன் பிரதான பாத்தியஸ்தார்களான கஜபதிராஜர்கள் பட்டத்தை அடைந்தார்கள். அவர்களில் விசுவம்பரதேவன் மறுபடியும் அந்த ஸமஸ்தானத்தை ஸ்தாபித்து, புட்ட கோட்டையைக் கட்டுவித்தான். அவனுக்கு கணபதிதேவன், பாலபாஷ்கரதேவன், ஷரிஹரதேவன், விசுவாம்பரதேவன் என்னும் நான்கு குமாரர்கள் பிறந்திருந்தார்கள்-(கி-பி 1145) ஒரு பெரிய கிராமத்தை தானம்செய்து, பிறகு தனது அரசாக்ஷியை காகத்தி யருத்திரதேவனுக்குத் தத்தம் செய்துவிட்டான்.

ஆசியாடிக் ரிசெர்ஸ் கிரந்தம் 15ம் வாலியம் 269 பக்கத்தில், ஓரிசாகஜபதிராஜனாகிய அனங்கபீமதேவன் தனது அரசாக்ஷியின் 12ம் வருஷத்தில் பூரியை தரிசித்து, தான் ஸ்ரீகாகுளம் முதல் இராஜமஹேந்திரம் வரையில் ஜயித்த ஜயபலன்களைப் பற்றி பிரபலமாக்கி, தனது ஜயபலனாக ஜகந்நாதசுவாமிக்கு கோயிலைக் கட்டிவைத்ததாகவும், அப்படி கட்டியது கி. பி. 1174-வருஷம் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

கஜபதிராஜர்கள் அதிகபிரபலராக 100 வருஷம் ஆண்டார்கள். அப்போது கிருஷ்ணாநதிக் கரையிலிருக்கும் அமராவதிக் கடுத்த தாரணிகோட்டைச் சீமை தோண்டி அல்லி ரேட்டி வசத்திலிருந்தது. அந்த ரெட்டியின் குடும்பத்தைச் சார்ந்த புரோலயவேம ரெட்டி நாளாவட்டத்தில் வீரதீரனுகி தாரணிகோட்டைக் கருகில் காகதீய பிரதாபருத்திரனுடைய சேனவீரனைத் தாக்கியும், கொண்ட விடுக்கு வந்து புட்டகோட்டையைப் புதுப்பித்தும் கி. பி. 1320-1331 வருஷம் வரையில் ஆண்டு வந்ததாக சிலசாசனங்களினுல் தெரியவருகிறது.

கி. பி. 1420 வருஷம் அலங்காரகஜபதி, இராஜ வெங்கட ரெட்டியை ஜயித்து கி. பி. 1421 வருஷம வரையில் ஆண்டுவர; ஆனைகுந்தி விஜயநகர ஸமஸ்தானத்தைச்சார்ந்த பிரதாப தேவனும், ஹரிஹரதேவனும் படை எடுத்து வந்து பிடித்து, அவர்கள் கி. பி. 1431-1454 வருஷம் முறையே முதல்வர் ஏழு வருஷங்களும், பிந்தியவர் பதினைந்து வருஷங்களும் ஆண்டார்கள்.

பிறகு மறுபடியும் பழயகஜபதிராஜர்களுடைய பழயவார்சாகிய கபிலேசுவர கஜபதி கி. பி. 1454 வருஷம் சிங்காசனத்தைப் பெற்று கி. பி. 1461-வருஷம் 27 வருஷங்கள் ஆண்டான்.

## அந்தகபிலேசுவரகஜபதியின் வம்சாவளி.

கபிலேசுவர கஜபதிராஜன் கி. பி. 1454-1461-27 வருஷம்.

ஸ்ரீவீரபிரதாப புருஷோத்தமகஜபதி ராஜன் கி. பி. 1461-1496 35 வருஷம் ஆண்டு ச-1411 சௌம்யவருஷம் கொண்டவிடு குடிகளின் வரியைநீக்கினுன்.

பிரதாபருத்திரகஜபதி கி. பி. 1496-1497 ஓருவருஷம்.

வீரபத்திரகஜபதி கி. பி. 1497-1515-18 வருஷம்ஆண்டான்.

அந்த வீரபத்திரகஜபதியைவி ஜயநகர கிருஷ்ணதேவராயலுகி. பி. 1515 வருஷம் உதயகிரி வழியாகபோய் ஜயித்து அந்த கஜபதியின் குமாரத்தியை விவாஹம் செய்துகொண்டதன்றியில், சாலவதிம்மாசின் அண்ணன் குமாரனுகிய நடிண்டிலகோபமந்திரியை கொண்டவிடுக்குத்தலைவனுக்கியும் ஒரு கோயிலைக் கட்டிவைத்தான். அந்தக்கட்டிடத்தில் பதிக்கப்படிருக்கும் சாசனத்தில் ச-1443 (கி. பி. 1521 வருஷம்) மேல்கண்ட சங்கதிகள் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றன.

பிறகு அச்சுத தேவராயலு படைஎடுத்துப் போனதைப் பற்றி பிரஸ்தாபித்திருக்கிறதன்றியில், இராமய்ய பாஸ்கருடு என்னும் மந்திரியும் கொண்டவிடுவிலிருந்த 72 ரெட்டித்தலைவர்களைக் கொல்லவைத்து, கோட்டையைப்

பிடித்தான். பிறகு விஜயநகர சதாசிவராயலு காலத்தில் கந்தனூலி இராம ராஜனுடைய பேரனும், மூர்த்திராஜனுடைய குமாரனாகிய விட்டலதேவனுடைய சுவாதீனத்தில் கொண்ட விடு கோட்டை இருந்தது. மேலும் விஜயநகர திருமலைதேவராயலு பெரியசேனையைத்திரட்டி மகமதியரை வோட்டி தனது குமாரன் இரங்கராஜயதேவனை கொண்டவிடுக்கு அரசனாக்கினான். அனந்தரம் திருமலைதேவராயலு 1574 வருஷத்திலும், ஸ்ரீரங்கதேவராயலு காலத்தில் கோல்குண்டா இபிராஹீம் குதப் சாயிபு இராமராவ் என்னும் மஹாராஷ்டிர பிராமண்னன் மூலியமாகப் படையை அனுப்ப அந்தராயன் பாலநாடு சர்னூல்,நெல்லூர்க்கடுத்த நாடுகளைப் பிடித்துக் கொண்டு கடைசியில் கொண்ட விடுவையும் தாக்கிப் பிடித்தான். அத்தோடு கொண்டவிடுவின் மகிமை மங்கலடைந்தது.

வேமன பத்தியங்கள் என்னும் வேதாந்த தெலுங்கு பத்தியங்களைப்பாடிய வேமனர் அந்த கொண்டவிடு நாட்டில் பிறந்து அக்கவிகளைப்பாடினார்.

---

ஏழாவது அத்தியாயம்.

---

# விஜயநகர ஸம்ஸ்தான நரபதி ஆந்திரராயர்கள்.

---

சந்திரவம்ச ஆந்தரர்களில் மற்றொரு சந்ததியாராகிய விஜயநகர ஸமஸ்தானம் நரபதிகளும் சந்தரவம்சக்ஷத்திரியராகிய பாண்டவருடைய நேரான சந்ததிகளென்று புராண இதிகாசங்களினாலும், பாரிஜாதா பஹரணம், மநுசரித்திரம், கிருஷ்ணராஜ விஜயமு, பாண்டுரங்க விஜயமு, பிரவுட பிரபந்தகவி சரித்திரம், பாலபாகவதம், ரஸ பூபாலியம், நரபதி விஜயம், லசு சரித்திரம், முதலான கவிரத்னங்களுடைய கிரந்தங்களினாலும், ஜேம்ஸ் பிரின்சிபு (James Prinsep) கர்னல் மெக்கன்சி (Col Mackanzie C. S. Survayor General of India) இராபர்டு சுவேல் (Robert Sewell. M. C. S.) முதலானவர்கள் எழுதிப் பதிப்பித்த சிலா செப்பேடு சாதன சரித்திரங்களினாலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. அந்த உண்மையை ஸ்தாபிக்க வடநாடுகளில் மேஸ்டர் பிரின்சிப்பவர்களுக்கு அகப்பட்ட சாதனத்தின் நகலை இதனடியில் பதிப்பிக்கின்றனம்.

# Table-X i V i-Rajas of Vijianagar.

From history, inscriptions, and family genealogy (See As. Res Vol X x) The later authority, in the usual maner, deduce a direct line from *Pandu* of the *lunar dynasty*, imperfectly following the Puranic lists to *Chandrabiga*, the last of the Magadha rajas to whom succeeds: —

A. D.

„ Maru

„ Nanda

„ Bhutanandi

„ Nandali, who has two sons Seshunandi and Yesanandi, whose fourteen sons ruling over Bylendish, are disposed by two invaders Amitra and Durmitra, and seven fled to Andharadesa or Telungaa, where A. D.

1034. Nanda Maharaja erected a kingdom and founded Nandapur and Warangal.

1076. Chalika Raja.
1118. Vejia raja founder of Vijianagar,
1158. Vimal Rao.
1182. Narasimha Deva.
1249. Rama Deva.
1274. Bhoja Raya died without issue
1334 Bukka, Son of a neighbouring Raja raised to the throne of the Dakhan by Vidyaranya his Guru
1367. Harihara Rao
1391, Deva Rao
1414. Vijia Rao
1424. Pundara Deva Rao deposed by Sri Rang Raja of Kalian-Drug
1450. Ramachandra Row Son of Sri Ranga
1473. Narasimha Rao
1490. Vira Narasimha Raja
Achutha Row
1524. Kristna Deva, extended his sway to Gugerat &c
Rama Raja killed in invasion of Nizam Shab-

And Imudul Mulk
1565. Sri Ranga Raja
Tirumala Raja
Viravengatapaty
Sre Ranga II
Rama Dvea Row
Venketapaty Rao
Tirumalu Row
Rama Deva Row
Sri Ranga Row
Venkatapaty; invaded by the Moghuls and fled to Chundrageri
Rama Rao, recovered a portion of theterritory.
1693. Haridoss
1704. Checka Doss his brother.
1721. Chinna Doss Gopal Rao Son of Chinnu Doss
1741. Venkata Paty Rao
Tirumala Rao Sultan khan took the country in the name of Tipu; and with Vira Venketapathy Rama Raja the dynasty beca me extint A. D. 1129

See Page 281. Vol II Essays on Indian Antiquities by James Prinsep and Useful Tables by Edward Thomas. M A

இந்த சாசனத்தின் கருத்து.

## விஜயநகர இராஜர்கள்.

———◆◆◆———●

சரித்திரத்திலும், செப்பேடு முதலான சாசனங்களிலும், (ஆசியாடிக்கு சோதனை இரகதம் சரித்திர புத்தகத்தில் கண்ட) கும்பவம்சாவளியிலும் (விஜயநகர ராயர்கள்) சந்திர வம்சத்தைச்சார்ந்த பாண்டேமஹாராஜனுடைய நேரானசந்ததிகள்.

புராணரீதியாகப் பரிக்ஷிக்கையில் அவர்கள் மகதராஜாதிபதியாகிய சந்திரபிஜராஜனுக்குப் பிறகு செங்கோல் செலுத்தியவர்கள்:—அவர்களில்.

மாருதி ராஜன்.
நந்த ராஜன்.
பூதநந்தி.

நந்திலி-அவனுக்கு சேஷநந்தி, ஈசநந்தி என்ற இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் மைப்லாண்டிஸ் நாட்டிலாண்டுவரச்சே அமிர்தன், தார்மிதன் என்ற இரண்டு மன்னர்கள் படை எடுத்துவந்ததாக்க, அப்போது ஏழு ஆந்திரர்கள் தெலுங்கானம் என்னும் ஆந்திர தேசத்தில்வந்து ஆண்டார்கள் அவர்களில்.

ஊ—பி.
1034 ஹிம்சுந்தமஹாராஜன்-அங்கு நந்தாபுரத்தையும், ஓரங்கல் ஸமஸ்தானத்தையும் ஸ்தாபித்தான்

1076—சாலிக்கராஜன்

1118—விஜயராஜன், விஜயநகரத்தை ஸ்தாபித்தான்

1158—விமலராயலு

1182—நரசிம்மதேவராயலு

1249—இராமதேவராயலு

1274—பூபராயலு சந்ததியற்றவன்

1334—புக்கராயலு அயல்நாட்டரசருடைய குமாரன், அவன்குரு
வித்தியாரணியரால் தன்னை நாட்டிற்கு அரசனாக நியமிக்கப்பட்டான்

1367—ஹரிஹர ராயலு

1391—தேவராயலு

1414—விஜயராயலு

1424—புண்டரதேவராயலு, கலியாண நாசத்திலிருந்த ஸ்ரீரங்கராயலால்
நீக்கப்பட்டான்

1450—ஸ்ரீராமசந்திரராயலு ஸ்ரீரங்கருடைய குமாரன்

1473—நரசிம்ம தேவராயலு

1490—வீரநரசிம்மராயலு

அச்சுததேவராயலு

1524, கிருஷ்ணதேவராயலு குஜராத்து வரையில் சமஸ்தானத்தை பரவச்
செய்தான்

இராமராஜா நைஜாம்ஷா இமிட்டுலும் ராவல் கொல்லப்பட்டான் 1595-ஸ்ரீரங்கராஜு திருமலராஜா, வீரவெங்கடபதி-ஸ்ரீரங்கன் 2-வது இராமதேவராயலு, வெங்கடபதிராயலு, திருமலராயலு, இராமதேவராயலு, ஸ்ரீரங்கராயலு-வெங்கடபதி அவர்காலத்தில் மோகலர் படைத்துவர சந்தரிக்கிறார் இராமராயலு, இழந்த சமஸ்தானத்தில் பாதியைப்பெற்று ஆண்டார்.

1693—ஹரிதாசன்

1704—சிக்கதாசன்

1721—சின்னதாசன்

1734—அராமராயலு

1741—வெங்கடபதி

1756—திருமலராயலு-அவன் காலத்தில் தான் சுல்தான்கான் திப்புவின் பெயரால் தேசத்தைப் பிடிக்க 1829வருடம் வீரவெங்கடபதி ராமராயலுகாலத்தில் சமஸ்தானமழிந்தது.

ஜேமஸ் பிரின்சிப்பவர்களுடைய இந்தியப்புராதன சரித்திரம் எட்வார்டு தாமஸவர்களுடைய வமிசாவளி புத்தகம் 281-பக்கம் பார்க்கவும்.

## விஜயநகரத்திலாண்ட ஆந்திர நரபதிகள் சிங்காசனம் ஏறிய காலத்தைப்பற்றி, 1630௵ம் சர்வேஜனரல் கர்னல் மெக்கன் ஜிக்கு அகப்பட்ட சாசனத்தின்படி விவரம்.

| | விஜயநகர அரசர்களுடைய பெயர்கள் | சாலிவாகன் சகாப்தம் | கிறுஸ்து சகாப்தம் | ஆண்ட காலம் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | ௵ | மீ | |
| 1 | நரபதி ராமதேவ ராயலு | தெரி | யவில்லை | | | ... |
| 2 | ஹரிஹர ராயலு-தாது௵ வைகாசி-2ம் | 1258 | 1336 | 14 | ... | ... |
| 3 | புக்கதேவராயலு | 1272 | 1350 | 29 | 8 | ... |
| 4 | ஹரி ஹர ராயலு (2-வது) | 1301 | 1379 | 22 | ... | ... |
| 5 | விஜயபுக்கராயலு (2வது) | 1323 | 1401 | 17 | ... | ... |
| 6 | வல்லபுக்க அல்லது தேவராயலு | 1340 | 1418 | 16 | ... | ... |
| 7 | குண்டதேவராயலு | 1356 | 1434 | 20 | ... | ... |
| 8 | இராஜசேகர ராயலு | 1376 | 1454 | — | 9 | ... |
| 9 | விஜயராயலு | 1376 | 1455 | — | 10 | ... |
| 10 | பிரவுட பிரதாபராயலு | 1378 | 1456 | 21 | ... | ... |
| 11 | வீர ராயலு- | 1399 | 1477 | 4 | ... | ... |
| 12 | மல்லிகார்ஜுன ராயலு | 1403 | 1481 | 6 | ... | ... |
| 13 | இராமசந்திர ராயலு | 1409 | 1487 | 1 | ... | ... |
| 14 | விருபாக்ஷி ராயலு | 1410 | 1488 | 2 | ... | ... |
| 15 | திம்மராயலு-காலம் தெரிய வில்லை- | — | — | — | | ... |
| 16 | ஈசுவர ராயலு- ௸ | — | — | — | | ... |
| 17 | நரசிம்மதேவராயலு | 1412 | 1490 | 5 | . | ... |
| 18 | வீர நரசிம்மராயலு | 1426 | 1504 | 18 | ... | ... |
| 19 | கிருஷ்ணதேவராயலு இரக்தாக்ஷி௵ வைசாசியீ சுக்லபக்ஷம் | 1430 | 1509 | 21 | ... | ... |
| 20 | அச்சுதவேராயலு-விக்கிருதி வருஷம் | 1462 | 1530 | 12 | ... | ... |
| 21 | சாலுகதிம்ம ராயலு, சோபகிருது ஜேஷ்ட (௸ அச்சுதர் குமாரன் வெங்கடாதிரி மைனராக இருந்ததினால்) | 1464 | 1542 | 22 | ... | ... |
| 22 | சதாசிவ ராயலு 5௵ கலகம். இராமராஜன் | 1486 | 1564 | — | ... | ... |
| 23 | திருமலேராயலு - பிரமோதூத௵ (பேனு கோணடாவில் | 1451 | 1569 | — | 11 | ... |
| 24 | ஸ்ரீரங்கராயலு-ஆங்கிரச வைகாசி 10 தேதி | 1494 | 1572 | 14 | ... | ... |
| 25 | வெங்கடபதிராயலு-பரிதாபி௵ மாசம் 10 | 1507 | 1585 | 28 | 8 | 15 |
| 26 | சிக்க தேவராயலு | 1536 | 1614 | — | 4 | ... |
| 27 | இராமதேவராயலு- | 1552 | 1630 | 15 | 4 | ... |
| 28 | ஸ்ரீரங்க தேவராயலு- | — | 1659 | — | — | ... |

## பிறகு அகப்பட்ட மற்றொரு சாசனத்தின்படி

| | | இறந்து சகாப்தம். | |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீரங்க தேவராயலு | 1665 | 1678 |
| 2 | வெங்கடபதிராயலு | 1678 | 1680 |
| 3 | ஸ்ரீரங்கராயலு | 1692 | |
| 4 | வெங்கடராயலு | 1706 | |
| 5 | ஸ்ரீரங்க தேவராயலு | 1716 | |
| 6 | மஹாதேவராயலு | 1724 | |
| 7 | ஸ்ரீரங்கராயலு | 1729 | |
| 8 | வெங்கடபதிராபலு | 1732 | |
| 9 | இராம ராயலு | 1739 | |
| 10 | வெங்கடபதி ராயலு | 1744 | |
| 11 | ஷை ஷை | 1791 | 1793 |
| 12 | திருமலைராயலு | 1801 | 1824 |
| 13 | வீர வெஙகடபதி ராயலு | 1881 | |
| 14 | திருமலை தேவராயலு | 1866 | |
| 15 | வெங்கடராம ராயலு | 1870 | |
| 16 | நரசிம்மதேவ ராயலு | 1871 | |
| | இப்போதிருப்பவர் ஸ்ரீரஙகதேவராயலு ராவ சாஹிபு பின்சனதாரா | | |

---

(மேஸ்டர் ஜேம்ஸ் பிரின்சிப்புக்கு அகப்பட்ட சாசனங்களின்படி)

## விஜயநகர நரபதிகளின் வம்சாவளி.

1 மாருதிமஹாராஜன் (மகதநாட்டிலாண்டவன்)

2 நந்தமஹாராஜன்-அர்ஜுனனுக்கு 83ம் சந்ததி

3 பூதநந்தன்

4 நந்தவிராஜன் (மகதநாட்டு அரசன்)

5 யாசநந்திராஜன்

6 பூதநந்தி-14 குமாரர்கள் (பயிலாநந்தமரசர்கள்)

7 நந்தமஹாராஜன் (கி-பி-1094 வரும்) நந்தபுரம ஓரங்கல் லுக்கு அரசன்

8 9ம சந்ததி சாலுக்கியன் (கி-பி- 1076 வரு

9 விஜ்ஜலன் அல்லது 2வது விஜயன் கி-பி-1118 வரும்- (ஆனகுந்தி விஜயநகரம் ஸ்தாபித்தவன்)

10 விமலராயலு விட்டலராயலு (கி-பி-1158 வரும்)

11 நரசிம்மதேவராயலு(1182௵)
12 இராமதேவராயலு-(1249௵)
13 பூபாராயலு-(கி-பி-1274௵) புக்கன், ஹரிஹரர் மந்திரி பிரதானிகள்
14 புக்கராயலு (துளுவநாட்டிற்க்குக் கொண்டுபோய் வளர்த்தவன்)
15 திம்மராயலு அல்லது இராமசந்திரராயலு 1450௵
16 நரசிம்மராயலு
17 ஈசுவரராயலு-1473௵
18 பிரவுடதேவராயலு
19 வீரநரசிம்மராயலு 1490௵
20 அச்சுதராயலு
21 கிருஷ்ணதேவராயலு 1524
22 ஸ்ரீரங்கராயலு 1565

மற்றபெயர்களை மேஸ்டர் பிரின்சிப் நாமாவளி X I V I பார்க்க.

---

(மேஸ்டர் இராபர்செுவேல் அவர்களுக்கு முதலில் கிடைத்தசாசனத்தின்படி).

## விஜயநகரஸம்ஸ்தானத்தின் வம்சாவளி.

இரண்டாம்சநததி

1 புக்கராயலு-மங்கம்மாள் மனைவி
2 சங்கமகாராஜன்-மல்லாம்பிகா-சாரதாமனைவிகள்
3 ஹரிஹரன்-கி-பி-1336-1350
4 கம்பமஹீபதி-சங்கமா
5 புக்கராயலு-கவராம்பிகா, காமாக்ஷி 1350-1379
6 மாரப்பா
7 முத்தப்பா
8 காமிதேவிக்கு-ஹரிஹரன்-மல்லதேவி மனைவி 1379-1401
9 பாஸ்கரபூபதி
10 விருபாக்ஷி
11 பிரவுடதேவராயலு - பத்மாம்ப, - மல்லாம்பா மனைவிகள் 1406-1412

12 விஜயபூபதி-நாராயணிதேவி கி-பி-1418

13 தேவராயலு 1422-1447

14 வீரமல்லன்ன

3-வது சந்ததி

1 திம்மராயலு-தேவகிமனைவி

2 ஈசுவரராயலு-புக்கம்மாள் மனைவி

3 நரசராயலு-திப்பாம்பா-நாகாம்பாமனைவிகள் 1590வரும்

4 திப்பாம்பாளால் வீரநரசிம்மராயலு 1509வரு [தேவி நாகாம்பாள் வயற்றில் கிருஷ்ணதேவராயலு-சின்னதேவி-திருமலை (ஓரிசா) மனைவிகள் 1509-1530வரும்

மற்றொருசாசனத்தின்படி 3-வது சந்ததி

1 இராமராஜா-இலக்ஷ்மியாம்பிகாள்மனைவி

2 ஸ்ரீரங்கதேவராயலு-திருமலைதேவி மனைவி

3 இராமராஜன் - சதாசிவனுக்குபிந்தி கிருஷ்ணதேவராயலு குமாரத்தி மனைவி-தலிகோட்டையில்மரணம் 1564

4 திருமலராயலு 1564-1574 வெங்கலாம்பா, பத்மாமபாள் கிருஷ்ணும்பாள், இராகவாம்பாள் - மனைவிகள் ஸமஸ்தானத்தை 1567 பெனுகொண்டாவுக்கு கொண்டு போனான்

5 வெங்கடாத்திரி

## மற்றொருசாசனத்தின்படி.

1 இராமராஜா

2 திருமலராயலு

3 கிருஷ்ணராஜா

4 திருமலராஜா-ஆனேகுந்தியை ஆண்டான்

5 ஸ்ரீரங்கராயலு-திருமலதேவி-கதம்பா 1574-1585 குமாரத்தியை ஜகதேவராயலு மணம் செய்தார்

6 திருமலைதேவன்

7 வெங்கடபதி 1585-1614 இராஜியத்தை பெனுகொண்டாவிலிருந்து சந்திரகிரிக்கு மாற்றினான்

## அந்தவெங்கடபதிக்குப் பிறகுவந்தவர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கராயலு | இ. பி. 1619 | வெங்கடபதி | 1678-1680 |
| இராமராயலு | 1622 | ஸ்ரீரங்கராயலு | 1692 |
| ஸ்ரீரங்கராயலு | 1623 | வெங்கடபதி | 1706ளூ |
| வெங்கடராயலு | 1623 | ஸ்ரீரங்கராயலு | 1724 |
| இராமராயலு | 1629 | மஹாதேவராயலு | 1729 |
| வெங்கடபதி | 1636 | ஸ்ரீரங்கராயலு | 1732 |
| ஸ்ரீரங்கர் | 1665 | வெங்கடபதி | 1736 |
| பிறகு | | இராமராயலு | 1739 |
| ஸ்ரீரங்கராயலு | 1665-1678 | வெங்கடபதி | 1791-1793 |

4-ம் சந்ததி

1 திருமலைராஜா-1801-நிஜாம்ஷா, பின்சன்கொடுத்தார்
2 ஒருகுமாரன்
3 ஒருகுமாரத்தி
4 வீரவெங்கடபதிராயலு-1831ல இறந்தான்
5 திருமலைதேவன்
6 இலக்ஷிமீதேவியம்மாள்-நரசிம்மராயலுமனைவி
7 வெங்கடராமராயலு-ஸ்ரீரங்கம்மாள் மனைவி 1871 இறந்தார்
8 கிருஷ்ணதேவராயலு-குப்பம்மா இராஜ்ஜியம் 1872 இறந்தார்
9 வெங்கய்யா
10 ஒரு குமார்த்தி
11. ஒரு குமார்த்தி
12 நரசிம்மராயலு 1870 பிறந்தார்

இந்தியன் ஆர்கியாலோஜிகல் சர்வே புத்தகம்-2-வது வாலியம் 243-253 பக்கங்களில் பார்க்க.

---

## நரபதிகளுடைய ஆதிசரித்திரம்.

நரபதிகளுடைய ஆதிசரித்திரம் திட்டமாகக்கிட்ட வில்லை-சென்னை சர்வகலாசாலை ஸமஸ்கிருத ஆந்தரபாஷா பண்டிதர், டாக்டர் ஆப்பர்ட் (Dr. Gustow Oppert, P. H. Dr. Professor of Sanskrit Presidency College Madras, Telugu Translator to Govt, Curator Govt Oriental Mss Library &c) அவர்கள் 1881ளூம் எழுதிப்பதிப்பித்த (The History

ஸ்ரீ. (Indian) [illegible] 1524 முதல் 73 பக்கங்களில் வெளியில் நரபதிகளைப்பற்றி நமக்குக்கிடைத்த சில சாஸனங்களைப்பரிசோதித்து அநுமித்தெழுதியபடி எழுதியிருக்கிறார்- அதாவது—நரபதிகளிற் சிறந்த திருமலைராஜனுக்கு அநேகமாக பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், பாலபாகவதம் என்னும் தெலுங்கு கிரந்தம் இயற்றப்பட்டதாம். அந்த அந்த ஸமஸ்தானத்தில் அப்போது பிரதான மந்திரியாக இருந்த நாகையனுடைய குமாரரும், அந்த நரபதிகளுடைய ஆதியுற்பத்தி முதலான விவரங்களை சர்க்கார் ரிகார்டுகளிலும், அக்கால தேசவர்த்தமானங்களிலும் நன்றாய்த்தெரிந்தவராயும் சிறந்த ஸம்ஸ்கிருத தெலுங்கு வித்வாம்சராயும இருந்த கோனேரிநாதர் இயற்றியதாம். அந்தப்பால பாகவதத்தின் முகவுரையில தமது பாட்டைத் தலைவருடைய பிரதாபத்தையும், அவருடைய ஆதிசந்ததி சரித்திரங்களையும் விவரமாகக்காட்டி இருக்கிறார். அந்த விவரத்தை இராமபூஷணர் இயற்றிய வசுசரித்திரம், சாரதாமூர்த்தி இயற்றிய நரசபூபாலீயம், நரபதிவிஜயம், இராமராஜியம் முதலான கிரந்தங்களிற்கண்ட நரபதிகளுடைய சரித்திரங்களோடு ஒப்பிட்டுப்பார்க்கையில; அந்த பாலபாகவதத்திற்கண்ட சங்கதிகளும் சரியாக இருப்பதோடு, தேவனஹள்ளியில் கிடைத்த சிலாசாசனத்திற்கண்ட சங்கதிகளுக்கும் சரியாக இருக்கின்றனவாம.

## அந்த விவரமாவது.

நரபதிகள், பூர்வசந்திரவம்சி பாண்டவரில ஒருவராகிய அர்ஜுனனுடைய நேரான சந்ததிகளென்றும, அந்த அர்ஜுனனுடைய 83வது சந்ததியாகிய நந்த ராஜனுக்கு ஒன்பதாவது சந்ததி சாலுக்கியன் பிறந்தானென்றும், அந்த சாலுக்கியனுடைய சந்ததியில கலியாணபுரத்தையாண்ட விஜ்ஜலன், அல்லது பிஜ்ஜலன், அல்லது விஜயன் பிறந்தானென்றும, பாலபாகவதத்திற் செப்பி இருப்பதைப்போலவே, நரபதி விஜயத்திலும் தேவனஹல்லி சாசனத்திலும் சொல்லப்பட்டிருக்கிறதாம்.

அந்த விஜ்ஜலன் அல்லது விஜயராஜனுக்கு யுவராஜனுண்டாகி அவனுக்கு ஹெம்மலராஜனும், அவனுக்கு தாதபின்னராஜனும் பிறந்ததாகவும்; அந்தத் தாதபின்னராஜன்தான நரபதிகளுந்த தலைவனென்றும் பாலபாகவதம், வசுசரித்திரம், நரசபூபாலியத்திற் சொல்லப்பட்டிருக்கிறதாம்.

அந்தத் தாதபின்னம ராஜனுக்கு "மன்னுபுலி" என்று பெயர். அந்ததாதபின்னமராஜனுக்கு சோமதேவன் என்னும குமாரன் பிறந்து பஹுபராக்கிரமசாலியாகி 60000 சேனைகளை உடையவனாகஇருந்தானும. அவன் ஆர்விட்டு என்னும் இடத்திலிருந்து ஆண்டு, கொண்டனவலி, இராயசூர், சாதனிகோட்டை, யாதகிரி, காலகோலு, முசலிமடுகு, கங்கனிகொண்ட என்று ஏழுகோட்டைகளையும் பிடித்தாண்டானும். அவனுக்கு பாரமல்லன் அல்லது விபாலன் என்றப்பட்டப் பெயர் வழங்கிவந்ததாம்.

அவனுடைய குமாரன் இரங்கராஜன் ஆண்டபிறகு, அவன் குமாரன் திம்மராஜன் அல்லது பின்னவுரி பட்டத்துக்கு வந்தானும். அவனுக்கு சாளுவ நரசிங்கராயலு பிரதம மந்திரியாக இருந்தானும். அந்த திம்மராஜனுக்குப் பிறகு அவன் குமாரன் புக்கராஜன் பட்டத்துக்கு வந்தானும். அவன் ஆருவிடுவில்வந்து குடியிருந்தபடியால் அவனுக்கு ஆர்விட்டு புக்கராஜன் என்று பெயர் வழங்கிவந்ததாம். அவனுக்கு அபலாதேவி, பல்லாதேவி என்ற இரண்டு மெனைவிகள் இருந்தார்களாம். அவர்களில் அபிலதேவி வயற்றில் சிங்கராஜனும், பல்லதேவி வயற்றில் இராமராஜனும் பிறந்தார்களாம். அவர்களில் இளையகுமாரனை இராமராஜன் கண்டனவலியில் சண்டைசெய்து கலியாணபுரத்தைப்பிடித்து ஆண்டதன்றியில், அதவேனியை அடுத்த காகதேசத்தையும் ஜயித்தானும். கோனேரிநாதர் கணக்கின்படி அந்த அரசனிடம் அப்போதிருந்த சேனையின் பலம70000 பதாதிகளாம்.

இராமராஜாவின் மனைவி இலக்கம்பாள் வயற்றில் திம்மராஜன், கோண்டச்வுரி, ஸ்ரீரங்கராஜன் என்ற மூன்றுமக்கள் பிறந்து, அவர்களில் கடைசி மகனை ஸ்ரீரங்கராஜன் கலியாணபுரத்தின் பட்டத்தை அடைந்தானும். அவனுடைய மனைவிதிம்மாம்பாளாம். அவனை நைஜாமின் கொட்டத்தை அடக்கியும் காஞ்சிபுரத்தைப்பிடித்தும், கர்னுடக தேசம் முழுவதையும் சுவாதீனமாக்கிக் கொண்டானும். அந்த ஸ்ரீரங்கனுடைய அண்ணன் திம்மராஜன் ஆர்விடுவில் குடியிருந்தான். அவனுக்கு மன்னிபுலி அதாவது காட்டுப்புலி என்று பட்டப் பெயர்வழங்கிவந்ததாம். அவன் குத்தி, பெனுகொண்ட, துர்கி, கண்டிகோட்ட, கொண்டவைலி,அடோவனி முதலானகோட்டைகளைப் பிடித்தானும். அவனை அவன் அண்ணன்மகன் இராமராஜ கொன்றதாக ஒரு சரித்திரத்தால் தெரிய வருகிறதாம்,

அந்த திம்மராஜனுக்கு திருமலேராஜா, விடலேசன், சின்னதிம்மாராஜன், பாபதிம்மராஜன் என்னும் நான்கு குமாரர்கள் பிறந்து, அவர்களில் மூத்தவனுகிய திருமலேராஜன் பிரதாபசாலியாகி "சாலுக்கியநாராயணன்" என்றப்பட்டத்தைவகித்தானும், அவனுடைய சமூகவித்துவனுகிய கோனேரிநாதகவி பிரகாசித்து,பாலபாகவதத்தை இயற்றினுராம். அந்தப்பாகவதத்தில் தான்மேல்கண்ட சங்கதிகள்யாவும் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றனவாம். கடைசிகுமாரனுகிய விடலேசன் அதிகபிரதாபசாலியாகி மன்னிபுலி, மன்னவிபாலான்ருகிபிருதுகளைப்பெற்றும் மால்வநாடு, சாகநாடு முதலானதுகளைப் பிடித்தும் கடைசியில் நேபாளதேசத்தையும் ஜயித்துப் பிடித்தானும்.

அப்படிக்கெல்லாம் இருந்தும், அவனுடைய அண்ணன் குமாரனுகிய இராமராஜன் ஆயுசுவரையில் நரபதி என்றப்பட்டத்தை வகித்துவந்தானும் அவன் தந்தையாகிய ஸ்ரீரங்கராஜனுடைய மனைவி திம்மாம்பாள் வயற்றிற் பிறந்தவன். அவனுக்கு கோனராஜன், திம்மராஜன், திருமலேராஜன், வெங்கடராஜன் என்ற சகோதிரர்களும், இலக்ஷ்மாம்பா என்ற சகோதரியும் இருக்

ளாம். அந்த இலக்ஷுமாம்பாளை சூரியவம்சத்தைச்சார்ந்த கலி கல்கோல விபுடுவின் ஐந்தாம் சந்ததியாகிய அவுபலராஜனுக்கு விவாஹம்செய்து கொடுக்கப்பட்டாளாம்.

அந்த அவ்பலராஜனுக்கு நரசராஜன் பிறந்தானும். அந்த நரசராஜனுக்கு தான் சாரதா மூர்த்தி என்னும் பட்டேமூர்த்தி நரசபூபாலியம் என்னும் கிரந்தத்தைப்பாடி சங்கிதம் செய்வித்தாராம். மேலே சொன்ன இராமராஜன், விஜயநகரத்திலாண்டான். அவன் மனைவி கிருஷ்ணதேவனுடைய குமாரத்தியாம். சதாசிவராஜன் அவனுடைய மந்திரியாகஇருந்த தன்றியில், திருமலைராஜு வெங்கடராஜன் என்ற இரண்டு சகோதிரர்களும் அவனுக்கு உதவிசெய்துவந்தார்களாம். அவர்கள் உதவியினால் அந்த நரசராஜா பரிடாவிலுள்ள அதில் கானையோட்டி பீமரதம் என்னும் இடத்தில் பிடித்தார்களாம்,

நரசபூபாலியத்தின்படி கர்னாடகதேசமுழுதும் இராமராஜாவின் சுவாதீனப்பட்டிருந்த தன்றியில், குடியிப்உல் முல்குடன சண்டை செய்து ஜயித்தும், நைஜாமை ஜயித்தும், ரெயிசுருக்கு கப்பம கட்டும்படி செய்தான். நரபதி விஜயத்தின்படி புடல்கான், அடில்கான், ஆயின் அலிமுல்கு, உல்விகான் முதலானவர்களை ஜயித்தான் என்பது ரொயஞ்ரிலகப்பட்ட சாசனங்களினுலும் ஸ்தாபிதமாகிறதாகவும் எழுதிஇருக்கிறார்.

"The origin of the Narapatees is in all the four works (Balabagavatham, Vasacharitram, Narasabapeliam, and Narapathy Vigiam) and in Devanhalli inscription traced back to Arjuna and thence to Candra The Narapaties are more over styled Chalukyas. According to the Narapativijiam and to the Devanahalli incription *Nandaraja* is the eighty third (83rd) descendent of the Pandava Arjuna, and Chlukya the ninth descendent Nanda. From Calukya descended incourse of time the well known Vijala or Bijjala of Kalyana This Vijala, who belonged to the family of the Kalasurayaes, though he usurped the throne of tho Calukyas of Kalyana, he himself called Calukya Narayana; he is also known as Vinga Tribavana Malla -Vijala's power increaged rapidly untill he came to an untimely end by the machinations of the famous *Basava*, the founder of the *Lingamates*,

Vijjala had raised this Basuva from an insignificant position to the post of Prime minister and commander-in-chief. through the influance of the beautiful *Padmavati*, the sister of Basuva, to whose charms Vijjala had succumbed and whom he had married. Vajadeva malls, Mallaya and Bommanna are mentioned in the *Cenna Basava Purana* as the actual murderers of Vijjala

The son of Vijala generally known as the Yuvarajha was, according to the Narapaty Vijiam the father of *Hemmaliraja*, who in his turn became the father of *Tatapinnaraja*, who in the Balabagavatham Vasqcartram and Narasabupoliyam heads the lsit of the *Narapaty Dynasty*.

The Narapaties are therefore, according to the Narapaty Vijiam, the representatives of Vijala and like him they are repeatedly called Calukyas * * *' *Tatapinamiraja* of the founder the *Narapaty* dynasty, who was also called Manvapuly was succeeded by his son Somadeva who seems to have been a very powerful prince in his time &c. Pages 25 to 27 Inscription. History in the Southern India by Dr. G. *Oppert*.

---

## மேஸ்டர் ஜேம்ஸ் பிரினிசிபு முதலான சாஸ்திரிகளுக்கு அகப்பட்ட சாசனங்களின்படி.

# விஜயநகர நரபதிகளுடைய அதிசரித்திர சங்கிரகம்.

---

மகத தேசத்தை ஆண்ட ஆந்திரர்களில் மாருதிஇராஜனுக்கு நந்தன், பூத நந்தன் எனனும் இரண்டு குமாரர்கள் பிறந்து, இராஜிய பரிபாலனம் செய்து வருகையில்; மூத்தவனுகிய நந்தனக்கு, நந்தலி என்பவன் பிறந்து, தக்க காலம் வாய்ந்தபோது பட்டத்துக்குவந்து மகதநாட்டை பிரபலமாக ஆண்டு வந்தான்.

அந்த நந்தனுக்கு, சேஷநந்தி, யாசநந்தி என்னும் இரண்டு குமாரர்கள் பிறந்து, அவருக்கு பதிநான்கு (14) குமாரர்கள் பிறந்து மகத நாட்டிற்கெதிர்த பயிலாந்த தேசத்தில் அரசுபுரிந்து வருங்காலத்தில், அமிர்தன், துர்மித்திரன் என்னும் இரண்டு அபலரசர்கள் கிளம்பிவந்து, அந்த 14 பெயர்களைத் துரத்திவிட்டாக்க; அவர்களில், ஏழு பெயர்கள் அந்த மகத நாட்டை விட்டு தெற்கேவந்து தெலுங்கானுவில் ஆந்திர ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தார்கள், அப்படி ஸ்தாபித்தவர்களில் (கி-பி. 1034 வருஷம்)

நந்தாமஹாராஜன், நந்தாபுரத்தையும், ஓரங்கல்லேயும் கட்டி ஆண்டு வந்தான்-(கி-பி 1076 வருஷம்) அந்த நந்த மஹாராஜனுடைய சந்ததிகளில் ஒருவனுகிய, சாலுகியன் பட்டத்துக்கு வந்து பிரபலனுகி ஆண்டான்.

அநந்தரம் (கி-பி 1118 வருஷம்) அந்த நந்தமஹாராஜனுடைய சந்ததிகளில் மற்றொரு ஆந்திரனுகிய விஜ்ஜலன் அல்லது விஜயராஜன் பின்னும் சற்று

த்தெற்கே துங்கபத்திரா நதிக்கரையோரத்திலிருந்த ஆனேகுந்தி தக்க இடம் எனத்தோன்றியபடியால்; அங்கு தனது பெயரால் விஜயநகரம் என்னும் நகரத்தைக்கட்டி. ஸமஸ்தானத்தை ஸ்தாபித்து ஆண்டுவர; (கி-பி 1158ஷூ) அவன் குமாரன் விமலராவ் பட்டத்துக்கு வந்தான்—பிறகு (கி-பி1182ஷூ) அவன் குமாரன் நரசிம்மதேவராயனும் (கி-பி 1249ஷூ) இராமதேவராயலும், (கி-பி 1274வருஷம்) பூபராயலும் முறையே பட்டத்துக்கு வந்து பிரபலமாக ஆண்டார்கள்.

அந்த பூபராயலுக்கு, புக்கனும், ஹரிஹரனும் மந்திரி பிரதானிகளாக இருந்து பிரகாசித்தாகள். அந்த புக்கனும் ஹரிஹரனும் சந்திரவம்சயாதவராகிய சங்க மஹாராஜருடைய குமாரர்கள்- அவர்கள் முதலில் ஒரங்கல் பிரதாபருத்திரனிடம் மந்திரி பிரதானிகளாக இருந்தார்கள்; அந்தராஜியம் மகமதியரால் பிடிப்பட்ட பொழுது, அதை விட்டுத் தெற்கேவந்து விஜயநகர பூபதிராயலிடம் வேலைக்கமைந்தார்கள். (Vide Pages 278-279 Genealogical Tables by James Prinsep.)

அந்த பூபராயலு-புக்கன், ஹரிஹரனுடைய சகாயத்தைக்கொண்டு, சத்தியத்தை நாட்டி தருமராஜிய பரிபாலனஞ்செய்து வருங்காலத்தில்; டில்லிப்பட்டணத்துக் கதிபதியாகிய மகமதுடோக்லாது எழுந்து சுற்றுப்பக்கத்து குறுநில பெருநில மன்னர்களைத் தாக்கி ஜயித்தும்; தான்சக்கிரவர்த்தி என்று கொண்டாடும்படி கொடுங்கோல் செய்யச்சே, கில்ஜிவம்சத்தைச்சார்ந்த அலாவுதீன் என்பவன், கூர்ஜரம் முதலான நாடுகளைத் தாக்கிப்பிடித்து கப்பம் வாங்கிக்கொண்டு குடிகளை வருத்திய தன்றியில்; கி-பி 1325 வருஷம் தன் சேனைத் தலைவனான மாலிக்காப்பூர் (Malick Kafur) என்பவனைத் தெற்கே இராமேசுவரம் வரையில்போய், இந்த ராஜர்களைத்தாக்கி ஜயித்துக் கப்பம்வாங்கி வருபடிகட்டளை இட்டனுப்பினன்.

அந்தமல்லிக்காபூரும் அவனது சேனைகளும் அப்படியேவந்து அனேக இந்த ராஜர்களைத்தாக்கி கப்பம் வாங்கிக்கொண்டு ஆனேகுந்திக்குவர; அப்போது அங்கிருந்த நரபதி பூபராயலும், அவருடைய சேனை வீரர்களாகிய ஹரிஹரன் புக்கன் முதலனவர்களுங்கூடி மகமதியருக்குப் பயந்து கப்பங்கட்ட மாட்டோமென்றும், எதிர் நின்று சண்டைசெய்யச் சித்தமாக இருக்கிறோமென்றும் சேதி சொல்லியனுப்ப, அதற்கு அம்மஹமதியர்களும் சம்மதிக்க, இருகக்ஷிக்காரருக்கும் பிரமாத சண்டைகள் நடந்தன.

அப்போது ஹரிஹரனும் புக்கனும் சில மஹமதிய வீரர்களுடன் ஒரு மூலையில் நின்று மல்லயுத்தம் செய்துகொண்டிருக்க, இது சங்கதியை யறிந்த மகமதியரில் சிலர், ஹரிஹரனும் புக்கனும் மல்ல உயுத்தத்தில் மகமதியரால் கொல்லப்பட்டு இறந்துவிட்டார்கள் என்று பொய்யான சங்கதியைச் சொல்ல; இந்து சேனைகள் பயந்து பல பக்கங்களில் ஓடமகமதியர் கோட்டையைச் சுற்றி வளைத்துக்கொண்டு, உள்ளே இருந்த இராயலையும்,

அவருடைய பதினொரு மக்களையும் பிடித்து வரச் சொல்லி, அவர்களுடையக் கோட்டை கொத்தளங்களை மகமதியர் தம்வசமாக்கி விடும்படிக்கும்; யுத்த செலவுக்கு மூன்றுகோடி ரூபாய் தரும்படிக்கும், பிரதி வருஷமும் கிரமமாகக் கப்பங்கட்டி வரும்படிக்கும்; இராயனும் அவருடைய மக்களும் மகமது மதத்தை அநுஷ்டிக்கவேண்டு மென்றும், அப்படி செய்யா விட்டால் சிரச்சேதம் செய்யப்படுமென்றும் சொல்ல; பூபாலனுங் கேட்டுச் சிரித்து, மகமதிய சேனாதிபதி கேட்ட கோட்டை முதலான சொத்துக்களைச் சுவாதீனமாக்கச் சித்தமாக இருப்பதாகவும், ஆனால் தாமும் தம் மக்களும் தமது இந்து மதத்தை விட்டு, மகமது மதத்தைத் தழுவ பிராணன் உள்ள நாள் வரையில் சம்மதிக்கோமென்றும் சொல்ல; தூதுக்காரருக்கும் வெகுநேரம் தர்க்கமாகிக் கடைசியில, பூபாலனும் அவன் பிள்ளைகளும் மதவைராக்கியத்தினால் அங்கு முன்னாடி தயார் செய்திருந்த அக்கினி குண்டத்தில "ஹரி ஹர ராம் ராம்" என்று சொல்லிக்கொண்டு இறங்கி சுத்த வீரர்களாக சொர்க்கலோகமடைந்தார்கள். கோட்டையின் முன்வாசலில் இப்படி நடக்கவே, கோட்டையின் உள்ளே அந்தப்புரத்திலிருந்த இராஜ மஹிஷிகள் தமது நாயகர் கருத்தின்படி, முன்னமேயாக தயார்செய்திருந்த அக்கினி குண்டத்தில் குதித்து வீர சொர்க்கத்தை அடைந்தார்கள்,

அக்காலத்தில் பூபாலனுடைய மூன்றுவயது ஆண் குழந்தையாக இருந்தவனை, ஒரு தாதிக்கிழவி யாருக்கும் தெரியாமல் எடுத்துக்கொண்டுபோய், கோட்டையின் பெரிய சாக்கடைக்குள் மறைத்து வைத்திருந்தும், மகமதிய பகையாளிக்குத் தெரியாமலும், இராத்திரி காலங்களில் எடுத்துக்கொண்டோடியும், கடைசியாக துளவதேசத்தை (கனராவை) சார்ந்த ஒருமலைக்காட்டில் போய் மறைந்தும், அவ்விடத்திய மலையாளிகளோடு உறவாடியும் அவர்களால் சேனும் தீனமாவும் பெற்று வளர்த்தும் வந்தாள். இது நிற்க,

கோட்டைக்குள் பிரவேசித்த மகமதியர் சேனைகள் (1334 வருஷம்) அதைச் சின்னாபின்னமாக இடித்தும், பதிலுள்ள விலை உயர்ந்த பொருள்களை எல்லாம் வாரிக்கொண்டு வெளியில் வந்தும், கோயில் கூட கோபுரங்களை எல்லாம இடித்தும், நகர வாசிகளை நாலாவிதமாக ஹிம்சைசெய்தும், அவர்கள் வீடு வாசல்களைக் கொள்ளையடித்தும், குரூரங்கள் செய்ய; அநேகர் அந்நாட்டைவிட்டு நாலாபக்கங்களிலும் ஓடிப்போய் விட்டார்கள்.

ஆனைகுந்தி பட்டணம் அல்லோல கல்லோலமாகிவிட, இத்தியாதிகளைக் கண்டும் கேட்ட ஹரிஹரன் புக்கன் என்னும சேனாதிபதிகள், இனி அவ்விடத்திலிருப்பதில யாது பிரயோஜனமுமில்லையெனக் கண்டுதெளிந்து, ஆடுமேய்க்கும் குரும்பர்களைப்போல வேஷம தரித்துக்கொண்டும், அநேக காடுமலைகளைத் தாண்டியும், தாங்கள் முன்னிருந்த பட்டணத்தைச் சேர்ந்தார்கள். அங்கும் மகமதியர் குடிகளை வருத்துவதைக் கண்டு, அதற்கடுத்த ஓர் பெரிய வனத்துக்குள் மறைந்து நிற்கப் போயினர். அந்த பயங்கரவனத்தில் ஓர் அழகிய ஆச்சிர

மழும், அந்த ஆச்சிரமத்துக் கருகே பரமசிவமே அவதாரமாக வந்தாற்போல ஒரு பெரியவர் புலித்தோலா சனத்திலிருந்து, அவரைச் சுற்றியிருக்கும் சீடர்களை நோக்கி இந்து மதத்தின் பெருமையையும், அதை மகமதியர் கெடுக்கும் அக்கிரமத்தையும் பற்றி அழுதகண்ணீரோடும், அனுதாபத்தோடும் சொல்லிக் கொண்டிருப்பதைக் கண்டுமே கேட்டும்; ஹரிஹரன் புக்கன அவர் பாதத்தில் விழுந்து வணங்கி நின்றார்கள்.

## வித்தியாரண்ணியர் சரித்திரம்.

அந்தப் பெரியவர் யாவரெனில, துங்கபத்திரா நதி தீரத்தில பம்பாநகரத்தில், தெலுங்கு பிராமணகுலத்தில, பிறந்து வளர்ந்தவர். அவரது தந்தையின் பெயர் மாயணணா-சாயணாசாரியார் அவருடைய தமயனார்-பார்துவாஜ கோத்திரத்தைச் சார்ந்தவர்—புக்கருடைய குலகுருவு என்பதற்கு அடியிற்கண்ட சுலோகமே ஆதாரமாம்.

శ్లో॥ యస్యబోధాయనం సూత్రంశాఖాయస్యచయాజుషీ ।
భారద్వాజకులంయస్య సర్వజ్ఞస్సహిమాధవః ।
శ్రీమతీయస్యజననీసుకీర్తిర్మాయణఃపితా ।
సాయణోభోగనాథశ్చమనోబుద్ధిసహోదరా॥

ஆகமவேத புராண இதிகாசங்களை கரைகண்டுணர்ந்து, இல்லறம்புக, அவரது உத்தம பத்தினியார் சிறுபிராயத்திலேயே பரமபதமடைந்த பின்னுல; அவர் உலக ஆசையை விட்டொழித்து சந்நியாச ஆச்சிரமத்தை வகித்தும், நல்லொழுக்கம், சீலம், சிவபக்தி, பரோபகாரம, தேசோபகாரம் முதலான குணங்களிற் சிறந்த வித்தியாரண்ணிய சுவாமிகளாம். வேதாந்த மத சித்தாந்தியாகிய அவவிப்பிரர்,108 உபநிஷத்துக்களுக்கு அத்வைத பரமாக பாஷ்ய மொழியும், பராசரமாத் வீயம், காலமாத வீயம், சங்கர விஜயம, வித்தியாரண்ணியம, சர்வதரசன சங்கிரஹம், மாதவ நிதானம், காலஞ்ஞானம முதலான கிரந்தங்களை இயற்றிமஹா மாத்துவா சாரியர் என்று மகிமைபெற்று ஸ்ரீசங்கராசரியா பீடத்தைப் பெற்றவர். அந்த சங்கராசாரியா பீடத்துக்கு வந்தவர்களில் அவரைவிட சிறந்தவித்துவான் அவருக்கு முன்னுமில்லை, பின்னுமில்லை. அவர் சந்நியாசரமத்தைச் சார்ந்தவராகினும,புக்கனுக்கு மந்திரியாக இருந்தமையால்; அழகிய அரண்மனைகளில் வசித்தும்,ஆனைக்குதிரை தண்டெளாதி பிருதுகளுடன் பவனிவந்து பிரகாசித்தார். அவர் காலம் தொடங்கிதான் அந்த மடாதிபதியை உலகத்து வேன்ற பெரும்பெயர் வழங்கிவரப்பட்ட தன்றியில், அவரைப்பார்த்து மற்ற மடாதிபதிகளும் ஆனைக் குதிரை முதலான பிருதுகளை வகிக்க ஆரம்பித்தார்கள்.

தோறும் எலும்புமாகத் தோன்றும் அத்தபோதிதி, தம் நாட்டில் துருக்கர் புகுந்து தேவாலயங்களையும், மடாலயங்களையும், விக்கிரகங்களையும், வீடுகளையும் உடைத்துக் கொள்ளையிட்டும், குடிகளைக் குரூரமாக நடத்திவருவதைக் கண்டு சகியாமல்; சதா அழுதகண்ணும் சிந்திய மூக்குடன் சிவனைத் தியானித்தும், தமது சீடர்களுக்கு சிவபக்தி சீலத்தையும், தேசாபிமானத்தையும் போதிப்பதைக் கண்டும் கேட்ட ஹரிஹரனுக்கும் புக்கனுக்கும் அவரிடத்தில் அத்யந்த விசுவாசமுண்டாகி, அவர்பாதத்தில அடைக்கலமாக விழுந்ததைக்கண்டு; அந்த வேத்தா அவர்களை ஆசிர்வதித்து, நீங்களாரப்பா? எங்கிருந்து வந்தீர்கள்? என்று வினவ, அந்த ஹரிஹர புக்கனும் தாம் பிறந்ததுமுதல் அங்கு வந்தவரையில நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லக்கேட்டு, ஆனைகுந்திக்கு உண்டான கஷ்டத்தைக் கருதி அழுது, அந்தோ! அந்தப் பட்டணத்திலும் துருக்கர் புகுந்து தும்சம் செய்ததற்கு துக்கப்பட்டும்; இனி அந்தப் பட்டணத்துக்கு தாம் வந்து குடிகளுக்கு நன்மை செய்ய சித்தமாக இருப்பதாகவும் சொன்னார்.

## வித்தியாநகரம் என்னும் விஜயநகரம் உண்டான விதம்.

அம்முனிவர் அப்படி சொன்னாலும் என்ன, அப்போது ஓரங்கல்நாடு முதல் ஆனைகுந்தி வரைக்கும் இடைக்கிடை மகமதியர் சேனைகள் தங்கி, வழிப்போக்கர்களை மறித்து உதைத்துக் கொள்ளையடித்து கொலைபுரிந்து வந்தபடியால், ஒரூரிலிருந்து அடுத்த ஊருக்கு உயிருடன் போய்ச் சேர்வது கஷ்டசாத்தியமாக இருந்தது. ஆகவே, அந்த வித்தியாரண்ணிய சுவாமிகளை ஒரு பிரேதம்போல் வேஷமிட்டும், ஒரு பாடையில் படுக்கவைத்தும், அவரை அவர் சீடர்களில் சிலரும்; ஹரிஹரன் புக்கன் முதலானவர்களும் மாறுவேடம் தரித்து தூக்கிக் கொண்டு ஆனைகுந்திவழியே பிணக்கோலமாகப்போய் துங்கபத்திராநதி தீரத்தில் வந்திறக்கினார்கள்.

அவ்விடம் சிறு முயற்குட்டி ஒன்று ஒரு பெரிய சிங்கத்தைத் துரத்திக் கொண்டு போவதை வித்தியாரணியர்ப் பார்த்து "என்ன ஒரு சிறு முயல் சிங்கத்தை எதிர்த்துச் சண்டை செய்யுமாகில், இந்த இடம் எப்படிப்பட்ட வீரர் குடியிருந்த விடமாக விருக்கவேண்டும்! இதுவன்றோ வீரதீரர்கள் வசிக்கத் தக்க விடம்!" என்று ஆச்சரியப்பட்டுக்கொண்டு, அருகில் ஒரு மலையின்மேல் விருபாக்ஷி சிவஸ்தலமிருக்கக் கண்டுப் போய் உள்ளே நுழைந்து அங்குள்ள புவனேசுவரி சுவாமியைத் தியானித்தும், அந்தக் கோயிலைக் கட்டியவர்கள் யாவரென்று அருகில் நின்ற அர்ச்சகரை வினவ; அவ்வர்ச்சகர், அம்முனிச் சிரேஷ்டரை நோக்கி "ஏ! யதீந்திரா! ஸ்ரீமத்ராமாயணத்தில் கண்ட சுக்கிரீவன்

இந்த மலைமீது ஏறிசுவாமியைத் தரிசிக்கையில், வாலியும் அவனைத் தொடர்ந்து வந்து தன்னாலானமட்டும் ஏறிப்போக முக்கியும் முடியாமல் போய்விட்டான். இதைச் சுற்றிலும் மாலவதம், ஏமகூடம், பசுவசிரங்கம், மதங்க பர்வதம், கிஷ்கிந்தம், என்னும் ஐந்து பருவதப் பிரதேசங்களிருக்கின்றன. இங்குதான் ஹம்பிஸ்தலமுமிருக்கிறது. இவைகளைச் சாக்ஷாத் தசரதராமர் சட்டி தரிசித்ததுமுதல் அநேக தபோநிதிகள் வந்து வனசஞ்சாரிகளாகித் தவஞ்செய்து சர்வேசுவரனை அடைந்தார்கள் என்று சொல்லவே; அந்த வித்தியாரணியருக்கு இவையாவும் ஞானதிருஷ்டியினாலும் உண்மையாகவே தோன்றியதன்மேல், இப்படிப்பட்ட ஸ்தலத்தில் தாமும் தம் உயிர் உள்ளநாள் உள்ளவரையில் காலம்போக்கக் கருதியும், அவ்விடத்தில் அஷ்ட ஐசுவரியங்களும் திரண்டுவந்த அழகிய நகரமொன்றை உண்டாக்கித் தரவேண்டுமென்றும், தமது இஷ்ட தேவதையாகிய அஷ்டலக்ஷ்மியைத் தியானித்தார்.

அப்படி தியானித்துக் கொண்டிருக்கும்போது, அம்முனி புங்கவருடைய சீடர்களான ஹரிஹரன் புக்கன் முதலானவர்கள் வேறுவேடந்தரித்து ஆனைகுந்திக்குள் போய்ப்பார்க்க, அவ்விடத்திய கோயில் கோபுரங்களும், கோட்டை கொத்தளங்களும், இடிந்து குட்டிச்சுவர்களாக நிற்கவும்; அந்நகரத்தில் உள்ள ஜனங்கள் எல்லாரும் நாலாபக்கங்களில் வலசைப்போய் ஒரு காட்டைப் போலிருப்பதையும் கண்டு பரிதபித்து, தம்தபோநிதியினிடம் திரும்பிவருகையில், வழியில் ஓர் தடாகத்தைக்கண்டு தண்ணீர் குடிக்க இறங்கினார்கள், அங்கு ஒரு குகை இருக்கக்கண்டு அதற்குள் புக்கன் பிரவேசித்துப் பார்க்க, தங்கக்கம்பங்களும், தகடுகளும்கட்டி கட்டியாகவும், வைரம் செம்பு முத்து முதலான நவரத்னங்கள் கூடை கூடைகளாகவும், பணம் துட்டுகள் பானை பானைகளாகவும் கிடக்கக்கண்டு ஆச்சரியப்பட்டு, இப்பொருள்களை எந்த ஹிந்துராஜன் துருக்கர் முதலானவர்களுக்குப் பயந்து இங்குமறைத்து வைத்தானோவென்று மயங்கி ஓடிப்போய் வித்தியாரணியருக்கு அறிவிக்க; அவர் உத்தரவுப்படி அவைகளைக் அவர்கள் கொண்டுவர; அங்கு மஹா வித்துவசிகாமணிகளும், வீரசிகாமணிகளும் வசிக்கத்தக்க நகரத்தைக் கி-பி. 1336-வருஷம் (அதாவது சுமார் 600 வருஷங்களுக்குமுன்) கட்டிவைப்பித்தார். அவரிப்படிக்கட்டிய பட்டணத்திற்கு அவர் பெயரே வழங்கிவருகிறது. அதுதான் வித்தியாரண்ணியர் நகரம் அந்தவிடந்தான் முன் விஜயராயனுக்கட்டிய விஜயநகரம். அந்த நகரந்தான் பிற்காலத்தில் ஆந்திர இராயலு ஸமஸ்தானத்தார் தலை நகரமாகவும், சக்கிரவர்த்திப்பட்டம் கட்டும் கெடிஸ்தலமாகவும் பிரபலப்பட்டது.

அப்படிப் பட்டணம் கட்டிமுடிந்தது. போதுமான பொருளும் கிட்டியது. அப்படி இடமும் பொருளும் கிட்டவே, முன் மகமதியர்களுக்குப் பயந்து வலசைபோன குடிகளும் நாளாவட்டத்தில் நகரத்தில் வந்து குடிபுக ஆரம்பித்தார்கள். ஆரம்பித்தாலு மென்ன? அவர்களைத் தக்க தருமநீதி சட்ட திட்டங்களைக்கொண்டு ஆளுவதற்கு ஓர் அரசனில்லாமையால், அக்குறைவை நீக்கும் பொருட்டு வித்தியாரணியர் அந்த ஆனைகுந்தியில் முன் ஆண்டுவந்த ஸ்ரீநர

பதி பூபராயலு அவர்களுடைய சந்ததிகள் எங்கிருக்கிறார்களோவென்று தேடிப்பார்க்க, அக்குடும்ப வார்சுகள் அகப்படவில்லையே என்று விசனப்பட்டுக்கொண்டிருக்கையில், அவரது உண்மையான சீடர்களாகிய ஹரிஹரனும் புக்கனும் வந்து "சுவாமி ஸ்ரீபூபராயலுடைய சந்ததிகள் இந்நகரம் வரும்மட்டும் தாங்களே அரசனாகி இராஜ்ய பரிபாலனம் செய்துவர வேண்டுமென்று அவர் பாதங்களைப்பற்றி வேண்ட, அந்த வித்தியாரணியர் சிரித்து, "நான் பிராமண சந்நியாசி, க்ஷத்திரியர் வேலையிலும், இல்லறத்தார் வேலையிலும் பிரவேசிக்க சரிப்படாது; ஆகவே, பூபராயலுடைய சந்ததிகள் வருகிறவரையில், உங்களில் மூத்தவனாகிய ஹரிஹரன் இராஜனாகவும், புக்கன் சேனாதிபதியாகவும் இருங்கள்; நான் உங்களுக்கு மந்திரியாகவிருந்து என்னாலான உதவிகளைச் செய்து வருகிறேன்" என்று சொல்லி, அவர்களைச் சம்மதிக்கசெய்தும், ஆசீர்வதித்தும், அந்நகரத்தில் அரசனுக்கு என்று முன்னாடியாக தயார் செய்திருந்த தங்கத்தினாலும், நவரத்தினங்களாலும் பிரகாசிக்கும் சிங்காசனத்தின் மீது நல்ல முகூர்த்தகாலத்தில் ஹரிஹரனைக் கைலாகுக் கொடுத்து ஏற்றி உட்காரச்செய்து பட்டங்கட்டினார். அந்த நியமனத்தைக் குடிகள் யாவரும் அங்கீகரித்துக் கொண்டு, அந்த வேத புருஷனையும் அவரால் நியமிக்கலான ஹரிஹரராயலு அரசனையும் வணங்கினார்கள்.

## (1) ஹரிஹரதேவராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1336 முதல் கி. பி. 1350-வருஷம்)

அப்படி ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகளுடைய ஆசீர்வாதத்தினால் அரசாட்சியைக் கைக்கொண்ட ஹரிஹரராயலு சந்திரவம்சக்ஷத்திரிய ஜாதி, சங்கம வகுப்பைச் சார்ந்தவன். அவனுடன் பிறந்தவர்கள் ஐவர். அவர்களில் புக்கன் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டாலும், பெரும்பான்மையான இராஜ்ய காரியங்களையும் பார்த்துக்கொண்டு முக்கியமாக கைகூரிலிருந்து அரசுசெய்தான். மற்ற சகோதிரர்களில் "கம்பராயலு" கீழ்நாடுகளையும், "மாரப்பராயலு" பானவாசி நாட்டையும் ஆண்டுவந்தார்கள். அக்காலத்தில் கோவா (துளுவ) கனரா ஹொயிசாலம் அல்லது தைமகூர், பனைவாசி, குண்டலம் முதலான நாடுகள் அவர்களுக்கு சுவாதீனமாகி இருந்ததன்றியில், கனரா நாட்டிலுள்ள ஜயினர்களையும், கோவாவின் மேற்கு பாகத்திலிருந்த அராபிய தலைவர்களையும், ஜயித்து, 1313-வருஷம் நாட்டின் மீது படை எடுத்துவந்த மகமதியரைத் துரத்தியடிக்க, ஓரங்கல் இந்து மன்னருக்கு உதவியும் செய்தான். பிறகு அவன் பாதாமி என்னும் இடத்தில் பலமான கோட்டையைக் கட்டி 7 வருஷம் சமாதானமாக ஆண்டு 1343 வருஷம் பரமபதமடைந்தான். அவனுக்குப் பிறகு

# (2) புக்கதேவராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1343 - ௵ முதல் 1379 - ௵ம்.)

ஹரிஹரராயலுக்குப் பிறகு அவனுடைய தம்பி புக்கராயலு விஜயநகரத்துக்கேவந்து அதை ஸமஸ்தானத் தலைநகரமாக்கிக்கொண்டும், கூல்பர்க்காவிலிருந்த பாமினி குடும்ப மகமதியர்களைத் தாக்கியும், அநேக வருஷகாலம் மகமதியர் இந்துக்களைத் தாக்காதபடி பாதுகாப்பு செய்தான். அவன் ஓரங்கல்நாட்டரசனாகிய ருத்திரதேவனுக்கு உதவி செய்ததினால், சுல்தான் மகமது ஷாவுக்கு விரோதமுண்டாகி, ரெயிசூர் டோஆபில் 1365-வருஷம் இருவருக்கும் பிரமாத சண்டைகளுண்டாக; கடைசியில, நிரபராதிகளான குடிகளை எவரும் கொல்லக்கூடாதென்ற நிபந்தனைகளோடு சமாதானம் செய்துகொண்டார்கள். பிறகு 1376-ம் வருஷம் அந்தச் சுல்தான் மகமதுவின் குமாரன் மூஜாஹித் சாயபு சண்டைக்குவந்தும் தோல்வியடைந்து அதோனியில் சமாதானம் செய்துகொண்டார்கள். அந்த புக்கராயலு காலததில் விஜயநகர சமஸ்தானத்துக்கு கோவா, பெல்காம், துளுவம், கொங்கணம் முதலான நாடுநகரங்கள் சுவாதீனமானதன்றியில்; விஜயநகர ஸமஸ்தானம தெற்கே இராமேசுவரம் வரையில் பரவியதனால், இலங்கை மலையாள மன்னர்களும், தகுந்த வெகுமானங்களுடன் ஸ்தானாபதிகளை விஜயநகரத்துக்கு அனுப்பினார்கள்.

அக்காலததில் விஜயநகரம் சகலசம்பத்துக்களில் நிறைவுபெற்று பிரகாசித்தது. அந்த புக்கராயலு கேவலம் யுத்தததில் சுத்தவீரனாக மாத்திரம் ஜீவித்ததோடு; கல்விவிருத்தி விஷயத்திலும், பகவத்பக்தி விஷயத்திலும் அதிகசிரத்தையுடையவனாக விருந்தான். வித்தியாரணியருடைய சகோதிரர் சாயனாசாரியார் வேதங்களுக்கு பாஷ்யமசெய்ய ஆரம்பித்தது இந்தப் புக்கராயலு காலத்திலதான. கி-பி. ஏழாம் நூற்றாண்டில் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளால் ஸ்தாபிக்கலான மைசூரையடுத்த ஸ்ரீங்கேரி மடத்துக்கு வித்தியாரண்ணிய சுவாமிகளைப் பிரதம ஆசாரியராக நியமித்ததும் அக்காலத்தில்தான். இதுமட்டோ, அந்தப் புக்கராயலு மதத்தில் சைவனாக விருக்கினும் அன்னிய மதங்களை தூஷிக்காமலும், அவைகளை ஆதரித்தும் வந்தான. இந்து மதத்துக்கு விரோதிகளான ஜயினர்களுக்கும் உதவிசெய்து வந்ததோடு; ஜயினருக்கும் இராமாநுஜ மதஸ்தர்களுக்கும் ஊர்கோல விஷயமாக உண்டான பெருங் கலகத்தைச் சிராவண பெலகோலாவில் சமரசமாக சமாதானப்படுத்தினான். குடிகளுக்கு உபயோகமான சத்திரங்களையும், வைத்தியசாலைகளையும், கிணறுகளையும வாய்க்கால் முதலான சாதனங்களையும், இப்போது அந்தப்பூரிலிருக்கும் புக்கசாகரம் முதலான தடாகங்களையும உண்டாக்கினான். இப்படி 36 ௵ ஆண்ட புக்கதேவராயலு 1379 ௵ம் மரணமடைந்தான். அவனுக்குப் பிறகு

# ௨-வது ஹரிஹரராயலு ஸமஸ்தானம்.

## கி. பி. 1379 முதல் 1406 வருஷம்.

அந்த புக்கராயலுக்குப் பிறகு அவனுடைய குமாரன் (௨-வது) புக்கராயலு அல்லது ஹரிஹரராயலு சிங்காசன மேறினான். அவனுடைய பட்டபுத்திரியின் பெயர் மலலாம்பிகையம்மாள். அவன் 1393-வருஷம் தென்னுதேன்வரையில் தமது அதிகாரத்தைப் பரவச்செய்தும், சோழ பாண்டியர்களை அடக்கி அவர்களிடம் கப்பம் வாங்கிக்கொண்டும், அப்படி அவர்களை அடக்கியதனால் "சாரதுலவமாத பஞ்சனன்" அல்லது மஹாராஜாதிராஜன் என்ற பிருதுப்பெயரைப் பெற்றான் என மைசூர், தார்வார், செங்கல்பட்டு, திரிசிரபுரம், காஞ்சிபுரம் முதலான விடங்களில் அநேக சாசனங்க ளகப்பட்டன. அவன் பிராம்மணர்களுக்கு அநேக அக்கிரகாரங்களையும், கோயில் கோபுர கட்டிடங்களையும் கட்டிக்கொடுத்த தன்றியில், ஜயினமத வித்துவானாகிய "தண்டநீபர்" வேண்டுகோளின்படி, விஜய நகரத்தில் ஒரு அழகிய ஜயினர் கோயிலையும் கட்டிக்கொகொள்ள இடங்கொடுத்தான். அவன் ஸமஸ்தானத்தில் ஸமஸ்கிருத வித்தையைப்பரவச் செய்ததோடு, வித்தியாணியருடைய சகோதிரரும், தமது முக்கியமான மந்திரியுமாகிய சாயனாசாரியாரை அவரது வேத பாஷியத்தை எழுதி முடிக்கவேண்டிய உதவிசெய்து முடிப்பித்தான். இந்தியாவின் வடதேசத்தில் பிரோஜஷா 'டொக்ளாக்' பிராமணர்களுடைய கோயில் கூட கோபுரங்களை இடித்தும், சிறந்த கிரந்தங்களைக் கொளுத்தி நாசமாக்கி வருகையில்; தெற்கே ஹரிஹரன் பிராமணர்களையும் அவர்களுடைய கிரந்தங்களையும் கோயில் கோபுரவிக்கிரகங்களையும் யாதுகாத்துப் பரிபாலித்து வந்தான். அவன் அப்படி பாதுகாத்து வந்ததற்கு தார்வார், கன்னடா, கோவா, மைசூர், பல்லாரி, கடப்பை, காஞ்சி, திரிசிராப்பள்ளி முதலான விடங்களில் அகப்பட்ட சாசனங்கள் இன்றும் சாக்ஷிப் பகருகின்றன.

விஜயநகரத்தினுடைய போகங்களைக்கண்டு சகியாத கூல்பர்கா சுல்தான் பெரோஜிஷா 1398-ம் வருஷம் சண்டைக்கு எத்தனிக்க, விஜய நகரத்தாரும் துங்கபத்திரா நதியைக்கடந்து ரெயிச்சூர்வோவைப் பிடித்துக்கொண்டார்கள். பிறகு மகமதியசேனை மஹா ஊக்கத்தோடு விஜயநகரம் வரையில் வர, இருகக்ஷியாருக்கும் சமாதானமுண்டாகியது. அந்தக்காலத்தில் தக்ஷணத்திலும் கர்னாடகத்திலும் கடும்பஞ்சம் சம்பவித்து 12 வருஷகாலம் நீடித்து நாலாபக்கத்து நரசிவர்களை நாசமாக்கி விட்டது. அக்காலத்தில் வடக்கே தாமர்லேன் படையெடுத்துவந்து இந்துக்களை தும்சம்செய்து வருவதைக் கூல்பர்க்காவிலிருந்த பெரோராஜிஷா கேட்டு அவன் உதவியைக்கொண்டு குஜராத்திலும், காண்டேஷிலும், கூடுமாகில் விஜயநகரத்திலும் இரண்டாந்தரம் சண்டைசெய்யப் பிரயத்தனப்படுகையில், 1406-வருஷம் ஹரிஹரராயலு சுமார் 20வருஷம் ஆண்டு இறந்தான் அவன் காலத்தில் செலாவணியாகிவந்த பொன் வெள்ளி

இப்படி கிருஷ்ணதேவராயலு ஜகதீசுவரனுடைய அருளுக்கும், ஜன சமூக க்ஷேமத்துக்கும் பாடுபட்டு உழைத்துவந்த சங்கதிகளுக்கு, அவரால் செய்த தரும கைங்கரிய சிலாசாசனங்களே போதுமான நிதர்சனங்களாகும்.

---

அவைகளில் சில எவையெனில்:—

| சாசனங்களிருக்கும் இடங்கள். | சாலிவாகன சகம். | |
|---|---|---|
| பல்லாரி-விஜயநகரம். | 1432—வரு | |
| கிருஷ்ணாஜில்லா-சிடுமுக்கலகம். | | ,, |
| கர்னூல், பால்காலம். | | ,, |
| பல்லாரி, பாடபுரம். | | ,, |
| காஞ்சீபுரம், செங்கற்பட்டு. | 1433 | ,, |
| பல்லாரி, காஞ்சீபுரம். | 1434 | ,, |
| ,, ,, | 1435 | ,, |
| விஜயநகரம். | 1436 | ,, |
| பல்லாரி, சங்கலபுரம். | | ,, |
| காஞ்சீ, செங்கல்பட்டு. | 1437 | ,, |
| பெல்காம், ஊரகல். | 1438 | ,, |
| நெல்லூர் ச. | | ,, |
| கிருஷ்ணா, அமராவதி. | | ,, |
| பல்லாரி, விஜயநகரம். | 1439 | ,, |
| தென்னார்க்காடு, திருவண்ணாமலை | | ,, |
| கிருஷ்ணா, மோடேர். | | ,, |
| காஞ்சி, செங்கற்பட்டு, மதுரை | | ,, |
| அஹோபிலம், ஸ்ரீசைலம், பெர்ம்மூர். | | ,, |
| செங்கல்பட்டு, எருமபட்டிபாளயம் | 1440 | ,, |
| கிருஷ்ணா, பெஜவாடா. | 1441 | ,, |
| பூட்டல்வீடு,சேஜரல்,பாபட்டலா | 1441 | ,, |
| ஸ்ரீகாகுளம், காகானி, கொண்ட | | |
| காலூரு, தூர்க்கி,திருக்கழிகுன்றம் | | |
| காஞ்சீபுரம், காதம்பாக்கம். | | |
| நெல்லூரு, காலுவாய், கட்டாவி | 1442 | ,, |
| தென் ஆற்காடு, அன்னியானூர் | 1443 | ,, |
| மதுரை, பழனி, திண்டுக்கல், | | ,, |
| விஜயநகரம், மங்களபுரி, பல்லாரி, கிருஷ்ணா. | | ,, |

| | | |
|---|---|---|
| நெல்லூர், சாவந்தின்னே, வல்லபாபுரம், கர்நூகூரி, கடப்ப, அநந்தச பாகரம், நெல்லூர், நீரூர் | 1444 | ஷூ |
| மைசூர், சிவமொக்க, சிமோகா | 1445 | „ |
| ஈகல்பாடு, நெல்லூர், நிரஞ்சனூர் | 1446 | „ |
| கிருஷ்ணா, கொண்டவீடு | 1447 | „ |
| கடப்ப, கந்தரகாண்டே | 1448 | „ |
| குடிஹல்லி, பல்லாரி | 1449 | „ |
| காஞ்சி, செங்கல்பட்டு, விருஞ்சிபுரம், | 1450 | „ |
| காஞ்சி, கர்னூல், பாலேம், விஜயபுரம் | 1452 | „ |
| திருவண்ணாமலை, ரங்கராயணி | 1453 | „ |

கொண்ட, சங்கவபுரம், பட்டேர், கண்டபல்லி, கி-பி. 1509-1510 1512,-1513 1514,-1515 1513-14 வருஷங்கள் விரிஞ்சிபுரம் கோயில் 1513ல் 20 சப்டம்பர்-சங்கலபுரம் 1522-23 1527,-28 1529 எப்ரல் 23ல் உகிர நரசிம்மர் கோயிலிலும் சிம்மாசலம் முதலான விடங்களில் இருக்கின்றன—

இன்னும் இவ்விதமாகவே தென்னாடுகளில் அனேக தரும சாசனங்கள் கண்டிருக்கின்றன. இத்தியாதி சாசனங்களினால் கிருஷ்ணதேவராயலுடைய சமஸ்தானம் வடக்கே ஒரிசா முதல், தெற்கே இலங்கைவரையில் பரந்திருந்ததாகத் தெரியவருகிறது. இப்படி விஸ்தீரணத்தில் பரவி இருந்த இவ்வளவு பெரிய சமஸ்தானத்தை ஒரே ராயலு விஜயநகரத்திலிருந்து ஆளுகை செய்வது கஷ்ட சாத்தியமெனக் கண்டு, தம்ஸமஸ்தானத்தைப் பலகண்டங்களாக வகுத்தும், அவைகளைத் தமது "வைசிராய்" என்னும் பிரதிநிதிகளைத் தமது பந்துக்களின் சில பிரபுக்கள் குடும்பத்திலிருந்து தெரிந்தெடுத்து அவர்களுக்கு நாயடுகாரு என்னும் பட்டங்கள் கொடுத்தனுப்பி ஆண்டுவரச் செய்தார்.

அதற்கு திருஷ்டாந்தமாக கர்நாடகதேசத்தை ஜயித்த பிறகு அதைப் பல கண்டங்களாக வகுத்த விதங்களாவன:— கர்நாடக தேசத்தின் மீது 100,000 பதாதிகளை அனுப்பி ஜயித்தபோது, அந்தப்பதாதிகளுக்கு தளகர்த்தர்களாக (1) விஜயப்ப நாயடு, (2) துபாக்கி கிருஷ்ணப்ப நாயடு, (3) விஜயராகவலு நாயடு, வேங்கடபதி நாயடு, இருந்தார்கள். அவர்களில் செஞ்சி, நெல்லூர் முதலான கொல்லிடம் வரையிலுள்ள மாகாணங்களைத் துபாக்கி கிருஷ்ணப்ப நாயடுக்தும், காவிரி நதிப்பாயும் திரிசிராப்பள்ளி தஞ்சை முதலான மாகாணங்களை விஜயராகவலு நாயடுக்தும், அதற்கு தெற்கே இருக்கும் மாகாணங்களை வேங்கடபதி நாயடுக்தும், மதுரை பாண்டியனுக்கு உதவியாக அனுப்பிய நாகம நாயடு திருப்தியாக நடவாமையால் அந்தப் பாண்டியன் மதுரையை விசுவநாத நாயடுக்தும் கொடுத்து, தமது பிரதிநிதிகளாக ஆண்டுவரச் செய்வித்தார்.

# ஸ்ரீகிருஷ்ண தேவராயலுடைய மரணம்.

கிருஷ்ணதேவராயலு சுமார் ஐந்தரையடி உயரமும், அதற்குத்தக்க சற்று ஸ்தூலித்த தேகமும், பொன்னிறமான வருணமும், உயர்ந்தும் அகன்ற முகாரவிந்தமும், வில்லு களைப்போன்ற புருவங்களும், கூர்மையுள்ள மூக்கும், பெருத்து மருண்ட கண்களும், துடிப்புள்ள மீசையும், நீண்ட கரசரணாதிகளும், உடையவராகவும்; அவருக்கு அம்மைவார்த்த தழும்புகள் ஆங்காங்கு முகத்திலிருக்கினும் சுந்தர ரூபமும், காருண்யம் கிருபை நிறைந்த முகார விலக்ஷணமுடையவரென்றும்; பின்னும் பலவிதமாக வருணித்திருக்கிறார்கள். கிருஷ்ண தேவராயலு பிரதிதினமும் விடியிற்காலம் நான்கு மணிக்கு முன் படுக்கையை விட்டெழுந்து அரைப்படி எண்ணெயைக் குடித்துவிட்டும், தமது தாலிம்கானாவில் கஸரத், தண்டால், கர்லா, குஸ்தி முதலானதுகளைச் செய்து தாம் குடித்த எண்ணெயை வேர்வையாக வெளியில்வந்தபிறகு. குதிரையேறி குடிகள் படுக்கையை விட்டெழாததற்கு முன்பே நகரைச் சுற்றி நல்ல சவாரிசெய்து அரண்மனைக்குவந்தும்;பிராமணர்களால்சுத்தஸ்நானம் செய்துக்கொண்டும் சந்தியாவந்தனம்,பூசை முதலானதுகளை முடித்துக்கொண்டும்,தமது கொலு மண்டபத்துக்கு வந்து சர்க்கார்க் காரியங்களை நடத்திவருவது வழக்கம். அந்தக் கிருஷ்ண தேவராயலுக்கு (12) மனைவிகளிருந்தாலும், முக்கியமானவர்கள் துக்காம்பா, அல்லது திருமலா தேவியும், சின்னதேவி அல்லது அன்னபூரணி என்னும் இருவரே பட்டமஹிஷிகளாக இருந்தனர்கள். அவர்களுக்குஇலக்ஷ்மாம்பா அல்லது மங்கைவள்ளி,மோஹனாங்கி, என்னும் இரண்டு குமாரத்திகள்பிறக்க; அவர்களுக்கு சங்கீத முதலான சாஸ்திரங்களைக் கற்பித்தும், சாளுக்கிய குடும்பத்தைச் சார்ந்த விஜ்ஜலராஜன் சந்ததிகளான பெஜவாடா அதிபதிகளாகிய இராமராஜா, திருமலராஜா என்பவர்களுக்கு முறையே விவாஹமும் செய்து அவர்களை ஸமஸ்தான தளகர்த்தர்களாக்கிக் கொண்டார்,

கிருஷ்ணதேவராயலுடைய ஏக புத்திரனை சாளுவதிம்மரசின் குமாரன் மேற்படி திம்மரசினுடையவும் அவர் சகோதரனுடையவும் சதிமோசதந்திரத்தினால் பாஷாணங்கொடுத்துக் கொன்றுவிட, அது சங்கதியை விசாரிக்கும்போது உண்மையாகி,ஸமஸ்தானநீதி பரிபாலகர் அம்மூவரையும் கொலைசெய்துவிட வேண்டுமென்று தீர்மானிக்கவே; திம்மரசு ஸமஸ்தானத்துக்கு இதுவரையில்செய்த பேருதவி முதலானதுகளைக் கருதியும், அக்குலைக்குற்றத்திலிருந்து நீக்கியும் அம்மூவர்களுடைய நேத்திரங்களைப் பிடுங்கிவிடவேண்டுமென்று தீர்மானித்துவிட்டார்கள்.கிருஷ்ணதேவராயலு இவ்விதமாக 21 வருஷம் பிரபலமாக ஆண்டு கடைசியில் சம்பவித்த இந்த விபாகூலத்தினாலும், புத்திரசோகத்தினாலும் தமது 42-ம் வயதாகிய சகாப்தம் 1442-க்கு கி. பி. 1531-ம் வருஷம் நவம்பர் மாதம் 19-ந்தேதி பரமபதமடைய, அவரது சகோதரர் அச்சுததேவராயலு பட்டாபிஷேகம் பெற்றார்.

கிருஷ்ணதேவராயலு பரமபத காலத்தைப்பற்றி பின்வருகிற கவியால் காணலாம்.

ఉ. బోరన యాచకప్రతతి భూరివిపద్దశ నొందుచుండగా। నారయ
శాలివాహన శకాబ్దము లద్రియగాబ్ధి సాములద్దారణ। వత్సరం
బున నిదాఘదినంబున జ్యేష్ఠశుద్ధషష్ఠిరవి వాసరంబున। నృసిం
హునంది కృష్ణుడు చేరెస్వర్గము। ద్వారకనున్న కృష్ణుడపలా
రసమాప్తమునొందుకై వడిన్.

சந்திரவம்ச க்ஷத்திரிய ஆந்திர பலிஜவார்களுக்குள் இந்த கிருஷ்ண தேவராயலைவிட சிறந்தவர்கள் யாரும் கிடையா. இவரே அக்குடும்பத்தின் சிரோ மணியாம்.

## அப்பாஜி-திம்மரசு சரித்திரம்.

திம்மரசு நியோகி பிராம்மணகுலத்திற் பிறந்தவர், சிறு பிராயத்தில் பெற்றோரை இழந்துவிட்டபடியால், திருப்பதிக்குச் சமீபத்தில் ஆடுமாடுகளை மேய்த்து ஜீவனம் செய்தும், பிறகு குந்திக்குப்போய்க் கிழிந்தத் துணிகளைத் தைத்தும், பிறகு சந்திரகிரியில் சுயம்பூகிவேலைசெய்தும், பிறகு பெனுகொண்டாவில் சத்திரங்களுக்குப் பிள்ளையாக அமர்ந்தும், அச்சத்திரக்காரருடைய தாம்பூலப் பையைத் தூக்கிக்கொண்டு கிராம கிராமமாக திரிந்தும், பிறகு தமது இயற்கையறிவினால் புத்திபிரகாசிதராகி சிலபல பெரிய உத்தியோகங்களில் அமர்ந்து கடைசியில் நரபதி ஸமஸ்தானத்தில் மந்திரியானார்:—

அவர் திருப்பதி அடிவாரத்தில் மரத்தடியில் மெய்மறந்து தூங்கச்சே ஒரு நாகப்பாம்பு வந்து படமெடுத்து அவரது தலைமீது அருணன் வெயில் படாதபடி ஆட, அவ்வழிபோன பட்டுமூர்த்தியார் பார்த்து வந்து எழுப்பி இனி கொஞ்சகாலத்தில் நீ பிரபலஸ்திதியை அடைவாய் என்று சொல்லிப்போயினராம். சாளுவ என்றால் அவர் பிறந்த கிராமத்தின் பெயர். ஆகவே அவருக்கு சாளுவ திம்மரசு அப்பாஜு என்று பெயராகியது.

---

# அச்சுத தேவராயலு ஸமஸ்தானம்.

கி. பி. 1530-ளு முதல் 1542-ளு

கியாதிபெற்ற கிருஷ்ணதேவராயலுக்கு வியாதி அதிகரிக்கவே, இனி பிழையோமென்றெண்ணித் தமது சமஸ்தானத்தை நடத்தவேண்டிய விதங்களைப்பற்றி உயில் சாசனத்தைத் தயார் செய்துவைத்தார்.

அதில் தமது 18 மாத வயதுள்ள ஆண் சந்ததியை சாலுவ திம்மராஜனால் பாஷாணமிட்டு கொல்லப்பட்டபடியால், தமது சமஸ்தானத்தைத் தமது தம்பியாகிய அச்சுத தேவராயலுக்குத் தரவேண்டுமென்றும், அவருக்கு உதவியாக மற்றொரு சகோதரராகிய இரங்கதேவராயலும், தமது, தமயனார் குமாரராகிய புஜபலராயலும், தமது மருமகனார்களாகிய திருமலைராயலு, இராமராஜு முதலானவர்கள் உதவி செய்யவேண்டுமென்றும், தெரிவித்திருந்தார். ஆகவே அக்காலத்தில் சந்திரகிரி கோட்டையிலிருந்த அச்சுத தேவராயலை வருவித்து, 1530-ம் வருஷம் ஆகஸ்டுமாதம் 15-ந்தேதி திங்கட்கிழமை தினம் அவருக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டுச் செங்கோலைக் கைகொண்டார். அவர் சிங்காசனமேறி அரசுசெய்துவந்த வைபவத்தைப்பற்றி அக்காலத்தில் அந்த விஜய நகரத்திலிருந்த (Fernao Nuniz) பெர்னோ நூனிஸ் என்னும் போர்த்துகேசிய யாத்திரிகர் அந்தச் சமஸ்தான வைபவத்தை நேரில் பார்த்து சரித்திரமெழுதி இருக்கிறார். அதன் கருத்தாவது:—

இந்த அச்சுத தேவராயலுடைய அரண்மனையில் உபயோகித்துவந்த அண்டாபானை பாத்திராதி தட்டுமுட்டு சாமான்களெல்லாம் பொன் வெள்ளியினால் செய்யப்பட்டிருந்தனவென்றும், அவரும் அவர் மனைவியர்களும் படுத்துக்கொள்ளும் அறைகள் இரும்புத் தகடுச் சுவர்களால் அமைக்கப்பட்டும், அவற்றின்மேல் சித்திராலங்காரவேலைப்பாடுகளுள்ள பொன்தகடுகளால் மூடப்பட்டிருந்தனவென்றும், அவர் படுக்கும் கட்டில்களும், பொன் நவரத்தினங்களாற் அலங்கரிக்கப் பட்டிருந்தனவென்றும், அவருடைய சமயல்வேலைக்கு மாத்திரம் 200 சமய்பாகிகளும், அவர்களுக்கு மேல் விசாரணைசெய்ய 8 கர்த்தர்களும், அச்சுத தேவராயலுடைய சொந்த சாப்பாட்டைமாத்திரம் தயார்செய்ய 10 பெண்டுகளும், அவர்களுக்கு அதிகாரிகளாக ஐந்து மேல் விசாரணைக்காரருமிருந்தார்கள் என்றும், அச்சுதராயலு தங்கத்தகடுகளால் செய்யப்பட்ட முக்காலியின்மேல் சாதம் முதலானதுகளைவைத்து சாப்பிடுவது வழக்கமென்றும், அரண்மனையில் மற்றச் சாதாரண வேலைக்காரர் 600 பெயரும், பெண் வேலைக்காரிகள் 4000 பெயர்களிருந்து சகல காரியங்களைப் பார்த்து வந்தார்களென்றும், அந்த 4000 பெண்களில் சமயல் வேலைச் சங்கீதம் சாஸ்திர முதலானவைகளைக் கற்றுத் தெளிந்தும், அவர்களில் அநேகர் அரண்மனைப்பெண்டுகளுக்குள் நடக்கும் சண்டை சச்சரவுகளை விசாரணை செய்து நீதி செலுத்தியும், தினசரி சரித்திரம் எழுதி வந்தார்களாம்.

மேலும் அரண்மனையின் கோயில் பூஜை புரோஹிதாதி விஷயங்களுக்காக 3000 பிராமணசிப்பந்திகளிருந்தார்களென்றும், இராயலுடைய சொந்த உபயோகத்திற்காக 200 பசுக்களும், 200 குதிரைகளும், 400 யானைகளும் இருந்தனவென்றும், இராயரவர்கள் வெளியில் புறப்படும்போது முதலில் 200 குதிரை வீரர்களும், அவர்களுக்குப்பிறகு 100 யானை வீரர்களும், அவர்களுக்குப் பிறகு 2000 ஆயுத பாணிகளும், அவர்களுக்குப் பிறகு இராயரவர்களும் அவருடைய பட்ட மஹிஷிகளும் பொன் தகடுகளால் மூடப்பட்ட பல்லக்கு

களில் வரவும், அவர்களுக்குப் பிறகு 700 குதிரை வீரர்களும், 400 யானை வீரர்களும், 150 லெய் திவட்டிகளும், பவனிக்கு முன்னும் பின்னும் சுயந்து நகர முறைமையே 18 வாத்திய கோஷங்களுடன் வருவதைப் பார்ப்பவருக்கே ஆச்சரியத்தை உண்டாக்குமென்றும்; அவர்கள் சொந்த யானை குதிரைகளுக்கு மாத்திரம் முறையே 1000, 2000 வராகன் செலவாகிறதென்றும், இந்த ராஜ்யத்துக்கு ரொக்கமாக வரும் வரும்படி 60 லக்ஷம் வராகனென்றும், அதில் 25 லக்ஷம் வராகன் தொகை செலவாகிறதென்றும், அத்தொகையை ஸமஸ்தானத்தைச் சார்ந்த 200 பிரபுக்கள் கொடுத்துக்கொண்டு வந்தார்களென்றும், சமஸ்தானத்தில் 50,000 வேலைக்காரர் கிரமமாக சம்பளம் பெற்று வந்ததன்றியில், சமஸ்தானத்தைப் பாதுகாக்க(6)ஆறு லக்ஷம் சேனைகளும், 30,000–குதிரைகளும், 1,000-யானைகளும், பிரபுக்களால் எப்போதும் தயார் செய்து வைக்கப்பட்டிருந்தனவென்றும், அந்தச் சமஸ்தானத்தில் நவராத்திரிக் கொலுவின் உற்சவ விநோதங்களையும், அக்காலத்தில் பல பிரபுக்கள் வந்து தரிசித்து இராயலு காலை முத்தமிட்டுப் போவதையும், அப்போது குஸ்தி, காடி, சதிர்க்கச்சேரி முதலான வைபவங்கள் நடப்பதைப் பற்றியும் விஸ்தரித்து எழுதியிருக்கின்றனர். சொத்து முதலானதுகளைத் திருட்டுக் கொடுத்து நொந்தவர்களும், மற்ற பிராதுக்காரர்களும், இராயரவர்களைக் கண்டு வணங்கி முறையிட்டால் உடனுக்குடனே விசாரணை செய்தும், அந்த குற்றம் நடந்த விடத்திலிருக்கும் உத்தியோகஸ்தர்களிடம் அந்தச் சொத்துக்குத் தக்கதொருவரை வஜாசெய்து கொடுத்தும், திருடர்களையும், பதிவிரதைகளைக் கெடுப்பவர்களையும் பகிரங்கமாகக் கடைவீதியில் கொண்டுபோய் பலரும் பார்க்கும்படி சிக்ஷித்தும் வந்ததனால், அவர் ஸமஸ்தானத்தில் திருட்டு முதலான குற்றங்கள் நடப்பது அபூர்வமென்றும் எழுதியிருக்கின்றனர்.

இந்த அச்சுததேவராயனுக்கு மந்திரி சாலுவ நாயடு அமர்ந்தார் அன்றியும், அச்சுததேவராயலு தமது ஸமஸ்தானத்தை நாடி இருந்த 200-பிரபுக்களில் அநேகர் அவருடைய பந்துக்களாயிருந்தபடியால், அவர்களுக்கு விவாக வரிசை ஸ்திரீதனமாக சில சமஸ்தானங்களைக் கொடுத்து ஆண்டுவரச் செய்தார். [அவர்களில் தமது மனைவியாகிய திருமலையம்மாளுடைய தங்கை மூர்த்தியம்மாளை விவாகம் செய்துகொண்ட சேவப்ப நாயடுகாருக்கு தஞ்சாவூர், திருச்சி, நாகப்பட்டணம், தேவிப்பட்டணம், திருக்கோயிலூர் முதலான இடங்களை ஸ்ரீதனமாகக் கொடுத்து ஆண்டுவரச்செய்தார். மதுரை, திருநெல்வேலி முதலான பாகங்களைப் பய்யம் நாயடும், விசுவநாத நாயடும் ஆண்டுவரச் செய்தார்.]

கோப்பன்ன நாயடுகாரை ரெய்சூர் முதலான பாகங்களை ஆண்டுவரவும் லக்ஷ்மய்ய நாயடுகாரை தார்வார் முதலான பாகங்களை ஆண்டுவரவும் இநி மாதிரியாக வரதப்ப நாயடு, மல்லப்ப நாயடு, ஆதியப்ப நாயடு, கிருஷ்ணப்ப நாயடு, ராசப்ப நாயடு முதலான அதிகாரிகளை வேலூர், செஞ்சி, சந்திரகிரி உம்மத்தூர், கொண்டவீடு முதலான நாடுகளுக்குத் தலைவர்களாக நியமித்தார். அக்காலத்தில் அவரது சமஸ்தானம் தெற்கே திருநெல்வேலி இலங்கை வரை யில் பிரபலமாக இருந்தது. இருந்துமென்ன? அந்த அச்சுதராயலு, இயற்கை யில் பயங்காளியாகவும், பேடித்தன முடையவராகவும் இருந்ததில், இராஜ்ஜிய பரிபாலனம் இருக்கவேண்டியபடி இருக்கவில்லை. அவர் தமது சமஸ்தானத் தை ஆதரித்து வந்த சில பிரதிநிதிகளை நம்பாமல், அவர்களை அவமானப்படுத்தி வந்தமையால்; அவர்கள் அச்சுததேவராயலை வெறுக்கச்சம்பவித்தது. அதுசந்தர்ப்பத் தை அறிந்த இஸ்மால் அதில் ஷாவும், காசிம் பெரிட் டு என்பவரும் கூட்டாளி களாகி இருவர் சேனைகளை நடத்திக்கொண்டுவந்து, முன் கிருஷ்ணதேவராயலு அதிக கஷ்டப்பட்டுச் சம்பாதித்த ரெய்ச்சூர், முடகல் கோட்டைகளைப் பற்றிக் கொண்டார்கள். அன்றியும் 1534-வருஷம் கோலகொண்டாவிலிருந்த குதப் சாயிபுக்கு விரோதமாக பீஜநகர் நவாபுக்கு அவர் உதவிசெய்தார். அப்படி இந் துக்கள் மகமதியருக்கு உதவி செய்தது இதுதான் முதல் தடவை. அப்படிச செய்ததனால், அந்த இரண்டு மகமது சமஸ்தானத்தார் ஒரே கட்டுப் பாடாகக் கூடிக் கடைசியாக விஜயநகர சமஸ்தானமே நாசமாகச் சம்பவித்தது. ஆயி னும், அந்த அச்சுததேவராயலு ஆண்ட 13 வருஷ காலத்தில் அனேககோயில் கோபுரங்களும் கட்டிடங்களும் கட்டப்பட்டன. 1541-வருஷம் ஜனவரிமாதம் 25-ந்தேதி அச்சுததேவராயலு பரமபதமடைய, அவருடைய வாலிப குமாரனா கிய வெங்கடாத்திரிராயலு பட்டத்துக்கு வந்தார்.

---

# வெங்கடாத்திரிராயலு ஸமஸ்தானம்.

கி. பி. 1542-வருஷ முதல் 1543-வருஷ வரையில்.

அச்சுததேவராயலுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்த அவருடைய குமாரன் வெங்கடாத்திரி சிறுபையனாக இருந்தமையால்; அவர் பேருக்கு மாத்திரம் சக் கிரவர்த்தியாக நியமிக்கப்பட்டு, இராஜாங்க காரியங்களை மந்திரியாகிய சாலுவ திம்மராயலு நடத்திவந்தார். இந்த ஹாசி திம்மராயலு சதாசிவராயலுக்குதாய் மாமனார்(?) அவர் கெட்ட எண்ணத்தினாலும், கெட்ட சாவகாசத்தினாலும், துர் போதனைகளைக் கேட்டு சமஸ்தானத்திலிருந்த பழய உத்தியோகஸ்தர்களை எல் லாரையும நீக்கிவிட்டு, அந்த ஸ்தானங்களுக்குத தம் பந்து மித்திரர்களை நிய மித்தும்; பரிபாலனத்தில் தகாத காரியங்களையும் செய்தும் வந்தமையால்; சமஸ் தானத்திலிருந்த பெரிய பிரபுக்களெல்லாரும் வெளிநாடுகளுக்குப் புறப்பட்டுப்

பில் பெத்த வெங்கடராஜு, சின்ன வெங்கடராஜுக பிறக்க, அவர் மரபில் திருமலைராஜு, வெங்கடராஜா, கோபாலன் தத்து ஸ்ரீரங்கராஜா பிறந்தார்- வெங்கடராஜா மரபில் கோதண்டராமராஜா மரபில்பெத்தவெங்கடராஜா, சின்னவெங்கடராஜா, கோதண்டராமராஜா, வெங்கடராஜ, ஸ்ரீரங்கராஜா, சின்னவெங்கடராயலு பிறந்தார்கள்-இந்த நரபதிகளின் உதவியால் கோனேரி பண்டிதர் பாலபாகவதத்தையும்; பட்டு மூர்த்தி இராமராஜ பூஷணத்தையும்,வசுசரித்திரத்தையும்; சாரதாமூர்த்தி நரசபூபாலியத்தையும், பாடி அங்கிதம் செய்தார்கள்.

நரபதிகளுடைய ஒரு கிளையாராகிய சாலுக்கிய குலத்தைச்சார்ந்த விட்டல் ராயலுடைய தமையனார் திருமலை ராஜாவுக்கு மந்திரியாக விருந்த நாகய்ய பட்டருடைய குமாரராகிய கோனேரி நாதபட்டர் மஹாதெலுங்கு வித்துவான். அவர் நன்னைய பட்டா மஹா பாரதத்தை தெலுங்கில் பாட்டுகளாகச் செய்து விட்ட குறையை, திக்கன்ன சோமயாஜி முடிவு செய்ததையும், பின்னும் அக்காலத்தில் பீமசந்தசைபாடிய பீமகவியையும், பின்னும் பலவித்துவான்களுடைய கவிகளையும் படித்து உற்சாகமாகி; திம்மராஜாவின் புகழைப்பற்றிப் பாடும்படி அவர் குமாரர் திருமலராயலு விரும்பியபடி ,பாலபாகவதத்தைஇயற்றினார். அப்புத்தகத்தின் முகவுரையில தனது பாட்டுகளுடைய தலைவரையும்,அவருடைய முன் சந்ததி விவரத்தையும வெகு திருப்திகரமாகவும், தேவனஹள்ளி முதலான சிலாசனங்களுக்குச் சரியாகவும் எழுதி அரங்கேற்றினார்-அந்த கிரந்த்தினாலும் நரபதி விஜயமென்னும் கிரந்தத்தினாலும்,—

நரபதிகள்,சந்திரவமிச பாண்டவரைச்சார்ந்த அர்ஜுனனுடைய 89வது சந்ததியாகிய நந்தராஜாவினுடைய ஒன்பதாம் சந்ததி சாலுக்கியனென்றும்- அந்த சாளுக்கியனால்,காலசூரிஜாதியை ஸ்தாபித்த விஜ்ஜல விசாலராஜர் கல்வியாண புரியைக் கட்டி ஆண்டார்; அவரை சாலுகிய நாராயணர் அல்லது வேங்கி திருபுவன மல்ல ரென்றும் சொல்வதுண்டு. அவருடைய அரசாக்ஷிபிரபலம் அதிகமாகவே; லிங்காயித்து மதத்தை ஸ்தாபித்த சாதாரண ஸ்திதியிலுள்ள பசுவரைத் தமது பிரதான மந்திரியாகவும், பிரதானியாகவும் நியமித்துக் கொண்டார்

அப்படி அந்த பசுவரை நியமித்துக்கொண்டதற்கு முக்கியகாரணம்;அந்த பசுவருடைய அதிக ரூபலாவணிய முள்ளசகோதரி பத்மாவதி என்னும் பெண்ணின் மேல் மோகப்பட்டு,அவளையே மனைவியாக விவாஹம் செய்துக் கொண்டிருந்தார். அப்படிக்கிருந்தும் யாது காரணத்தைப்பற்றியோ பசுவர்,வாஜதேவமல்லன், மொல்லைய, பொம்மனன் என்பவர்களை ஏவி அந்த விசாலராஜரை கொலை செய்து விட்டதாக சென்ன பசுவபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதாம் (Vide Page 253-Mysore Inscriptions by Mr. L. Rice) அந்த விசாலராஜு [illegible] சோம்மவிராஜனும், அவனுக்கு தாத [illegible], அவனுக்கு [illegible] பிறந்த பிரபலனுள் [illegible]
[illegible]
[illegible] முசலிமெ கங்காயனி தொண்ட [illegible]

மாக்மிக்கொண்டிருந்தன். அவன் குமாரன் இராகவராஜன், பிறகு புக்கராஜா, பின்னும் இப்படியே மேல் காட்டிய வம்சாவளி பிரகாரம் பிறந்த [illegible]கள்

அவர்கள் కళ్యాణపురవ రాధీశ్వర ఆత్రేయగోత్ర, క్షత్రియాచారకుల పవిత్ర[illegible] [illegible]నారాయణ! చాళుక్యచక్రవర్తి, మండలీకరదరగణ్డ వరాహలాంఛన భువనమల్ల, என்ற பிருதுவாக்கியங்களின்படி ஆத்ரேய கோத்திரத்தைச் சார்ந்தவர்கள். அவர்களின் வீட்டின் பெயர் பூசுபட்டிவாரு-இப்படிப்பட்ட விசேஷ குடும்பத்தில் பிறந்தவர்தான் அந்த ராமராஜா. அந்த ராமராஜாவின் ஆதி தாய் தந்தையரைக் கவனிக்கும்போது சாளுக்கியஜாதியாரும், காலசூரி ஜாதியாரும் ஆதி ஆந்திர வம்சத்தைச் சார்ந்தவர்கள் என்று ஸ்பஷ்டமாகிறது. அந்த ராமராஜா முதலில் கோலகுண்ட குதுப்ஷாயின் தளகர்த்தராக இருந்து, கர்னூலில் பெரிய ஜாகீரைப் பெற்றிருந்தார்.

அவருடைய வீரதீரத்தை அறிந்த கிருஷ்ணதேவராயலு அந்த ராமராஜாவுக்கு தமது குமாரத்தி இலக்ஷ்மீதேவி என்னும் மோஹநாங்கியை விவாஹம் செய்வித்து தமது சேனைக்குத் தலைவராக்கிக் கொண்டார். அப்படி விவாஹம் செய்துகொண்டதற்காக அதோனி கோட்டையை ஸ்திரீதனமாகப் பெற்றார். அந்த ராமராஜா செங்கோல் செலுத்திய இரண்டு வருஷங்களுக்குள் சமஸ்தானத்திற்குத் தமது பந்துமித்திரர்களை உத்தியோகஸ்தர்களாக நியமித்தும், தமது சகோதரனை திருமலராயலைச் சமஸ்தானத்தின் சிவில் விவகாரங்களை விசாரித்து நீதி செலுத்தவும்; மற்றோர் சகோதரனாகிய வேங்கடாத்திரியைச் சேனாதிபதியாகவும் நியமித்து 23 வருஷங்கள் கம்பீரமாக அரசுசெய்துவந்தார்.

கிருஷ்ணதேவராயலு காலத்தில் ஆரம்பித்த பெரிய வாய்க்கால் வேலைகள் அந்த ராமராஜாகாலத்தில தான் முடிவு பெற்றன. தம்மை அடுத்த மகம்மது பிரபுக்களுக்கு அடைக்கலம் தந்து, அவர்களை விஜயநகரத்தில் வீடுகளையும், மசூதிகளும் கட்டிக் கொள்ள இடங்கொடுத்து ஆதரித்தார். அப்படி வந்த மகம்மதிய பிரபுக்களும் ராமராஜாவும் விஜயநகரத்தில் அநேக பெரிய கட்டிடங்களையும் கோயில் கோபுரங்களையும் கட்டிவைத்ததுடன்; அநேக வாய்க்கால்களை பாசனத்துக்காகத் திருப்பியபடியால்; நாட்டிலுள்ள பிரபுக்கள் அனேக நந்தவனங்களையும், பழம் தரும் செடிகளையும் வைத்துப் பயிர் செய்தார்கள். சமஸ்தானத்தில் சிற்ப சாஸ்திரப் பயிற்சியும், கல்வி ஞானமும் விருத்தியாகின, அவருடைய மதுரை, தஞ்சை முதலான சமஸ்தானங்களை ஆண்டுவந்த பிரதிநிதிகளாகிய நாயக்கமார்களும் சித்திர விநோத அரண்மனைக் கட்டிடங்களைக் கட்ட ஆரம்பித்தார்கள்.

அப்போது சமஸ்தானத்தில் யாதொரு கலகமும், சண்டைச்சச்சரவுமின்றி [illegible] இருந்தது. அப்படிப்பட்ட காலத்தில் [illegible] [illegible] சக்காரவருண்டாகவே, [illegible] [illegible] [illegible]

பிடித்துக்கொண்டார். அந்த ராமராஜர் காலத்தில் பீஜப்பூரை இப்ராஹிம் அதில்ஷா என்பவர் தமது மகா திறமை பெல்காம் அசதகான் என்பவருடைய உதவியால் ஆண்டுவந்தார். பரான் நிஜாம்ஷா, அகமது நகரை ஆண்டுவந்தார். குதுப்ஷா கோல்குண்டாவை ஆண்டுவந்தார். பிரிடிசா என்னும் பீடரின் பிரதான பட்டணத்தை அமீர்பிரத்து என்பவரும் ஆண்டுவர; அதைப்பீஜப்பூர் அகமது நகர், கோல்கொண்டா அதிபதிகள் அடிக்கடி சண்டைசெய்து பிடித்துக் கொள்ளவேந்தார்கள்.

கிருஷ்ணதேவராயனுக்குப் பிறகு குதப்ஷா விஜயநகரத்தைச் சார்ந்த சில கோட்டைகளைப் பிடித்துக்கொண்டமையால, அக்கோட்டைகளை மறுபடியும பிடிக்கவேண்டுமென்று இராமராஜா சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்.

இப்படிப்பட்ட காலத்தில் பரான நிஜாம சாயபுக்கும், இபிராஹிம் அதில் சாயபுக்கும் சண்டை ஆரமபிக்க, புரான சாயபுக்கு கோலகுண்ட குதுபசாயபு உதவிசெய்ய; இராமராஜா, இபிராஹிம அதில் சாயிபுக்கு உதவியாக நின்று பீஜப்பூர்மேல் படை எடுத்துச்சென்றார். அந்தச் சண்டையில் குத்பிசாயிபுக்கு அபாயகரமான காயம் சம்பவித்து இறந்தபடியால்; அப்பட்டத்திற்கு ஜமஷ்ஷீன் பட்டாபிஷேகம பெற்றார். அப்படிப்பட்டத்தை கட்டிக்கொண்டதை அவர் சகோதரர் 'இப்ராஹீம்' விரோதித்து சண்டைசெயய காரியசித்திபெறாமையால விஜயநகர சமஸ்தானத்தாரிடம அபயங்கேவர, அங்கு இராமராஜா அவரை மரியாதையுடன வரவழைத்து தகக இடங்கொடுத்து ஆதரித்து வந்தார்

இராமராஜா 1557-ம வருஷம போர்த்துக்கேய பிரதிநிதியாகிய (Don-Jaro-da-Castro) டாம-ஜாவோட-காஸ்டரோ என்பவருடன் ஓர் விசேஷ சம்ரதான உடன்படிக்கையில்; அரேபியா, பாரசிக தேசங்களிலிருந்து போர்த்துக்கேயருக்கு வரும் குதிரைகளை இனிமேல் பீஜப்பூருக்கு அனுப்பாமல், நேராய் விஜயநகரத்துக்கே அனுப்பவேண்டுமென்றும், பான்கூர் நார்வாரிலிருந்து ஏற்றுமதியாகும் தானியங்களையெல்லாம் விஜயநகர மூலியமாக போர்த்துக்கேயருடைய கோட்டைகளாகிய பாண்டா, ஹோனவோர் அன்கோலா இடங்களுக்கு அனுப்பித்தரவேண்டுமென்றும், நாட்டில் உண்டாகும் துணிகள் போர்த்துக்கேயருடைய தொழிற் சாலைகளுக்கு அனுப்பப் பட்டு அவைகளுக்குப் பதிலாக செம்பு, தகரம், பவளம், பாதரசம், சாதிலிங்கம் முதலான சரக்குகளும், போர்த்துக்கேயரால் சீனாவிலிருந்து தருவிக்கும் பட்டுத்துணி முதலானதும் மாற்றுதல் செய்யப்படவேண்டுமென்றும், விஜயநகரத்தாரும் போர்த்துக்கேயரும் கூடி பீஜப்பூர் மகமதியருடன் சண்டைசெய்து விஜய நகர் கரையோரமாக ஓடும் மகமதியருடைய கப்பல்களைப்பிடித்தும் போர்த்துக் [illegible], அந்தக் கரையோரத் [illegible] மத்தி [illegible] தலைமையையும், [illegible] [illegible]

கைங்களை விஜயநகரத்தார் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்றும், தீர்மானிக்கப்பட்டிருந்தது.

1550-ம் வருஷம் கோல்குண்டா ஜம்ஸித் குதுபிசாயப் இறந்து விட்டபடியால், ஜம்ஸித்குதுபிசாயபு அப்பட்டத்தைப் பெற்றார். அவர் அப்பட்டத்திற்கு வந்தது கோலகுண்ட மகமது பிரபுக்களுக்கு இஷ்டமில்லாமையால்; விஜயநகரத்தில் அடைக்கலம் பெற்றிருந்த சரியான வார்சுதாரராகிய இப்ராஹிம் குதுபிசாயபைப் பட்டத்தைப் பெற்றுக்கொள்ளும்படி செய்யவேண்டுமென்று இராமராஜாவைவேண்ட, அந்த ராமராஜாவும் பெரும்பான்மையான கோலகுண்ட மகமது பிரபுக்களுடைய வேண்டுகோளின்படி இப்ராஹீம் குத்பீ சாயபவர்களுக்கு வேண்டிய தண்டுதளாதிகளைக் கொடுத்தனுப்பி கோலகுண்ட அரசனாக சிங்காசனமேற்றினார்.

அப்போது அசத்கான் சாயபு இறந்து விட்டபடியால், பீஜப்பூரின் பேரின் புரான் நைஜாம் சாயபை வடபாகமாகப் படை எடுத்து வரும்படித் தூண்ட, அவரும் அப்படியே வந்து சோளப்பூர், பெராண்டாகோட்டைகளைப் பிடித்துக் கொள்ள, இராமராஜா ராயசனர், மகேல் கோட்டைகளை மறுபடியும் பிடித்துக் கொண்டார்.

1553-வருஷம் மறுபடியும் பீஜப்பூரைப் பற்றிச் சண்டையுண்டாக, இராமராஜாவும், புரான் நைஜாம்சாவும் படை எடுத்துச் சென்றார்கள். புரான் சாயபு அந்தச் சண்டையில் இறந்துபோக, அப்பட்டத்திற்கு உசேன் நைஜாம் சாயபு வந்தார். அதன்மேல் இராமராஜா பீஜப்பூராருடன் சிநேகிதராகி அகமத்பாத்தோடு சண்டைசெய்தார். அதை அறிந்து இப்ராஹீம் அதில்ஷா மறுபடியும் சோளப்பூர் கோட்டையைப் பிடிக்க விரும்பி இராமராஜாவின் தயவை நாட; அவரும் உதவிசெய்ய, சண்டைநடக்க; நிஜாமின் தளகர்த்தர், உசேனும் கைசபன்மலிக் என்பவர்கள் இப்ராஹீம் கக்ஷியைச் சார்ந்து சதிமோசம்செய்து, பீஜப்பூரையே இழந்து விடும்படி செய்து வருவதை இராமராஜாவின் தம்பி வெங்கடாத்திரி கண்டு சைபின்யலீகைத் தோற்கடித்து அந்த அபாயத்தை நீக்கினார்.

இப்ராஹீம் அதில்ஷா 1557-வருஷம் இறந்துபோக, அப்பட்டத்திற்கு அலி அதில்ஷா வந்து முதலில் இராமராஜர்வின் சிநேஹம் பாராட்ட, விஜயநகரத்துக்கு நேராகப்போக, இராமராஜாவும் அவருக்குத் தக்கமரியாதைகளைச்செய்து தம்மாலான உதவிசெய்வதாக வாக்களித்தார். அதை அறிந்த உசேன் நிஜாம் சாயபு, கோலகுண்ட இப்ராஹீம் குதுபி சாயபின் உதவியையும், பீஜப்பூராருடைய விரையும் நாடி இம்மூன்று சமஸ்தானத்தின் சேனைகள் அகமத் நகரத்தின் மேல் படையெடுக்க, கல்பர்க்காவில் கூடிற்று. அப்போது அம்மூன்று சமஸ்தானத்தின் சேனையில் 900,000 பதாதிகளும், 100,000 குதிரைபட்டாளத்தாரும் இருந்து அகமத் நகருக்கு முற்றுகைப்போட்டார்கள்.

உசேன் நிஜாம்ஷா, மைடன்புரிக்கு ஓடினார். இப்ராஹீம் குதுபிசாயபு இரகசியமாகப் பகையாளிக்கு உதவிசெய்ய; இராமராஜாவும் அலிசாயபும் வெகு கம்பீரமாகத் தாக்கி அடித்தார்கள். அதை அறிந்த இப்ராஹீம் சாயபு இராமராஜா இனிச் சண்டைசெய்யாதிருந்தால், கொண்டபள்ளி ஜில்லாவை லஞ்சமாகக் கொடுப்பதாகச் சொல்லி ஆசைகாட்டியும், இராமராஜா ஒத்துக் கொள்ளவில்லை. அதன்மேல் இப்ராஹீம் சாயபு பயந்து சண்டையை நிறுத்தியும், உசேன் சாயபை இராமராஜா அலிசாயபவர்களிடம் சமாதானம்செய்ய அனுப்பினார். அந்தச் சமாதானத்தினால் கலியாணி நாட்டைப் பீஜப்பூருக்குக் கொடுத்து விடுவதாகவும், இராமராஜா தக்ஷணத்திலுள்ள மகமதியர் அரசர்களுக்கெல்லாம் தலைவராகக் கொண்டாடி வரவேண்டுமென்றும், கண்டிருந்தது. அந்த ஏற்பாட்டுக்கு முதலில் உசேன் நிஜாம் சாயபு விதியின்றிச் சம்மதித்துக் கொண்டாலும்; அந்த அவமானத்தை நெடுநாள் கொண்டிருக்கச் சகியாமல், அகமத் நகரத்தின் கோட்டையைப் பலப்படுத்தியும், இப்ராஹீம் குதிபு சாயபுக்குத் தனது குமாரத்தியை விவாஹம் செய்துகொடுத்து வசமாக்கியும், வேண்டிய ஆயுதாதிகளைத் தயார்செய்து வைத்துக்கொண்டும், 1563 - ஆம் சண்டைக்காரம்பித்து இப்ராஹீமும், உசேனும் கூடி கலியாணிகோட்டைக்கு முற்றுகைபோட்டார்கள்.

இராமராஜா இந்தச் சண்டையில் குதுபிசாயிபைச் சேர்க்காமல், கோலகுண்டாவுக்கு ஒரு பெரிய சேனைக்கூட்டத்தை யனுப்பி, தாம் பீஜப்பூர் சேனையோடு கலந்து சண்டைசெய்ய, உசேன்சாயபும இப்ராஹீம சாயபும கலியாணிக்கு அருகில் தோல்வியடைய, விஜயநகர் பீஜப்பூர் சேனைகள் அகமத் நகரைநாடிச் சென்று முற்றுகைப்போட, உசேன் நிஜாம்ஷா ஜூனுருக்கு ஓடிப்போக; அவரை இராமராஜா துரத்திக்கொண்டே போயினர். உசேன் சாயபு ஓடிப்போய் மலைத்தாக்குகளில் மறைந்துகொள்ள, இராமராஜா அகமத் நகரத்துக்கே திரும்பினார். அங்கு சீனப்நதிக்கரையில் பட்டாளம் தங்கியிருந்தபோது ஆயிரம் கணக்கான சேனைகளும், சாமான்களும் ஆற்றுவெள்ளம் வாரிக் கொண்டுபோய்விட்டது. இச்சண்டையில் இராமராஜா செய்த உதவிக்காக அலிசாயபு, பாகல்கோட்டை, யாதவகிரி கோட்டைகளை இனாமாகக் கொடுத்தார். அப்போது இராமராஜாவின் தம்பி வெங்கடாத்திரி கோலகுண்டாவைத் தாக்கி அடிக்க, அவருடைய மருமகன் திம்மராஜூ தேவகொண்டாவில் சண்டைசெய்ய, இப்ராஹீம் குதுபிசாயபு குண்டூர், காணபுரம், பங்கல் முதலான கோட்டைகளை இராம ராஜாவுக்குத் தந்து ராஜிசெய்துகொண்டார். அக்காலத்தில் இராமராஜாவின் அதிகாரம் எங்கும்பரவிவர, மகமதிய மன்னர்களெல்லாரும் அவர் உத்தரவின்படி நடக்கச் சம்பவித்தது. அப்போது ராமராஜாவே தக்ஷண இந்தியாவுக்கு ஒப்பும் உயர்வுமற்ற சக்கிரவர்த்தியாக விளங்கினார்.

# தலைக்கோட்டையில் நடந்த பயங்கரமான சண்டை.

அந்த இராமராஜாவின் பிரபல பிரபுத்துவத்தைக்கண்டு பொறாமையினால் சகியாத மகமதியர்கள் யாவரும் ஒரேகட்டுப்பாடாகச் சேர்ந்து விஜயநகர சமஸ்தானத்தை இனி தலை எடுக்காமல் தாக்க வேண்டுமென்று தினேதினே சதிமோசங்கள் செய்துகொண்டே வந்தார்கள். அதற்காக முதலில் உசேன் நிஜாம் சாயபு ஓர் யுக்திசெய்து பீடர், கோல்குண்டா, பீஜப்பூர் மன்னர்களை தம்முடன் சேரும்படிக்கும்; அந்தக் கட்டுப்பாடு கெடாதபடி தமது குமாரத்தி சந்திபீபீ என்னும் பெண்ணை அலி அதில்ஷாவுக்கு விவாஹம் செய்துகொடுத்தும்; சோளப்பூரையும் பீஜப்பூரையும் ஸ்ரீதனமாகக் கொடுத்தும் ஆசைகாட்டியதில்; அல்விசாயபும் தமது சகோதரியை உசேன் சாயபுக்கு விவாஹம் செய்வித்தும். இப்படி பீஜப்பூர், கோல்குண்டாவைச் சம்பந்தப்படுத்தியும்; பின்னும் இராமராஜாவை ஜயிப்பதற்கு வேண்டிய சகல காரியங்களையும் தந்திரமாகவும், அந்தரங்கமாகவும் செய்து முடித்து சண்டைக்குத் தயாராக இருக்கையில்; இராமராஜா இத்யாதி காரியங்களைக் கவனியாமலும், தக்க மந்திரி முதலானவர்களுடன் கலந்து பேசாமலும், தமக்கு அப்போதிருந்த பெருஞ் சேனையையும், திரவியத்தையும் பிரபலப் பெயரையும் கருதிச் சண்டைக்குச் சித்தமாக இருப்பதாகத் தெரிவித்தும், கிருஷ்ணாநதிக்குத் தென்பாகத்திலிருக்கும் தானூருக்கு அருகில் தன் சேனையை அனுப்பினார்.

அந்தச் சண்டை பயங்கரமான பெரிய சண்டை. தக்ஷணத்திலிருந்த மகமதியமன்னர்கள் யாவரும் ஒரே கட்டுப் பாடாகி விஜயநகரத்தைப் பாழ்த்துப்போக நெடுங்காலம் யோசித்து செய்துவந்த சதிமோசச் சண்டையாகையால்; மகமதிய மன்னர்கள் எல்லோருடைய சேனைகளும் ஏககாலத்தில் ஒரே மனதாகித் திரண்டுத் தயாராக நின்றிருந்தன. அந்தச் சண்டைக்கு இராமராஜாவின் சேனைப் பலத்தைப் பற்றி பலர் பலவிதமாக மதிப்பிட்டாலும்; மகமதிய சரித்திரக் காரராகிய பெரிஷ்டா (Ferishta) கணக்கின்படி அப்போது இராமராஜா சேனையில் 9,00,,000 ஒன்பது லட்சம் பதாதிகளும், அவர்களுக்கு உணவு முதலானதுகளைத்தந்து உதவிசெய்ய 1,500 சேவகர்களும், வேலைக்காரர்களும், 60.000 குதிரைகளும், 2,000 யானைகளும், 1000 பிரங்கிகளும், அநேகத் துப்பாக்கிகளும் இருந்தனவாக எழுதி இருக்கிறார்; அப்படிப் பெருத்திருந்த பட்டாளத்தை மூன்று பிரிவுகளாக் வகுத்து, ஒரு பிரிவைத் தனது தம்பி வெங்கடாத்திரி அதிகாரத்துக்குள்ளும்; மற்றொரு பிரிவை மற்றொரு தம்பியாகிய திருமலைராயலு அதிகாரத்துக்குள்ளும்; மீதி இருந்த பிரிவைத் தமது அதிகாரத்துக்குளளும் வைத்து தாமே உயுத்தத்துக்கு நேராகப் புறப்பட்டார். அப்போது அவருக்கு வயது 96-ஆனதுபற்றியும், வேறு காரணங்களைக் கருதியும், அவரை நேராக உயுத்தத்துக்குப் போகக் கூடாதென்று பலர் தடுத்தும், யார் வார்த்தையையும் கேளாமல் "செத்தால் சமர்களத்தில் செத்து வீரசொர்க்கத்

தை அடைவேனே யொழிய, அரிசையரைப்போல் அரண்மனையில தங்கனெ னனச் சொல்லிவிட்டு சுமார் 30-வயது வீரனைப்போல் உயுத்தத்துக்கென்று தயார் செய்யப்பட்ட பட்டு, மஹமல், தங்கம், முத்துகளால் அலங்கரித்திருந்த சிங்காரமான பல்லக்கில் ஏறிப்போய் அச்சண்டையில் அதிக வீரதீரத்தோடு சண்டை செய்பவர்களுக்கு அந்த யுத்தகளத்தில் வீரசங்கிலி, வைரகங்கணம் முதலான விருது தோடாக்களைப் போட்டும், திரவியங்களைக் கொடுத்தும், உற்சாகப்படுத்த வேண்டிய ஆபரணங்கள் முதலானவைகளை தம்பல்லக்கிலே வைத்துக்கொண்டும் மஹா வீரதீரத்துடன் 1565-வருஷம் ஜனவரி மாதம் 23-தேதி செவ்வாய்க்கிழமை சண்டைசெய்ய, முதலில் அவருக் கனுகூலமாகவே ஜெயம் கிடைத்தது.

கிடைத்தாலுமென்ன? அவருடைய சேனைகள் முதலில் ஜெயித்த அகங்காரத்தினால் தலைதெரியாமல் குதித்து கொக்கரித்து கொண்டாடும்போது, மகமதியருடைய சேனையிலிருந்த இரண்டொரு யானைகள் மிரண்டோ அல்லது மூர்க்கத்தனத்தினாலோ பயந்து பாகனுக்கு அடங்காமல் எதிரிலகப்படும் மனுஷர் முதலானவர்களைச் சின்ன பின்னமாக மிதித்துக் கிழித்து கொள்ளையாடி வரவே; இராமராஜாவைச் சுமந்து கொண்டிருந்த போயிகளும் பயந்து தமது இராஜ சிம்மாசனப் பல்லக்கைக் கீழே வைத்துவிட்டு ஓட, அதைக்கண்ட மற்ற சேனைகள் ஓ! ஓ! இராமராஜாவைக் காணோம், மகமதியர்க் கையில் அகப்பட்டு விட்டார் என்று மதிமயங்கி, நாலாபக்கத்திலோட; இத்தியாதி கலவரங்களைக் கவனித்துக்கொண்டிருந்த மகமதியர் சேனைகளில் 5000-குதிரை வீரர் ஓடிவந்து வளைந்து இராமராஜாவைப் பிடித்து சிரச்சேதம் செய்து அவர் தலையை அகமதாபாத்துக்குக் கொண்டுபோய் விட்டார்கள். இராமராஜாவின் பிரதாபத்தையும், வீரதீரத்தையும், விருத்த வயதையும், பரோபகாரகுணங்களையும், அறிந்திருந்த பெரும்பான்மையான மகமதிய மன்னர்கள் அவரைச் சிரச்சேதம் செய்ததைக்கண்டு சங்கடப்பட்டு வருந்தினாலும்; காரியம் முடிந்த பிறகு என்ன யோசனைசெய்தாலும் பிரயோஜனமென்ன? இராமராஜா மகமதியர்கையிலகப் பட்டுச் சாவதற்கு அவரிட உத்தியோகத்திலிருந்த சில மகமதியர்களுடைய சதிமோசத்தினாலென்றும், அந்த இராமராஜா மகமதியர் கையில் சிக்கி அவமானப்படுவதைப் பார்க்கிலும் வீரசொற்கமடைவது சுகிர்தமென்று எண்ணி தன் தலையை வெட்டிக் கொள்ளும்படி தானே வலியக் கேட்டுக் கொண்டதன்மேல் வெட்டப்பட்டதாகவும், கர்னூல் மானுயூல் சரித்திர புத்தகம் 26-வது பக்கத்தில எழுதப்பட்டிருக்கிறது.

இராமராஜா அந்த தலைக்கோட்டைச் சண்டைக்குத் தாமே நேராகப் போகாமலும், தமது தம்பிமார்களையும் வேறுதளகர்த்தர்களையும் அனுப்பிச் சண்டை செய்திருந்தாலும், அல்லது அப்படி மகமதியர்கள் யாவரும் ஒரே சேனையாகத் திரண்டுவரும் கட்டுபாட்டை யறிந்து கொஞ்சம் காலதாமதம் செய்தாகிலும், தக்கபடி யோசனை செய்திருந்தால்; அவர் பிராணனுக்கும் கஷ்டமுண்டாயிராது. விஜயநகரமும் பாழத்துப்போயிராது. அவருக்கு அப்போது 96 வயதாகிய

தால்புத்திச்சுவாதினை மற்று அப்படிச் செய்தார்போலும். கிருஷ்ண தேவராயலுக்குப் பிறகு வில்வித்தையிலும் மல்லஉயுத்தத்திலும் சிறந்தவீரன் அந்த இராமராஜாவே. அவர் ஆண்ட 22வருஷ காலத்தில் சமஸ்தானத்தில் கல்வி ஞானம் தருமம்முதலானவைகளைவிருத்தியாக்கியும், குடித்தனக்காரருக்குவேண்டியபாசனவசதிகளையும், வர்த்தகவியாபாரம், கைத்தொழில், சிற்ப விஞ்ஞானங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வித்தும்; அனேக குளங்கள், கோயில் கோபுரங்களையும் அக்கிரஹாரங்களையும் கட்டுவித்தும்; தக்ஷண நாட்டில் தமக்கு ஒப்பும் உயர்வுமற்ற இராஜராஜாதிபதியாக பிரகாசித்து வந்தார். இப்போது ஹம்பியிலிருக்கும் ஹஜாரி இராமசுவாமி கோயிலைக் கட்டிவைத்தவர் அவரே.

அப்படிப்பட்ட சுத்தவீரன் யுத்த களத்தில் போகவே, அவருடைய தம்பிமார்களாகிய வெங்கடாத்திரியும், திருமலைராயலும் தமக்குப் போதுமான சேனையின் உதவி இல்லாததை அறிந்து, அநந்தபூர் ஜில்லாவைச் சேர்ந்த பெனுகொண்டாவுக்குப் போய்விட்டார்கள். விஜயநகரம் மகமதியர்கள் கையில் அகப்பட்டுப் பாழ்த்துபோமென்று எச்சரிக்கையாக இருந்த விஜயநகரப் பிரபுக்களும், மற்றக குடிகளும், அரண் மனையிலிருந்த உத்தியோகஸ்தர்களும் அதிக விலையுயர்ந்த ராஜ சிங்காசனம், ஆடையாபரணங்களையும், பெண்டு பிள்ளைகளையும் 1550-யானைகளின்மேலேற்றிக்கொண்டு நாலாபக்கங்களிலுமுள்ள மலை நாடுகளில் போய்த் தங்கிக் கொண்டார்கள். பிறகு மகமதியர் சேனைகள் விஜயநகரத்துக்குள் பிரவேசித்து வீடுவாசல், விக்கிரகம், கோயில் கோபுரங்களை எல்லாம் பாழாக்கிய அக்கிரம அநியாயங்களை இப்போதும் அங்குப் பார்க்கலாம். அப்படிப் பாழாக்கிய பட்டணத்தில் 3-மகமதிய மன்னர்களும் வந்து ஐந்து மாதகாலமாகத் தங்கி, எந்தெந்தச்சொத்தைச் எந்தெந்த மன்னர் அனுபவிக்கிறதென்று யோசித்ததில்; ஒருவர் அபிப்பிராயம் ஒருவருக்குட் பொருந்தாமல், மனஸ்தாபங்களும் சண்டை சச்சரவுகளு முண்டாகிக் கடைசியாக விஜயநகரத்தை இராமராஜா சந்ததிகளிடமே விட்டு விட்டு வடக்கே தமது நாடுகளுக்கே போய் விட்டார்கள். உசேன நிஜாம் ஷா அகமத் நகரத்துக்குப் போனதும் இறந்தார்.

1566-ம் வருஷம் அலி அதில்ஷா பெனுகொண்டாவிலிருந்த வெங்கடாத்திரிக்கு விரோதமாக ஒரு சேனையையனுப்ப, வெங்கடாத்திரி கோலகுண்டா, பெனுகுண்ட, நவாப்புகளுடன் சமாதான உடன்படிக்கைகள் செய்துக் கொண்டதில், அவர்கள் சேனைகள் பீஜப்பூர்மேல் படையெடுக்க, அலி அதில் ஷா பயந்து திரும்பிவிட்டார்.

1568-ம் வருஷம் அந்த திருமலை ராயலு விஜயநகரத்துக்கு வந்து அதைப் பழையபடி பிரபலமாக்க முயன்றும் முடியவில்லை. 1568ஆம் அந்த திருமலைராயலு உண்மையானவாரசாகிய பழய சதாசிவராயலைக் கொன்றுவிட்டு தானே பட்டம் சூட்டிக் கொண்டு 8 வருஷம் ஆண்டதாக ஒரு சாசனத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

அந்தக்காலத்தில் விஜயநகரத்தை வந்து பார்த்த ஐரோப்பா வர்த்தகராகிய (Ceasar, Frederick) சீஸர், பெயிடரிக் என்பவர் விஜயநகரம் குடியில்லாமல காலியாகவிருக்கினும்; அங்கு இன்னும் அநேக மாடமாளிகைகளிருக்கின்றன வென்றும், அவைகளில் புலி முதலான காட்டு மிருகங்கள் சஞ்சரிக்கின்றன வென்றும், கோயில் கோபுரங்கள் பலமான கட்டிடங்கள் என்றும், அதன் அரண்மனை எட்டுச்சுவர்களால் சூழப்பட்ட இணையில்லாக் கட்டிடமென்றும், அது தக்க வீரர்களால் காக்கப்பட்டு வருகிறதென்றும், எழுதினர்.

1568-ம் வருஷம் அலி அதில் ஷாவானவர் இராமராஜா தமயன் குமாரரிடமிருந்த அதோனிகோட்டையையும், 1573-வருஷம் பாதாமி, தோர்கல் கோட்டைகளையும்; 1574-வருஷம் தார்வாரையும், பிறகு பான்காபுரத்தையும் பிடித்துக்கொள்ளப் போக, அப்போது அங்கு பிரதிநிதியாகவிருந்த வேலப்ப நாயடு சுமார் ஒன்றரை வருஷ காலமாகத் தடுத்தும முடியாமல், அதில்ஷா ஜயித்து அங்கிருந்த இந்துமத கோயிலை இடித்து அந்த அஸ்திவாரத்தின்மீதில் மசூதி கட்டிவிட்டும், கொங்கணத்திலும் ஜயம் பெற்று மூன்று வருஷத்துக்குள் பெல்லமுகொண்டாவையும் பிடித்துக்கொண்டார். பிறகு துங்கபத்திரா வுக்குத் தெற்கே இருந்த நாடுகளைத் திருமலைராயலு ஆண்டுவந்தார். அக்காலத்தில் பெயருக்கு மாத்திரம் சக்கிரவர்த்தியாக விருந்த சதாசிவராயலைத் திருமலை ராயலு கொன்று விட்டதாக பெடெரிக் என்பவர் எழுதி இருக்கிறார்.

சதாசிவராயலோடு விஜயநகர சமஸ்தானமே முடிவுபெற்றதென்று சொல்லும்படி யாகிவிட்டது. ஏனெனில் அப்போது அவர்களுக்கு மேற்கே இருந்த நகரங்களும், மைசூரின் வடபாகங்களும் அந்தப்பாகங்களை ஆண்டுவந்த அரசர்களும் சுதந்திரராகிச்சுவாதீனமாக்கிக்கொண்டார்கள். திருமலைராயலுடைய முயற்சியினால் சாதாரணமாக ஸ்தாபிக்க முயன்ற குடும்பமும் எதிர்பார்த்தபடி பிரபலமாகவில்லை. அவர் குமாரர் ஸ்ரீரங்கராயலு 1573 முதல் 1585 வருஷம் வரையில் அரசனாக ஆண்டுவந்தாலும், 1579 வருஷம் அலி அதில் ஷா மறுபடியும் பெனுகொண்டாவின்மேல் படை எடுத்து வந்து முடியாமையால் பெனுகொண்டாவைப் பிடிக்காமல் பீஜப்பூருக்குப்போக, அங்கு அவரை மகமதியர் 1580 வருஷம் சதிமோசமாகக் கொலைசெய்துவிட்டார்கள். பிறகு ஸ்ரீரங்கராயலு சந்திரகிரிகோட்டைக்கு வந்து 14-வருடம் ஆண்டு 1585 வருஷம் இறந்தார். அவருக்குப்பிறகு

---

# வெங்கடபதிராயலு ஸமஸ்தானம்.

1586-ம் வருஷம் முதல் 1614-வது வருஷம் வரையில்.

ஸ்ரீரங்கராயலுக்குப் பிறகு அவர் சகோதிரர் வெங்கடபதிராயலு சந்திரகிரி சமஸ்தானபதியானார். அவரும் ஓர் வீரதீரரானபடியினால், 28-வருஷம் ஆண்டு

தமது செஞ்சிகோட்டைக்கு கிருஷ்ணப்ப நாயடுவையும், மதுரைக்கு குமார கிருஷ்ணப்ப நாயடையும், சென்னைக்கு ஜகதேவராயலையும், ஸ்ரீரங்கபாடினத் திற்கு திருமலைராயலையும், இதேமாதிரியாக தஞ்சை பெனுகொண்டா முதலான விடங்களுக்கு பிரதிநிதிகளை நியமித்து ஆண்டுவரும்படி செய்வித்தும்; கிருஷ்ணா நதிக்குத் தெற்கே இருக்கும் மகமது குத்ப்ஷா நாடுகளை ஐயிக்கமுயன்று 1593-முதல் 1599-வருஷம்வரையில் சண்டைசெய்து ஜயித்தார். அவருக்குப்பிறகு 1614ஞு முதல் 1636 வருஷம்வரையில் அந்த மூன்றும் சந்ததியில் பெத்தவெங் கடராயலு, சின்னவெங்கடராயலு, இரங்கராயலுமுதலான ஐந்து அரசர்கள் ஆண்டார்கள். 1610-ம் வருஷம்வரையில் விஜயநகரப் பிரதிநிதி மைசூர்நாட்டையும், 1650-ம்வருஷம் வரையில் இக்கரை அல்லது பெத்தனூர் பிரதிநிதிகள் ஆண்டுவர, வடதேசத்தில் மொகல் சக்கரவர்த்திகள் பிரபலராகி தக்ஷண தேச மகமதியர்களை அடக்கிக் கீழ்ப்படுத்தினார்கள்.

1673-ம் வருஷம் மஹாராஷ்டிர தலைவரான சிவாஜியின் தந்தை சாஹாஜி போஷ்லே வந்து கொங்கண நாடுகளையும், பிறகு கர்னூல், செஞ்சி, வேலூர் முதலான கோட்டைகளையும் பிடித்துக்கொண்டார். 1639-ம் வருஷம் ஸ்ரீரங்கராயலு விஜயநகர சமஸ்தானபதியாக இருக்கும்போது, ஈஸ்ட் இந்தியா கம்பெனி தலைவரான மிஸ்டர் டே (Mr. Day) என்பவர் சென்னையில் போர்ட் சென்ட் ஜார்ஜ் கோட்டையைக் கட்டிக்கொள்ள ஒரு மைல் அகலமும், 5 மைல் நீளமுமுள்ள இடத்தைக் கேட்க; அந்த ஸ்ரீரங்கராயலும் தமது பெயரால் ஸ்ரீரங்கராயலு பட்டணம் என்ற பெயரால் கட்டிக்கொள்ள, அவ்விடத்திலிருந்த தமது பிரதிநிதி நாயடவர்களுக்கு உத்தரவளிக்க, அந்த நாயடு தமது தகப்பனார் சென்னப்பநாயடு பெயர் வழங்கும்படி கட்டிக்கொள்ளச் சொல்ல; அன்று முதல் அதற்குச் சென்னப்பட்டணமென்று பெயராகியது.

---

## நரபதி சம்ஸ்தானத்தின் மூன்றும் சந்ததியின் வம்சவிருக்ஷம்

பூசபாட்டி இரங்கராயலுக்கும் அவர் மனைவி திருமலாம்பாளுக்கும் இராமராஜா, திருமலைராயலு, வெங்கடாத்திரி ராயலு, பிறந்தார்கள். அவர்களில்,

1-வது இராமராஜா, கிருஷ்ணதேவராயலுடைய மூத்தகுமாரத்தி மோஹனாங்கி அல்லது திருமலாம்பாளை விவாஹம் செய்துகொண்டதில், இரங்கராயலு (4-வதும்) வேறு நான்கு குமாரர்களும் பிறந்தார்கள். அந்த ரங்கராயலுக்குப் பெத்த வெங்கடராயலும், சின்ன வெங்கடராயலும் பிறக்க, அந்தச் சின்ன வெங்கடராயலுக்கு இரங்கராயலு (6-வது) பிறந்து 1644-ம் வருஷம் கோபாலராயலுக்குச் சுவீகார புத்திரனாகி சந்திரகிரியிலிருந்து ஆண்டார்.

2-வது திருமலைராயலும் கிருஷ்ணதேவராயலுடைய மற்றொரு குமாரத்தி வெங்கடாம்பாளை விவாகம் செய்ததில், இரகுநாத ராயலு, இரங்கராயலு, (2-வது) இராமராயலு (3-வது) வெங்கடராயலு (1-வது) என்ற நான்கு குமாரர்கள் பிறக்க, அவர்களில் இராமராயலுக்குத் திருமலைராயலு. 2-வது, இரங்கராயலு (3-வது) பிறக்க அந்த ரங்கராயலுக்கு இராமராயலும் (4-வது) மற்ற சில சகோதிரர்களும் பிறந்தார்கள்.

3-வது அந்தரங்கராயலுடைய மற்றொரு குமாரராகிய வெங்கடாத்திரிக்கு இரங்கராயலும், அவருக்கு கோபலராயலும் பிறக்க, அவர் 6-வது இரங்கராயலைச் சுவீகாரம் செய்துகொண்டார்.

இந்த வமிசவிருக்ஷத்தினால் (6-வது) இரங்கராயலு அல்லது ஸ்ரீரங்க தேவராயலு 3-வது சின்ன வெங்கடராயலுடைய மூன்று குமாரர்களில் இளைய குமாரரென்றும், வீரவெங்கடபதிராயலு மூத்தவரென்றும், ஸ்பஷ்டமாகும்.

---

## விஜயநகர ஸமஸ்தானத்தாருக்குண்டான குழப்பங்கள்.

சந்திரகிரியில் கி-பி: 1614ம்வருஷம் வெங்கடபதிராயலு, தமது 67 வயதில் இறந்த பிறகு, அவருடைய சிங்காசன விஷயத்தை பற்றி, 1616ம்வருஷம் டிசம்பர்மீ 12உ கொச்சி சமஸ்தானத்திலிருந்த (Manual Baradas) மானியூல் மார்டஸ் என்பவரெழுதியசரித்திர சாசனம் லிஸபன் (Lisban) பட்டணத்தின் (National Archives Lesbon) தேசவிசாரணைச் சபையில் வைக்கப்பட்டதை மேஸ்டர் சுவேல் (Robert Sewell) சாஸ்திரியாரால் அங்கிலேய பாஷையில் எழுதப்பட்டு தமது விஜயநகர சமஸ்தான சரித்திரத்தில் சேர்த்திருக்கிறார்-

அதன் கருத்தாவது.

அந்த வெங்கடபதி ராயலு, ஜகதேவராயலுடைய குமாரத்தி பாயாம்மாளை விவாஹம் செய்துக்கொண்டதில், ஆண்பிள்ளைகளில்லாமையால், ஓர் அந்தணர் பெண்ணின் ஆண்குழந்தையை சுவீகாரம் செய்து வளர்த்தும், தன் கணவன் மைத்துனர் ஓபிளி ராயலு குமாரத்தியை விவாஹம் செய்து வைத்தும், வெங்கடபதிராயலுக்கு பிறகு பட்டம் கட்டிவைக்கபிரயத்தனப்படச்சே; அந்த வெங்கடராயலு இந்த சூதை யறிந்து தமது தாயாதி குமாரன் சிக்கதேவராயலை பட்டத்திற்கு நியமித்து இறந்து விட்டதாகவும்; அதன் மேல் ஜகதேவராயலும், திம்மராயலும், மேகராயலும் ஒன்று கூடி அந்த சிக்க தேவராயலை குடும்பத்தோடு பிடித்து கோட்டைக்குள் சிறையில்வைத்து விட்டு, அந்த ஸ்தானத்திற்கு பார்ப்பினி மகனை இராஜனாக நியமிக்க; ஸமஸ்தானத்தில் பெரிய கலகங்களுண்டாகியதால்; பழய அரசனை கொன்று விட்டாலன்றி சண்டை சச்சரவு களடங்காதென்று கண்ட ஜகதேவராயலு, சின்ன ஓபிளி நாயடு விடம் கத்திகட்டாரிகளைக் கொடுத்து அக்கருமத்தை முடித்து வரும்படி அனுபிய

தாகவும், சின்ன ஒபிளி காயிடும் போய் தான் வந்த சங்கதியைச்சொல்ல, அந்தப் பழய அரசன் சிக்கராயலு கேட்டு விசனப்பட்டு தன் கத்தியால் தன் மனைவி மக்களை வெட்டி விட்டு, தாமும் ஹரி ஹரி.என்று வெட்டிக் கொண்டு விழுந்து விட்ட தாகவும்; இந்த அக்கிரமத்தை கண்ட எச்சம நாயடு, உடனே 10000 சேனை யோடு போய் புது அரசனைக் கொன்று விட்டு சரியான வார்சாகிய சிக்க தேவராயலு குமாரனை சிங்காசன மேற்றிய தாகவும்; அதன் மேல் ஜகதேவ ராயலு 20000 சேனையோடு வந்து எச்சம நாயடு சேனையை தாக்க முடியாமையால், ஜகதேவராயலு வந்து தஞ்சையிலாண்ட நாயடுமார்களிடத்திலும் மதுரையிலாண்ட முத்துவீரப்ப நாயடுகாரு ஸமஸ்தானத்திலும் உதவி செய்யும் படிவேண்ட அவர்கள் ஜக தேவராயலு அக்கிரமஸ்தனென்றும், இராஜ துரோகியும்,பந்து துரோகியும்,என்று கண்டு எவ்விதஉதவி செய்ய மாட்டோமென்று சொல்லி துரத்திவிட்டதாகவும் எழுதி இருக்கிறார். இந்தக்குழப்பக்கதையை முழுதும் படித்துப் பார்ப்போர்க்கு திராதவியாகூலத்தை உண்டாக்குமென்பது திண்ணம். விரிவஞ்சி இதை மிகவும் சங்கிரமாகத் தெரிவித்தோம்.

---

## நரபதிகளின் நான்காவது சந்ததி விவரம்.

சின்ன வெங்கடராயலுடன் நரபதியின் நான்காவது சந்ததியார் ஆளுகைக்கு வந்தார்கள். அவர்கள் எவர்களெனில்:-

சின்ன (3-வது) வெங்கடராயலுக்கு வீரவெங்கடராயலு, திருமலைராயலு, இரங்கராயலு (6-வது) பிறந்தார்கள். அவர்களில் வீரவெங்கடராயலுக்கு இராமராயலு, இரங்கராயலு பிறந்தார்கள். அந்த இராமராயலுக்கு வெங்கன்ன, சின்னராஜா, ராம ராயலென்ற மூன்று குமாரர்கள் பிறந்தார்கள். திருமலைராயலுக்கு, இராமராயலு, கோபாலராயலு, பிறந்தார்கள. அவர்களில் சின்ன ராஜாவுக்கு பெத்த தாசராயலு, சின்னதாசராயலு பிறந்தார்கள். அந்தச் சின்ன தாசராயலுக்கு இராமராயலு, வீரவெங்கடராயலு பிறந்தார்கள். அந்த வீர வேங்கட ராயலுக்கு திருமலைராயலும், செல்லம்மா என்ற ஒரு பெண்ணும் பிறந்தார்கள். அந்தத் திருமலைராயலுக்கு நரசிம்மராயலு, வீர வெங்கடராயலு, கேசவம்மாள் பிறந்தார்கள். அந்த கேசவம்மாள் வயிற்றில், சின்ன திருமலை ராயலுக்கு இலக்ஷ்மி தேவி அம்மாள் பிறந்தார்கள். அந்த சின்ன திரு மலை ராயலு வெங்கடராயலு, கிருஷ்ணராயலும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். அந்த கிருஷ்ணராயலு குப்பம்மாளை விவாஹம் செய்து புத்திர சந்தான மில்லாமையால் பம்பாபதிராயலைச் சுவீகரம் செய்துக்கொண்டார்கள். அந்தப் பம்பா பதிராயலு எவரெனில், முன் சொன்ன வீரவெங்கடராயலு குமாரத்தியாகிய செல்லம்மாள் வயிற்றில பெத்த பம்பாபதி சின்ன பம்பாபதிபிறக்க, அந்தச் சின்ன பாம்பாபதி வயிற்றில் திருமலைராயலும், குமார இராகவராயலும் பிறக்க, அந்த ராகவராயலுக்கும், சதாசிவராயலு, கோதண்டராம ராயலு, குப்பம்மாள்

நரசிம்பாபதிராயலு பிறந்தார்கள். இப்போது அந்த நரபதி சந்ததியின் பிரதிநிதியாக இருக்கப்பட்ட **ஸ்ரீமான் ஸ்ரீரங்க தேவராயலு இராவ்சாஹிப்** பம்பாபதி குடும்பத்தைச் சார்ந்தவராயும், ஆனகுந்தி அரசராகவுமிருக்கிறார். கிருஷ்ண தேவராயலுடைய மனைவி குப்பமமாளுக்கு சந்ததி இல்லாமையால், பம்பாபதி ராஜாவை சுவீகாரம் செய்து கொண்டனர்.

விஜயநகர ஸமஸ்தானம் மகமதியர் வசமான பிறகு அலி அதில்ஷா இராமராஜாவின் சந்ததி திருமலைராயலுடைய பேரனாகிய நரசிம்மதேவராயலுக்கு ஆனகுந்தி ராஜ்யத்தை ஜாகீராகக் கொடுத்தார். அதை அனுசரித்தே ஐதிராபாத் நிஜாம் கவர்ன்மெண்டாரும் சில கிராமங்களைத் தற்கால இராயலுக்கு ஜமீனாகக் கொடுத்து பூர்வ பட்டத்தை வகிக்கும்படி செய்ய; நமது இங்கிலீஷ் கவர்ன்மெண்டாரும் அந்தச் சமஸ்தானத்தைச் சார்ந்த **ஹாஸ்பேட்டை, பல்லாரி**யைத் தம்பக்கம் சேர்த்துக்கொண்டு அவை கட்கா 1807 வருஷம் மாதம ஒன்றுக்கு ரூபாய் 1377-11-4- பென்ஷனைக் கொடுத்துக்கொண்டு வந்தார்கள். பிறகு இப்போது இராயலுடைய சுவீகாரத்தில் யாதோ சட்டவிரோதமான நடவடிக்கை நடந்திருப்பதாகச்சொல்லி, அந்த நன்கொடையை நிறுத்தி விட்டார்கள். பிறகு தகுந்த சாதனங்களைக்கொண்டு தம்பாத்தியதையை நிரூபித்த தன்மேல், 1902ம் வருஷம் செப்டம்பர் மீ கடைசியில இப்போதிருக்கும் **நரபதி ஸ்ரீரங்கதேவராயலு இராஜா சாஹேப் அவர்களே**, அந்த சமஸ்தானத்துக்குச் சரியானவர்களெனக்கண்டு; நமது சக்கிரவர்த்தியாகிய ஏழாவது எட்வர்ட் அவர்கள் சக்கிரவர்த்தி என்னும் பட்டத்தைத் தரித்தது முதல் ஸ்ரீநரபதி ஸ்ரீரங்கதேவராயலு இராஜா சாஹேப் அவர்களுக்கு மாதம் ஒன்றுக்கு 500 ரூபாய பென்சன்கொடுத்துக்கொண்டு வருகிறார்கள்.

## இந்தநரபதிராயலுகாலத்தில் சாசனம் எழுதும்வக்கணை.

சுவஸ்தி, மகாமண்டலேஸ்வர, ராஜாதிராஜ ராஜபரமேஸ்வர, ராஜகுலதிலக, ராஜமார்த்தாண்ட, பாஷைக்குத் தப்புவராத, கண்ட கண்டநாடு, கொண்டு கொண்டநாடு, கொடாதோன், எம்மண்டல, முத்திரைக்கொண்டு, ஈழமுந் திரைகொண்டு, தலைகொண்ட கண்டன், துலுக்கதளவிபாடன, துலுக்கமோகந் தவிர்த்தோன், மனுருமா, மஹாசூர, மகாமண்டலாதிபதி, அஸ்வபதி, நரபதி, செஜபதி, கொடியன்னன், ஆதசதானன், ராயசூரத்தான், ராஜாதிராஜன, ராஜகெம்பீரன, ராஜநாராயணன், சேனவாசிசூரன், தினவர்த்தோழன், சத்துருக்கள் கண்ட, நவகோடி நாராயணன், பூலோகபுரந்தரன், அசுவகுணகருலன், விருதுநாபாலன், கோதண்டராமன், கலியுக காணன், தக்ஷிண சுலத்தானன், இந்துராயர் சுல்த்தானன், அஷ்டாங்கபயங்கரன், மத்தகாசினி மாளுபரணன், இரணரங்கவேசியர், புயங்கன, உபயகுலதிலாகடகத்தளவிபாடன். ராயர்க்குத் தக்ககண்டன், நாகலோக நரபாலன், பூலோகபுரந்தரன், உத்தர தக்ஷிண பூர்வபச்சிமசத்தசமுத்திராதிபதி, செஜ்ஜவேட்டை கண்டருளிய ஸ்ரீவீரப் பிரதாபன், சோழமண்டல, ஸ்தாபனாசாரியன், பாண்டியமண்டல ஸ்தாபனாசாரியன், ஈழமண்டலமுங் கொண்டருளிய ராஜாதி ராஜ ராஜபரமேஸ்வரன், ஸ்ரீவீரப்பிரதாபன் **ஸ்ரீவீரவேங்கடபதிராயர்** அய்யர், தேவமகாராயர், பிருதுவிராஜ்ஜியம்பண்ணியருளாநின்ற சகாப்த வருஷம் 1512க்கு மேற்செலலாநின்ற விளம்பி வருஷம் அற்பிசிமீ 5௨ என்று எழுதிவந்தார்கள்.

## முதல்காண்டம் முற்றிற்று.

உ

கடவுளுக்குவந்தனம்.

தேவகிரியாதவர், கதம்பர், ஹொய்சாலர், கேலாதியர், மைசூரார்,
சேரர் சோழர் பல்லவர் பாண்டியர்களுடைய
சரித்திரங்களடங்கிய

# இரண்டாம்காண்டம்.

இதற்குமுன் நிற்கும் முதல்காண்டம், ஏழாவது அத்தியாயத்தில், விஜயநகர ஸமஸ்தானத்தார் இந்த தேசத்திற்கு இடையில் இந்துராஜாங்கத்தை ஸ்தாபித்தும், அதிக பராக்கிரமசாலிகளாகியும்; வடநாடுகளில் படையெடுத்துவந்த மகமதியர் முதலானவர்கள் தென்னாடுகளின்மீது படையெடுத்துவந்து தேசக்குடிகளை வருத்தாதபடி சுமார் (300) முந்நூறு வருஷங்கள் வரையில் பாதுகாத்தும்; இந்து மதத்தையும், அதன் தருமங்களையும் விருத்தியாக்கியும் வந்தபிறகு, காலவித்தியாசத்தினால் அந்த ஸமஸ்தானம் பூங்கலடையவே; அவர்களுடைய இனத்தார் தெற்கேவந்து சுமார் இருநூறு (200) வருஷங்கள் ஆண்டு, மகமதியர் முதலானவர்களைத் தடுத்தும், இந்த மத தருமங்களை யாதரித்தும் வந்ததாகச் சொல்லி இருக்கிறோமல்லவா?

அப்படி விஜயநகரத்தாருடைய இனத்தாரும், பிரதிநிதிகளும் தென்னாட்டில்வந்து சமஸ்தானங்களை ஸ்தாபித்தபோது, தென்னாடுகள் என்ன ஸ்திதியிலிருந்தன? அவைகளை அப்போது ஆண்டுவந்தவர்கள் யாவர்? அவர்களால் குடிகளுக்குண்டான சுகதுக்கங்களின்னவை, என்றுஇவ்விவரங்களை முன்னுடியாகத் தெரிந்திருத்தல்நலம்; ஆகவே, அவ்விஷயங்களை இந்த இரண்டாம்காண்டத்தில் சற்று விசாரிப்போம். விஜயநகரத்தார் மத்தியநாடுகளிற் பிரபலமாக அரசு செய்துவந்த காலத்தில், தென்னாடுகளிற் தேவகிரியாதவர்கள், கதம்பஜாதியார், ஹொய்சாலபல்லாளர், கேலாதியர் அல்லது பெத்தனூர்ராஜர்கள், மைசூரார், கொங்குநாட்டார் முதலிய சிலகுறுநில மன்னர்களும்; சேரர், சோழர், பல்லவர், பாண்டியர் முதலான பெருநில மன்னர்களும் பலமாகாணங்களைப்பிடித்து பிரபலமாக ஆண்டுவந்தார்கள் அவர்களில் முதலில்குறித்த நான்குஜாதியார்களுடையஆளுகைக் காலதேச வர்த்தமானங்கள் கொஞ்சமாகையாலும்; அவர்களுக்கு அடுத்தப்படியிலிருக்கும் மைசூரார், மலையாளத்தார் என்னும் சேரர்கள் தெய்வானுகூலத்தினால் இப்போதும் தமது நாடுகளை ஆண்டுவருகையாலும், அவர்களுடைய சரித்திரங்கள் ஆங்கில தேசபாஷைகளில் அறியலாம்; ஆகவே, அந்த ஆறு அரசஜாதியார்களுடைய ஆதிஉற்பத்தி முதலானவிவரங்களை சங்கிரகமாகத் தெரிவித்துவிட்டு, இப்போது அரசு அற்றுப்போனதினால் அவர்களுடைய ஆதி உற்பத்தி

## ஹாயிசால பல்லாளர்.

அவர்கள் 11-வது நூற்றாண்டின் முடிவுமுதல் 14-வது நூற்றாண்டின் கடைசிவரையில் மைசூருக்கு அடுத்த நாடுகளில ஆண்டவர்களாகவும் அவர்கள் குடும்பப்பெயர் சாலர். அவர்களுடைய முதல் ராஜன் வினியாதித்தியன். அவன் கி.பி 1047—1076-வது ஆண்டு, கேலிகலதேவியை விவாகஞ்செய்ததில், எரியங்கன் பிறந்து லச்சிமிதேவியை மணந்தான்—அவர்களுக்கு மூன்று குமாரர்கள் பிறக்க, மூத்தவனாகிய பல்லாளன், 1103-வது பத்மலாதேவி, சாலதேவியை விவாகஞ்செய்துகொண்டான். இரண்டாவது குமாரனாகிய விஷ்ணுவர்த்தனன் 1117 முதல் 1137-வது வரையில் ஆண்டு, சாந்தலாதேவியை மணந்தான்—தலைக்காடு அவனுடைய பிரதானநகரம். ஸ்ரீராமானுஜாசாரியாரால், விஷ்ணுமதத்தைத்தழுவலானான் — மூன்றாவது குமாரனாகிய உதயாதித்தியனுக்கு விஜயநரசிம்மன் பிறந்து, எக்கலாதேவியை மணந்து 1142—1191-வது வரையில் ஆண்டான். அவனுக்கு பல்லாளன் என்பவன் பிறந்து 1192 முதல் 1211-வது வரையில் ஆண்டு,சோழபாண்டியர்களோடு சண்டைசெய்துவந்தான். அவனுக்கு வீரநரசிம்மனும் (1223-வது) அவனுக்கு சோமேசுவரனும் பிறந்து 1252-வது ஆண்டு சோழநாட்டில் விக்கிரமபுரத்தை ஸ்தாபித்தான். அவனுக்கு நரசிம்மன்பிறந்து, 1254 முதல் 1283-வது வரையில் ஆண்டுவர, அவனுக்கு பல்லாளன (3) பிறந்து 1310-வது மகம்மதியரால் பிடிபட்டிருந்த நாடுகளை மறுபடியும் பிடித்தானும், 1326—1327-வது அலாவுதீன பெரும்படையோடு வந்துதாக்கினதால்—1347-வது மகம்மதியர் மறுபடியும்வந்துதாக்க பல்லாள ராஜியம்பாழ்த்துவிட்டது.

## கேலாதி அல்லது பெத்தநூர்ராஜர்கள்.

அவர்கள் 1560-வது வரையில மைசூரிலிருந்து ஆண்டவர்கள். 1560-ம் விஜயநகர சதாசிவராயனும் பசுவசவுடருடைய ஜேஷ்டகுமாரனாகிய சதாசிவன் என்பவனுக்கு தனதுவப்பறால், இக்கரை என்னும் பெத்தநூரைத்தர, அதை சுயமுயற்சியினால் விருத்தியாக்கினான் — அவன் சந்ததியில் சிறந்தவர்களான்.

பசுவசவுடருக்கு 1560—1567-வது சதாசிவநாயகனும், 1576—1585-ம் அவன்தம்பி பத்திரப்பநாயக்கனும் ஆண்டார்கள் சதாசிவநாயக்கனுக்கு இரண்டு மனைவிகளிருந்தார்கள முதல மனைவிக்குபொட்ட சிக்கண்ணநாயக்கன்பிறந்து 1585—1596-வது வரையில ஆண்டான். அவனுடைய மகனாகிய வெங்கடப்ப நாயக்கன 1604 முதல் 1626-ம் வரையிலும் ஆண்டுவர, 1637-ம் பெத்தபத்திரப்ப நாயக்கனும், 1649-ம் சின்னப் பத்திரப்பநாயக்கனும் முறையே ஆண்டு வந்தார்கள.

இரண்டாவது மனைவிக்குப்பிறந்த சிக்க (சின்ன) கண்ணநாயக்கன் 1596 முதல் 1603-ம் ஆண்டுவந்தபிறகு, அவன்மகனாகிய 1603 முதல் 1604-ம் வரையில சித்தப்பநாயக்கனும், 1649—1671-ம் வரையில சிவப்பநாயக்கனும், 1671 முதல் 1681-ம் வரையில் பத்திரப்ப நாயக்கனும, 1681—1686-ம் வரையில சோமசேகர நாயக்கனும், அவன்மனைவி சொட்ட சின்னம்மாஜ்ஜியும 1686-1698-ம வரையிலும முறையே ஆண்டுவந்து புத்திரசந்தானமற்றுப்போக, 1698 முதல் 1714-ம்

வரையில் தத்தபுத்திரனாகிய பசுவநாயக்கன் ஆண்டான்—அவன் பெத்தனூர் செட்டிஜாதியைச் சார்ந்தவன்.

பிறகு 1714 முதல் 1740ம் வரையில் சோமசேகர நாயக்கனும், வீரபத்திரனும்- 1740—1753ம் வரையில் புத்திபசவப்ப நாயகனும், 1753—1755ம் வரையில் சின்னபசவணணநாயகனும், 1755 முதல் 1763ம் வரையில் சோமசேகர நாயக்கனும் ஆண்டுவர; ஐதராலி வந்து தாக்கிப்பிடித்துக்கொண்டான்—(Vide Page 289 Vol. II Buchanan's Mysore—P. 1—36—37 Wilks History of Mysore—Pages 355-356 Vol. II—Rice's Mysore & Coorg.)

இவைகளன்றியில் பொம்பாய் இராஜதானியைச்சார்ந்த கனரிசுஜில்லாவில் ஆண்ட இராஸ்தரகூட்டர்களும், ஹைதராம் ஸமஸ்தானத்துக்கடுத்த இலபர்காவில் ஆண்ட-சிந்தராஜர்களும், காளிங்கராஜர்களும்-கஞ்சாம்ஜில்லாவில் பார்லிகுமீடியில் ஆண்ட கிபமுடிராஜர் முதலானவர்களும் குருகுல மன்னர்களாகவிருந்து சிற்சிறு மாகாணங்களை ஆண்டுவந்தமையால்; அவர்களுடைய சரித்திரங்களை விட்டொழிந்து; இப்போது பிரபலமாக இருக்கும் மைசூர் ஸமஸ்தானத்தைப் பற்றி எழுதுவோம்.

இரண்டாம் அத்தியாயம்.

## மைசூர் ஸமஸ்தானம்.

மைசூர் என்பது மஹிஷாசுரனுடைய நகரமாம், அதாவது எருமைத் தலையை உடைய ஒரு இராக்ஷதன் அங்குவந்து, அந்நகரத்தின் குடிகளை வருத்தி வருகையில்; அக்கஷ்டத்தை சகிக்க முடியாத குடிகளின் வேண்டுகோளைக் கருதி காளிகாதேவியானவள், "சாமுண்டி" அவதாரமெடுத்துவந்து, அந்த இராக்ஷதனைக்கொன்று குடிகளுடைய கஷ்டத்தை நீக்கியபடியால்; அப்பட்டணத்திற்கு அந்த இராக்ஷதன் பெயராகிய மஹிஷாசூரன பட்டணம் அல்லது மைசூர் என்று நாளதுவரையில் வழங்கி வருகிறார்கள்.—இப்போது மைசூர் இருக்கும் இடம், பூர்வத்தில் இராமாயணத்தற்கண்ட சுக்ரீவனுடைய ஸமஸ்தானமிருந்த இடமென்று சிலர்கருத்து:—கி-பி மூன்றும் நூறாண்டுகளில் புத்தர்களும், பிறகு ஜயினரும் இங்குவந்து தம்தம மதவிஷயமானகோயில்களைக் கட்டுவித்தார்களாம்.

மத்தியகால ஸ்திதி.

ஒருகாலத்தில் விஜயநகர சமஸ்தானத்தில் 'யாதவகுல க்ஷத்திரியர்' வகுப்பிற் சனித்த 'விஜயன், கிருஷ்ணன்' என்ற இரண்டு சகோதிரர்கள் நூதன தேசங்களைச் சம்பாதிக்கக் கருதி, தென்தேசத்தை நாடிவந்து மைசூருக்குச் சமீபத்திலுள்ள அதோனு' (Hadona) கோட்டைக்கருகில்.ஒரு குளக்கரையில் உட்கார; அங்கு தண்ணீருக்கு வந்தபெண்கள 'குசுகுசு' வென்று பேசுவதை உற்றுக்கேட்டதில்; அங்கிருக்கும் 33-கிராமாதிகாரியாகிய ஓர் உடையாருடைய ஏகபுத்திரியிடம், அடுத்திருக்கும் கார்கடலி கிராமத்தலைவனான ஒரு இழிகுலத்தான் மோகங்கொண்டு அவளைத்தனக்கு விவாகம்செய்வித்தும், அவளுக்கு அதோனா என்னும்கோட்டையை ஸ்ரீதனமாகக் கொடுக்கவேண்டுமென்றும், அப்படிக்கொடாவிட்டால்,உடனே சண்டைக்குவரவேண்டுமென்றும்,சொல்லி அனுப்பிய சங்கதியை, அந்த உடையார்கள்கேட்டு, தமக்கு தண்டுசேனாதிகள் அற்றுத் தவிப்பதாகவும் தெரியவந்தது,அந்தசங்கதியை அறிந்த விஜயகிருஷ்ணர்

என்று சகோதிரர்கள் பரிதவித்து, அவர்கள் அந்த உடையாருக்குத்துணை நிற்பதாக அனுகூலரண்ணிருக்குவந்த பெண்டுகளிடம் சங்கதிசொல்லி அனுப்ப; அவர்களும் ஓடிப்போய் உடையாருக்குச்சொல்ல, அவரும் சம்மதித்துவந்து, அந்த விஜய கிருஷ்ணர் என்பவர்களை மரியாதையுடன் அழைத்துப்போய் அரோனியில் சேர்த்தும்; அவர்களுக்கு வேண்டிய ஆளகளையும், ஆயுதங்களையும் அந்தரங்கமாகச் சேகரித்துவைத்துக்கொண்டிருக்க, "கார்குள்ளிமன்னன்" மணக்கோலமாகவந்து, உடையார்மகளை பணிக்கிரஹணஞ்செய்யும் தருவாயில்; அரோனியில் மறைந்திருந்த விஜய கிருஷ்ணர்கள் ஓடிவந்து அம்மன்னனைத் தாக்கி சின்னாபின்னமாகக் கிழித்துக்கொன்றார்கள் இத்தியாதி புத்தி பராக்கிரமத்தைக்கண்ட அந்த உடையார் குமாரத்தி, தமதுகுலத்தின் பெருமையையும், குடும்பத்தின் க்ஷேமத்தையும் கூறிய, அந்த விஜடனை விவாஹம் செய்துகொள்வதாகச் சொல்ல; அவன்தந்தையும் அவன் இஷ்டப்படியே செய்வித்து அவனுக்கு அரோனி, கார்குலி கோட்டைகளை ஸ்ரீதனமாகத் தந்தான்.

உடனே அந்த விஜயன் தனது பூர்வமதமாகிய வைணவமதத்தைவிட்டு, தன் மனைவியின் லிங்காயத்து மதத்தைத்தழுவி, சிவாசாரத்தை அநுஷ்டித்து பிரபலமாகியும்; பிறகு மைசூர்மைன்தாருஜபதியாகி மைசூர் உடையார் குடும்பத்தை ஸ்தாபித்தான்.

அந்த விஜய உடையார் குடும்பத்தில் ஆண்ட அரசர்களாவன

விஜய உடையார் கி-பி 1399 முதல் 1423 வரையிலும், ஹரிபெட்ட சாமராஜா கி-பி 1422—1459, திம்மராஜா கி-பி 1458—1477, ஆறுவிரல் சாமராஜா கி-பி 1478—1513, பெட்டசாமராஜா கி-பி 1513-1552, அவருடைய 3 குமாரர்கள் நாட்டைப்பங்கிட்டுக் கொண்டார்கள் —அப்பணதிம்மராஜா, கி-பி 1552-1571, கிருஷ்ணராஜா, அவருக்குச்சந்ததியில்லை—ஹரிசாமராஜா, கி-பி 1571-1576, மூப்பணதேவரு, கி-பி 1576-1625, தொட்டதேவரு, கி-பி 1625-1672, சிக்கதேவரு, கி-பி 1672—1704, காந்திரவராஜா, கி-பி 1704—1714, தொட்ட கிருஷ்ணராஜா, கி-பி 1714-1731, கெம்பதேவராஜா, கி-பி 1659-1672, பெட்டல உடையார், கி-பி 1576-1578, இராஜ உடையார், கி-பி 1578-1617, காந்திராஜ நரசராஜா, கி-பி 1633-1659, நரசிங்கராஜா, கி-பி 1659-1617, சாமராஜா, கி-பி 1617—1637, இம்மிடிராஜா, கி-பி 1637—1638, சாமராஜா, கி-பி 1731-1733, சிக்க கிருஷ்ணராஜா, கி-பி 1734-1749, ஸ்ரீராஜா கிருஷ்ணராஜா, கி-பி 1799-1863, ஸ்ரீசாமராஜா, கி-பி 1881-1894, ஸ்ரீவாணிவிலாச மஹாராணியார், கி-பி 1894-1903, ஸ்ரீகிருஷ்ணராஜா 1903 ஜூலை 8உ பட்டத்தைப்பெற்றார்.

அப்படி ஆண்ட அரசர்களில் "ஹரிபெட்ட சாமராஜர்—" தமது மூன்று குமாரர்களில், "அப்பாதிம்மராஜருக்கு" ஹெம்மல ஹால்லியையும், கிருஷ்ணராஜருக்கு, கெம்பல நாட்டையும், "சாமராஜருக்கு" பூரகிரி என்னும் மைசூர் நாட்டையும் பங்கிட்டுகொடுத்தார். அந்தப்படி ஸமஸ்தானத்தை வகுத்துக்கொண்ட (1) அப்பாதிம்மராஜா, (2) கிருஷ்ணராஜா (3) சாமராஜா என்ற மூன்று குடும்பத்தைச்சார்ந்த சந்ததிகளே நாளது வரையில் மைசூருக்கு மன்னராவார்கள். அப்போது பூரகிரி என்னும் மைசூரில் ஒரு புராதனக்கோட்டை இருந்து பாழ்த்துப்போனபடியால், 1524-வருஷம் இப்போதிருக்கும் கோட்டையைக்கட்டினார்கள்.

இம்மடிராஜா—மஹா சிவபக்தி யுள்ளவரானபடியால், அடிக்கடி நஞ்சன் கூடுக்குப்போய் வரும்போது, உம்மத்தூர் குடிகளுடன் சச்சரவுசெய்யநேரிட்டு, அதன் தலைவனுக்கு யுத்தசெலவு கப்பங்கட்டிவரும்படி செய்துகொண்டார்.

ஸ்ரீசாமராஜா—1571-ஆம் சிங்காசனமேறி ஆண்டார். அவர் விஜயநகர ஸமஸ்தானத்தைச்சார்ந்த ஸ்ரீரங்கபட்டணத்திலிருந்த பிரதிநிதிக்கு சரியாக கப்பங்கட்டாமையால், அவரைப்பிடிக்க பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்கச்செ, அவர் தந்திரமாக தப்பிதொளிந்து 1576-ஆம் இறந்தார்.

பெட்ட உடையார்—அவர் ஒருமுரட்டு ராஜா. அவர் விஜயநகரத்துக்கு கப்பங்கட்ட பணமில்லாமையால், சம்பெண்டுகளின் சிறுவடியை வசூல்செய்து கப்பங்கட்டினார். அவரது சகோதிரர் இராஜ உடையார் அடிக்கடி அவரோடு சண்டை செய்துவரச்செ; குமாரநரசராஜு ஒரு துஷ்டனைக்கொண்டு பெட்ட உடையார் கண்களைப்பிடுங்கிவிடும்படி செய்ததினாலுண்டான வியாகூலத்தினால் இறந்தார். அவருடைய 6 குமாரர்களும், அவருக்கு முன்னாடியாகவே இறந்துவிட்டபடியால், நரசராஜன் என்ற குமாரனுக்கு ஜனித்த சாமராஜா என்னும் பேரன் பட்டத்தைப்பெற்றான்.

அந்த சாமராஜா—1617-ம் பட்டத்துக்குவந்து, 20 வருஷம் ஆண்டார். அவர் காலத்தில் ஜெகதேவன் கோட்டைக்கு முற்றுகைபோட்டு சமஸ்தான விஸ்தீர்ணத்தை அதிகமாக்கி, 1537ம் வருஷம இறந்துவிட்டார்.

இம்மடிராஜா—1637-ம் வருஷம் சிங்காசனமேறி ஒன்றரைவருஷத்துக்குள் அவர்மந்திரி விக்கிரமராஜாவினால பாஷாணமிட்டுக் கொல்லப்பட்டார்.

காந்திதேவ நரசராஜா—அவர் பெரியகுடும்பத்தைச்சார்ந்த பெட்ட உடையாருடைய குமாரர், மஹாவீரதீரர். ரணதூலகான்சாயபு ஸ்ரீரங்கபட்டணத்தைத்தாக்கியபோது தடுத்து ஜயம்கொண்டும், கவுடர்களுடைய அக்கிரமங்களைக் கண்டித்தும், ஸ்ரீரங்கபட்டணக்கோட்டையை ரிப்பேர்செய்வித்தும், புதிதாகத் தங்கசாலையை ஸ்தாபித்தும், பிராமண தேவாலயங்களுக்கு மானியங்களை விட்டும், தசரா உற்சவத்தை முதல் முதல் மைசூரில் ஆரம்பித்துச் சிறப்பாக நடத்திவந்தும், 1655ம் வருஷம சந்ததியற்று இறந்தார்,

தொட்டதேவராஜா—அவர் சாமராஜாவின் பேரரும், மூப்பன்னதேவராஜருடைய குமாரருமாம், அவர்காலத்தில் பெத்தனூர்தலைவர் "சேவப்ப நாயகர்" படையெடுத்து வந்தார். அவரிடம் ஸ்ரீரங்கராயலு சேர்ந்து படையெடுத்து வந்து ஜயிக்கவில்லை. பிறகு மதுரை 'சொக்கநாத நாயுடு' படையெடுத்து வந்ததில்; தாராபுரமும், ஈரோடும், மைசூராருக்குச் சேர்ந்துவிட்டன. அந்ததொட்ட தேவர் சாமுண்டி மலையின்மேல் ஒரு 'பசவ விக்கிரகத்தை' ஸ்தாபித்தும்; சிவில் நியாயஸ்தலங்களைச் சீர்படுத்தியும், அனேக பிராமண தருமங்களைச்செய்தும் 1672-ல் இறந்தார்.

'சிக்கதேவராஜா'—தொட்டதேவராஜாவின் அண்ணன் குமாரராகிய அவர் 1672-ல் சிங்காசனமேறி, விசாலாக்ஷிபண்டிதர் அல்லது எலந்தூர் பண்டிதரென்னும் ஜயினமதஜோஸியரை மந்திரியாக நியமித்தும், முதல் முதல் தபாலிலாகாவை ஸ்தாபித்தார், அந்த ஜயினமந்திரி அரண்மனையிலிருந்து வீட்டுக்குப்போகும்போது ஒரு சிவாசாரிமதத்தார் குத்திக்கொல்ல, அம்மந்திரி இறந்தார். அப்படி இறந்தமந்திரியின் உத்தியோகத்தை யனுசரித்து திருமலையங்கார் என்னும்

ஸைவணவ பிராமணனை மந்திரியாகக்கொண்டு, 1687ம்வருஷம் தஞ்சைநிக்கோஜி இடம் பெங்களூர்கோட்டையை 3 லக்ஷம் ரூபாய்க்குவாங்க யோசிக்கையில்; டில்லி அரங்கசீப்பின் பிரதிநிதி காசிம்கானும், மராட்டியதலைவனான ஷிவாஜிராஜாவும் படையெடுத்துவந்து தாக்க; அதில் காசிம்கான் ஜயமடைய; அவரிடமே அந்தக் கோட்டையை வாங்கினர். பிறகு மதுரை சமஸ்தானத்தின்மேல் படையை யனுப்ப, மராட்டியர்வந்து மைசூரைத்தாக்கினர்கள். அவர்காலத்தில் கலகஞ்செய்துகொண்டிருந்த சில்லரை உடையார்களை தமது சமஸ்தானத்தின் கௌரவசேவையைச் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டதில்; அவர்களைநம்பி இருந்த அநேக ஜங்கமர்கள் கலகம்செய்ய; சிக்கதேவராஜா அந்த ஜங்கமக்குமாரர்களை நஞ்சன்குடிக்கு தருவித்து, அவர்களில் 400 பெயர்களைக்கொன்று ஒரேகுழியில் போட்டும்; அவர்களுடைய 700 மடங்களை இடிப்பித்தும், ஜங்கமர்களை எங்கு கண்டபோதிலும் கொலைசெய்துவிடும்படி கட்டளையிட்டும், கலகத்தை யடக்கியும், 1704-வருஷம டிசம்பர்மாதம் 22-ந்தேதி முதல் 31-வருஷம் 21 நாள்கள் ஆண்டு இறந்தார்.

"மூக்கரச"—சிக்கதேவராஜருடைய செவிடும், ஊமையுமான குமாரர், பிறகு சிங்காசனமேறினர். அவர்காலத்தில் கர்னாடக நபாப் 'சாதத் அலிகான்' பெங்களூர், ஸ்ரீரங்கபட்டணத்துக்கு முற்றுகைபோட, ராஜா 1714ல் இறந்துவிட்டார்.

தொட்டகிருஷ்ணராஜா—மூக்கரசுவின் குமாரராகிய அந்ததொட்டகிருஷ்ணர் மஹா சிறந்தபக்திசிரியர். அவர்காலத்தில் மிருகங்களுக்கும், ஊர்வன ஜந்துக்களுக்கும் லக்ஷம்ரூபாய் செலவிட்டு வைத்தியஞ்செய்யச்செய்தார். அவர்காலத்தில் ஆர்காட்டு சாதத் அல்லிகான், குருப்பா, கர்னூல் மகம்மதியர்களுடன் படையெடுத்துவந்து தாக்க, அவர்களுக்கு ஒருகோடிரூபாய் கொடுத்து ராஜி செய்ய; அதில் 40 லக்ஷம் ரூபாய் சாதத் அல்லிகானுக்கு வந்தது. மற்றவர்கள் 12 லக்ஷம் ரூபாயாக பங்கிட்டுக்கொண்டார்கள். அந்த தொட்ட கிருஷ்ணர் 19 வருஷம் ஆண்டு, 1731 வருஷம் இறந்தார்.

சாமராஜா—அவர்காலத்தில் சமஸ்தான மந்திரி பிரதானிகள் கூடி அவர்களிஷ்டப்படி அவரை ஆட்ட; அவர் இடங்கொடாதிருக்க; அவரையும் அவர் மனைவியையும் பிடித்து கோபாலதுருகத்தில் சிறையில் வைத்துச்சாகும்படி செய்துவிட்டார்கள்.

சிக்ககிருஷ்ணராஜா—கி-பி 1734ம் பட்டத்துக்குவர, பழைய மந்திரிகளே அதிகாரிகளாகவும், அவர்களில் நஞ்சிராஜ சிவில் விவஹாரங்களை நடத்தி 80 லக்ஷம் ரூபாய் சம்பாதித்தும்; அதில் இரண்டுலக்ஷம் ரூபாயை தமது வாலிப மனைவிக்குக்கொடுத்துவிட்டு, மாண்டார—அந்தவேலைக்கு குமாரர் நஞ்சராஜை நியமிக்க; அந்த குமாரனும சமஸ்தானத்தில் லஞ்சம் பரிதானம் முதலான கொள்ளைகளுக்கு இடங்கொடுத்துக்கெடுக்க, 1737-ல் டாஸ்டு அலிகான் தமது தம்பிமார்களாகிய காசிம்கான், மோரதகான் என்பவர்கள் மூலியமாக ஒருபெரிய சேனையை அனுப்ப, கீழ்க்கி இடத்தில் இராஜா அவர்களை முறியடித்து ஓட்டி ஸ்ரீரங்கபட்டணத்திற்கு ஜயவீரராகத்திருபினர். 1746ம் நஞ்சராஜா தாராபுரம், கோயமுத்தூர் பாளையக்காரர்களுக்கு விரோதமாக சேனையையனுப்ப, தக்காண சுபேதார் நிஜாம் உல்முல்கு என்பவர் நஞ்ஜங்கை ஒருபடையோடு அனுப்ப,

இராஜாபயந்து தகுந்த கப்பங்கட்டி இராஜிசெய்துகொண்டார். அந்த இராஜா, தஞ்சாவூர் ராஜகுமாரத்தியை விவாகஞ்செய்துகொண்டார் அதுதான் ஜைனரும் சிவாசாரிகளும்சேர்ந்தமுதல் விரோதம். 1749-ம் தேவனஹல்லி பாளையக்காரன் ராஜாவுக்குச்சரியான கப்பங்கட்டாமையால், அவன்மீது படையெடுக்க, அப்போது அச்சேனைக்குக் குதிரைத்தலைவனாக ஐதராலிகான் அமர்ந்தார்.

அப்படி தேவனஹள்ளியிலிருந்த ஐதராலியின் சரித்திரங்களின் விவரமாவது.

## மைசூரில் மகமது இராஜ்யஸ்தாபனம்,

பஞ்சாபுநாட்டில் மஹா மதவைராக்கியமுள்ள மகமது பிஹிலோலி என்ற ஓர் மகமதியர் இருந்தார். அவர் மகமது அலி, மகமதுவாலி என்றதமது இரண்டு குமாரர்களுடனே ஐதிராபாதுக்கு 110-மைல் தூரத்திலிருக்கும், கடப்பா டிஸ்டிரிக்டைச்சார்ந்த அலந்த என்னும் இடம்வந்து தங்கி, சிறாநாட்டில் வேலை சம்பாதிக்கும்படி தம்குமாரர்களை யனுப்ப, அந்த மகமது அலியின் குமாரர் பட்டிமகம்மது பிறந்தார். பிறகு அந்த இரண்டு சகோதரர்களும் கோலாருக்கு அருகில்வர, அங்கு மகமது அலி இறந்துபோனார். அவருடைய சகோதரர் பட்டிமகம்மதையும், அவர் மனைவியையும் துரத்திவிட; அவ்விடத்தில் எதிர்க்கவந்த, நாயடு, பட்டிமகமதுக்கு ஒருசேவகனவேலையைக்கொடுத்து ஆதரிக்க, அப்பட்டி மகமதுவின் மூன்றுமனைவிகளில் 3-வது மனைவி வயிற்றில் ஐதராலியும், சாபாஜுவும் பூடி கொட்டையில் பிறந்தார்கள்: அவ்விருவர்களுமே முறையே 9, 10 வருஷ வயது அடைந்தபோது, தந்தையையும் இழந்தும் திரவியத்தையும், இழந்துவிட நேரிட்டபடியால்; தாய்மாமனுமாகிய இப்ராஹீம் சாயபு ஒரு இந்து பிரபுவுக்கு சிபார்சுசெய்து அவர்களை வேலையிலமர்த்தினர்; ஐதராலி முதலில் குதிரை வாலண்டியராக நியமிக்கப்பட்டார். அவர் 27-வது வயது வரையில் எழுதவாசிக்கத் தெரியாதவனாக இருந்தும்; புத்திசாலியும், சூரவீரனும், தந்திரவாதியுமாக இருந்தபடியால், தினேதினே அந்தஸ்தில் பலுகிப் பெருகி கடைசியாக 1761 வருஷம் ஈடுஇர்மதாய், மைசூர் சமஸ்தானாதிபதியாகி விட்டதன்றியில்; வடக்கே பீஜப்பூர், பொம்பாய் வரையிலும்; தெற்கே கன்னியாகுமரிவரையிலும், அதிக பயங்கரத்தோடு பிரபலமாக ஆண்டதோடு; ஆங்கிலேயரும் பயப்படும்படியாகவும்; பிராஞ்சுக்காரரும் அவருடையதயவை நாடும்படியாகவும் ஆண்டு, 1782-ம் வருஷம் டிசம்பர்மாதம் 17-ந் தேதி இராஜபிளவையால் இறந்தார். அப்படி ஐதராலி இறந்த சங்கதியைச் சிலநாட்கள் வரையில் மறைத்து வைத்திருந்தாலும்; மகமதுஅமீர் என்னும் குதிரைவீரனால் இறந்த சங்கதிவெளியாய்விட்டது.

அப்போது மேற்குக்கரையில் இங்கிலீஷ்காரரோடு எதிர்த்துக்கொண்டிருந்த அவரது குமாரரான திப்புசுல்தானுக்குச் சங்கதி தெரியவே; சையத் மகமதை ஸ்ரீரங்கபட்டணத்துக்கு அரசனுக்கிவிட்டும், தாம்கோலாரில் பிதுர்க்கருமங்களை முடித்துக்கொண்டு; 1783-ம் வருஷம் ஜனவரிமாதம் 2ல் வேலூருக்கும் ஆரணிக்கும் மத்தியிலிருந்த தமதுமுக்கிய சேனையைச் சார்ந்தார். அப்போது அவர் தகப்பனார் சம்பாதித்துவைத்த ரொக்கம் மூன்றுகோடி ரூபாய்களையும், அதிக விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களையும், 88,000, சேனைவீரர்களையும் அவருடைய திவான் பூர்ணையர் கொண்டுவந்து ஒப்பிவைக்க, அவைகளைப்

பெற்றுத் தமது சேனைகளின் பழயபாக்கியை எல்லாம்தொலைத்துவிட்டும்; தமது தந்தையைப்பார்க்கிலும் அதிகபயங்கர பிரபுவாக ஆண்டு 1799ம் வருஷம் மேமாதம் 4ந்தேதி இங்கிலீஷரால் ஸ்ரீரங்கபட்டணத்தில் கொல்லப்பட்டார். அந்தத் திப்புவின் அதிகாரம் தெற்கே கன்னியாகுமரி முதல், வடக்கே பீஜப்பூர் ஐதிராபாத்துவரையில் பிரபலமாகிய சங்கதிகள் இந்துஸ்தானி, இங்கிலீஷ் சரித்திரங்களில் விஸ்தாரமாகச்சொல்லி இருப்பதால்; இவ்விடத்தில் விஸ்தரித்து எழுதாமல்விட்டோம்.

அந்த திப்புசுல்தான் இறந்தபிறகு இங்கிலீஷ்காரர் மைசூர் சமஸ்தானத்தின் வார்சுதாராகிய சுமார் 4 வயதுள்ள இராஜா கிருஷ்ணராஜ உடையாரைத் தேடிப்பிடித்து; ஜூன்மாசம் 30உ ஆம்தேதிக்குள் சிக்கதேவராய உடையார் வீற்றிருந்த சிம்மாசனத்திலேற்றினார்கள். மஹா மதியூகியாகிய பழயமந்திரியாகிய பூர்ணையரையே அவருக்குத் திவானாக இருக்கும்படி நியமித்தார்கள்.

அப்படி சிங்காசனமேறிய கிருஷ்ணராஜ உடையாரும் ஆண்டுவருகையில், நாட்டில் கலகங்களுண்டாகியும், 75-லக்ஷம் ரூபாய் கடன்களினால் அரசருக்கு ஆளும் திறமையற்றிருப்பதையும், கவர்னர் ஜனரலவர்கள் கண்டு, 1831-ம்வருஷம் அக்டோபர்மாதம் 3-ந்தேதி இராஜ்யபரிபாலனத்தை ஆங்கிலஸ்தானாதிபதியிடம் கொடுத்துவிடும்படி கேட்க; அவரும் கொடுத்துவிட, அவர்பட்ட கடனாகிய 75 லக்ஷம் ரூபாயை தீர்த்தும், அவருக்கு மாதம் 1-க்கு 70,000 ரூபாய்களும், வருஷம் 1-க்கு கிஸ்தி வசூலில் 5-ல் ஒரு பங்கும், லக்ஷா நக்ஷத்திர வராகனும் பெற்றுக்கொண்டுவந்து, 1868 வருஷம் மார்ச்சுமீ 27-ந்தேதி தமது 75 வயதில் சந்ததியற்று இறந்துபோக; 1881-ஆம் சுமார் 4-வயதுள்ள சுவீகாரபுத்திரராகிய ஸ்ரீ சாமராஜ அவர்கள் பட்டமடைந்தாலும், 1881 ஆம் சரியானவயது வந்தமையால், அந்த மஹாராஜா, திவான் இரங்காசார்லு, திவான் சேஷாத்திரி அய்யரவர்கள் உதவியினால் ஸமஸ்தானத்தைச் சீர்திருத்தப்பெற்ற சமஸ்தானமாக்கி சிறந்தசிறப்புப்பெற்று 13 வருஷம் ஆண்டுவருகையில்; அவர், 1894-வருஷம் டிசம்பர்மீ 28ந்தேதி கல்கத்தாவுக்குப்போன இடத்தில், திடீரென்று கபவியாதியால் இறந்துவிட, அவரது உத்தமபத்னியார் ஸமஸ்தானத்தை ஆறு வருஷம் ஆண்டுவந்தார்.

1894ஆம் இறந்துபோன ஸ்ரீசாமராஜேந்திர உடையார் பஹதூர் அவர்களுக்கும், அவர் சுபத்னி ஸ்ரீவாணிவிலாஸ மஹாராணியவர்களுக்கும் இரண்டு இராஜ குமாரர்களும், 3 இராஜகுமாரத்திகளும் பிறந்து சமஸ்தானத்துக்கு பாத்தியஸ்தரான ஜ்யேஷ்ட புத்திரர், 10 வயதுடைய ஸ்ரீகிருஷ்ணராஜ உடையாருக்கு சந்ததி விருத்தியினிமித்தம், வடதேசத்தில் ஓர் இராஜகுமாரியை இராஜகுமாரருக்கு விவாஹம் செய்வித்தும், தக்க கல்விகேள்விகளை, மிஸ்டர் பிரேசர் என்னும் உபாத்தியாயரைக்கொண்டு போதிப்பித்தும் 1903ஆம் ஆகஸ்டுமீ 8உ ஸ்ரேஷ்டதேசாதிபதி கர்ஜன் பிரபு அவர்களால் பட்டாபிஷேகஞ்செய்வித்தார்.

1894 ஆம் அந்த மைசூர் ஸமஸ்தானத்தின் சுற்றளவு 27,406 சதுரமைல். அதில் 1881ஆம் ஜனிஸ்வாரி கணக்கின்படி 49,14,110 குடிகளிருந்தார்கள் 1,02,00,000 ரூபாய் வருஷ வருமானம் இப்போது நாட்டில் கைத்தொழில் கல்வி விருத்தியாகிவருகிறது. மஹா மதியூகியாகிய பூர்ணையரவர்களுடைய

*ஆண்டாகி நாட்டில் பஞ்சம் அதிகரிக்க, குடிகள் வருந்தி அவர்கள் உபயோகித்து வந்த 'கோனாளம்' என்னும் குளம் நீர்வற்றுப்போனதற்கு, இராஜநீதி முறை வென்று மன்னன்முன் முறையிட, அந்த மன்னனும் ஆயிரக்கணக்கான பிராமணர்களை வருவித்து, அந்தக் கோனாளம் என்னும் குளக்கரையில் வருணஜபம் செய்யச்செய்தும், சந்தர்ப்பணை செய்வித்தும், உடனே மழை அதிகமாய்ப் பெய்ததனால், அந்தத் தினத்தையே (கொல்லமாண்டு) வருஷப்பிறப்பாகக் கொண்டு சுகமாக வாழ்ந்து வருகையில்; மறுபடியும் பிராமணக் குடிகளுக்கும் அரசனுக்கும் சண்டை சச்சரவுகளுண்டாக, இனி நாட்டைத் தக்க வல்லவனிருந்து ஆளச் செய்யாவிட்டால் குடிகெட்டுப்போகும் என்று கண்ட சில பெரிய பிராமணர்கள்; விஜயநகரம் கிருஷ்ணதேவராயரிடம்போய் முறையிட்டார்கள். அப்போது இந்துமதோத்தாரகராய் பிரகாசித்த ஸ்ரீ கிருஷ்ணதேவராயரும் கேட்டு பரிதவித்துத் தமது சைன்யத்திலிருந்த சதாவீரனும், சகிலனுமாக இருந்த ஆதிராஜபெருமாளை மலையாளத்துக்குப்போய் 12 வருஷம் ஆண்டுவர பிரதிநிதியாக அனுப்பினார்.

அந்த ஆதிராஜ [illegible] மலையாளம்வந்து, 12 வருஷ [illegible] செய்துவிட்டு விஜயநகரம்போக; அவருக்குப் பதிலாக பாண்டியராஜப் பெருமாளை 12 வருஷம் [illegible] அனுப்பினார். அவரும் அப்படி வந்து ஆண்டு திரும்பிப்போக, அவருக்குப் பதிலாக சேரமான்பெருமாளை அனுப்ப, அவரும் வந்து கிரமமாக 12 வருஷம் ஆண்டவர், அவர் தருமகுண நடக்கைகள் கிருஷ்ணதேவராயருக்குத் திருப்தியாக [illegible] யால், அவரையே மறுபடியும் இன்னுமொரு அரசாக 36 வருஷம் ஆளும்படி செய்ய; அந்தச் சேரமான்பெருமாள் ஆலுவாயில் [illegible], ஒரு அரண்மனையையும் கட்டி ஆண்டுவருகையில்; [illegible] சேரமான்பெருமாள் தமது நாட்டை 18 பாகமாய் வகுத்தார், அவற்றில் சில கள்ளிக்கோட்டை ராஜாவாகிய சாமந்தர் அல்லது காமரின் அல்லது ஸாமோரின் என்னும் இராஜனுக்குக் கொடுத்து ஆண்டுவரும்படி செய்து வந்ததால், அரேபிய நாட்டிலிருந்து சில மகமதியர் வர்த்தகவியாபாரமாக கள்ளிக்கோட்டையில் குடியேறினார்கள். அப்படிக் குடியேறிய மகமதியருக்கு மலையாளத்தில் பவுத்தர் என்றுபெயர், சேரமான் பெருமாள் அந்த மகமதியருடைய மதாசாரங்களைப்பற்றி விசாரணை செய்து, கடைசியில் தாமே மகமதிய மதத்தில் புகுந்தும், அந்நாட்டிலுள்ள பிராமணர் எல்லாரையும் மகமதுமதத்தைத் தழுவும்படி கட்டாயப்படுத்த; குடிகளுக்குள் பிரமாதக் கலகங்களுண்டாகி, திரிகாரூர் என்னும் இடத்தில் ஒரு மகாசபையைக் கூட்டி, மகமதியர் மதத்துக்கும், பிராமணர் இந்துமதத்துக்கும் இருக்கும் தாரதம்மியத்தைப்பற்றி ஆராய்ச்சிசெய்விக்க; கடைசியில் பிராமண (இந்து) மதமே சிரேஷ்டமென்றேற் பெற்றதால் சேரமான்பெருமாளைப் பட்டத்தைவிட்டு நீக்கியும், அப்பட்டத்திற்கு அவருடைய குமாரரை நியமிக்க; சேரமான்பெருமாள் மகமதியராகிய தானே [illegible] அரேபியாவிலுள்ள மக்கா நகரத்துக்குப்போனார். அங்குபோய் அரேபியரைக் கள்ளிக்கோட்டைக்குப்போய் வியாபாரம்செய்யும்படி தூண்டிவிட்டுத் திரும்புகையில், ஜட்டா என்ற பட்டணத்தில் இறந்துவிட்டார்.

இப்போது கள்ளிக்கோட்டையில் இராஜாவாகவிருப்போர் இந்தச்சேரமான் பெருமாளுடைய சந்ததிகளென்று ஒரு சாசனத்தினால் தெரியவருகிறதன்றியே,

ஆதிசங்கராசாரியரும் இச்சேரமான் பெருமான் காலத்திலிருந்து பிரகாசித்ததாக ஒரு சாசனத்தினால் வெளியாகிறது; ஆயினும் அதை நம்புவதற்கு வேறு சாதன ஆதாரங்கள் அகப்படவில்லை.

அந்தச் சேரமான்பெருமாள் மக்காவுக்குப் போனபிறகு, அவருடைய சந்ததிகள் தக்கபடி ஆண்டுவராமையால்; மலையாளத்துக்கு விஜயநகர கிருஷ்ண தேவராயலு ஒரு குலசேகரப்பெருமாளை அனுப்பி ஆண்டுவரச்செய்ததாக ஓர் சாசனமிருக்கிறது. பிறகு இப்போது இராஜனிருக்கும் தளியில் ஒரு வேறு நாட்டு வர்த்தகனாகிய கோளியன் என்பவன் ஒருபெரிய கோட்டையைக்கட்டி வர்த்தகமும், அதிகாரமும் செய்து வந்தபடியால்; அந்த இடத்திற்கு கோளிக்கட்டு என்று பெயருண்டாகி, பிறகு கள்ளிகோட்டை என்னும் இப்போதியபெயராகி விட்டதாம்.

அனந்தரம் ஐரோபா கண்டத்திலிருந்து போர்த்துகேயர் வர்த்தக விஷயமாக வர; அவர்மூலியமாக சிரிய கிறிஸ்தவர்களும் மலையாளத்துக்குவர ஆரம்பித்தார்கள்.

மிஸ்டர் டெயிலருக்கு அகப்பட்ட சாசனத்தின்படி அச்சேரநாட்டில் கலியுகம் பிறந்தபிறகு அடியிற்கண்ட அரசர்களாண்டார்கள் ;—

ஆதிபெருமாள் 12௵ம்—பாண்டியராஜபெருமாள் 12௵ம்—சேரமான் பெருமாள் அல்லது பாணுபெருமாள் 36 வருஷம் ஆண்டு மகமதியனாகி மக்காவுக்குப்போனார்—துவபனபெருமாள் 6௵ம்—இந்திரபெருமாள் 12௵ம்—ஆரிய பெருமாள் சயஞ்சாணத்தைவகுத்தார் குந்தனபெருமாள் களனெட்டியில் அரண்மனையைகட்டினார்—பிறகு கொட்டிபெருமாள், மாதவபெருமாள் 11௵ம்—எரிய பெருமாள் 12௵ம்—கம்பென்பெருமாள 3½ ௵ம்—விஜயன் பெருமாள் விஜயன் கோட்டையை கட்டினார்—வல்லபப்பெருமான் ஓர் புதலிங்கத்தைக் கண்டுபிடித்தார் — ஹரிச்சந்திரபெருமாள புரளிகோட்டையைகட்டினார்—மல்லன் பெருமாள் 12 ௵ம—குலசேகரப்பெருமான் 18௵முமாக ஆண்டார்கள்.

தமிழ்ப்புலவர்களால் புகழ்ந்து பாடப்பெற்ற சில சேரருடைய பெயர்முதலான விவரங்களாவன.

(1) சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன்—இவன்போர்வன்மையை நோக்கி யானைப்படையை மேகமாகவும், சேனைவீரர் கையிலுள்ள வாட்டைகளை மின்னலாகவும், போர்ப்பறையை முழக்கமாகவும், குதிரைகளின் தூசு கதிரைக்காற்றாகவும் வில்லினின்று செலுத்தப்படும் பாணங்களை மழைத்துருவமாகவும், பூமியைவயலாகவும், தேரை ஏராகவும், படைதிரைகளைச்சாலாகவும், எறியப்படும் வேல யாகங்களை விதைகளாகவும், சாய்ந்துகிடக்குந் தலைகளை நெற்போராகவுங்கொண்டு வேளாண்மை செய்பவனென அவனைப் பரணர்புறநானூற்றிலே புகழ்ந்துபாடினார்.

(2) சேரமான் கடுங்கோவாழியாதன்—இவன் கபிலராலும்; குண்டுகட் பாலியாதனாராலும் பாடப்பட்டவொருசேரன் தன்னைப்பதிற்றுப் பத்தினுள் ஏழாம்பத்தென்னும் பாடலாலேபாடிய கபிலருக்கு நூறாயிரங்காணமும் மலைமீதேறிக் கண்டநாடும் பரிசாகக்கொடுத்தவள்ளல்.

(3) சேரமான்கணைக்காலிரும்பொறை — கோச்செங்கட் சோழனாலே சிறைசெய்யப்பட்டுக் காராக்கிருகத்திலே கிடந்து, தாகத்தாற் சோதித்தவழியும் தண்ணீருதவாவழி யுண்ணாது, உயிர்துறந்தவன.

(4) சேரமான் கருவூரேறிய வொள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறை — அச்சேரன் நரிவெரூஉத்தலையாராற் பாடப்பெற்றவன. அப்புலவர் நல்லுடம்பு பெறுதற்குக் காரணனாயிருந்தவனும் இவ்வரசனே (புறநானூறு).

(5) சேரமான் குட்டுவன்கோதை — கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனாராற் பாடப்பெற்ற விசையாளன.

(6) சேரமான் குடக்கோச்சேர லிரும்பொறை — பெருங்குன்னூர் கிழாராற்பாடப்பெற்ற சேரன. பதிற்றுப் பத்தினுள்ளே ஒன்பதாம் பத்திற்குத் தலைவனு மிவனே.

(7) சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் — இவனும் வேற்பஃறடக்கைப்பெருநற்கிள்ளியென்னுஞ் சோழனும் போரிலிறந்தபோது கழாத்தலையாராலும் பரணராலும் அச்சோழனோடு சேர்த்துப் பாடப்பட்டவன்.

(8) சேரமான் கோக்கோதை மார்பன் — இவன் கோச்செங்கட் சோழன்காலத்துச்சேரன. இவன் பொய்கையாராற் பாடப்பெற்றவன. இவன் வண்மையிற் சிறந்தோனென்பது புறநானூற்றால் விளங்கும்.

(9) சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சியமாக்கோதை — புறநானூற்றினுள்வருமொரு பாடலால் புலமைநிறைந்த சேரனொருவனென்பது துணியப்படும்.

(10) சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் — 1 சிக்கற்பள்ளியிலிறந்த பெருங்கொடையாளனாகிய சேரன, இவன குண்டுகட்பாலியாதனாராற்பாடப்பெற்றவன். 2. கபிலரதுகையைப்பற்றி நுமகைமெல்லியவென, அவராற்பாடப்பெற்ற சேரன்.

(11) சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரமான்பொறை — தனது முரசுகட்டிலிலறியாதேறி நித்திரைசெய்த மோசிகீரனாரைத் தண்டியாது அவர் துயிலெழுந்தெழுந் துணையுங் கவரிவீசி நின்றபெருந்தகைமையாளனாய சேரன். பதிற்றுப்பத்தினுள் எட்டாம்பத்தாலே தனைப்பாடிய அரிசில் கிழாருக்கு ஒன்பதிலக்ஷம் பொன்பரிசில்கொடுத்தோனும் தகடூரைவென்றவனு மிவனே.

(12) சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி — சோழனுடைய பாமுளூரை வென்றுகைக்கொண்ட சேரன். இவன் ஊன் பொதிபசுங்குடையாரால் பாடப்பெற்றவன்.

(13) சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ — இவன் கொடையாலும் வீரத்தாலும் புகழ்படைத்த வொருசேரன. பேய்மகள் இளவெயினியாற் பாடப்பெற்றவன். பாட்டிலும் வல்லவன.

(14) சேரமான் பெருஞ்சேரளாதன் — இவன் கரிகாற்சோழனுக்குத்தோற்று நாணிவடநாட்டிற் சென்றிருந்த சேரன். இவன் கழாத்தலையார் வெண்ணிக்குயத்தியார் என்னும் இருவராலும் பாடப்பெற்றவன்.

(15) சேரமான் பெருஞ்சோற்று உதியன்சேரலாதன்—இவன் பாண்டவர்களும் கௌரவர்களும் செய்த யுத்தகாலத்திலே அவர்கள் சேனைகளுக்கு அத்யுத்தம் முடியுங்காறும் நல்லுணவளித்த பெருஞ்செல்வனுகிய சேரன்- இவன முரிஞ்சியூர் முடிநாகராயரால் பாடப்பெற்றவன்.

(16) சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை—இவன் சோழன்ராஜசூயம்வேட்ட பெருநற்கிள்ளியோடு போர்செய்த சேரன்- இவன்பொருந்திலிளங்கீரனாலும்,வடவண்ணக்கன் பெருஞ்சாத்தனாலும் பாடப்பெற்றவன்.

(17) சேரமான் மாவெண்கோ—கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியும்,சோழன் இராஜசூயம் வேட்டபெருநற்கிள்ளியும் இச்சேரன் காலத்தவர்கள்- மூவரும் நட்பினர்கள்-இச்சேரமானே சேரமான்பெருமாளுயனெனப் பெயர் கொண்டவர்-இவரைப்பாடிய புலவர் ஔவையார்.

(18) சேரமான் யானைக்கட்சேரலிரும் பொறை — மாந்தரஞ்சேரலிரும்பொறை பாதுகாத்த நாடு தேவருலகத்தை யொக்கும் என்றுலகம் போற்ற அரசுபுரிந்த சேரன்- இவன் தன்னைப்பாடும் புலவர்க்குப் பிறரிடத்தேசென்று பாடியிரந்து நில்லாவண்ணம் அளவின்றிப் பெரும்பொருள் வழங்கும் பெருங் கொடை வள்ளல். இவனைப்பாடிய புலவர் குறுங்கோழியூர்கிழார்.

(19) சேரமான் வஞ்சன் — இவன் திருத்தமாறனாற்பாடப் பெற்ற சேரன். அபிதானகோசம—167—171 பக்கங்கள்

---

மூன்றும் அத்தியாயம்-

## திருவநந்தபுர வமலஸ்தானம்.

சேரமான்பெருமாளுடைய சந்ததிகள் கள்ளிக்கோட்டையி லாண்டுவரும் போது அவர்கள்மீது கொங்கு நாட்டரசர்கள் படையெடுத்துப்போனதில்; அந்தச் சேரமான்பெருமாளுடைய சந்ததிகள்பயந்து கி-மு 1242ஆம் திருவனந்தபுரம் குடிபுகுந்தார்கள். பரசுராமர்காலத்தில் பானுவிக்கிரமனுடைய அண்ணன் குமாரனான ஆதித்தியவிக்கிரமனுக்கு பட்டங்கட்டியபோது குடிபுகுந்ததாக ஒருசாசனத்தினால் தெரியவருகிறது. ஆயினும் திருவநந்தபுர சரித்திரத்தைப் பற்றி மிஸ்டர் சங்குண்ணி மேனன் எழுதியதில் அடியிற்கண்ட இராஜர்கள் திருவனந்தபுரத்தை ஆண்டதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது:—

### திருவனந்தபுரத்தை ஆண்ட அரசர்கள்.

(பானுவிக்கிரமன காலந்தெரியவில்லை) வீரமார்த்தாண்டவர்மா கி-பி 731ம் உதயமார்த்தாண்டவர்மா 824(இவர் காலத்தில்தான் மலையாள கொல்லமாண்டு என்னும் புதுவருஷ ஆரம்பம்) ஆதித்தியவர்மா 1188ஆம் வீரராமமார்த்தாண்டன் 1335—1336, (இவர்காலத்தில திருவாங்கூர் கோட்டை கட்டப்பட்டது- ஏரிவிலஹறவர்மா 1376—1382- கேரளவர்மா 1382—3ம் சேரஉதயவர்மா (சோமாதேவி மனைவி) 1382—1444, வானவராத முத்துராஜவர்மா 1444—1458, வீரமார்த்தாண்டவர்மா 1458—1471, ஆதித்தியவர்மா 1471—1478; ஏரிவீரவர்மா 1478—1504, மார்த்தாண்டவர்மா 1504—6ம் வீரஏரி வீரவர்மா 1504—1528, மார்த்தாண்டவர்மா 1528—1537. உதயமார்த்தாண்டவர்மா 1537—1560, கேரளசேகரவர்மா 1560—1567, ஆதித்தியவர்மா 1594—1604 உதயமார்த்தாண்டவர்மா 1604—1606, வீர ஏரிவர்மா 1606—1619, வீரபானுவர்மா 1619—1625, இரவிவர்மா 1625—1631, உன்னிகேரளவர்மா 1631—

1661, ஆதித்தியவர்மா 1661—1677, உமயம்மாள் இராணியார் 1677—1684, இரவிவர்மா 1684—1718, உண்ணிகேரளவர்மா 1718—1724, இராமவர்மா 1724—1728, (இக்காலத்தில் மதுரை விஜயரங்கநாயக்கரொரு படையெடுத்துப் போய் கப்பம்வாங்கிக்கொண்டு பிறகு இராஜிசெய்யப்பட்டது) மார்த்தாண்டவர்மா 1728—1758, இராமவர்மா 1758—1798, பாலராமவர்மா 1798—1810 கவுரிலக்ஷ்மி ராணியார் 1810—1815, கவுரிபார்வதி பாயம்மாள் 1815—1829, இராமவர்மா 1829—1847, மார்த்தாண்டவர்மா 1847—1860, ருக்குமணி பாயம்மாள் 1860—6? இராமவர்மா 1860—1880, ஆராமவர்மா 1880—1885 ஸ்ரீலஸ்ரீ பத்மநாப தாஸவஞ்சி பலராமவர்மா, குலசேகரகிரீடபதி மன்னி சுல்தான் மகாராஜராஜ இராமராஜபகதூர் ஸமஸ்தானத்துக்கு மகாராஜர் 1885ஆம் ஆகஸ்டுமாதம் 19உ பட்டாபிஷேகம் பெற்றார்.

அவர்களில் ஸ்ரீராமவர்மா மகாராஜாவை மகாமதியூகியென்று புகழ்பெற்ற இராஜா மாதவராயரிடம் நான்குவருஷங்கள் வரையில் படிப்பிக்கப்பட்டதில்; அந்த ராஜா மஹாவித்துவ சிரோமணியாகி அனேக இங்கிலீஷ்பாஷா புத்தகங்களை மலையாளபாஷையில் மொழிபெயர்த்து வித்தியார்த்திகளுடைய விஞ்ஞானத்தை விருத்தியாக்கிவந்தார்.

அந்த இராஜா பிரபலமான பெருத்த புத்தகசாலையை நியமித்ததுடன்; அந்த மூல கிருஷிசாஸ்திர நிபுணராக இருந்தபடியால், நாட்டில் பலவிதப் பூ, காய், கனி செடிகளையும், காப்பிக்கொட்டை, தேயிலை, மரவள்ளிக்கிழங்கு, மணிலா, புகையிலை முதலான பயிர்களையும் வைத்து பயிர்செய்து குடிகளுக்குக் காட்டினார். அவர் சித்திரம் [illegible] எழுதுவதிலும் வல்லவர். நாட்டின் பூர்வசரித்திரங்களைத்தேடி சென்னையில் மிஸ்டர் ஜே. பி. நாடகருல் நடத்திய 'அதீனியம்' பத்திரிகைக்கும், கல்கட்டா ரிவியூ பத்திரிகைக்கும் எழுதிவந்தார். இந்துதேசம் முழுமையும் யாத்திரைசெய்து சுற்றிப்பார்த்து அனேக சங்கதிகளை அறிந்தவர். அத்துடனேகூட மஹா மதியூகி ஆகிய மாதவராயர், அந்தச் சமஸ்தானத்துக்கு மந்திரியாகி, மேற்படி ஸமஸ்தானமே 1858ஆம் முதல் 1872ஆம் வரையில் அவர் அதிகாரத்திலிருந்தபடியால்; அந்த திவான் உடனே தக்க சீர்திருத்தங்களைக்கையாடி வர்த்தகம், வரி, வைத்தியம், வித்தியா விவசாயாதி விஷயங்களில் விசேஷ சீர்திருத்தங்களைச் செய்து குடிகளுடைய க்ஷேமத்தை விருத்தியாக்கினார். பிறகு திவான் சேஷய்யசாஸ்திரிகளும், வெம்பாக்கம் ராமய்யங்காரரும், ஸ்ரீகிருஷ்ணசாமிராயரும், மாதவராயருடைய திவானைப்போலவே அனேக சீர்திருத்தங்களைச் செய்வித்தார்கள்.

இப்போது இந்தத்திருவனந்தபுர ஸமஸ்தானத்தின் (1894ஆம்) சுற்றளவு 6730 சதுரமைல், இதினுள் 1891ஆம் கானிஷுமாரி கணக்கின்படி 25,57,840 ஜனங்கள் இருந்தார்கள். 1881ஆம் கானிஷுமாரிப்படி 17,55,000 இந்துக்களும், 4,98,000 கிறிஸ்தவர்களும், 1,47,000 மகம்மதியரும் குடியிருந்ததாக கணக்கிடப்பட்டிருப்பதால்; இந்நாட்டில் கிறிஸ்தவர்கள் அதிகமாக இருக்கிற தாகத்தோன்றும். அப்படி இருந்தாலும் தற்கால ராஜாவும் திவானவர்களும் சகலமதஸ்தர்களையும் சமரசமாக நடத்திவருகிறார்கள். இப்போது 66,66,000 ரூபாய் ஸமஸ்தான வரும்படியாக விருந்தது. வித்தியா விஷயத்தில் இச்சமஸ்தானம் மற்றவைகளைவிட சிறந்ததென்று சொல்லலாம். இத்தேசி

கூட 45 ஊட்டுப்புரைகளென்னும் அன்னசத்திரங்களை ஸ்தாபித்து, ஆயிரக்கணக்கான ஏழைப்பிராமணர்களை ஆதரித்துவருகிறார்கள் —

## நான்காம் அத்தியாயம்.

### சேரநாட்டார் என்று சிலர் தப்பிதமாய் எண்ணி இருக்கும்

# கொங்குநாட்டு அரசர்கள்.

சேரநாட்டாரையே கொங்குநாட்டாரென்று சிலர் எண்ணியிருக்கிறார்கள். ஆனால் சரித்திர சாசனங்களினால் சேரநாட்டார் வேறு ஜாதியென்றும், கொங்குநாட்டார் வேறு ஜாதியாரென்றும் ஸ்பஷ்டமாகிறது. எப்படியெனில் அநேகர் ஜனங்களுடைய இராஜநீதி கிரந்தங்களிலும், பொட்டோலமி (Ptolemy's Works in R. Asiatic Research Vol- VII—1-86) என்பவர் எழுதிய கிரந்தங்களிலும்; கொங்குநாட்டார் கி-பி 1132ஆம் ஒரிசாநாட்டிலிருந்த கங்கைகுலத்தாரென்றும், அவர்கள் 16-ம் நூற்றாண்டில் சிவசமுத்திரத்தில் ஸமஸ்தானத்தை ஸ்தாபித்ததில்; அதை விஜயநகர கிருஷ்ணதேவராயலால் ஜயிக்கப்பட்ட பிறகு, அவர்களுடைய சந்ததிகள் இப்போது கோயமுத்தூர் ஜில்லா வைச்சார்ந்த கரூரைப்பிரதான பட்டணமாகக்கொண்டு ஆண்டுவந்ததாகவும், அப்படி ஆண்டவர்களில் அடியில் கண்டவர்கள் சிரேஷ்டர்கள் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் எவர்களெனில்:—

வீரராயசக்கிரவர்த்தி, கோவிந்தராயன், கிருஷ்ணராயன், கலாவல்லபராயன், கோவிந்தராயன், சதுர்புஜகாமதேயன், திருவிக்கிரமதேவன், கொங்கணிவர்மன், மாதவராயன், ஹரிவர்மராயன், பரிகுலாதிராயன், நரசிம்மராயன், விஷ்ணுகோபவர்மன்; பிரிகுலாதித்தராயன், மாதவராயன், கிருஷ்ணவர்மன், கொங்காணிமதிராயன், ஹரிச்சந்திரராயன், கிருஷ்ணவர்மன், கொங்காணிமாதிராயன், துருவிந்தராயன், மூஷ்கரராயன், பிரம்மஹத்திராயன், திருவிக்கிரமராயன், பூவிக்கிரமராயன், வல்லபராயன், நவகாமராயன், இராஜகோவிந்தன், சந்திவர்மன், சிவராமன், பிருதிவி கொங்கணி, விஜயாதித்தியன், மல்லதேவன், காந்ததேவன்; சத்தியவாக்கியன், குணதுத்தமன், வல்லதேவன், காலிங்கராயன், இவர்களாண்ட காலமுதலானதுகளை விவரமாகக் காட்டும் சாசனங்கள் இன்னமும் அகப்படவில்லை ஆயினும் மிஸ்டர் டாசன் (Mr. Dawson's Paper in Asiatic Journal Vol. VIII) கிரந்தத்திலும், சேலம்ஜில்லா மானியலில் கனம்போக்ஸ் (Rev- Foulke's Historical Papers) எழுதிய சரித்திரத்திலும் ஒருவாறு அறியலாம்.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

# சோழராஜியம்.

### சோழமண்டல எல்லையைக்காட்டும்.

### வெண்பா.

கடல்கிழக்குத் தெற்குக்கரை பொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக்கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணையிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லை எனச்சொல்.

சோழராஜியம், கிழக்குந்தெற்கும் கடலும், வடக்குவெள்ளாறும்; மேற்கு பாண்டிநாட்டு எல்லையாக உடையது—அது காவிரி நதிபாயும் நாடாதலினலுஞ் சீர்மலிவான் புனனாடென்றும், காரணவிகுதி பெயர்களைக்கொண்டு நீர்வளம்

நீர்வளம் பொருந்திய நல்நாடு. அது காவிரி-பூம்பட்டினம், கருவூர், திருவாரூர், தஞ்சை, திருக்குடந்தை, காஞ்சி முதலான சிறந்த இராஜதானி நகரங்களை உடையது.

## சோழராஜர்களும்—அவர்கள் ஆண்டகாலமும்.

சோழராஜர்கள் இன்னவர்களென்றும், அவர்கள் ஆண்ட காலமும், இடமும் இன்னின்னவை என்றும், ஸ்பஷ்டமாகக் காட்டும் சரித்திர சாசனம் கிடைக்கவில்லை. தென்னாட்டுப் புராணங்களைப் பரிசோதிப்போமாகில்; அவைகளிற் சில சோழர்களுடைய பெயர்களையும், அவர்கள் கட்டிவணங்கிய சைவ வைணவக் கோயில்களின் பெருமைகளையும், பற்றி மாத்திரம் சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக்கின்றனவே ஒழிய; அவர்களாற் குடிகளுக்குண்டான சாதகபாதக கால தேசவர்த்தமானங்களைப்பற்றி விபரமாகச் சொல்லப்படவில்லை. சிலபுராண காவியங்களில் திருநீற்றுச்சோழன், மநுநீதிகண்டசோழன், குளக்கோட்டுச் சோழன், தனையுன்னுபூபாலசோழன், விடலராயசோழன், குலோத்துங்க சோழன், இராமபத்திர சூரப்பசோழன முதலான சிலருடைய சரித்திரங்களைப் பற்றி மாத்திரம் சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன—எப்படி எனில்.

## வருண சிந்தாமணியின்படி.

முசுகுந்தன பூர்வஜன்மத்தில் குரங்காக இருந்து, வில்வித்தைப்பறித்து சிவபெருமான்மீது எறிந்த புண்ணியத்தினால் சக்கிரவர்த்தியாகியும்; இராக்ஷதரால் வருந்திய தேவேந்திரனுக்கு உதவிசெய்ததனால் தேவேந்திர னதமார்த்தமாகிய தியாகராஜபெருமானைப் பெற்றுவந்து, திருவாரூரில பூசைசெய்ததனால்; பெருமைபெற்றானும—

காடுவெட்டிய சோழன் — பாண்டியனுக்கு பயந்து மதுரை மீனாக்ஷி சுந்தரேசுவரரை வேண்டி தவிக்க: அந்த ஈசுவரர், இராககாலத்தில் கொண்டுபோய் பாண்டியன் இட்டிருந்த கதவு முதலியவைநீக்கி தரிசனம் பெறச்செய்தாராம்.

கோச்செங்கட்சோழ நாயனார்—இவர் முன்ஜென்மத்தில் சிலம்பியாகி இருந்து, பட்டுநூலிழைத்து பந்தல்போட்டு சிவபெருமானை வணங்கியசால அரசனாக பிறந்தார்—இவர 63 நாயன்மார்களில் ஒருவராம.

புகழ்ச்சோழநாயனார்—இவர் உறையூரிலிருந்து ஆண்டு, கருவூருக்குவந்து கொங்கு, குடகு நாட்டரசர்கள் கொணர்ந்தத் திறைப்பொருளைப்பெற்று மரியாதைசெய்தனுப்ப; அதிகனென்னும் மலைநாட்டரசன திறையைச்செலுத்தாமையால், படையோடுபோய், அவன்சேனைகளைவெட்டிவிழுத்த; அதில் ஒருசிரசில் சடையிருக்கக்கண்டு, ஐயோ? சிவதுரோகம் செய்தோமென்றெண்ணி அச்சிரசோடு அக்கினிகுண்டத்தில் விழு, சிவபதமடைந்தாராம்— இவரும் 63 நாயன்மார்களில் ஒருவராம்.

அபயகுலசேகரசோழன்—இவர் திருவாரூரை இராஜதானியாக்கொண்டு ஆளுகையில்; ஓதுவார் பாடியபண்களைக் கேட்டு மகிழ்ந்து மற்றப்பண்களை தேடிபிடிக்க கங்கணம்கட்டிக்கொண்டு, பொல்லாப்பிள்ளை

யானை பூசித்தருள்பெற்ற நம்பியாண்டார் நம்பியைக்கொண்டு சிதம்பரத்தில் ஈடேசர்பால் இருக்கக்கண்டு பிடித்தவராம்.

அநபாயசோழன்—இவர் ஜீவகசிந்தாமணியை மெச்சி பார்ட்டி வருவதை, அவர் மந்திரி சேக்கிழார் நாயனாகண்டு, அவரைதிருத்த எண்ணி தில்லைவாழ்ந்தணர் முதலானவர் திருவடியார்களுடைய சரித்திரங்களைப் படிக்கும்படிக் —ஏவி, பலநியாயங்களை எடுத்துச்சொல்ல சுந்திரமூர்த்திசுவாமிகள்— பதினொரு திருப்பாடல்களாகப் பாடியருளிய திருத்தொண்டைத்தொகைக்கு, பொல்லாப்பிள்ளை பொருள் சொல்லியதை, நம்பியாண்டார் நம்பி தமதுபெயரை முன்னிட்ட கவித்துறைத் திருவந்தாதியை விரித்து புராணமாகப் பாடவேண்டுமென,(அநபாயச்சோழன் வேண்ட) அந்தசேக்கிழார் இணங்கி, சிதம்பரம்வந்து நடராஜபெருமான் "உலகெலாமென" அடி எடுத்துக்கொடுக்க பெரியபுராணம் பாடினாராம்.

ஆதொண்டசோழன் —இவர்தந்தையாகிய மணிகண்டசோழன் அல்லது குலோத்துங்கசோழன், ஒருநாள் வேட்டைக்குபோகிய வனத்தில் ஒரு ரிஷிகன்னிகையாகிய நாககன்னிகைகையை ஆதொண்டை பூமாலையைச்சாற்றி, காந்தர்வ விவாஹஞ்செய்துக்கொண்டதனால் பிறந்தவர்—இவர்தந்தை தனது இராஜியத்தின் தென்பாகத்தை பட்டமகிஷியின் குமாரனுக்குக்கொடுத்தும்; வடபாகத்தை இந்த ஆதொண்டருக்குக கொடுத்தும் ஆளச்செய்தாராம்—இவர் ஆண்டபாகத்திற்கு தொண்டைமண்டல மென்று பெயராகியது—இவர் தமது நாட்டில் வேளாளரை குடியேற்றி சிறப்பித்தபடியால், அவர்கள் தொண்டைமண்டல வேளாளர் என்றபெயரைப் பெற்றார்கள். அந்தொண்டமண்டலத்தின் எல்லையாவன—

வெண்பா.

மேற்குப் பவளமலை வேங்கடமோ வடக்கா
மார்க்கு முவரி யணிகிழக்கு—பார்க்குளுயர்
தெற்குப் பினாகி திகழி குபதின் காத
நற்றொண்டை நாடெனவே நாட்டு.

இத்தொண்டைமண்டலத்திற்கு காஞ்சிபுரம் தலைநகரமாம்—இதுநிற்க.

---

கலிங்கத்துப்பரணி, திருத்தொண்டர் திருவந்தாதி, திருவிசைப்பா, விக்கிரமங்கதேவசரித்திரம், பொருநராற்றுப்படை, பட்டினப்பாலை, விக்கிரமசோழன் உலா, குலோத்துங்சோழன் கோவை, விடலராயன் பலசந்தமாலை முதலான கிரந்தங்களில் ஒருவாறு சொல்லப்பட்டிருக்கினும்; பூரணமாகத் தெரிவிக்கப் பெறவில்லை.

பிங்கல முனிவர்செய்த பிங்கலந்தை என்னும் பிங்கலநிகண்டில், "சென்னிவளவன் செம்பியன் கிள்ளி, பொன்னித்துறைவன் புலிக்கொடியோன் மால், கோழிவேந்த னேரி வெற்ப ஞாயிறகண்ணிய னேரியன்பயன் சூரியன் புன்னாடன் சோழன் பெயரே"—என்று சொன்ன 747-வது சூத்திரத்தின்படி-சோழனுக்கு சென்னி வளவன், செம்பியன், கிள்ளி, பொன்னித்துறைவன்;

புலிக்கொடியோன், மாக்கோழிவேந்தன், சேரிவெற்பன், ஆரின்கண்ணியன், சேரியன், அபயன்; சூரியன், புன்னாடன் எனபலப்பெயர்கள் உண்டாம்,

சோழர்கள் ஐம்புவன் அல்லது சாம்பவன் கோத்திரத்தைச் சார்ந்திருந்தனுலும்; அவர்களுடைய ராஜியபரிபாலனம் பானுவைப்போல பிரகாசித்ததனுல் சூரியன் என்றபெயரைப் பெற்றிருந்ததனுலும்; சாம்புவன் அல்லது சம்பியன் அல்லது சூரியன் ஆண்டராஜியத்துக்கு சாம்பிய மண்டலம் அல்லது சம்பிய மண்டலம் அல்லது சூரியன மண்டலமென்ற பெயருண்டாகி; அது நாளாவட்டத்தில் சோழமண்டலம் என்றபெயரைப் பெற்றதாகத் தோன்றுகிறது.

பிறகு 1902௵ம் மதுரைத்தமிழ்ச் சங்கத்தாருக்கு அகப்பட்ட கலிங்கத்துப்பரணி யேட்டை ஆதாரமாகக்கொண்டு மகா-ள-ஸ்ரீ, வி. கனகசபைப்பிள்ளையவர்கள் (பி. ஏ. பி. எல்) சுபகிருது வருஷ கார்த்திகை, மார்கழி, தைமாதங்களின் செந்தமிழ்ப் பத்திரிகைகளில் பின்வருகிற கருத்தை எழுதியிருக்கிறார்.

ஜயங்கொண்டார்—கலிங்கத்துப்பரணியில், "சூராதிராசன் முதலாகவரும் சோழனு முறைமைட் சோழமண்டல மமைத்த பிறகேழுலகையு மிராசகேசரிகளாமிருவரானையெனவு மேறுவெம்புலியினுணையென நின்றவருளும்" என்று பாட்டுகளின்படி சோழராஜியத்தை முதல்முதல் ஸ்தாபித்தவன் சூராதிராஜன் என்றும்; அவன் மகன் விஜயாலயன் கி-பி 830—850௵ம் பிரகாசித்தவனும்—அவன் கொடும்பை என்னும் ஏரிக்கரையோரமிருக்கும் கொடும்பாளூர் அரசன் இடங்கழியார்வழியில் தோன்றினவனும்—தஞ்சையை ராஜதானியாக்கி, வரகுணபாண்டியனை துரத்தியடித்து, திருவிடைமருதூர் சிவாலய மேற்குவாயிற்கோபுரமமைத்தவனும். அவன்காலத்தில் அமோகவர்ஷன் என்னும் மராட்டிரமன்னன் அபிமானம்பெற்ற ஜினசேனன் என்னும் சமணமுனி மஹாபுராணத்தின் முதற்பாகமாகிய ஆதிபுராணத்தை எழுதி முடித்தாராம்.

அந்தவிஜயாலயன் காலத்தில் ஆதிசங்கராசாரியர் அப்போது புகழ்பெற்ற சிவஸ்தலங்களாக இருந்த தில்லையையும், திருவிடை மருதூரையும், குடமூக்கு என்னும் கும்பகோணத்தையும் தரிசித்துப்போனாராம்—பிறகு.

ஆதித்தசோழன் கி-பி 850—880௵ம்

விஜயாலயன் இறந்தபிறகு; அவன்மகன் ஆதித்தன் தஞ்சையில் சிம்மாசனமேறினான். அவனுக்கு கோவிராஜ கேசரிவர்மன் என்னும் இராஜேந்திரன் என்றும் பெயர்கள் வழங்கின்றன—அவன் கொங்குநாட்டின்மேற் படையெடுத்துப்போய், அப்போது தலைக்காடு அல்லது தலவனபுரம் ராஜதானியில் அரசபுரிந்த பிருதிவீபதியின் மகன் சிவமாரனோடு சண்டைசெய்து, சையமலைவரையிலுள்ள கொங்குநாட்டைப் பிடித்தும்; தஞ்சையைவிட்டு உறையூரைத் தனது ராஜதானியாக்கிக்கொண்டானும்—பிறகு காஞ்சிபுரத்திலிருந்த பல்லவராஜ கோவிஜய திருபதுங்கவர்மனுடைய மகளை மணம்புரிந்து, பல்லவநாட்டிற்கும் அரசனானும், பிறகு கொங்குநாட்டில் கொள்ளையடித்தப் பொருளைக்கொண்டு தில்லையில் கோயில் கூடகோபுரம் மாடமாளிகைகளைக் கட்டிவைத்ததாக (தக்கயாகப்பரணி 835,836, 837ல், "கூடமெடுத்த குலத்தோடு கோபுர மாடமெடுத்த பிரான்மகன் வாழியே"—என ஒட்டக்கூத்தர் பாடியிருக்கிறார்—அன்றியும்.

பல்யாற்றங்கரையிலே, களந்தை என்னும் ஊரிலே, ஆதித்தீச்சரம் என்னும் சிவாலயம் எழுப்பித்தானும். பிறகு தனது பகைவனான வல்லான் என்னும்

அரசனை செங்குந்தரில் தலைவராகிய பழுவூர் வீரன், பழுவை நாராயணன் கச்சித்தனியன் முதலான 12 பெயர்களைக்கொண்டு ஜயசீலனாகியும்; பிறகு திருச்செந்தூரிலிருந்த சூபன் என்னும் செங்குந்தனை துணைக்கொண்டும் ஈழநாட்டரசனை வென்றானும்—

செங்குந்தார் குலத்திலுதித்த ஒட்டக்கூட்டத்தர் ஆதித்தனுடைய சமுக வித்துவனாகவும்; அவன்மகன் குலத்துங்கனுக்கு உபாத்தியாயனாகவுமிருந்தான். ஆதித்தனுக்கு மூப்பு அதிகரித்து, தன்மகன் குலோத்துங்கனுக்கு இளவரசு பட்டங்கட்ட, உறையூரை அலங்கரித்து அநேக பெருநில குறுநில மன்னர்கள் முன்பட்டாபிஷேகம் செய்தபோது; இளவரசன்பேரில் வாழ்த்துக் கவியாக ஒட்டக்கூடத்தர். "ஆடும் கடைமணி நாவசையாம லகிலமெங்கு,நீடுங்குடையைத் தரித்தபிரான்—என்றுகூற—இளவரசன்கேட்டு—"பாடும் புலவர் புகழொட்டங் கூத்தன்பதாம்புயத்தைச்—சூடும் குலோத்துங்க சோழனென்றே யென்னைச் சொல்லுவரே"—என்றுபாடி முடித்தானும்—

இந்த ஒட்டகூத்தாரே, குலோதத்துங்கனுக்கு பாண்டியன் பெண்ணை விவாஹம்செய்யத் தூதுப்போன காலத்தில், ஆதித்தன் மறைந்தானும். இந்த ஆதித்தன் காலத்தில்தான் ஸ்ரீசங்கராசாரியருடைய சிடர் தேவேசுவரரும், அவருடைய சிடராகிய சர்வ ஞாதமன் என்பவர் சம்க்ஷேப சாரீரகம் என்னும கிரந்ததை எழுதினதாகத் தோன்றுகிறது—இதுநிற்க.

சோழர்கள் சந்திரவமிச க்ஷத்திரியர்கள் என ஹரிவமிசமென்னும், புராணத்திற் சொல்லப்படடிருப்பதைப்போலவே; சோழர்களிற் முதலரசன் துஷியந்தனுடைய பௌத்திரனாகிய ஆசிரதனுடைய புத்திரன் என்று அபிதானப்ரகாசத்தில சொலலப்படடிருக்கிறது.

சோழர்களுடைய ஆதிஉற்பத்தியைப் பற்றிபலவருஷங்களாக சோதித்து வரும் கவர்ன்மெண்டு சிலாசாசன பண்டிதர் ஸ்ரீவெங்கயரவர்கள் "சோழர்கள்" சூரியவமிசத்தாரென்றும், அந்தராஜியத்தைமுதலிற் ஸ்தாபித்தவன் விஜயாலயன் என்றும் (1900௵ம் நவம்பர் ௴ இந்தியன் ரிவியூவ் புத்தகத்தில் எழுதியிருக்கிறார் (Vide Pages 504—506 A Page in South Indian History in the Indian Review No. 11 Nov. 1900)

இதற்கு ஓர் ஆதாரமாக 1837-ம் வருஷம் கல்கத்தா ஆசியாடிக் சொஸைடி சரித்திர சஞ்சிகை 7-வது புத்தகம் 2-வது பாகம் 123-வது பக்கத்தில்.

"சேர சோழ பாண்டிய நாடுகள் உள்ளான விடமானது ஒருகாலத்தில் தண்டகாரணிய மென்னும் பெயரால் பயங்கரமான காடாகவும்; அதில் புலி சிங்கம் யானை முதலான கொடியமிருகங்களும், இராக்ஷதர்களும் வதிந்து வந்தாகவும்; அப்படிப்பட்டவிடத்திற்கு அயோத்தியாவிலிருந்து ஸ்ரீராமர் தெற்கே வந்தபோது அவருடன் வந்த ஒருவீரனுக்கு தாயமன்நல்லி, என்று பெயரென்றும்; அந்தத்தாயமன் நல்லி, ஸ்ரீராமருடைய உத்தரவின்படி காவிரி பாய்ந்து பாயும் திரிசிபுரமென்னும் இடத்தில் தங்கியிருந்து அங்கிருக்கும் மலையின்மீது தனதுபெயர் வழங்கும்படி "தாயமன் நல்லி சுவாமி" என்னும் நாமதேயத்தால் ஒரு சிவஸ்தலத்தை உண்டாக்கி சதாசிவப்பூஜைசெய்துகொண்டு வருகையில்; அந்தச்சிவபெருமானைத் தரிசிக்கவந்தவர்களுக்கு அனுகூலமாக அங்கிருந்த பயங்கரமானக் காட்டைக்களைந்தும், வாவிகூபங்களையும், வீடுகள் கடைகள் முதலான வசதிகளையுண்டாக்கியும், அங்கு

நங்கி வியவசாயம் செய்பவர்களுக்கு வேண்டிய கால்வாய் முதலான பாசன வசதிகளை நியமித்து ஆண்டுவந்ததாகவும், பிறகு அவனது முதல் குமாரனாகிய "தர்மவர்ம சோழன்" ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தின் முதல் பிராகாரத்தைக் கட்டுவித்தும் அநேக தருமங்களைச்செய்தும் ஸ்ரீரங்கத்தை ஒரு கிராமமாக்கியதாகவும்; அவனது 2-வது குமாரனாகிய வெண்சோழன் ஆண்டு வந்தபோது காவிரிநதியினால் "வெண்ணாற்றைச்" சேர்த்து குடித்தன பாசன வசதியை விருத்தியாக்கியதால்; அச்சோழனுக்கு வெண்சோழன் என்ற பெயருண்டாகிய தென்றும்; பிறகு அச்சோழனுடைய குமாரனாகிய கரிக்காலச்சோழன், காவிரி நதியின்மீது பெரிய அணையைக் கட்டுவித்ததாகவும் சொல்லப்பெற்றிருக்கிறது.

இச்சாசனத்தையும் சரியான சாசனமென்று எண்ணக் கூடவில்லை; ஏனெனில், திரிசிரபுரமானது ஒருகாலத்தில் பயங்கரமான மூன்று சிரசுகளை உடைய ஒருராக்ஷதன் வசித்தவிடமென்று ஸ்தலபுராணாதிகளால் ஸ்பஷ்டமாகிறது. மேலும், அங்கிருக்கும் "தாயுமானசுவாமி" என்னும் சிவஸ்தலம் மஹாபுராதனமானதென்றும்; அங்கிருக்கும் சிவபெருமான், ஓர் தாயற்றப் பிள்ளைக்குப் பாலைகொடுத்து, பாதுகாத்தபடியால்; அந்தமூர்த்திக்கு மாத்ருபூவனேசுவரர் என்று சமஸ்கிருத பாஷையிலும், தாயுமானவர்என்று தமிழிலும் வழங்கிவருகையில்; வடதேசத்திலிருந்து வந்து இங்கு குடிபுகுந்த தாயுமான் நல்லி என்றவன்பெயர் எப்படிவந்ததோ தெரியவில்லை.

தென்னாட்டிற் சிறந்த தமிழ்பாஷையில் அச்சோழர்கள்வசித்த காலத்தில் எழுதிய சில ஸ்தலபுராணங்களையும், முக்கியமாகக் கோயில் புராணம், இரணியவன்மச்சருக்கம் 9; 10, 11, 17, 23, 33, 52, 53, 132-கவிகளிலும்; மேற்படி புராணம் திருவிழாச் சருக்கம் 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12; 13-வது கவிகளிலும்; பெரியபுராணம் கூற்றுவநாயனார் சரித்திரம் 1, 2, 3, 4, 5-வது கவிகளிலும், கலிங்கத்துப்பரணி முதலானதுகளில் சோழர்களுடைய ஆதிசரித்திரம் முதலானதுகளை சொல்லப்பெற்றிருக்கின்றன—எப்படியெனில்,

கவுடேசன் என்னும் கவுடதேசத்தை ஆண்டுவந்த மகாராஜாவுக்கு சிங்கவர்மன், வேதவர்மன், சுமதி, என்ற மூன்று குமாரர்கள் பிறந்ததில்; மூத்த குமாரனை சிங்கவர்மாவுக்கு தேகத்தில் வெண்குஷ்டரோகமிருந்தபடியால் இனிப் பிறவித் துன்பத்தைச் சகிக்கமுடியாமல், தனது பிதுரார்ஜிதமான ராஜ்ய பாரத்தைத் தனது தந்தைக்குப் பிறகு, தன் தம்பிமார்களாகிய வேதவர்மா, சுமதி என்பவர்களே பரிபாலனம் பண்ணச்சொல்லிவிட்டு; தான் ஒரு சந்நியாசியைப்போல வேடந்தரித்தும், அப்போது தண்டகாரணியமாக இருந்த தென்னாட்டைநாடிவந்தும், தபோநிதியாகியும், முதலில் ஸ்ரீசைலம்; காளாஸ்திரியில் தங்கியும், அங்குள்ள சிவமூர்த்திகளைப் பூசித்தும; பிறகு காஞ்சிபுரத்துக்கேகி அங்குள்ள ஏகாம்பரநாதரைப் பூசித்தும்; பிறகு தில்லைவனமாக இருந்த சிதம்பரத்துக்குப்போய் அங்கிருந்த வியாக்கிரபாதரைத் தரிசித்தும்; பிறகு அவருடைய உதவியினால் பதஞ்சலி மஹாமுனிவரைத் தரிசித்தும்; அவரால் நடேசருடைய அருளைப்பெற்றும்; அங்கிருந்த 'சிவகங்கை' என்னும் திவ்விய தடாகத்தில் மூழ்கத் தனது தேகத்திலிருந்த வெண் குஷ்டவியாதிநீங்கி பொன்மேனியாக—இரணியவர்மா என்ற மறுபெயரைப் பெற்றும்; சதாசிவ

பக்தியில் மூழ்கி வசித்துவரும்போது; தனது தந்தை இறந்தசங்கதியைக்கேட்டு கவுடதேசம்போய், தானனுபவித்த சிவச்சுகங்களைச்சொல்லித் தக்கதண்டுதளாதிகளுடனும், திரவியத்துடனும், அங்கிருந்த 3,000 பிராம்மணிஷிகளுடனும் தில்லைவனத்திற்குத் திரும்பிவந்து, அங்கிருந்த பயங்கரமான காட்டைக்களைந்தும், பயங்கர புலிகளைகொன்றும், அக்காட்டை நல்லநாடாக்கியும், அனேகவாவி கூபகூட கோபுரங் கோயில்களையும், தாமழைத்துவந்த மூவாயிர பிராம்மண ரிஷிகளாகிய அந்தணர்களுக்கு அழகிய வீடுகளையும், மானியங்களையும் நியமித்தும்; அந்தஸ்தலத்துக்குச்சமீபமாக, கீழ்புறத்தில் தான் குடியிருக்க 'படைவீடு' கட்டிவைத்தும்; சபாநாயகர் முதலான விக்கிரகங்களை உண்டாக்கியும்; சபாநாயகர் வீற்றிராநின்ற பஞ்சாக்ஷரப் படியின்மீது வியாக்கிரமர், பதஞ்சலியார் களால் பட்டாபிஷேகம் பெற்றும், புலிப்பதியாகிய சிதம்பரத்துக்கு அரசனாகிய தால், புலிக்கொடியை விருதாகப்பெற்றும், பஞ்சாக்ஷர உருவாகிய திருநீறைத் தரித்ததனால், திருநீற்றுச் சோழன் என்ற மற்றொரு சைவப்பெயரையும் பெற்றும், தம்குடிகளிடம் 5 ல் ஒருகடமையாக வரிவாங்கிகொண்டும், பிரபலமாக ஆண்டுவந்தபிறகு; கூற்றுவநாயனார் என்னும் ஓர் சூத்திரசூரன் புஜபலபராக்கிரமத்தினால் அநேக பெருநில குறுநில மன்னர்களை ஜயித்துகொண்டுக் கடைசியாக சிதம்பரத்துக்கு வந்து, பஞ்சாக்ஷரப்படியில் சோழனுக்குப் பட்டாபிஷேகம் செய்த விடத்தில் தனக்கும்பட்டாபிஷேகம்செய்து கிரீடம் தரிக்கவேண்டுமென்றுசொல்ல; அப்போது தில்லைமூவாயிரவர்பார்த்து, இராஜியபரிபாலனத்துக்கு க்ஷத்திரியனாகப்பிறந்தவனே தக்கவனாதலால்; சூத்திரனுக்குத் தகாதெனத் தடுத்துச்சொல்ல, அந்தக்கூற்றுவநாயனார் கோபத்தினால் கொக்கரித்து, அந்தத் தில்லை மூவாயிரவரை வதைக்க எத்தனிக்கையில்; அந்தத்தில்லை அந்தணர் சோழனுடைய சகோதரனாகிய சேரனுடைய தேசமாகும் மலையாளத்தில் குடிபுகுந்துவிட, அவர்களை அந்த மலையாளத்தார் பட்டர்கள் என்றபெயரால் மரியாதையுடன் பாதுகாத்து வருவதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தச்சரித்திரம் கூடிய வரையில் அனுபவத்துக்குப் பொருந்தியிருக்கிறது. அந்தச் சிங்கவர்மன் அல்லது இரணியவர்மனுடைய சந்ததிகளே சோழர்கள் என்று பிரபலப்பெயர்களைப்பெற்று பிதா பரமென்னும் சிதம்பரத்தையும், கொள்ளிடக்கரையில் தேவிகோட்டையையும், திரிசிரபுரம், உறையூர், தஞ்சை, கருவூர், காஞ்சி முதலான விடங்களையும் பிரதான கெடிஸ்தலங்களாககொண்டு ஆண்டுவந்ததாக அனேகசரித்திரங்கள் நிருக்கின்றன — இதுநிற்க—

இப்போது ஆங்கில கவர்ன்மெண்டார் அதிகப்பொருளையும், புத்தியையும் செலவிட்டு புராதனசாசன சரித்திரங்களைத்தேடிக் கண்டுபிடித்து வருகின்றனர் அவர்களால் ஏற்பட்டு தென்னிந்திய சரித்திரசாசனங்களைப்பரிசோதித்து கிரந்தமெழுதிய இராபர்ட் சுவேல் சாஸ்திரியாருடைய ஆர்கியாலோஜிகல் சர்வேசரித்திர புத்தகம், 2-வது வாலியம், 154 முதல் 160 வது பக்கங்களிலும், மிஸ்டர் எலியட் எழுதிய இந்துதேச சரித்திரத்திலும், கனம் போகன் அவர்கள் எழுதிசேர்த்த சேலம் ஜில்லா சரித்திரம் முதல் வாலியம் 39 வது பக்கத்திலும் அடியிற்கண்ட சோழர்களுடைய பெயர்களையும், ஆண்டகாலத்தையும் ஒருவாறு குறிக்கப்பெற்றிருக்கின்றன.

## சோழர்களின் பெயர்களும்—ஆண்டகாலமும்.

விஜயாலயசோழன், கி-பி 855—880 ஆதித்தியவர்மா, 880—905, வீரசோழ நாராயணதேவன், 905—930 ஹரிஞ்ஜயராஜன், மூன்றுமாதம் தசோதி

தியராயன், 930—950 பராந்தகராயன், 950—970 திவியராயன், 970—990 இராஜராஜேந்திரன், 990—995 இராஜேந்திரன், 995—998 கரிக்காலசோழன், 950 இராஜராஜசோழன், 1023—1064, வீரசோழன், 1064—1112, விக்கிரம சோழன், 1113—1128 குலோத்துங்கன், 1128—1130 விக்கிரமதேவன், 1135 —1146 என்றும்.

திருத்தணியில் அகப்பட்ட சாசனத்திற்கண்ட சிட்டாவின்படி.

கரிக்காலசோழன், சக்கிரவர்த்திசோழன், சூடாமசோழன், ருசிகசோழன், நாராயணராஜன, யாவதியசோழன், இராஜராஜசோழன் (கி-பி 1023—64) விஜயாதித்தியசோழன், 1079 விக்கிரமாதித்தியசோழன,குலத்துங்கன், 1128-ஆறு கங்கைகண்டசோழன், குண்டலசோழன், சாரங்கதரன், விக்கிரமசோழன்; ஆதொண்டசோழன, இராஜசிங்கசோழன், விப்ரதேவசோழன், 1079 வருஷம் ஆரங்கவர்மன், இராஜேந்திரன், குலத்துங்கன். 11— பராக்கிரமசோழன்; என்றும்.

தஞ்சை பிருகதீசுவரர் கோயில் மஹாத்மியத்தின் வம்சாவளியில்.

குலத்துங்கன், தேவசோழன், சசிசேகரசோழன், சிவலிங்கன்,கரிக்காலன், பீமசோழன்; இராஜராஜன், வீரமார்த்தாண்டன், கீர்த்திவர்த்தனன், ஜயசோழன் கனகசோழன், சுந்தரசோழன், காலாகலசோழன், கலியாணசோழன், பாதிர சோழன், என்றும்.

காஞ்சீபுரத்திலகப்பட்ட சாசன சிட்டாவின்படி.

விஜயசோழன், 991 முதல்—வீரனீசக்கிரசோழன், 1011 உத்தண்டிசோழன், 1026 சுகுணசோழன், 1067 பிரபாகரசோழன, 1069 குணாகரசோழன், 1091 சுதிமணிசோழன், 1138 ஏகாம்பரசோழன்; 1186 மகேந்திரசோழன, 1217 கற்பூரராஜகசோழன், 1242—1262 விஜயநந்தகோபாலன், 1260 இராஜ குமார பகைப்பசோழன், 1260—72 என்றும்.

தில்லை, திரிசிராபள்ளி, கரூர் சாசன சிட்டாவின்படி.

இரண்மாயசோழன், தாயுமானசோழன், தருமவருமசோழன், ஸ்ரீரங்க கோயிலின், உற்பிரகாரம் கட்டுவித்தவன், விஜயாலயன் கி-பி ஆதித்தசோழன் பராந்தகன், அல்லது கோபகேசரிவர்மா, அல்லது வீரநாராயணன, இராஜாதித் தன், கண்டராதித்தன், அரிஞ்ஜயன், இராஜாதித்தன், கண்டராதித்தன், ஆதித் தியவர்மா, மதுராந்தகன், பரகேசரிவர்மா, குலோத்துங்கன, ஜயகரசோழன், விஜயாதித்தன்,வீரசோழன், குலோத்துங்கசோழன், ராஜராஜ குலோத்துங்கன், விக்கிரமசோழன், கிருமிகண்டசோழன்—ஸ்ரீராமாநுஜருக்கு விரோதி — மன்னை ரைவென்ற ராஜன் 1240 என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கின்றது.

இப்படி தெரிவித்திருக்கிற சோழர்களுடைய சிட்டாவைப் படிப்பவர்களு க்கு அவர்களுடைய பெயர்களும், காலமும் இடத்திற்கிடம் வித்தியாசப்பெற் றிருத்தல் பிரதியக்ஷமாகும், அப்படி வித்தியாசப்பெற்றிருப்பதற்கு தக்க சாசன சரித்திரங்கள் இன்னும் அகப்படாமையே காரணமாகும்.

இனி அச்சோழர்களுடைய பெயர் இடம் காலம் காரியம்முதலானது களைப்பற்றி ஆங்கிலேய சரித்திர சாசனங்களுடைய கருத்துக்களைப்பற்றி தெரிவிப்பாம்.

மைசூர்ச் சமஸ்தான சரித்திரமெழுதிய மிஸ்டர் ரைஸ், தமது சரித்திரம் முதல் புத்தகம் 212-வது பக்கத்தில, மைசூருக்குக் கீழ்பக்கத்தில் கி-பி 867 முதல் 927௵ ஆதித்தியவர்மா, இராஜேந்திரசோழனும்.—927முதல் 977௵ வரையில் வீரசோழன் அல்லது நாராயணராஜனும், பிறகு 986௵ முதல 1023௵ வரையில் தசோதித்தியராய சோழனும், பிறகு பாண்டிசிகராயன், ஹரிசவீராயன், தேவராஜன், திவியராயன, திரிபுவனன, வீரசோழன், முறையே ஆண்டதாகசாசனங்களகப்பட்டதாகத் தெரிவித்திருக்கிறார்.

சேலம்ஜில்லா சரித்திரத்தில் கனம் போகஸ் பாதிரியார் மேற்படி முதல் புத்தகம் 39-வது பக்கத்தின் முதலில விஜயாதிசோழனும், கி-பி 878 ல் விஜயராய ஆதித்தியவர்மனும், பிறகு சிதம்பரத்தில "கனகசபையை" க்கட்டுவித்த வீரசோழ நாராயணனும், அச்சோழனுக்கு ஹிரண்ஜயன், தேசோதிதியன் பிராணதியாகராயன் முதலான குமாரர்கள பிறக்க, அவர்களில் பிராணதியாகராயன; சேதுராயனுடைய குமாரத்தியை விவாஹஞ்செய்து கொண்டதில் திவியராயனும், இராஜராஜேந்திரராயனும் இராஜேந்திரசோழனும் பிறந்ததாக எழுதி இருக்கிறார்.

தஞ்சையில் நீதியதிபதியாக இருந்த மிஸ்டர் பர்னல் சாஸ்திரியார் தென்னிந்தியா பாலியோகிராபி புத்தகம் 40-வது பக்கம், முதல் கோட்டில கி-மு 250-ம வருஷம் வடக்கே அரசுபுரிந்த அசோக மகாராஜன் காலத்திலே, தெற்கே சோழர்கள் சோடன என்ற பெயர்களால் பிரபலமாக ஆண்டதாகவும், கி-பி 950-௵ கரிக்காலசோழனும், 1023—1064௵ இராஜராஜேந்திரனும், 1064—1113௵ வீரசோழன் அல்லது குலோத்துங்கனும, 1113—1128௵. விக்கிரமசோழனும்; 1335௵ விக்கிரமாதிசோழனும, அச்சோழர்களில் இராஜராஜேந்திரன், சாளுக்கிய ஜாதியார் குடும்பத்தில ஒருபெண்ணை விவாகஞ்செய்து கொண்டதில், காளிங்கநாடு வெங்கிகோட்டையும சோழராஜியத்துடன் சேர்க்கப்பெற்றதாகவும, அச்சோழன்தான 1059௵ இலங்கையின்மீது படையெடுத்துப்போய் மஹேந்திரராஜனையும, அவனமனைவி லோகமகாதேவியையும் பிடித்து சிறையில்வைத்து சோழநாட்டிலிருந்த ஒரு குருசில மன்னனைத்தருவித்து இலங்கைக்கு அதிபதியாக்கியதாகவும எழுதி இருப்பதனறியவு,

1064௵ குலோத்துங்கசோழன பாண்டியநாட்டையும், அதை ஆண்டு வந்த வீரபாண்டியனையும் பிடித்தும, காஞ்சீபுரத்தில அப்போது பிரபலமாக இருந்த பல்லவரையும ஜயித்து சமாசகியவ னென்றும அந்தச்சோழனுக்கு தானை கோபகேசரி, சோலப்ரேமை, வீரராஜேந்திரன என்றும்பெயர்களாம் அவன்காலத்தில் சோழராஜியம துங்கபத்திரா நதிக்கரைவரையில பரவிப் பிரகாசித்ததாம. அவன தனை ஜயித்த இலங்காபுரிகோட்டையைத் தக்கபடி பாதுகாத்தனைதாலும, மஹேந்திரனுடைய மகனை 26-வயதுள்ள 'கசியபன்' சிலகாலம் காட்டில வனவாசியாகத் திரிந்துகொண்டிருந்தும, தக்க தண்டு தளாதிகளைத்தேடிக்கொண்டுவந்தும, இலங்கையையாண்ட சோழனுடைய பிரதிநிதியைத் தாக்கி ஜயித்தும், சிறையிலவைத்திருந்த தாய்தந்தைகளை விடுதலைசெய்தும, தானே செங்கோலைக் கைக்கொண்டு ஆண்டுவர; இடரென்ற மாபு நோயகண்டு மரணமடையவே, அவன மந்திரியாகிய லோகேசுவரன் ஆண்டுவர; அவனுக்குப்பிறகு அவனகுமாரன விஜயபாகு அரசனுனனும். அவன சியம் காட்டு தருமபதியைத் தக்கபடி மரியாதைசெய்தும, சோழனுடைய தானாதிபதி

ளைபத்தக்கபடி மரியாதை செய்யாமலும் உபேக்ஷையாக இருந்தபடியால்; சோழன், தனது நாட்டில்வந்து வசித்துவந்த சிங்களநாட்டு ராஜபுத்திரனைப் பிடித்து காதுமூக்குகளை அறுத்தும், அவமானப்படுத்தியும், இலங்கை நாட்டின்மேல் படையெடுத்துப்போய் தாக்க; 'விஜயபாகு' தக்கதண்டு தளாதிகளோடு வந்து தடுத்து சோழனை ஓட்டிவிட்டானும்,

அந்தக்குலோத்துங்கன் 1118௵ இறந்துவிட; அவனது இரண்டுகுமாரர்களில் விக்கிரமசோழன் அரசுசெய்யும்போது, சிங்களதேசத்தார் பெரும்படையெடுத்துவந்தும் ஜயித்தார்களில்லை. அந்தக்குலோத்துங்கனுடைய தாசிகுமாரனை ஆ த ண் ட சோ ழ ன் பல்லவர்களை முறியடித்ததாகத் திருத்தணிகையும், நாராயணவனத்திலும் அகப்பட்டசாசனங்களினால் ஸ்பஷ்டமாகிறது.

கரிக்கால சோழனுக்குப் பிறகு, சக்கிரவர்த்தி சோழனும், பிறகு சுதமான், குசோமன், நாராயணன் ஆண்டதாகவும்; நாராயணவன சாசனத்தின்படி ஆதண்டன், சுதர்மன், சூரியன், சோமஜன், நாராயணன் ஆண்டதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

கனக்கிரியிலகப்பட்ட சாசனத்தின்படி, குலோத்துங்கனுக்கு சாரங்கதரன் என்ற சகோதரனும், இராஜசோழன் என்னும் குமாரனும் இருந்ததாகவும்; அந்த சாரங்கதரன் நன்னயப்பட்டரிடம் தெலுங்கு வியாகரணம் வாசித்ததாக அப்பகவி எழுதியிருக்கிறார். இக்குலோத்துங்கன் வங்காளம்வரையில் போனதாகவும் ஒருசாசனத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

டாக்டர் கால்ட்வேல் சாக்கிரிக்கு அகப்பட்ட சாசனத்தில், 1023-1064 வருஷம் இராஜராஜசோழன் ஒருசண்டையில் கொல்லப்பட்டதாகவும்; பிறகு விஜயாதித்தியசோழன் 15௵ ஆண்டு, 1079௵ இறந்ததாகவும், அவன் சகோதரன் விக்கிரமாதித்தியன், சாளுக்கிய குடும்பத்தில் ஒருபெண்ணை விவாகம் செய்துகொண்டதாகவும், இராஜராஜேந்திர சோழன் மகனாகிய இராஜேந்திர வர்மன் 1079௵ சிங்காசனமேறி, லோகமாதாவை விவாகம்செய்துகொண்டு, 1064௵ முதல் 1113௵ வரையில் ஆண்டதாகவும்; அவன் சகோதரனாகிய கங்கைகொண்டான்சோழன் சுந்தரபாண்டியனுக்குப்பிறகு பாண்டியநாட்டையும் ஆண்டான் என்றும்; மற்றொரு சகோதரனாகிய குண்டலசோழன் சாளுக்கிய இராஜகுமாரத்தியாகிய வி ம லா வ தி யை விவாகஞ்செய்துகொள்ள, அவள் வயிற்றில் சாரங்கதரன் பிறந்து மகா வித்வசிகாமணியாகப் பிரகாசிக்க, அவனது குமாரனாகிய விக்கிரமசோழன் 1116௵ முதல் 1128௵ வரையில் அரசு செய்தானென்றும்; அவன் மகன் குலோத்துங்கன் 1129௵ பட்டத்திற்கு வந்து தமிழ்நாடெல்லாவற்றையும் ஜயித்து ஆண்டானென்றும்; அவனுடைய தாசிமகனை ஆதண்டசோழன் தொண்டமான் சக்கிரவர்த்தி என்ற பெயரைப்பெற்று அப்போது பிரபலமாகவிருந்த பல்லவரை ஜயித்தான் என்றும்; அவன் தம்பி இராஜராஜசோழன் கலிங்கநாட்டையும், அவனுடைய தம்பி விஷ்ணுவர்த்தனன் 1079—1102௵ வரையில் கலிங்கநாட்டை ஆண்டதாகவும், அவர்களுக்கு சோடகங்கை என்ற ஒருசகோதரி இருந்ததாகவும் எழுதி இருக்கிறது.

சிங்களதேச சரித்திரத்தின்படி, 1153முதல் 1186௵ வரையில் பராக்கிரமபாகு; குலசேகர பாண்டியன்மேல் படையெடுத்துப்போய் இராமேசுவரத்தை ஜயித்து அதேதிருந்த ஆறு குறுநிலமன்னர்களை ஜயித்தானும்,

காஞ்சீபுரம்—(191 Inscription) சாசனத்தின்படி, கர்பூர ராஜராஜ சோழன் 1242௵ சிங்காசனமேறி 20௵ ஆண்டும்; 104—194 நெம்பர் சாசனங்களின்படி, விஜயகாந்த கோபாலசோழன் 1250௵ சிங்காசனமேறியும். 60 — நெம்பர் சாசனத்தின்படி இராஜகுமார பங்கப்பதேவசோழன் 1265௵ சிங்காசனமேறி அவ்விடத்திய தேவாலயங்களில் நித்திய நைமித்திகச்சடங்குகளுக்கு வேண்டிய தருமங்களைத் திட்டப்படுத்தினனும்,

டாக்டர் பர்ஜஸ் (Dr. Burgess) டாக்டர் பர்னல் (Dr. Burnell) சாஸ்திரிகளுக்கு அகப்பட்டசாசனங்களாகிய தஞ்சை பிருஹதீசுவரர் மஹாத்மியத்தின்படிக்கு, குலோத்துங்கசோழனுக்குப்பிறகு தேவசோழன், சசிசோழன், சிவலிங்கசோழன், கரிக்காலன், பீமசோழன், இராஜேந்திரன, வீரமார்த்தாண்டன், கீர்த்திவர்த்தனன், ஜெயசோழன், கலியாணசோழன், புத்திரசோழன், கனகசோழன், சுந்தரசோழன், காலாகலசோழன், கலியாணசோழராஜர்கள் தஞ்சையைப் பிரதான பட்டணமாகக்கொண்டு ஆண்டுவந்ததாகத் தெரிவித்திருக்கின்றனர்.

1837௵ கல்கத்தாவில் ஜேம்ஸ் 'பிரன்சிப்' அவர்களால் பதிப்பித்த ஜர்னல் ஆப் ஆசியாடிக் சொஸைடி சஞ்சிகை 6-வது வாலியம், 507-வது பக்கத்தில் கண்டிருக்கிற இரண்டொரு சோழர்களுடைய சரித்திர சாரத்தை இங்கெழுதுகிறோம்.

வயலவ ராச ஆதித்யசோழனுக்கு 16-ம் வயது வந்தவுடனே திரிசிரபுரத்துக்கடுத்த காளியூரில் முடிசூடப்பெற்றான். முடிசூட்டப்பெற்றவுடனே தனது இராஜ்ய பரிபாலனத்தை மந்திரிவசத்தில் விட்டுவிட்டு, தான் சைவ மதத்தைப் பரவச்செய்து வருகிற நாளில், ஒரு காட்டானை வகைமோசமாக காட்டில்வந்து குடிகளை வருத்துகையில், அதைப்பிடித்துவரும்படி 100 வீரர்களையனுப்பினான். அந்த வீரர்கள யானையைத் துரத்திக்கொண்டுவரும்போது வழியில் ஒரு சன்னியாசி சிவன்கோயிலுக்குப்போய் பூசைசெய்து புஷ்பமாலையைத்தரித்து வருவதை அந்தக்காட்டானை கண்டுவந்து, அந்தச் சன்னியாசி தரித்திருந்த சிவபூஜா புஷ்பமாலையைப் பிடித்திழுத்து சின்னபின்னமாக்க; சன்னியாசிக்கு மிகமிஞ்சிய கோபம் ஜனித்து, அந்த யானையையும், அதை யோட்டிக்கொண்டுவந்த 100 ஜனங்களையும் கண்டதுண்டமாக வெட்டிக் கொல்ல; அதுசங்கதியைச் சோழன் அறிந்து அந்த சன்னியாசியைக்கொல்ல சேனையுடன்வர; அந்தச்சன்னியாசி விபூதி உருத்திராக்ஷ மாலைமுதலான சைவசின்னங்களைத் தரித்திருப்பதைப் பார்த்தும் தம் படையைப் பின்னேநிறுத்தி விட்டு, தான் பாதசாரியாகவந்து சன்னியாசியின் பாதத்தில் வீழ்ந்து; தமது அபசாரத்தை க்ஷமிக்கவேண்டுமென்று வேண்ட, அதுகண்ட சன்னியாசி அந்தோ! இப்படிப்பட்ட சைவநெறியுள்ள மன்னனுடைய வீரரையும், யானையையும் கொன்றோமே என்று பரிதபித்தும், இனி பிராணன் தரிப்பது தகாதெனத் தனது கைவாளால் குத்திக்கொண்டு தன்பிராணனைவிடப் பிரயத்தனப்படுகையில், சோழன்பார்த்து ஐயோ, தனது பதாதிகள் ஓடிவந்ததனாலல்லவா ? காட்டானைவந்து சன்னியாசியின் பூமாலையைக் கெடுத்ததாலேயால்; அக்குற்றம் தன்னைச்சார்ந்ததென்றும், அக்குற்றத்துக்கு தன்னுயிரை விடுதல்தான் தருமமெனத் தானே தன்வாளால் குத்திக்கொண்டிறந்தானும். அப்படி சைவநெறி

விஷயமாகப் பிராணனைவிட்ட சோழன் மனைவி அப்போது பூரணகர்ப்பவதியாக இருந்தபடியால், அப்போது ஒரு ஆண் மகனை அச்சுபதினத்திற் பெற அச்சிசுவுக்கு சுபச்சோழன் என்று பெயரிட்டார்கள்.

சுபச்சோழன் சிங்காசனமேறிய வுடனே ஜம்புகேசுவரத்துக்கு வந்து சிவபூசைசெய்துகொண்டு 36ஆவது ஆண்டபிறகு, அவன்குமாரன் வருணசோழன் பட்டத்துக்குவந்து 75ஆவது ஆண்டு வருகையில்; தனது மனைவியின் வலதுகையைப்பிடித்து இழுத்து ஜம்புகேசுவரருக்கு தத்தஞ்செய்ய, அந்த ஈசுவரர் சோழன் தொட்ட வலதுகையைமாத்திரம்விட்டு, மற்ற பாகத்தை அங்கீகரிக்கச்; சோழன் கண்டு, தனது பாவ எண்ணங்களையும், கரத்தையும்பற்றி அநுதாபப்பட்டுவேண்ட, ஜம்புகேசுவரர் அந்த வலதுகையையும் அங்கீகரித்தாராம். அவர்களுடைய குமாரன்.

புகழ்சோழன் உறையூரைத்தனது பிரதானபட்டணமாக்கிகொண்டு 60ஆவது ஆண்டான். அந்தப்புகழ்சோழனுடைய மந்திரி காட்டில் தருமசத்திரம் முதலானதுகளைக்கட்ட திரவியத்துக்காக சேரநாட்டின்மேல் படையெடுத்துப் போக; அங்கு, தோல்வியடைந்தபடியால், இராஜ மெய்புதனுக்காகசுமார் 100 பெயருடைய சிரசுகளை வெட்டிக்கொண்டுவந்துகாட்ட, அதில் ஒருசிரசு சிவவேடம் தரித்திருக்கக்கண்டு அந்தோ! சிவபக்தனையும் கொலைசெய்தாயோ என்று துக்கித்து, அந்தப்பாவத்துக்காக தன்னுயிரை மாய்த்துக்கொண்டானும். அவனுக்குப்பிறகு அவனது குமாரனும் மஹாவித்வசிகாமணியும் சைவபக்தனும் தரும்நீதிமானுமாகிய

கிருபாலசோழன் பட்டத்துக்கு வந்தான் அவன் தன்னாட்டில் ஒவ்வொருவீதியிலும் ஒருபெரிய மணியைகட்டித தொங்கவிட்டு துஷ்டர்களாலும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களாலும் குறைவு குற்றங்களுண்டானால், உடனே குடிகள்போய் அந்தமணியை அடித்தால்; மணியோசை உண்டான வுடனே அதிகாரிகள்போய் விசாரித்து நீதிசெலுத்தக் கட்டாயவிதிகளை நியமித்திருந்தபடியால்; அச்சோழன்காலத்தில் புலியும் பசுவும் ஒரு குளத்தில் தண்ணீர்குடித்ததாம்.

அச்சோழனுடைய குமாரனாகிய வீதிவிடங்கசோழன் ஒருநாள் இரதாரூடனாக வரும்போது; ஒருசேவ பசுவும்; கன்றும் எதிரேவர, இராஜ கோலாஹலத்தினால் கன்று பசுவைவிட்டுப் பிரிந்து இரதத்தின் சக்கிரத்தில் சிக்கி இரண்டு துண்டாகப்பட்டது. இதைக்கேட்ட கிருபாலசோழன், மகா துக்கப்பட்டு மந்திரியை அழைத்து, தன் வாளைக்கொடுத்துத் தன்குமாரனை வீதிவிடங்கனைக்கொன்றுவிட்டு வரும்படி உத்திரவு கொடுத்தனுப்ப; அம்மந்திரி, இராஜகுமாரனைக்கொல்ல மனமற்று, விதியின்றித் தன் பிராணனையேமாய்த்துக்கொள்ள; இராஜகுமாரன் கண்டு, அந்தோ! நமக்காக மந்திரிபிராணனை விட சம்பவித்ததே! என்று துக்கித்து, அந்தவாளால் தன்பிராணனையும் மாய்த்துக்கொள்ள—கிருபாலசோழன், அறிந்து; ஐயோ! ஒரு பிராணனுக்கு இரண்டு பிராணன் நஷ்டமாகியதைப்பற்றி விசனப்பட்டு, தமது ராஜியத்தை மந்திரிகுமாரனுக்குக் கொடுத்துவிட்டுத் தானும் வாளால் வெட்டிக்கொண்டிறந்தான் — அவனுக்குப்பிறகு

பூபாலசோழன் 16-வது வயதில் பட்டத்திற்கு வந்தான். அவனும் மஹாசிவபக்தன்; அவன் காலத்தில் ஆதி சங்கராசாரியார் பிரகாசித்ததாக ஒரு சாசனம் சொல்லுகின்றது.

இந்தியாதி சித்திரசாசனங்களினுல் சோழராஜர்கள் ஆண்டகாலம், இடம் அவர்களுடைய செங்கோல் சிறப்பு முதலானதுகளை ஸ்பஷ்டமாகக் காட்டும் சரித்திரசாசனம் இன்னமும் சரியாக அகப்படவில்லை என்று ஸ்பஷ்டமாகும்.

சோழர்களுடைய சரித்திரத்தைப்பற்றி சங்கத் தமிழ்ப்புலவர் ஒருவ சோழர் அந்தாதி என்ற கிரந்தத்தில் விவரித்திருக்கிறதாகவும், அந்த நூலை நமக்குத் தருவதாகவும் மகா-௱-ஸ்ரீ சிவன்பிள்ளையவர்கள் சொல்லிக்கொண்டு வந்தவர், தம் உயிர் உள்ள காலவரையில் பலதரம் கேட்டும் தராமல் தரையை விட்டகன்றார். இப்படி நம்மவரிடமு புராதன புத்தகங்கள் இருந்தால், பலருக்கும் வெளியாகும்படி வெளியாக்காதிருப்பது ஆச்சரியம்.

ஆயினும் சோழர்கள் கல்வியையும், கைத்தொழில்களையும், விருத்தியாக்கியு இப்போது தென்னாட்டெங்கி லிருக்கும் பெரும்பான்மையான சைவ வைணவக் கோயில் கோபுரங்களைக் கட்டிவைத்தும், சதாசிவ பக்தியிலும், விஷ்ணுபக்தியிலும் சிறந்தவர்களாகி பிரகாசித்திருந்த தன்றியில், குடிகளிடம் ஐந்தில் ஒரு பாகமாக வரிவாங்கிக்கொண்டும், குடித்தனத்துக்கு இன்றியமையாத கால்வாய்கள், அணைகள் முதலான பாசனவசதிகளை உண்டாக்கியும்; தம் செங்கோலுக்குட்பட்ட குடிகளைத் தம் மக்களைப்போல பாவித்தும் தருமசீலராக ஆண்டுவந்தார்கள் என்பதற்கு சற்றும் சந்தேகமில்லை.

## தமிழ்கவிகளால் பாடப்பெற்ற சோழர்களாவன

---

(அபிதானகோசத்தின்படி)

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி—சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறையைப் போரிடைவென்றவன், சேரமான் மாவெண்கோவுக்கும், கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதிக்கும் நட்பினன். பாண்டரங்கண்ணனாராலும், ஔவையாராலும், உலோச்சனாராலும், பாடப்பட்டவன்.

சோழன் நலங்கிள்ளி சேட்சென்னி — இவன் இலவந்திகைப் பள்ளியிலே பிறந்த சோழன். எறிச்சலூர்மாடலன், மதுரைக் குமாரனாற் பாடப்பட்டவன்.

சோழன் உருவப் பஃறேரிளஞ் சேட்சென்னி—இளஞ்சேட்சென்னி உருவப்பஃறேரினையோன் என்னும் பெயர்களாலும் வழங்கப்படுவன். இவன் வீரக்கொடைகளாற் சிறந்தோன். அழுந்தூர்வேளிடத்துப் பெண்கொண்டோன் என, நச்சினார்க்கினியர் கூறுவர், இவன் கரிகாற்சோழன் தந்தை. இவனைப் பரணரும், பெருங்குன்றூர்கிழாரும் பாடினர்,

சோழன் கரிகாற் பெருவளத்தான்சோழன் கரிகாலன்—உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னிபுதல்வன். இவன் நாங்கூர் வேளாளனிடத்துப் பெண் கொண்டவன், என நச்சினார்க்கினியர் கூறுவர்,

சோழன் கிள்ளிவளவன்— கோவூர் கிழாரால் பாடப்பட்டவனும் ஆவத்தூர் கிழார், கோவூர்கிழார், மாறோக்கத்து நப்பசலையார், இடைக்காடனார் முதலிய புலவர் அநேகரால் பாடப்பட்டவனும் இவனே (புறநானூறு)

சோழன் பெருந்திருமா வளவன்—இவன் குராப்பள்ளியிலே இறந்தவன்- காவிரிப்பூம்பட்டினத்துக் களிக்கண்ணனாராலும், மருத்துவன் தாமோதரனாராலும் பாடப்பட்டவன்.

சோழன் நல்லுருத்திரன்—இவன் புலமை மிக்கோன் என்பது புறநானூற்றில் வரும் அவன்பாடலாலினிது புலப்படும்.

சோழன்மாவளத்தான்—இவன் சோழன் நலங்கிள்ளி தம்பி, தாமப்பல் கண்ணனாரால் பாடப்பட்டவன் (புறநானூறு)

சோழன் நலங்கிள்ளி—பாடும் புலமையுடையவன்- சாத்தனார், கோவூர் கிழார், ஆத்தூர்கிழாரென்னு மூவராலும் பாடப்பட்டவன்.

சோழன் நெய்தலங்கான விளஞ்சேட்சென்னி—ஊன்பொதி பசுங்குடையாரென்பவரால் பாடப்பட்டவன்.

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி—தித்தன் என்னும் சோழன் மகன்- தந்தையைப்பகைத்து நாடிழந்து நல்குரவால் புல்லரிசியுமுண்டு, சிலகாலமிருந்து பின்னர் நாடுகொண் டரசுபுரிந்தவன் (புறநானூறு)

சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி—சேரமான் அந்துவஞ் சேரலிரும்பொறைக்குப் பகைவன். இவனைப்பாடிய புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்,

சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி—பரணராலும், கழாத்தலையராலும் பாமாலைசூட்டப்பட்டவன்.

சோழநாட்டுப் பிடவூர் கிழார்மகன் பெருஞ்சாத்தன் — மதுரை நக்கீரனாரற் பாடப்பட்டவன்- பின்னர் நச்சினார்க்கினியராலும், பொருளதிகாரவுரையினுள்ளே எடுத்துக்கூறப்பட்டவன்.

சோழிய வேனாதி திருக்குட்டுவன்—மிக்கொடையாளன்- எறிச்சிலூர் மாடலன், மதுரைக்குமரனாரற் பாடப்பட்டவ—பினனும்பலருளர்.

அந்தச்சோழர்கள் காலத்திற்றான் ஔவை, கம்பர், காளமேகர், அம்பிகாபதி, தமிழ்ச்சண்டி, வில்லிபுத்தூரார், வாக்சருதர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி முதல் பொய்கையார், கோவூர்கிழார், முதலான வித்துவான்கள் சிறந்து அநேகநூல்களை இயற்றி சோழநாட்டை அலங்கரித்தார்கள்—அனறியும் அந்நாட்டைப்பற்றி.

தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே—
மண்ணாவதுஞ்சோழ மண்டலமே—பெண்ணாம
வேழ முடைத்து மலைநாடு மேதகக—
சோழ வளநாடு சோறுடைத்து—என்றும் ஔவையார்பாடிபுகழ்ந்தார்

அந்தச்சோழர்களில் சிலர், அக்காலத்தில் இராஜாதிகாரிகளாக இருந்தசாளுக்கிய ஜாதியாரிடத்திலும், பல்லவ ஜாதியாரிடத்திலும் சம்பந்தம் செய்ததாகத் தெரிவித்தோமல்லவா? ஆகவே பல்லவர்சரித்திரத்தை இதனடியில் எழுதுகிறோம்.

ஆறாவது அத்தியாயம்.

# பல்லவராஜர்கள்.

பல்லவர், ஒருகாலத்தில் இந்தத் தக்ஷிணதேசத்தில் அதிக பிரபலமாகி இராஜ்யபரிபாலனம் செய்தார்கள். அவர்களுடைய முக்கியபட்டணம் காஞ்சி. அவர்களுடைய தெற்கு எல்லை சோழநாடும், வடக்கு எல்லை கோதாவரி நீரமுமாம்; குண்டூரில் அகப்பட்ட ஒருசாசனத்தினால் அவர்கள் நான்காவது நூற்றாண்டில் பிரபலராக இருந்தவர்களென்று டாக்டர் பர்னல் (Dr. Burnel) சாஸ்திரியார், தமது தென்னிந்திய ஓலை சாசனகிரந்தம் 36 முதல் 39 ஆவது பக்கங்களிலும்; ணைம் போகஸ் (Rev, Foulkes) அவர்கள் சேலம்ஜில்லா சரித்திரத்திலும் சிறப்பித்து எழுதியிருக்கிறார்கள்.

## அக்குடும்பத்திலாண்ட முக்கிய அரசர்களாவன.

விஜயஸ்கந்தவர்மா, விஜயபுத்தவர்மா, ஸ்கந்தவர்மா, வீரவர்மா, சிம்மவர்மா, விஷ்ணுவர்மா, ஸ்கந்தவர்மா, சிம்மவர்மா, நந்திவர்மா, சிவ விஷ்ணுவர்மா, மஹேந்திரவர்மா, நரசிம்மவர்மா, மஹேந்திரவர்மா, பரமேஸ்வரவர்மா, நரசிம்மவர்மா, நந்திவர்மா, பல்லவமல்லநந்தி, பராக்கிரமவர்மா என்பவர்களே.

## செந்தமிழிற் கண்ட சிட்டாவின்படி.

உக்கிரதண்டன் என்ற லோகாதித்தன், இராஜசிம்கன் என்றசிம்கவிஷ்ணு, குணபரனென்ற மஹேந்திரவர்மா, வாதாபிகொண்ட நரசிம்மவர்மன், மஹேந்திரவர்மன், பரமேச்சரவர்மன், நரசிம்மவர்மன், பரமேச்சரவர்மன், நந்திவர்மன், நந்திவர்மன், பல்லவமல்லன் என்பவர்களாம்—

பல்லவர்கள் காலத்தில் அதாவது கி. பி. 650 முதல் 700 வரை ஆதிசங்கராசாரியார், காஞ்சிபுரத்தில் மதோபதேசம்செய்ததாகவும், கி-பி 733 முதல் 714-ம் வரு மேற்கு சாலுக்கிய வமிச விக்கிரமாதித்திய ராசன் காஞ்சிபுரம்வந்து, நந்திபோதவர்மாவைக்கொன்று, காஞ்சியை வசமாக்கி, 11 நூற்றாண்டின் கடைசியில் இராஜேந்திர குலத்துங்க ஆதண்டசோழர்கள் காஞ்சிபுரத்தைத்தாக்கி பல்லவர்களை ஜயித்து, அதைச் சோழநாடாக்கிக்கொண்டதாகவும் ஒருசாசனத்தினால் தெரியவருகிறது.

## பல்லவருடைய ஜாதி சரித்திர விவரம்.

அந்த பல்லவர் இன்னஜாதி, இன்னகுலத்தவர்கள் என்று இன்னும் விவரமாகத் தெரியவகை இல்லை. 1872ஆம் வெளியான ஜாதிசங்கிரக சாரமென்னும் கிரந்தத்தின்; 171வது பக்கத்தில், பல்லவன் என்றபதம், புரவலன் என்ற பதத்திலிருந்து உண்டானதாகவும்; அதாவது—புரம் என்ற தேகத்தில், பலம் என்ற வல்லவனுனபடியால்; அது (புரவலன்) அரசனுக்குரிய பெயரென்றும்; அன்றியும்; வடமொழியில், பகரம், வகரமாகவும்; வகரம், பகரமாகவும் உச்சரித்தல் வழக்கமானபடியால்; பல்லவன் என்பது வல்லவன் எனப் பொருளாகுமென்றும் சொல்லியிருப்பதோடு; பல்லவன் என்பது இராஜனுடைய பெயரெனப் பெரியபுராணம், திருத்தொண்டர் புராணம் 8-வது கவிகளையும் ஷெ. புராணம் திருநாவுக்கரசு சரித்திரம் 84, 88, 95; 144, கவிகளையும், நாலாயிரப்பிரபந்தம், திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் 2, 6, 8, முதலானகவிகளையும்,

உக்கிரதண்டன் என்ற லோகாதித்தன்: இவன் சுமார் 1400-வருடங்களுக்கு முன்பு இருந்தவன்-பல்லவராஜனான சாளுக்கியவேந்தனென்ற ரணரஸிகனுடன் அநேகம் போர்புரிந்தவன்: இவன்றன் மகன் சிங்கவிஷ்ணு என்ற ராஜசிங்கன்- காஞ்சிநகரில், இப்போது கைலாசநாதர்கோயில் எனவழங்கும்இராஜசிம்மேச்சுரத்தைக் கட்டிவைத்தான். இவனுடைய மகன் குணபாரன் என்ற மகேந்திரவர்மன்- இவன்காலத்தில்(அஃதாவது கி-பி 640ம் ஆண்டில்) பல்லவநாடு தெற்கே திரிசிரபுரம்வரையிற் பரவியிருந்தது. சிராப்பள்ளியில் உச்சிப்பிள்ளையார் கோயில் கட்டினவன் இவனேயென்பர், இவன் முதலில் விஷ்ணு சமயத்தவனாயிருந்து, பின்னர் சைவனானவன்- தென்னிந்தியாவில் நான்கு மலைக்கோட்டைகளைக் கட்டிவைத்தான்.

இவன்றன் மகன் நரசிம்மவர்மன்- சாளுக்கியவேந்தனான புலிகேசியை (கி-பி 610—644) வாதாபி என்ற பாடியில்வென்று, தான் முன்னமிழந்த நாடு நகர்களை மீட்டினன்- அறுபத்துமூவருள் ஒருவரான சிறுத்தொண்ட நாயனார் இவ்வாதாபிப்போர்களத்திற் பல்லவன் பக்கல்நின்று போர்புரிந்து வென்றதாகச் சொல்வதுண்டு. இந்த நரசிம்மவர்மன் பேரன் பரமேச்சுரவர்மன் வல்லபராஜனாகிய விக்கிரமாதித்தனுடன் வினைசெய்து வெற்றியடைந்தவன்- இவன் மகன் நரசிம்மவர்மன் கொடியசைவன்-விஷ்ணுவெனில் நாவுறுப்பவன்; ஆனால், பிராமணர்களைப்பொதுவாகக் காப்பாற்றிப் பேணிவந்தான்- வைஷ்ணவ ஆழ்வார்களுள் ஒருவரான திருமழிசையார் இருந்தகாலம் இதுவேயாகலாம். இவ்வாழ்வாரைக் கச்சியிலிருக்க வொண்ணாது பல்லவராஜன் வெருட்ட, அவருந் தொண்டைமண்டல நீங்கித் திருக்குடந்தைவந்து சேர்வாராயினர். இவன்றன் மகன் பரமேச்சுரவர்மன் வைணவ சமயத்தவன், கச்சிமாநகரில் வைகுண்டப் பெருமான்கோயிலென வழங்கும் பரமேச்சுர விண்ணகரத்தைக் கட்டுவித்தான். இவன் அளித்த நன்கொடை எண்ணிலடங்காதனவாகும். இவனுடைய மகன் நந்திவர்மன் பராக்கிரமசாலி யாகாததால், வல்லபனான விக்கிரமாதித்தன் இவனைப் பலகால் முறியடித்துக் கச்சியைக் கைக்கொண்டு, நனிபொன்னும் முத்தும் மணியும் இராஜசிம்மேச்சுர முதலாய தேவாலயங்களுக்கும், ஓத்தில் வல்லரான சதுர்வேதிமாகளுக்கும் வழங்கினன்.

விக்கிரமாதித்தன் கச்சிமாநகரைவிட்டகல, தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்னம்பலமாக்கிய ஹிரணியவர்மப் பல்லவராயன் வழியிற்றோன்றியவனும், மிக்க புஜபல பராக்கிரமசாலியும், வீரவைஷ்ணவனுமான நந்திவர்மன் பல்லவமல்லன் சக்கிரவர்த்தியானான்-இவன் முடிசூடிய காலம் கி-பி 710-க்குப் பின்னராகலாம், இவன் சோழபாண்டியரையும், கடர்கோனான் பிருதிவி வியாக்கிரனையும், இன்னும் அநேக அரசர்களையும் நெல்வேலி, மண்ணைக்குடி, கருவூர் முதலாய போர்க்களங்களிற் றோல்வியடையச் செய்தனன். நந்திக்கலம்பகத்தினும், பாரத வெண்பாவினும், புகழ்ந்து பாடப்பெற்றுள்ளவனும், தெள்ளாறு என்ற படைவீட்டிற் பகையெறிந்தவனும், நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான நந்திபுரவிண்ணகரத்தைக்கட்டுவித்தவனும், இவனாக விருத்தல்வேண்டும். இவனுடைய முதன்மைபெற்றசேனாபதி, வில்லிவலமுடையனான உதய சந்திரன் என்பான். பல்லவசக்கிரவர்த்தி சண்மீதுபொறாமைகொண்ட தென்னாட்டரசர் பலர் ஒன்றுகூடித் தொண்டைமண்டலத்திற் படையெடுத்து நந்திபுர நகரை முற்றுகைசெய்ய, அதனைக்கேள்வியுற்ற, உதயசந்திரன் விரைந்து

சென்று அவர்களையெல்லாம் ஒருங்குசிதறவித்தான். ஆலி நாடுடையாரான திருமங்கையாழ்வார் இந்நந்திவன்மன் சரித்திரத்தைப் பெரியதிருமொழிப் பரமேச்சுரவிண்ணகரப்பதிகத்துட் பரக்கவிளக்கியிருக்கின்றார். மேலும் இதுவரையில் வெளிப்பட்டுள்ள கசகுடி, உதயேந்திரம் செப்பேடுகளாலும் இவற்றைத் தெளிவாய்க்கண்டுகொள்க.

நந்திவன்மப் பல்லவமல்லன் இறந்தபின்பு, சுமார் 50, 60 வருடத்திய சரித்திரம் செவ்வையாய் விளங்கிற்றில்லை. தென்னாட்டு மூவேந்தரும், வல்லபவரசரும் பலாட்டியர்களாகிப் பல்லவர்களை நாசங்கண்டு அவர்கள் நாட்டையும் வ ர்ந்துகொண்டனர். ஆயினும், பல்லவநாட்டில் ஓர்பகுதியேனுநின்று பல்லவராயனென்ற பெயருஞ் சிலகாலமாக வழங்கிவந்தது. சோழகுலத்தரசர்கள் தலைப்படவும், அவர்களில் வீரநாராயணசோழனும், ராஜராஜசோழனும் (கி-பி 985, 1004) சேரம், பாண்டியம், கொங்கு முதலான தென்னாடுகளைக் கைப்பற்றி ஏகசக்கிராதிபதிகளாகிவிட, பல்லவதேசம் யாருமறியாவண்ணம், முற்றும் அழிந்தொழிந்தது"

பல்லவர்கள் காலத்திலே செங்குந்தர் என்னும் மரபினர் குறுநில மன்னர்களாகவும், படைத்தலைவராகவும் இருந்தமையால், பல்லவராஜன் அச்செங்குந்தருக்கு முதலியார் என்று பெயர்கொடுத்ததாக ஈட்டி எழுபது 29வது பாட்டில்,

இந்திர னயன்மாறேவர் யாவர்க்கு முதன்மையாக
வந்தபான்மையினாற் சூலமழுப்படையத் தனார்க்கு
முந்திய நாமந்தானு முதலியராகையாற் செங்
குந்தர் சந்ததிக்கு மப்பேர் முதலியாரென்று கூறும்

என்று சொல்லப்பெற்றிருக்கிறது—அன்றியும்

ஈட்டி எழுபது 3-ம் பாட்டில்.

விடங்கமேழாதி வீதிவிடங்க மாரூர்வெண்காடு
கடங்கொளுதில்லை மூதூர்பஞ்ச நன்னதி சாய்க்காடு
மிடங்கொள் மாகாளமேழு மிடைமருதூர் செங்காடு
தொடங்கிய தருமவாட்சிச் செங்குந்தர்த் தொகுதிவாழ.

என்றுசொல்லி இருப்பதால், தியாகராஜர் பூஜிக்கப்படும் விடங்கம் என்று பெயர்பெற்ற ஏழுதலங்களிலும், மாகாளமென்று வழங்கும் ஏழுஸ்லங்களிலும், செங்குந்தர் தர்மகர்த்தர்களாய் பரிபாலனம் செய்தார்கள். என்பதாம்—ஒட்டக்கூத்தர் அவர் மரபைச்சார்ந்தவர். ஆதித்தசோழனுக்கு உதவிசெய்த பழுவூர் வீரன் முதலான 12 பெயர் அம்மரபைச் சார்ந்தவரேயாம்,

ஏழாவது அத்தியாயம்.

# பாண்டியராஜியம்.

பாண்டிமண்டலத்தின் எல்லை—வெண்பா.

வெள்ளாறது வடக்கா மேற்குப் பெருவழியாந்
தெள்ளார் புறைகன்னி தெற்காகு—முள்ளார்வத்
தாண்ட கடல்கிழக்கா மைம்பத்தறுகாதம்
பாண்டி நாட்டெல்லைப் பதி.—என்றகவியின்படி.

பாண்டியதேசம் சோழதேசத்துக்குத் தென்மேற்கிலே, கன்னியகுமரி வரையுமுள்ள தேசம். அதற்கு இராஜதானி மதுரை. பாண்டியர் அரசுசெய்தமையின் அஃது அப்பெயர் பெற்றது—அதுவே தமிழ்பிறந்தநாடு, அதுமிக்க புராதனமும்,பெருமையும், அநேகசரித்திரங்களும், புண்ணியக்ஷேத்திரங்களும்; நதிகளும், மலைகளுமுள்ள நாடு—தமிழ் முச்சங்கமிருந்ததும்,அநேக புலவர்களைத் தந்ததும் அந்நாடே. அப்பாண்டியர்களுக்குப் பிங்கல நிகண்டில் "செழியன் கூடற்கோமான றென்னவன் வழுதி மீனவன் பஞ்சவன் மாறன கௌரியன் வேம்பின் கண்ணியன் கைதவன மலையப்பொருப்பன் வைகைத்துறைவன் "குமரிச்சேர்ப்பன் கோபாண்டியனே"—என்றால், செழியன், கூடற்கோமான், தென்னவன், வழுதி, மீனவன், பஞ்சவன், மாறன், கௌரியன்; வேம்பின் கண்ணியன், கைதவன், மலையப்பொருப்பன், வைகைத்துறைவன், குமரிச்சேர்ப்பன் என்றுதிபெயர்களுண்டென தெரிவிக்கப்பெற்றிருக்கின்றது.

அப்படித் தெரிவிக்கப்பெற்றிருப்பினும், அப்பாண்டியர்களுடைய சரியான சரித்திரம் திட்டமாக இன்னும் கிட்டவில்லை. கடிகைமுத்துப் புலவர், வரகுணராம பாண்டியன்மேல் இயற்றிய திக்குவிஜய மென்னும் கிரந்தத்திலும்; திருவிளையாடற்புராணம், பெரியபுராணம், மலையனூர் தாழனூர் அரசன பாவாடராயன்சரித்திரம், கல்லாடம், காதற் பிரபந்தம், பாண்டியன் உலா, பாண்டியர் அகவல் முதலான கிரந்தங்களிலும் ஒருவாறு சொல்லப்பெற்றிருப்பினும்; அச்சங்கதிகள் ஒன்றுக்கொன்று வித்தியாசமுள்ளவைகளாகவும், புராணரீதியாகவும் எழுதப்பெற்றிருப்பதால்; உண்மையான் சரித்திரமென்று இக்காலத்தார் அங்கீகரித்தல் அபூர்வம்—எப்படியெனில்.

காதற் பிரபந்தத்தில் "ஆதியுமை மீனாக்ஷியம்மை பங்கின்மேவு சொக்க, நாதர் கொடுக்க நடாத்துகின்ற செஙகோலான்"—என்றும்.

திக்விஜயம் 4-வது தாழிசை "சொக்கர் கொடுத்த செங்கோன்மைத்துரைப் பாண்டியனை வரகுணனைத், தக்க விஜயத்திரம்பாடித் தமிழாற்றுதிக்க மனந்துணிந்தேன்" என்றுதி கவிகளினாற் பாண்டிய வமிசத்தில் பார்வதிதேவியானவள் மீனாக்ஷியம்மையாக,அக்கினிமூலியமாய் மலையத்துவஜ பாண்டியன் மகளாக வந்து; அந்த மலையத்துவஜனுக்கு ஆண் சந்ததிகளில்லாமையால்; பாண்டிய இராஜியபரிபாலனத்தைக்கொண்டு அரசுசெய்தும்; பிறகு சொக்கநாதரென்னும்

சோமசுந்தரபாண்டியனை விவாகம்செய்துகொண்டும்; தனது இராஜியபரிபாலனத்தைத் தனது நாயகரான சொக்கநாதரிடம் கொடுத்துவிட்டதாகவும்; பிறகு அந்தச் சொக்கநாதருக்கும், மீனாக்ஷியம்மைக்கும் பிறந்த உக்கிரப்பெருவழுதி பாண்டியனிடம், இராஜியபாரத்தை கொடுத்தும், பாண்டியர் சந்ததியை விருத்தியாக்கியதாகவும்; அந்தச்சந்ததியைச் சார்ந்தவரே இப்போது சிவகிரியிலிருக்கும் ஜமின்தாரென்றும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது.

திக்குவிஜயம் 9-வது கவியில்—"பரிமயிற் குமரனிவனெனப்பகர்வர், படைமூனைச்சமரில்வியலா, மெரியனற்பொறியி லவனுதித்தவ னெழுதிசைக்கடவுமார்பனே" என்ற கவியினாற்,சுப்பிரமணியக்கடவுளே வரகுணராம பாண்டியன் என்றும், சுப்பிரமணியக்கடவுள் சூரனைஜயிக்க அக்கினி சம்பந்தமாக வந்தாற்போல, வரகுணபாண்டியனும் அக்கினியில் பிறந்தான் என்றும் தெரிவிக்கப் பெற்றிருக்கிறது.

திருவிளையாடற்புராணம்—திருமணப்படலம் 18-வது கவியில்—"மீனவன் கொடியுங்காணவெம் புலிகொடியும்" என்ற கவியினால் பாண்டியர்களுக்கு மீனக்கொடி என்றும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது. வேறு சில புராணங்களிற் பாண்டியர்களிற் குலசேகரபாண்டியன்: முதல் முதல், ம து ரை யி ல் வ ந் து பாண்டியராஜியத்தை ஸ்தாபித்து, மலையத்துவஜ பாண்டியனைப் பெற்றதாகவும், அவன் சூரசேனனுடைய குமாரத்தியை விவாகஞ்செய்துகொண்டதில்,பார்வதிதேவியே தடாதகைப் பிராட்டியாகப் பிறந்து, தனது தந்தையின் இராச்சிய பரிபாலனஞ்செய்து வருகையில்; மதுரைச்சுந்தரேசுவரரை விவாகஞ்செய்துக் கொண்டு, தனதுபாண்டிய ராஜியத்தைத் தனது நாயகராகிய சுந்தரேசுவரரிடம் கொடுத்து ஆளும்படிசெய்ததாகவும்; அந்தச்சுந்தரேசுவரருடைய சந்ததிகளே சிறந்தப் பாண்டியர்களாகித் தென்தேசத்தில் பிரகாசித்ததாகவும் சொல்லப் பெற்றிருக்கின்றது.

## பாண்டிய ராஜர்களின் பெருமை.

## வருண சிந்தாமணியின்படி.

குலசேகரபாண்டியன்—மதுரையில் எழுந்தருளியிருக்கிற மீனாட்சிசுந்தரேசுவரர்களுக்கு ஆலயம் செய்வித்து; மதுரை நகரத்தையும் உண்டுபண்ணி, ஆதிசைவர்களைக் காசியிலிருந்து கொண்டுவந்து அந்நகரத்தில் ஸ்தாபித்தவன்.

மலையத்துவச பாண்டியன்—10,000-வருடமிருந்து, மதுரையையாண்டு 99-அசுவமேத யாகஞ்செய்து, 100-ஆவது யாகத்தில் உலக மாதாவாகிய உமாதேவியாரை மகளாகப்பெற்றவன். தடாதகைப் பிராட்டியார் சோம சுந்தர பாண்டியன், உக்கிரகுமாரபாண்டியன் இம்மூவரும்,முறையே உமாதேவியார், சிவபெருமான், முருகக்கடவுளாதலின், அவர்கள் பெருமையை யெடுத்துச் சொல்ல ஒருவராலுமுடியாது.

இராஜசேகர பாண்டியன்—அன்பு மிகுதியினாலே வெள்ளியம்பல வாணராகிய நடேசப்பெருமானைக் கான்மாறி யாடியருளும்படி செய்தவன்,

குலபூடண பாண்டியன்—இவன் தன்னாட்டிலுண்டான க்ஷாமம் நீங்கச் சிவபெருமானிடத்து உலவாக்கிழி பெற்றவன்.

வரகுணபாண்டியன்—இவன் பக்திமிகுதியினாலே சிவபெருமான் சிவலோகங்காட்டியருளத் தரிசித்தவன்.

குலசேகர பாண்டியன்—இவன் தனக்கும் இடைக்காடரென்னும் புலவருக்குமுள்ள பிணக்கைச் சிவபிரானாலே தீர்த்தருளப்பட்டவன்.

அரிமர்த்தன பாண்டியன்—இவன் மாணிக்கவாசகசுவாமிகளை மந்திரியாகக் கொண்டு, அவரால் நரிகளைப் பரிகளாக்கிக் கொண்டுவந்து தரப்பெற்று, பின்பு சோமசுந்தரக்கடவுளை மண்சுமக்கச்செய்து; அவரைப் பிரம்பாலடித்து, அவரது திருவருள் பெற்றவன்.

கூன்பாண்டியன்—இவன் திருஞானசம்பந்த சுவாமிகளால் தனது கூனல் நிமிரப்பெற்றுச் சுரவியாதி நீங்கிச் சமணரைக் கழுவிலேற்றி, முன்போலச் சைவமதத்துட் பிரவேசித்தவன்—என்று சொல்லப்பெற் றிருக்கிறது.

மஹாவம்சம் என்னும் கிரந்தத்தில்—தடாதகை என்னும் மாதை இலங்கையையாண்டுவந்த விஜயன் என்பவன் விவாஹம் செய்துகொண்டதாகவும் சொல்லப்பெற்றிருக்கிறது. இத்தியாதி சங்கதிகளினால் உண்மையான சரித்திரம் இன்னதென்று அறியக்கூடவில்லை. இனிப் பாண்டியர்களுடைய சங்கதிகளைப் பற்றி ஐரோப்பியருக்கு எட்டியவிவரங்களை எழுதுவாம்.

பாண்டியர்களைப்பற்றி கிரேக்குதேச பூகோளசாஸ்திரிகளுடைய கணக்கின்படிக்கும், (Marcopolo) மார்க்கபோலோ சாஸ்திரியின் கணக்கின்படிக்கும், கி-மு 404ஞூ பிரபலமான இராஜவமிசத்தாரென்றும், வராஹமித்திரரும், பிருஹத்ஸம்ஹிதையிலும் அப்பாண்டியர்களின் பெருமையைப்பற்றியும், தாம்பிரபர்ணி நதியின் பெருமையைப்பற்றியும் புகழ்ந்து எழுதியிருப்பதாகவும்; மாகஸ்தீன் (Magesthen) கணக்கின்படி, கி-மு 250ஞூ பிரபலப்பட்ட இராஜாக்களென்றும்; அசோக மகாராஜனுடைய சாசனகணக்கின்படி, கி-மு 77ஞூ பிரபலம்பெற்ற அரசர்களென்றும்; மஹானாமர் எழுதிய மஹாவம்சம என்னும் சரித்திரகணக்கின்படி, கி-பி 4.9, 477ஞூ இலங்கைத்தீவு மன்னர்களிடம் சண்டைசெய்து ஜயித்தவர்களென்றும், பவுத்தர் கி-மு 447ஞூ நிர்வாணத்தை யடைந்தபோது, இலங்கைநாட்டு விஜயராஜன் பாண்டியன் மகளை விவாகம் செய்துகொண்டான் என்றும்; ஐரோப்பாவைச் சார்ந்த ரோமாபுரியை கி-பி 300ஞூ ஆகஸ்டஸ் அரசன் (Augustus) ஆண்டபோது, ஒருபாண்டியன் அவ்வரசனுடைய சிநேகிதத்தை நாடி அவனது ஸமஸ்தானத்துக்குத் தனது ஸ்தானாபதியை அனுப்பியதாகவும், மிஸ்டர் கால்டுவேல் (Caldwell) சாஸ்திரியார் எழுதிய திருநெல்வேலி சரித்திரம், 17-வது பக்கத்தில்எழுதப்பெற்றிருக்கிறது.

கல்கத்தாவில் 1827ஞூ ஐஞ்லீ பதிப்பித்த, ஜர்னலாப் ஆசியாடிக் சொஸைடியின்சரித்திரத்தில், இலங்கைசரித்திரத்தைப்பற்றிஎழுதியதில், அயோத்திக்கு அரசனாக இருந்த குலசேகரனுடைய மருமகன், உக்கிரசேனன் மரபில் வந்த மாருத பிராட்டியானவள், உக்கிரசேனனை விவாகம்செய்துகொண்டு, தென்றிசையை நாடி இலங்கைக்குவந்து, அடங்காபத்து என்னுமிடத்தில் வரவொத்திமலையோரத்தில், அரண்மனையைக்கட்டி வாழ்ந்துவருங்கால்; வாலும் சிங்கமுகமுமுள்ள ஒரு மகனைப்பெற்று, அதற்கு வராஜசிங்கமென்று பெயரிட்டு அரசனாக்கியதாகவும்; அந்த வராஜசிங்கனென்னும் அரசன் மதுரைப்பாண்டியன் மகளாகிய சாமதூதியை விவாகம்செய்துகொண்டதனால்; மதுரை முதலான

ப்ல நாடுகளிலிருந்து பிராம்மணாதி பலஜாதியாரை அழைத்துப்போய், இலங்கையிற்குடியேற்றியதாகவும், மேற்படி புத்தகம் 48-வது பாராவில், 54பாண்டியர்கள் இலங்கையின 5 விடங்களில இராஜதானியை ஸ்தாபித்தும், அவைகட்கு இளஞ்சிங்கவாகு என்பவனை அரசனாக்கியதாகவும், அந்த 54 பாண்டியர்கள் திரும்பி வருகையில், கடலில் திமிங்கிலத்தினால் கொல்லப்பட்டதாகவும்; அந்தப்பாண்டியர்களுடைய மனைவியர்கள் பலஜாதியார்களோடு இலங்கைக்குப்போய், மூகமலை, யாழ்ப்பாணம் முதலான விடங்களில் குடியேறி, தம் கணவர் மரணத்தைக்கருதி அக்கினிப்பிரவேசமானதாகவும் எழுதப்பெற்றிருக்கிறது.

## வேறு சிலபுராண சரித்திர சாசனங்களினால், அடியிற்கண்ட பாண்டியர்களாண்டதாகத் தெரியவருகிறது.

குலசேகரபாண்டியன், மலையத்துவஜ பாண்டியன், தடாதகைபிராட்டியார், உக்கிரபாண்டியன்—(காஞ்சிசோமசேகரன் மகள் காந்திமதியைக் கலியாணம் செய்தவன்) வீரபாண்டியன, அபிஷேகபாண்டியன், விக்கிரபாண்டியன—ஜயின மதஸ்தன், இராஜசேகர பாண்டியன்—சிறந்தவித்வான், குலோத்துங்கபாண்டியன் அநந்தகுண பாண்டியன்—அவன் காலத்தில் ஸ்ரீராமர் இலங்கைக்கு வந்தார். ஜயினர் சண்டை; குலபூஷணபாண்டியன (சோழனைதாக்கினான்) ராஜசிம்ஹ பாண்டியன் (சோழனமகளை மணந்தவன்) ராஜராஜேந்திர பாண்டியன்—(சோழனைத்தாக்கித்தோற்றான்) ராஜேசுவரபாண்டியன், ராஜகம்பீரபாண்டியன், பிரதிப பாண்டியன், புருஹூமிரதபாண்டியன், பிரதாப பாண்டியன், சுந்தரபாத சேகரபாண்டியன்—(அநேககோயில்களைக் கட்டிவித்தான்—சோழனோடு எதிர்த்து அகழியில்விழுந்து இறந்தான்) வரகுணபாண்டியன், (சோழனையும் தொண்டமானையும் ராஜியாக்கினான்) இராஜ இராஜபாண்டியன், சுகுணபாண்டியன், சித்திரவிரதபாண்டியன், சித்திரபூஷணன், சித்திரத்துவஜபாண்டியன், சித்திரவர்மபாண்டியன், சித்திரசேனபாண்டியன், சித்திரவிக்கிரமபாண்டியன், ராஜமார்த்தாண்டபாண்டியன், இராஜசூடாமணிபாண்டியன்; இராஜசாதுலாபாண்டியன், யுவராஜ் குலோத்துங்கபாண்டியன், ஆயுதபிரவீணபாண்டியன், ராஜகுஞ்சர பாண்டியன், பரராஜ பயங்கரபாண்டியன், உக்கிரசேனபாண்டியன், மஹாசேன பாண்டியன், சத்துருஞ்சயபாண்டியன், பீமரதபாண்டியன், பீமபராக்கிரமபாண்டியன், பிரதாபமார்த்தாண்டபாண்டியன், விக்கிரமபாண்டியன், உயுத்தகோலாஹல பாண்டியன், அதலவிக்கிரமபாண்டியன், அதலகீர்த்திபாண்டியன், கீர்த்திவிபூஷண பாண்டியன்—பிரளயகாலம், வமிசசேகரபாண்டியன்—தமிழ்முதற்சங்கம் ஆரம்பித்தவன், வமிசசூடாமணிபாண்டியன். பிரதாப சூரசேனபாண்டியன், வமிசத்துவஜபாண்டியன், ரிபுமர்த்தனபாண்டியன், சோழவமிசபாண்டியன், சேரவமிச பாண்டியன், பாண்டியவமிசாந்தக பாண்டியன், வமிசசூடாமணி பாண்டியன, குளத்துவஜபாண்டியன், வமிசவிபூஷணபாண்டியன், சோமசூடாமணிபாண்டியன், குலசூடாமணிபாண்டியன். ராஜசூடாமணிபாண்டியன், பூபசூடாமணி பாண்டியன், குலேசபாண்டியன்—தமிழ்வித்வான்—அரிமர்த்தன பாண்டியன்; அவனுடைய மந்திரி மாணிக்கவாசகர்—காஞ்சிச்சோழர்களைச் சைவர்களாக்கி அநேக ஜயினரைக் கல்காணத்திலாட்டிக் கொன்றவன், ஜகந்நாதபாண்டியன், வீரபாஹுபாண்டியன், விக்கிரமபாண்டியன், காபிபாண்டியன், குங்கும பாண்டியன், கற்பூரபாண்டியன், காருணியபாண்டியன்; புருஷோத்தமபாண்டியன, சத்துருசேனபாண்டியன் குலப்ஜாபாண்டியன்—அந்தக் குலாப்ஜ பாண்டி

யனைக் "கூன்பாண்டியன்," என்றும்சொல்வதுண்டு. அவன்சோழராஜனைஜயித்தும், அவனுடைய குமாரத்தி வாணிதீசுவரியை விவாகம்செய்துகொண்டும், அவன் தந்தையை மந்திரியாக வைத்துககொண்டான். அவன் ஜயினமதஸ்தனாக இருந்த படியால், சைவமதத்திற் சேரக்கருதி, அவன் மனைவியார் திருஞானசம்பந்தரைத் தருவித்துச் சைவமதத்தைப் போதிப்பித்தும், அரசனுடைய 'ஜ்வர' ரோகயை மந்திரபலத்தால் நீங்கும்படி செய்ததனால்; அவன்சைவனுகி அப்பாண்டியன் அநேக ஜயினவரைக் கல்காணத்திலாட்டிக் கொல்லச்செய்வித்தான். அவன் காலத்தில்தான் அரபிநாட்டிலிருந்து மகமதியர் முதல்முதல் மதுரையில்வந்து தங்கினதாக ஒரு சாசனம் தெரிவிக்கிறது. பிறகு வீரபாண்டிய சோழனும்.

## பாண்டியருடைய ஜாதி
### முதலான விவரங்கள்.

பாண்டியர்கள்—பாரதம், ஹரிவம்ச முதலானகிரந்தங்களின்படி, சந்திர வம்சக்ஷத்திரியர்களாம். பாண்டியர்களும் சேரசோழர்களுடைய பந்துக்களே.

அப்பாண்டிய நாட்டை ஸ்தாபித்தவன் துஷ்யந்தன் தம்பியாகிய திஷ்யந்தனது பௌத்திரனுகும் ஆசிரதன் புத்திரன் என "அபிதானகோசத்தில்" அறிவிக்கப்பெற்றிருக்கிறது. அவனே குலசேகரபாண்டியன்போலும். அவன் தென்மதுரையை நகராக்கி, நான்குவருணத்து ஜனங்களையும் ஸ்தாபனம்செய்து, காசியிலிருந்து ஆதி சைவர்களையும் கோயிற்பூஜைக்காக கொணர்ந்து இருத்தி, அகஸ்தியர் அனுமதிப்படி அரசுபுரிந்தவனும் — அக்குலசேகரபாண்டியன் மகன் மலயத்துவஜ பாண்டியனும், மலயமலையைத் தனது கொடியில்தீட்டிக்கொண்டமையால் அப்பெயர் உண்டாகியதுபோலும்—அவனும்அகஸ்தியரை உசாவியே எக்காரியமும் செய்பவனென்பது அக்கொடியின் குறிப்புப்பொருளாம் — அப்பாண்டியன்காலம் துவாபரயுகமென சில சரிதகிரந்தங்களுடைய கருத்து—பாண்டியர்களுடைய சரியான சரித்திரங்கள் சாசனரீதியாக இன்னும் கிட்டாமையால், திருவிளையாடற்புராணத்தில் செப்பியிருக்கும் சிலருடைய சரித்திரங்களைமாத்திரம் அபிதானகோசத்தின் சங்கிரகமாக இதனடியில் பதிப்பித்திருக்கிறோம்.

## தமிழ் திருவிளையாடலிற் கண்டிருக்கும் சில பாண்டியர்களாவன.

குலசேகரபாண்டியன்—காலத்திலே, அவன் ராஜதானியாகிய மணவூரிலே வசிக்குந் தனஞ்சயன் என்னும் வணிகன மேற்றிசையிலுள்ள ஊர்களிற்சென்று, வாணிகஞ்செய்து மீளும்வழியிலே, கடம்பவனத்தில் இராத்தங்கியபோது; அங்கே ஒருதிவ்விய விமானமும, அதன்கீழே சிவலிங்க பெருமானும், அங்கே தேவர்கள்வந்தும், அன்றிரவெல்லாம் அருச்சனைபுரிந்ததுங்கண்டு, அதிசயித்துத்தானுந் துதித்து வணங்கிக்கொண்டு விடியற் காலத்திலே, அவ்விடத்தினின்றும் நீங்கி அரசனையடைந்து, தான்கண்டதைகூற; அரசன் உடனேசென்று அவ்வனத்தைவெட்டிச் சிவபிரான் கனவிடைச் சென்று, தனக்குக்கூறிய பிரகாரம்ஆலயமும், தனக்கு அரண்மனையும், நாலுவருணத்தாருக்கு வீடுகளும், வீதிகளும், மதில்களும், பிறவும்வகுத்து நகராக்கினனும், (திருநகரங்கண்ட 3-ம் திருவிளையாடல்).

குலசேகரபாண்டியன் மகன், மலயத்துவஜபாண்டியனுக்கு, அவன்மனைவி காஞ்சனமாலை வயிற்றிலே புத்திரோற்பத்தி யில்லாமற்போக, அவன் யாகஞ்செய்து, அவ்யாகத்தினிடமாக உமாதேவியாரைத் தடாதகைப் பிராட்டியாரென்னும் பெயரோடு மூன்றுவயது நிறைந்த மகவாகப்பெற்றார்; நான்காம் திருவிளையாடல்..

மலயத்துவசன், தடாதகைப் பிராட்டியாருக்கு முடிசூட்டிச் சிவபதமடைந்த பின்னர், தடாதகை பிராட்டியார் திக்குவிஜயத்துக்கெழுந்து, திசைதோறும் அரசரைவென்று, வடதிசையிற் கைலாயஞ்சென்று, அங்கும் படையேற்ற, சிவப்பிரான் வெளிப்பட, அவரைக்கண்டமாத்திரத்தே மும்முலைகளுள் ஒன்றுமறைய, அதுகண்டு நாணிச்செயல்மறந்து நின்ற தடாதகைப் பிராட்டியாரைச் சிவபிரான்நோக்கி, உன்னை நாம் மதுரையில்வந்து மணம்புரிவோம்; மீண்டேகுக— என்றருளிச்செய்தனர். அவ்வாறு மீண்டு மதுரையை யடைந்தபோது; சிவபிரான் சோமசுந்தரபாண்டியனார் என்னும் பெயரோடுசென்று, உலகறியத்திருமணம்புரிந்து மதுரையை ஆண்டனர்.—ஐந்தாம் திருவிளையாடல்.

சோமசுந்தரபாண்டியனாக உலகாண்ட சிவபிரான், தடாதகைப்பிராட்டியார் வயிற்றிலே, உக்கிரவருமன் என்னுங் குமாரனைத் திருவவதாரஞ்செய்வித்தருளினார்—11-ம் திரு—உக்கிரவருமபாண்டியன், சோமசேகரனென்னும் அரசனது புத்திரி காந்திமதியை மணம்புணர்ந்தான—12-ம் திருவிளையாடல்.

உக்கிரவருமபாண்டியன், அரசுபுரிந்துவருநாளில், அசுவமேதயாகந் தொண்ணூற்றாறுசெய்து முடித்தபோது; இந்திரன் பொறாமையுற்று, வருணனையேவிக்கடல்பொங்கிப் பாண்டியநாட்டை அழிக்கும்படிசெய்ய, ஓரிரவினுள்ளே கடல் சினங்கொண்டெழுந்து, நாட்டைமூடி நகரவாயிலையடுத்தது. அதனைச்சிவபிரானாலுணர்ந்த உக்கிரவருமன் தான்முன்னே சிவன்பாற்பெற்ற வேலையெறிந்து சுவறும்படி செய்தான்—13-ம் திருவிளையாடல்.

உக்கிரவர்மபாண்டியன்; காந்திமதியிடத்திலே வீரபாண்டியனென்னுங் குமாரனையீன்ற பின்னர், தனது நாடுமழையின்றி வருந்தலைக்கண்டு துன்பக்கடலிலாழ்ந்திருக்க, சோமசுந்தரக் கடவுளவனுக்குக் கனவிலே தோன்றி நீ மேருமலையையடைந்து; அம்மேருவாசனைச் செண்டாலடித்து, வணங்கி அம்மலையினுள்ள பொன்னறையைத் திறந்து, வேண்டுமளவு பொன்னைவாரிக் கொணர்ந்து வழங்கி, மழைபெய்து நாடுமெலியுங்காலும் நினது நாட்டைக்காக்கக்கடவை, என்று அனுக்கிரகிக்க; அவன் தன்சேனைகளோடு புறப்பட்டுப்போய் மேருவையடைந்து செண்டைப்பிரயோகித்து நிற்ப, அவன்வெளிப்பட்டு பொன்னைப் பொதிசெய்துபோக வென்ன, அவ்வாறுசெய்து மீண்டு தன் நாட்டைக்காத்தான்—15-ம் திருவிளையாடல்.

வீரபாண்டியன், வேங்கை வாய்ப்பட்டிறக்க; அவன்மகன் அபிஷேகபாண்டியனுக்கு முடிசூட்டுதற்கு முகூர்த்தம்வைத்து, மந்திரிகள் முடியைத் தேடிப் பார்த்தபோது, அதனை வீரபாண்டியன் காமக்கிழத்தி மக்கள்களவிற் கவர்ந்துபோயினரென் றுணர்ந்து கவன்றிருப்ப, சிவபிரான் வணிகனாகி மாணிக்கப்பொதியோடு சென்று; அவருக்கு வேண்டிய அளவுமாணிக்கம் விற்றது—17-ம் திருவிளையாடல்.

வருணன்—தன்வயிற்றுநோயை சிவபிரானாலே தீர்ப்பிக்கும்பொருட்டுகடல் பொங்கியெழுந்து, மதுரையைச் சூழும்படிசெய்தபோது, அவன் கருத்துணராத அபிஷேகபாண்டியன் ஓலமிட்டழ, அதற்கிரங்கிச் சிவபிரான் அக்கடலைவற்றுவித்து, அதுவாயிலாக வருணனுக்குஅனுக்கிரகித்தார்—18-ம் திருவிளையாடல்.

அபிஷேகபாண்டியன் சிவபதமடைந்த பின்னர், அவன்மகன், விக்கிரமபாண்டியன் அரசுபுரிந்துவரும்நாளிலே, சமணசமயப் பிரவேசஞ்செய்திருந்த சோழராசன், அஞ்சனம், கிரவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, அத்திகிரி, ஏமகூடம், விந்தம் என்னும் எட்டுமலைகளிலுமுள்ள சமணகுரவர் எண்ணாயிரவரையுமழைத்து, அபிசாரவேள்வியொன்றை இயற்றுவித்து, ஒரு யானையை எழுப்பி, பாண்டியனைக் கொல்லுமாறு ஏவ, அதனையறிந்த பாண்டியன சோமசுந்தரபெருமானை வேண்ட, அவர் ஒருவேட்டுவவடிவங்கொண்டு அவ்வியானையைக்கொன்று பாண்டியனைக் காத்தருளினார்—22-ம் திருவிளையாடல்.

விக்கிரம பாண்டியனுக்குப் பின்னர் அவன்மகன் ராஜசேகரன் அரசுபுரிந்துவரும்நாளிலே, கரிகாற்சோழன் சமஸ்தானத்து வித்துவான் ஒருவன், மதுரையடைந்து, அரசன் பாற்சென்று அளவளாவிக் கொண்டிருக்கையில்; கரிகாற்சோழனுக்கு அறுபத்து நான்குகலையும் வரும், உனக்கோபரதமொழிந்தொழிந்த அறுபத்து மூன்றுமே வருமென்ன, பாண்டியன் அதுகேட்டு மானத்தாற்றூண்டப்பட்டவனாய், உடனே தானே நாடகநூல் வல்லாரைவரவழைத்து அவர்பால் அதனைக்கற்கும்போதுண்டாகிய மெய்வருத்தத்தை நோக்கி, இடையறாதபஞ்சகிருத்தியத்தின் பொருட்டு ஆனந்தத்திருத்தாண்டவஞ்செய்தருளும் என்றுகூறித் தவங்கிடக்க, சிவன் அவன பக்திக்கிரங்கி இடக்காலூன்றி வலக்கால்வீசி ஆடியருளினார்—24-ம் திரு.

இராஜசேகரனுக்குப் பின்னர் அவன்மகன் குலோத்துங்கபாண்டியன் அரசுபுரியுங்காலத்திலே, திருப்புத்தூரிலிருந்து மதுரைக்கு வழிக்கொண்டு சென்ற ஒருவேதியன் தனனுடனசென்ற மனைவியையும், மகவையும் ஓராலின் கீழிருத்தி, அவளுக்காகத் தண்ணீர்தேடிச்சென்று மீண்டபோது, ஆலின்மீது கிளைகளிலே சிக்குண்டிருந்த அம்பொன்று காற்றால் அலைப்புண்டு வீழ்ந்து கீழேபடுத்திருந்த பார்ப்பனிவயிற்றிலே தைத்து, உயிர்துறந்து கிடக்கக்கண்டு ஒருவேடன் நிற்ப, அவனே கொன்றானென்றெண்ணி, அவனைக்கைப்பற்றிக் கொண்டு, இறந்தமனைவியைத்தூக்கித்தன்முதுகிற்கட்டியும், பிள்ளையைஅக்கவிலே தாங்கிச்சென்று பாண்டியன் முன் முறையோவென்று வீழ்ந்துபுலம்ப; பாண்டியன்: வேடனைப்பார்த்து, யாது கூறுகின்றாயென்ன, வேடன் இக்கொடும்பழி யான்செய்ததன்று, செய்தாரையும் அறியேன், இதுசத்தியமெனக்கூறினான். அதுகேட்ட பாண்டியன சோமசுந்தரக் கடவுளுடைய சந்நிதியையடைந்து விண்ணப்பஞ்செய்ய, நாளை வணிகதெருவிற்சென்று அங்கே மணப்பந்தலில்நடக்கும் செய்தியைக்காண, என்று ஓரசரீரிகேட்க—அவ்வாறே பாண்டியன் அப்பார்ப்பானோடு மற்றைநாள் வணிகவீதியிற்சென்று மண வீட்டருகே நிற்க, யமதூதர் நேற்றுப்பார்ப்பனியுயிரை ஆலமரக்கிளையிற் சிக்கியிருந்த அம்மை வீழ்த்தி எவ்வாறுகொண்டோமோ, அவ்வாறே இம் மணமகனுயிரையுமோருபாயத்தாற் கவர்வோமென்ற சொற்கேட்டு இருவரும் ஐயம்நீங்கினர்—25-ம் திருவிளையாடல்.

குலோத்துங்க பாண்டியன் காலத்திலே—வேற்றூரிலிருந்துபோய் மதுரையை வாழ்பதியாக்கி, வாள்வித்தை கற்பித்துக்காலக்கழிவு செய்யுமோராசிரியனுடைய மாணாக்கனாகிய சித்தன் என்பவன், அவ்வாசிரியனுடைய மனைவியை புணர எத்தனிக்க; அவன் கடவுளைத் தியானிக்க, அவர் ஆசிரியனைப்போல அவனேசென்று, நாளைவா இருவருங்கலந்து வாட்போர்செய்வாம்—என, சித்தன் அடுத்த நாளிலே எதிர்க்க, கடவுள் ஆசிரியனைப்போல் நின்று அவன் அங்கத்தைத் வெட்டினார்—27-ம் திரு.

குலோத்துங்கபாண்டியனுக்குப் பின்—அவன்மகன் அனந்தகுணபாண்டியன் காலத்திலே. தன்னாட்டிலே சைவப்பயிரன்றிச் சமணப்பயிர் வேர்கொள்ளா திருத்தலைநோக்கிய, சமணகுரவர்கள் 8,000பேர் பாண்டியனைக்கொல்ல மாணுஷயாகத்திலே எழுப்பிய அசுரன ஒருநாகசர்ப்பமாகி மதுரையையடைய, பாண்டியன் அந்நாகத்தைப் பாணத்தாற் கொன்றொழிக்கும்படி சிவன் அனுக்கிரகஞ்செய்தார்—28-திரு.

அனந்தகுணபாண்டியனுக்குப் பின்—அவன்மகன் குலபூஷணன் காலத்திலே, சேதிராயன்—மதுரைமீது படையெடுக்கப்போகின்றானெனக்கேள்வியுற்று, மந்திரி சித்ரசாமந்தன் என்பவனிடம் அளவிறந்த திரவியங்களைக்கொடுத்துச் சேனையைத்திரட்டும்படி ஆஞ்ஞாபிக்க, அவன் அத்திரவியத்தைச் சிவாலயத் திருப்பணிக்கும, சிவபக்தருக்கும வழங்கிவிட்டு, 6-மாசமாகச் சிவகைங்கரியத்திற்போக்கினன், அதுகேட்ட பாண்டியன மந்திரிசாமந்தனை ஒரேநாளில்சேனைதருதல்வேண்டுமென, அவன் சோமசுந்தரரை வேண்ட, அவர் ஒருகுதிரைவீரனாகவும், கணங்கள் சேனைவீரராகவும வெளிப்பட்டு பாண்டியனுக்கு மெய்காட்டியறிவித்தார்—30:ம் திரு.

குலபூஷணனுக்குப்பின்—அவன் மகன் இராஜேந்திரபாண்டியன் நாளிலே, காடுவெட்டியசோழன மதுரைச்சோமசுந்தரரை நேரில்போய் வணங்க கருதிப் பாண்டியனுக்கு பொன்னணிகளை வரிசையாயனுப்ப, பாண்டியனும் அச்சோழனுக்கு சிலவரிசைகளையனுப்ப, சோழன்மகிழ்ந்து தனது மகளை அப்பாண்டியனுக்கு மணஞ்செய்யவிரும்ப, அதையறிந்த பாண்டியனதம்பி அரசசிங்கன், என்பவன் காஞ்சிநகருக்கேக, சோழன் தனபுத்திரியை மணஞ்செய்து, பாண்டிய நாட்டைக் கைப்பற்றககருதி வந்ததைப் பாண்டியன்கேட்டு, சோமசுந்தரரை வேண்ட, அவர் அச்சோழனைமருமகனோடு பிணித்துவந்து பாண்டியன் முன்னர் விட, பாண்டியன், அவர்களை சோமசுந்தரருக்கு முன்னிறுத்தி அவருக்கு தண்டம் யாதெனவேண்ட, அவர், உன் எண்ணப்படி புரிக என்றருளச் சோழனுக்கு வேண்டிய உபகாரங்களைக்கொடுத்தும் தனது, தம்பிக்கும தனது செல்வத்து சிலவற்றையுங்கொடுத்தான்—35-ம் திரு.

இராஜேந்திர பாண்டியனுக்குப் பின்னர் இராஜேசனும், அவனுக்குப்பின், இராஜகம்பீரனும், பிறகு பாண்டியவமிசதீபனும், பிறகு புரந்தரசித்துவும், பிறகு பாண்டிய வமிசபதாகனும் முறைமுறை அரசுசெய்த பின்னர்; சுந்தரேசபாதசேகர பாண்டியன் அரசுசெய்துவருங்காலத்திலே, சோழராஜன் படையெடுத்துச்சென்றபொழுது, பாண்டியன் சிவபெருமானிடத்து முறையிட்டு போர்புரிந்து, சோழனை மடுவில்வீழ்த்திக்கொன்றான்—37-ம் திரு.

சுந்தரேசபாதசேகர பாண்டியனுக்குப்பின் பட்டமடைந்த வரகுணபாண்டியன், சிவலோகத்தை தன் மானிடசரீரத்தோடு காணவேண்டுமென்று வரங்கேட்க, சோமசுந்தரர் அவனுக்கதனை காட்டியருளினார்—40-ம் திரு.

வரகுணபாண்டியனுக்குப்பின் இராஜராஜபாண்டியன் காலத்தில், அவன்தன் காமமிழத்தி ஏவலாலே, பாணபத்திரன் பத்தினியை இசையிலே வெல்விக்குமாறு, ஈழநாட்டிலிருந்து ஒருபாண்மகளை அழைப்பித்து, இசைவாது புரிவித்தபோது; பாண்டியன் நடுநிலை பிறழ்வானென்றுணர்ந்து, சோமசுந்தரர் ஓர்இசைப்புலவராகத்தோன்றிப் பாணபத்திரன் பத்தினி புலமையைமெச்சி அற்புதம் என்று கூறிமறைந்தருளினார்—44-ம் திரு—மற்றவிவரங்களை ஷெ புராணத்தைப்படித்து அறியலாம்.

## தமிழ் வித்துவான்களாற் பாடப்பெற்றபாண்டியர்கள்

### அபிதான கோசத்தின்படி.

பாண்டியன் அறிவுடையநம்பி—இவன் தமிழ்ப்புலமையிற் சிறந்த அரசன்.

பாண்டியன் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன்—இவனே கோவலனைக் கொல்லுவித்த பாண்டியன் என சிலப்பதிகாரத்தால் விளங்குகின்றது—இவன் நல்வியைப் பொருளாகவும், கற்றோரைச்சுற்றமாகவுங் கொண்டவன்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்-இவன் புலமையிற் சிறந்த ஓர் அரசன் என—புறநானூற்றினுள்ளே வரும் 72-ம் செய்யுளாற் புலப்படும்- இவன் புலமையிற்சிறந்த புலவரைக்காத்தலினும்; அவராற் பாடப்படுதலினும் மிக்கவிருப்புடையவனென்பது மாங்குடி மருதனாரால் மதுரைக்காஞ்சிக்குத் தலைவனாக்கப்பட்டமையாலும்; கல்லாடர், இடைக்குன்றூர்கிழார் முதலியோராற் பாடப்பெற்றவன்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன்—இவ்வரசன் நறசிரனாராலும், மதுரை மருதனிளநாகனார் முதலியோராலும் பாடப்பெற்றவன்.

பாண்டியன் கருங்கை ஒளவாட்பெரும்பெயர் வழுதி—இவன் இரும்பிடர்த்தலையாராற் பாடப்பெற்ற வீகையாளன்.

பாண்டியன் கானப்பேர்தந்த வுக்கிரப்பெருவழுதி—இவன் ஒளவையாராற் பாடப்பெற்றவன், இவனே வேங்கை மார்பனைவென்று கானப்பேரெனு மரண்கொண்டவன் (புறநானூர் 67) இவனே திருவள்ளுவருக்குச் சிறப்புப் பாயிரஞ்சொன்ன பாண்டியன்,

பாண்டியன் கீரஞ்சாத்தான் — இவன் ஆவூர்மூலங்கிழாராற் பாடப்பெற்றவன்.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சியமாறன்வழுதி— ஐயூர்முடவனாராலும் மருதனிளநாகனாராலும் பாடப்பெற்ற பாண்டியன.

பாண்டியன் சித்திரைமாடத்துத் துஞ்சியநன்மாறன்—இவன் சித்தலைச்சாத்தனாராலே, பாடப்பெற்றவன்,

## மதுரைத்தமிழ்ச்சங்கம்.

அப்பாண்டியர்கள் அதிகபிரபலராகிப் பிரகாசித்ததற்குக் காரணம்: அவர்களுடைய கல்விஅறிவும், கடவுள்பக்தியுமேயாம். அதற்கு உதாரணமாக அப்பாண்டியர் காலத்தில் முத்தமிழ்ச்சங்கங்கள் ஸ்தாபிகப்பெற்றும், அச்சங்கங்களில் அரங்கேற்றிய நூல்களேபோதுமான நிதரிசனங்களாகும்.

வெண்பா.

நூலாரா லாயிரநா னூற்றுநாற் பத்தொன்பான்
பாலான னூற்றுநாற் பத்தொன்பான்—மேலாநாற்
பத்தொன்பான் சங்கமறுபத்து நாலாட லுக்கும்
அத்தன் மதுரையிற் சொக்கன்—என்று.

காளமேகப் புலவர் பாட்டின்படி, வம்சசேகர பாண்டியன் காலத்தில் மதுரையில் முதல் முதல் தமிழ்ச்சங்கம் ஸ்தாபிக்கப்பெற்று, அதில் 4449-பெயர் அச்சங்கமேறிச் சிறப்பித்ததாகச் சொல்லப்பெற்றிருப்பினும்; வீரசோழியம் முதலான சில சிறந்த கிரந்தங்களைக்கொண்டாராயுங்கால், 549-பெயர் அச்சங்கமேறியவர்களென்றும், அவர்களுள் அகத்தியனார், விரிசடையத்தனார், முருகமுதல்வனார், முடிநாகராயர், நிதிக்கிழவனார், அதங்கோட்டாசிரியனார், புனம்பாறனார், தொல்காப்பியனார் முதலான சிறந்த வித்வான்கள் சேர்ந்து தொல்காப்பியம், காக்கைபாடினியம்; அவிநயம், சிற்றத்தம், வாமனம், புறபொருட் பன்னிருபடலம், முருவல, சயந்தம், குணநூல், செயிற்றியம், பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை முதலான அருமையான தமிழ்நூல்களை இயற்றி அரங்கேற்றி அலங்கரித்தார்கள்.

அவர்கள் அகத்தியத்தை வழிநூலாக வழங்கிவந்தார்கள். அதில் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் மூன்றும் வகுத்துரைக்கப்பட்டிருந்தன. தொல்காப்பியம் முதலியவற்றில் இயற்றமிழும்; பெருநாரை, பெருங்குருகு முதலியவற்றில், இசைத்தமிழும்; முருவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் முதலியவற்றில் நாடகத்தமிழும் விரித்துரைக்கப்பெற்றிருந்தன—பிறகு.

இடைச்சங்கம்—கபாடபுரத்தில்ஸ்தாபிக்கபபெற்றது. அவ்விடைச்சங்கமேறியவர்கள் 509-பெயர்-அவர்களில் இருந்தையூர்க் கருங்கோழிமோசியார், வெள்ளூர்க்காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையன்மாறன், துவரைக்கோமான், கீரந்தையார் முதலான மஹாவித்வான்கள் சிறந்து விளங்கி; கலிகுருகு, வெண்டாலி முதலான நூல்களை இயற்றி அரங்கேற்றினார்கள். அவ்விடைச்சங்கத்தார் அகத்தியம், தொல் காப்பியம்; மாபுராணம், இசைநுணுக்கம், பூதபுராணம் முதலான நூல்களை வழிநூல்களாக வழங்கிவந்தார்கள்—பிறகு.

கடைச்சங்கம்—உத்திர மதுரையில் ஸ்தாபிக்கப்பெற்றது, அதில் 49 வித்வான்கள அச்சங்கமேறிச் சிறப்பித்தார்கள், அவர்களில் இறையனார், உக்கிரப் பெருவழுதியார், கபிலர், பரணர், நக்கீரர், பெருந்தேவனார், நச்சுமனார், குலபதி நாயனார், ஆலங்குடிவங்கனார் முதலானவர்கள் சேர்ந்து நெடுந்தொகை, குறுந்தொகை நானூறு, நற்றிணை, அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, எழுபதுபரிபாடல், கலிபதிற்றுப்பத்து, நூற்றைமபது, கூத்தவரி; சிற்றிசை, பேரிசை முதலான நூல்களை இயற்றி அரங்கேற்றினார்கள்.

அப்படி முதற்சங்கத்தில் 4449-பெயரும், இடைச்சங்கத்தில் 3700 பெயரும், கடைச்சங்கத்தில் 49 பெயருமாக கவிகளியற்றி அரங்கேற்றியதாக இறையனார் அகப்பொருளின் கவியால் ஸ்பஷ்டமாகிறது—எப்படியெனில்.

வெண்பா.

ஏழேழோ டைஞ்ஞூறு மேழேழோ டைம்பதும்
ஏழேழுஞ் சங்க மிரீயினர்—ஏழேழ்சேர்
நாறபதிநா னூறு மூப்பானேழ் நூறுநானூற்று
நாற்பதி னொன் பான்கவிஞர் நாடு—என்பதாம்.

அப்படிப் பிரகாசித்த சங்கங்களில் முதற்சங்கத்தின் காலம் முன் பின் 450 வருஷங்களென்றும், இடைச்சங்கத்தின் காலம் 350-என்றும், மூன்றும் சங்கத்தின் காலம் 2000-என்றும், ஒரு நூலில் சொல்லப்பெற்றிருக்கிறது.

அன்றியும், வேறொரு நூலினுல் முதற்சங்கத்தின் காலம் காய்சின வழுதி முதல், கடுங்கோன்வழுதி வரையில் 19-பாண்டியர்காலம் வரையிலும்; இடைச் சங்கம் வெண்டேர்ச்செழியன் முதல், முடத்திருமாறனீறாக 59-பாண்டியர்கள் காலம்வரையிலும், மூன்றாஞ்சங்கம் முடித்திருமாறன் முதல், உக்கிரபெருவழுதி யீறாக 49 பாண்டியர்கள காலம்வரையிலும பிரபலமாய்ப் பிரகாசித்ததாகவும்; அப்பாண்டியர்களில் முதற்சங்கத்தில் ஏழுபாண்டியர்களும், இடைச்சங்கத்தில் ஐந்துபாண்டியர்களும், கடைச் சங்கத்தில் மூன்று பாண்டியர்களும், மஹா வித்வசிகாமணிகளாகிப் பிரகாசித்தும், கவிகளையும் கிரந்தங்களையும் இயற்றி அரங்கேற்றினதாக வேறொரு ஒருசாசனத்தில் ஸ்பஷ்டமாகிறது.

சங்கத்துள் அரங்கேற்றியவற்றுள் திருக்குறளே கடைசியாம். சுமார் 2000 வருஷங்களுக்கு முன்பு-அதாவது உக்கிரப்பெருவழுதி காலத்தில்சங்கம் கலைந்துபோக லேதுவாகியது- பிறகு 200 வருஷங்கள் வரையில் சேர, சோழ, பாண்டியர்கள் காலத்தில் அதிவீரராமன, ஔவை, புகழேந்தி, ஒட்டக்கூத்தர் கம்பர், அம்பிகாபதி, தமிழ்தண்டி, (கொங்குநாட்டரசனுல்பிரகாசித்த) வில்லிபுத்தூரார், முதலான வித்வசிகாமணிகள் பற்பல கிரந்தங்களை இயற்றிப் புகழ் பெற்று வந்தாலும்; பராக்கிரமபாண்டியன் காலத்தில்; மகமதியர்கள் பாண்டிய நாட்டில் பிரவேசித்து பட்டணத்தைப் பாழாக்கியும், பிரஜைகளைப் பங்கப்படுத்தியும், நூல்களை நாசமாக்கியும் விட்டார்கள். பிறகு தமிழ்ச்சங்கத்திற்குத் தலைவர் இலலாமல் மறைந்தது.

## மதுரையில் நான்காம் தமிழ்ச்சங்கம்.

இப்போது தமிழ்பாஷையின் பரதாப நிலையைக்கண்டு, அதற்குத்தக்க உதவி செய்யக்கருதி, பிரபலவித்வசிகாமணியும், சிறந்த தேசாபிமானியும், பாலவநத்தம் ஜமீன்தாருமாகிய ஸ்ரீமான் பாண்டித்துரை தேவரவர்கள் 1901-ஞு மேமீ 24உ மதுரை சேதுபதி பாடசாலையில் ஒருமஹாசபையைக்கூட்டி உபந்நியாசித்தும், ஸ்ரீ சேதுபதி முதலானவர்களுடைய சகாயத்தைக்கொண்டு மறுபடியும் 1901ஞு செப்டம்பர்மீ 15உ க்குச்சரியான-பிளவஞு ஆவணிமீ 31உ பானுவாரம்-சித்திராநக்ஷத்திரம்-கூடியசுபதினம் பகல் 1½ மணிமேல், 2½ குள-தனுர்லக்கினத்தில்-மதுரையில் நான்காவது தமிழ்ச்சங்கத்தை ஸ்தாபித்து அதற்காக அல்லும் பகலும் உழைத்து வருகின்றார்கள். இப்படிப்பட்ட தருணத்தில் தென்னாட்டிற் சிறந்த திரவியவான்களும், தமிழ்வித்வான்களும், அபிமானிகளும் அவருக்குத் துணைநின்று உதவிசெய்யவரில், இந்த நான்காம் தமிழ்ச் சங்கமும் நாளாவட்டத்தில் பலுகிப் பெருகி நாட்டிற்கு காலாவிதங்களிலும் நன்மை விளைவிக்குமென்பது திண்ணம்.

## இந்த மதுரை நான்காம் தமிழ்ச்சங்கத்தின்

### (1) தமிழ் வித்வான்களாவன

---

ம-௱-ஸ்ரீ, ப. பாண்டித்துரைத் தேவர் அவர்கள்—
பாலவனத்தம் ஜமீன்தார், மதுரைத்தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதி

„ உ. வே. சாமிநாதய்யர் அவர்கள்—
தமிழ்ப்பண்டிதர், பிரசிடென்சிகாலேஜ், சென்னை.

„ ரா. இராகவையங்கார் அவர்கள்—
ஸேதுஸம்ஸ்தான வித்வான், பிரகடனாசிரியர்—தமிழ்ச்சங்கம்.

„ வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் அவர்கள்—
தலைமைத் தமிழ்ப்பண்டிதர், கிருஸ்தியன் காலேஜ், சென்னை

„ திருநாராயணையங்கார் அவர்கள்—
தலைமை உபாத்தியாயர் சேதுபதி கலாசாலை தமிழ்ச்சங்கம்

„ ஸ்ரீ. அரங்கசாமி அய்யங்கார் அவர்கள்—இராமநாதபுரம்

„ செவ்வூர். சுப்பிரமணியக்கவிராயர் அவர்கள்—
திருவாவடுதுறை ஆதீனவித்வான், நூற்பரிசோதகர் தமிழ்ச்சங்கம்

„ அ. சண்முகம்பிள்ளை அவர்கள்—
உபாத்தியாயர் சேதுபதி கலாசாலை—தமிழ்ச்சங்கம்

„ அம்பலவாண நாவலவர்கள்—திருநெல்வேலி

„ அஷ்டாவதானம் கலியாணசுந்தர முதலியார், சென்னை

„ பு. மா. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள்—
தமிழ்ப்பண்டிதர் பிரஸிடென்சி காலேஜ் சென்னை

„ திருமயிலை. ஷண்முகம்பிள்ளை அவர்கள்—
தமிழ்பண்டிதர் செண்ட்தோம் காலேஜ், சென்னை

„ அ. நாராயணசாமி அய்யங்கார் அவர்கள்—
தமிழ்பண்டிதர் ஹைஸ்கூல்—கும்பகோணம்

„ எஸ். பால்வண்ண முதலியார் அவர்கள்—
காரியதரிசி சரஸ்வதிவிலாச புத்தகசாலை திருநெல்வேலி

„ தி. ப. சிவராமபிள்ளை அவர்கள்—
தமிழ்பண்டிதர் இந்துகாலேஜ் திருநெல்வேலி

„ வா. குலாங்கர் திருநாவலர் அவர்கள்—நாகூர்

„ தி. கோ. நாராயணசாமிபிள்ளை அவர்கள்—
தமிழ்பண்டிதர் பெங்களூர்

,, ஆ. முத்துத்தம்பி பிள்ளை அவர்கள்—யாழ்ப்பாணம்

,, அ. குமாரசாமிபிள்ளை அவர்கள்—சுன்னாகம் ,,

,, செந்திநாதய்யர் அவர்கள்—திருப்பரங்குன்றம்

---

## ii. ஆங்கிலத்தமிழ் வித்துவான்கள்.

ம-ள-ஸ்ரீ, வி. கனகசபைபிள்ளை அவர்கள் பி. எ. பி. எல்.
Postal Supt. Madras Division

,, திவான்பஹதூர் வி. கிருஷ்ணமாசாரியர் அவர்கள்—
Curator of Books Madras

,, தண்டலம், பாலசுந்தர முதலியார் அவர்கள், எம். எ.
Tamil Translator to the Govt. Madras

,, எஸ். இராதாகிருஷ்ணையர் அவர்கள் பி. எ.
Principal Maharajah's College Pudukotta

,, ஜி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்—
Editor "Swadasamitran" Madras

,, டி. இராமகிருஷ்ண பிள்ளை அவர்கள் பி. எ.
Interpreter H. C. Madras

,, வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் பி. எ.
Tamil Pandit Christian College Madras

,, கே. சுந்தரராமய்யர் அவர்கள் எம். எ.
Lecturer Govt. College Kumbakonam

,, ஜே எம். நல்லசாமிபிள்ளை அவர்கள் பி. எ. பி. எல்.
District Munsiff Nandeyal

,, எஸ். நாராயணசாமி அய்யர் அவர்கள்—
Lecturer Govt. College Kumbakonam

,, பி. குருராவ் அவர்கள், எம். எ. எல. டி. எஸ்.
P. G. College Trichy

,, கே. ஜி. சேஷய்யர் அவர்கள் பி. எ. பி. எல்.
Professor Law College Trevandram

,, எஸ். இராமசாமி அய்யர் அவர்கள்—
Munsiff Travancore Samastanam

,, எம். முத்துராமலிங்க பிள்ளை அவர்கள் பி. எ.
H. T. Pandit H. H. the Maharajah's College Trevandram

,, பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள்—Madras

,, என். பி. கண்ணபிரான் பிள்ளையவர்கள் பி. ஏ.
Sub-Magistrate Conjeevaram

,, சேலம், பட்டால. நரசிம்மலு நாயடுகாரு—
Editor Kala Nidhi Coimbatore

,, பி. நாராயண அய்யர் அவர்கள் பி. ஏ. பி. எல்.
High Court Vakil Madras

,, பி எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள்—
1st Grade Pleader Madras

,, எஸ். சாமிநாதய்யர் அவர்கள்—
Pleader Ramnad

,, என். வி. சுந்தரராஜ அய்யர் அவர்கள் பி. ஏ. எல். டி.
Teacher Setupathy High School Madura

---

### iii. ஸம்ஸ்கிருத தமிழ்வித்வான்கள்.

ம-ா-ஸ்ரீ, வெ. அரங்காசாரியார் அவர்கள்—
மகாமகோபாத்தியாயர், கும்பகோணம்

,, தி. ா. ஸ்ரீனிவாஸாசாரியார் அவர்கள்—
ஸம்ஸ்கிருதபண்டிதர் கவர்மெண்டு காலேஜ் கும்பகோணம்

,, வி. ஸ்ரீனிவாஸாசாரியார் அவர்கள்—
ஸமஸ்கிருதபண்டிதர் சேதுபதி கலாசாலை மதுரை

,, வீராசாமி அய்யங்கார் அவர்கள்—
ஸம்ஸ்கிருத வியாகரண வித்வான் எட்டியாபுரம்

,, சந்திரசேகர தீக்ஷிதர் அவர்கள்—
ஸம்ஸ்கிருத பண்டிதர் நேட்டிவ் காலேஜ் மதுரை

---

### iv. ஆங்கில ஸமஸ்கிருத வித்வான்கள்.

ம-ா-ஸ்ரீ, பண்டித ச. ம. நடேசசாஸ்திரியார் அவர்கள் பி. ஏ.

,, ஆர். கிருஷ்ணமாசாரியார் அவர்கள் எம். ஏ.
ஸம்ஸ்கிருத பாடசாலை இன்ஸ்பெக்டர் சென்னை

ஆக இதுவரையில் இச்சங்கமேறிய வித்வான்கள் 48 பெயர்

## இந்த நான்காம் தமிழ்ச்சங்கத்தின் உத்தேசங்களாவன.

(1) தமிழ்க்கலாசாலை உளவாக்குதலானும் (2) இறவாதுள்ள தமிழ் ஏடுகள் பலவற்றையும், அச்சிட்ட தமிழ்நூல்கள் அனைத்தையும் தேடிப்பெற்றுப் பிறருக்கு பயன்படுமாறு ஒருவழித் தொகுத்துவைத்தலானும், (3) வெளிவராத அரியதமிழ்நூல்களைப் பரிசோதித்து அச்சிட்டுப் பரவச்செய்தலானும், (4) வடமொழி ஆங்கிலமுதலிய பிறபாஷைக்கண்ணுள்ள, அரியநூல்களைத் தமிழில்மொழிப்பெயர்த்து பதிப்பித்தலானும், (5) தமிழ்க்கல்வி அபிவிர்த்தியைபற்றிய (செந்தமிழ்ப்) பத்திரிகை வெளியிடலானும், (6) தமிழ்பரிக்ஷை பல வைத்து உயர்தரத்தே தேறியோர்க்குப் பட்டம பரிசுமுதலிய அளித்தலானும், (7) தமிழறிஞரால் உபந்நியாசங்கள் புரிவித்தலானும், (8) இக்காலத் தமிழறிவு மிக்கார் பலரையும், ஒருங்குசகூடிக தமிழாராய்தலானும், (9) வேண்டும் நூல, உரைமுதலியன செய்வித்தலானும், (10) பிறர்செய்தநூல் உரை முதலியவற்றை அறங்கேற்றுவித்தலானும், தமிழ்பாஷையை வளர்த்தலாகுமென்பதாம்.—

இக்கருத்துக்களுக்கிணங்க.

இப்போது இராமநாதபுரம் ஸமஸ்தானம் ஸ்ரீமத், விஜயரகுநாத பாஸ்கரசேதுபதி ராஜாவர்கள் இச்சங்கத்துக்கு பொருளுதவிபுரிந்து என்றும் நிகழுமாறு தக்கசாசனமும் அளித்தபடியால்; (1) சேதுபதிச் செந்தமிழ்கலாசாலையை ஸ்தாபித்து, அக்கலூரியிலோதுவோருக்கு உண்டி, உடை முதலானதுகளைக்கொடுத்து, கல்விகற்பித்து வருகின்றனர். (2) பாண்டியன் புத்தகசாலை என்னும் பெயரால் பல்லோருக்கு பெரும்பயன்படும்படி நூனிலைய வாசகச்சாலையும், (3) சங்கத்தின் பத்திரிகை புத்தகமுதலியன அச்சிடத் தமிழ்ச்சங்கமுத்திராசாலையும் (4), சங்கத்தின் சங்கதிகளை வெளியாக்க செந்தமிழ்ப்பத்திரிகையும், (5) ஆங்கிலகலாசாலைகளிற்படிக்கும் தமிழ்மாணாக்கர்களுக்குத் தமிழில் உத்சாகமுண்டாகும்படி தமிழ் பரிக்ஷைபத்திரங்களால் பரிக்ஷித்து பரிசளித்தும் (6) பலவிடங்களில பாககிடக்கும் அச்சிடாத தமிழ்நூல்களைததேடிக்கொணடுவர, காரியஸ்தர்களையும்—இத்தமிழ்நாட்டு அறிஞர்பலரை வித்வத் அங்கத்தினராகவேண்டி அவர்களை மதுரைசங்கத்திற்கு தருவித்து உபந்யாசங்கள்செய்ய கல்விக்கழகமும் ஸ்தாபித்து; அதிகசிரத்தையாக உழைத்துவருகின்றனர்—கடவுள் இச்சங்கத்திற்கு பூரணசுகவாழ்வை பிரசாதிப்பாராக—

தமிழரசர் மூவருள்ளும், பாண்டியரே மற்ற இருவரிலும்செந்தமிழைசிறப்புற்றோங்கச் செய்தவர்களென்பதற்கு—பாப்பாருங்கல மேற்கோளில்,

"வில்லுடையான் வானவன் வீயாத் தமிழுடையான்
பல்வேற் கடற்றானைப் பாண்டியன்—சொல்லிகவா
வில்லுடையான் பாலை யிளஞ்சாத்தன் வேட்டனே
செல்லுடைய னீர்நாடர் கோ-என்றும்

"நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ்
வில்லந்தொறுமூன் றெரியுடைத்து—நல்லரவப்
பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டிய நின்
னாட்டுடைத்து நல்ல தமிழ்—(ஔவையாரும்)

தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும்—(சிறுபாணாற்றுப்படையிலும்)

"உயர்மதிற்கூடலினாய்ந்தவொண்டீந் தமிழின் றுறை-(திருக்கோவை)

"உலக மொருநிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலாற் றூக்க—வுலகனைத்துந்
தாள்வாட வாடாத தன்மைத்தே தென்னவ
னான்மாடக் கூடாகர்—(பரிபாடலுறுப்பாதி) கவிகளைப்பார்க்கவும்

மேலும்-பூதபாண்டியனும், அவன்தேவியாரும் மஹாவித்வசிகாமணிகளென அகநானூறு புறநானூறிவ்காணலாம் பிரதியக்ஷம்-புறத்திற்காணப்பட்ட-

மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்—தடங்காத் தானை வேந்தருடங்கியைந்
தென்னொடு பொருது மென்ப வவரை—யாரம லறத் தாக்கித் தேரோ
டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த—பேரமருண்கணிவளினும் பிரிக-

என்றுதிகவிகளால் ஏபலக்டமாகும்.

அன்றியும்—வரதுங்கப்பாண்டியன் பிரம்மோத்திரகாண்டத்தை தமிழாற் பாடினதன்றியில்; அவன்தேவியார் மஹாகவிசத்தினம் எனபதற்கு அத்தேவியார் பணிபாரக்குடத்தக்குள மதுரைப்பூ பாண்டியன் தேவி விடுத்தகவி என்னும் தலைப்பினகீழ்.

"என்னையிவ்வா றவர்மறந்தம் யானவரை மிகநினைந்திங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்றானோ வப்பிறப்பிற் செய்த தவ முடிந்த வாறோ
கன்னன்மத னபிராமன் வரதுங்க ராமனியற் காசிநாட்டி
லன்னவயற் குருகினங்கா ளினியெவ்வா றுயிர்தரித்திங் காற்றுமாறே-

என்று தமிழ்நாவலர் சரிதைக்கண் தெரிவிக்கப்பெற்றிருத்தல்பிரதியக்ஷம்.

• மதுரையிலாண்ட புராதன பாண்டியர்கள் கேவலம்இப்படிகல்வி விஷயதநில் மாத்திரம் கருத்தைச்செலுத்தினது மாத்திரமல்ல; ஈசுவர பக்திக்கும் பாடுபட்டவர்களாகி,அநேக சைவ வைணவக் கோயில் கோபுர மாடமாளிகைகளையும்,ஆவி கூப, தடாகங்களையும் உண்டாக்கி, உத்கிருஷ்டமடைந் திருந்தார்கள், என திருவிளையாடற்புராணம் முதலான கிரந்தங்கள் நிதர்சனங்களாக நிரூபிக்கின்றன.

குலசேகரன்,மலையதுவஜன் முதலான சிலபாண்டியர்கள்,அகத்தியருடைய கட்டளையின்படி தருமராஜ்ய பரிபாலனம்செய்துக் குடிகளை சுகமாகவாழச் செய்தார்களென முன்னமேசொல்லி இருக்கிறோமல்லவா? அதற்கு இரண்டொரு உதாரணங்களை இதனடியில் காட்டுகின்றனம்—

விக்கிரம சிங்கபாண்டியனுக்கு அகஸ்தியர் மனுநீதி யுரைத்தது, பாவநாசத்தல புராணத்தில்.

ஆறிலொன்றிறையாகவே—கூறுகொண்டதுகோடலா
மீறில்வெந்துயரெய்திஞோர்க்—கூறுநீககுவதுன்கடன்.
ஆதிநூலி னராவினை—மாதர் பாலர்வயோதிய
ரோதுவெம்பிணி யோர்தமைப்—பாதுகாத்திடல் பண்பரோ
காமமாதி கடந்திடல்—வாமமாதி மறந்திட
லேமவில்லியை யேத்துதல்—பூமிமன்னவர்பொற்பரோ
ஊக்கநெஞ்சிலுறைத்தலு—மாக்கமோடுறுமாக்கலும்
வாக்குமாறிலமாற்றலுந்—தூக்கிமன்னவர் சூழ்ச்சியால்.
ஒற்றர் மூவருலகினி—லற்றமானவகீதியு
மற்றுமோர்ந்தவைமாற்றுதல்-கொற்றமன்னவர்கொள்கையாம்.என்றும்
குடிபுறங் காத்தல் வேதங்கூற்று வந்தெதிர்த்தபோது
மடியிலாச்சேனை சேர்த்தன் மாற்றலரை போதற்குந்
தடைபடு மரணுண்டாக்கல் சத்தம் பொச்சாப்பின்மை
படிவியோர் புயத்திற்றாங்கும் புலவருக்குறுதியாமால்
என்று திககவிகளொககாண்க.

மேலும்—பாண்டியர்காலத்தில் மஹாபகத சிரேஷ்டர்களாகிய மாணிக்க வாசகர், திருஞானசம்பந்தமூர்த்திகள், அப்பர், சுந்தரர் முதலான மஹான்களும்; "பாண்டியன் கொண்டாடப்பட்டப்பிரான் வந்தானென்றீண்டிய சங்க மெடுத்தூத" என்றுதி கவிகளின்படி ஆழ்வார்களும், நாயன்மார்களும் பரிமளிதநுப் பாண்டியநாட்டைப் பிரபஞ்சத்திற் பிரபலமாக்கினார்கள்.

அந்தப்பண்டியர்களுக்குப் பின்வந்த பாண்டியர்களும் கலவியையும், கடவுள பக்தியையும் அசட்டைசெய்து; சிற்றின்பசுகனும், சோம்பலிலும் காலததைக் கழித்துவந்தே; பாண்டியநாடு பாழ்த்துவர, வேறுநாட்டார் படை எடுத்துவரச் சம்பவித்தது.

## பாண்டிய இராஜியத்தின் முடிவு.

குலப்ஜன் அல்லது கூனபாண்டியன் காலத்தில் அரபிநாட்டிலிருந்துமகமதியர் மதுரைக்குவர ஆரம்பித்தார்கள் என்று முன்சொல்லி இருக்கிறோமல்லவா? அந்த கூன்பாண்டியனுக்குப் பிறகு, வீரபாண்டியசோழன பட்டததைப்பெற்றான். அவன் ஆதிபாண்டியருடைய 74-வது சந்ததி. அந்த வீரபாண்டியனுக்கு சந்ததி இல்லாமல் போய்விட்டபடியால்; பழைய பாண்டியர்களுடைய வைப்பாட்டி பிள்ளைகள் கிளம்பிவந்து, பாண்டியநாட்டை ஆளததலைப்பட்டார்கள் என்று, ஸ்ரீ ஸ்தலபுததகததில் சொல்லி இருக்கிறதாக, மதுரைஜில்லா மகுத்துவததை எழுதிய மிஸ்டர் நெல்சன் அவர்கள் எழுதியிருக்கிறார். (Vide Mr. Nelson's Madura Mannal) (Mr. Taylor's Supplementary M. S. S. & Mr. Robert Sewell's S I. A. Pages 218-219).

அப்படி ஆண்ட பாண்டியர்களுடைய வைப்பாட்டிமக்களாவன.

சோமசேகரபாண்டியன, கி-பி 1100 வருஷம் சிங்காசனமேறி 20ஆண்டான். கர்ப்பூரசுந்தரபாண்டியன், குமாரசேகரபாண்டியன், குமாரசுந்தரன், சுந்தரராஜன், ஷண்முகராஜன், மேருசுந்தரபாண்டியன், (அவன் சேர சோழ நாடுகளையும் ஆண்டான) இந்திரவர்மன்,(அவன் சோழனைவிடுதலைசெய்து அவன் மகளை விவாஹம்செய்தான்) சந்திரகுலதீபன், மீனகேதனன், மீனத்துவஜன்,

(இவன்சோழன்மகளைவிவாஹம் செய்தான்—அவன் மகன் சோணிநாட்டை ஆண்டான்) (மகரத்துவஜன், அவன மஹாவீரன்) மார்த்தாண்டன், குவலையாநந்த பாண்டியன் (இவன் கப்பல்யாத்திரைசெய்து கடலில் விழுந்திறந்தான்) கிருஷ்யான் மகள் திருபாதிதாயார்,(அவள் குண்டல பாண்டியனை விவாஹம் செய்தான்) சதருபீகாபாண்டியன், சத்ருசம்ஹாரன், வீரவர்மன், வீரபாஹு, மகுடவர்த்தனன், (சோழனால் சொல்லப்பட்டான்) வீரசிம்மன், வம்சகுலத்துங்கன், அதிவீரராமபாண்டியன், (சோழன் தோழன, அவன் நைடதம், நறுந்தொகை முதலானகிரந்தங்களை இயற்றிய சிறந்த தமிழ்வித்வான்) குலவர்த்தன பாண்டியன், சோமசேகரன், சோமசுந்தரன, இராஜராஜன், இராஜகுஞ்சரன். இராஜசேகரன், இராஜவர்மன, இராஜமேதாவிபாண்டியன், வரதராஜன், குமாரசிம்ஹன், வீரசேனன், பிரதாபராஜன், மெருணராஜன் குமாரசந்திரன், வரதுங்கன,சந்திரசேகரன்,சோமசேகரன்,பராக்கிரமபாண்டியன்,(அவன்பகையாளிகளிடமிருந்து பாண்டியநாட்டைப்பிடுங்கிஆண்டுவரும்போது,ஆதிசுல்தான்மலிக்கபூர்சாயிபு, கி-பி 1311௵ பண்டயெடுத்துவந்து பாண்டிநாட்டைப்பிடித்துக் கொள்ள; 1312௵ முதல் 8 மகமதியர்கள் மதுராபுரியை 48௵ ஆண்டார்கள்.

## அந்த மகமதிய அரசர்களாவன.

மலிக்காபூர்சாயபு கி-பி 1310—1313—3, அலாவுதீன்கான்,1313-1319, 6 உத்தமதீன்கான், 1316—1322—3, நீபுதீன்கான, 1322—1327,—6 நாகுல்தீன்கான், 1327—1334—7, சவுத்மலீக அஹமத்மலேக்,1334-1346—12 பாண்டக் மலீக, 1346—1358—12, என்பவர்கள ஆண்டுவருங் காலத்தில்; இந்தக் குடிகளுக்குப் பலவித கஷ்டநிஷ்டூரங்கள் சம்பவிக்க; அக்கஷ்ட நிஷ்டூரங்களை நீக்கி, நீதி ராஜாங்கத்தை ஸ்தாபிக்கக்கருதி; விஜயநகர புக்கராயலு 1350—1379௵ பாண்டியநாடு நாதனற்று கெட்டலைவதைக்கண்டு, கெம்பன்ன உடையாரைப் பாண்டியநாட்டிற்கு அதிபதியாக அனுப்ப; அவர் 1572௵ வரையிலும்; அவர் குமாரர் எம்பண்ண உடையாரும், மைத்துனர் பிரகாசு உடையாரும், 1404௵ வரையிலும் ஆண்டு சக்தியற்றுப் போனதனால்; புக்கராயலுடைய பந்துக்களில் பராக்கிரமசாலிகளான சில நாயக்கர்களை பிரதிநிதிகளாக அனுப்பி ஆண்டுவரச்செய்ததாக ஒருசாசனத்தில் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது அப்படி அனுப்பப் பெற்ற நாயக்கர்களாவன—

(1) இலட்சுமணநாயக், (2) முத்தன்னநாயக், அவ்விருவர்களும் 1404-ம் வருஷ முதல், 1451௵ வரையில் ஆண்டுவருகையில், அப்பாண்டிய நாட்டிற்கு பாத்தியஸ்தர்களாக சிலவாரசுகளைக் கண்டுபிடித்தார்கள்.—அவர்களாவன,

சுந்தரத்தாள் மஹாவிசுவநாதராயர், காளியாசோமனார், அஞ்சாதபெருமான்; முத்துராஜ திருமலை மஹா விசுவநாதராயர் என்பவர்களே. அவர்களுடைய பெயர்களையும், பாத்தியதைகளையும் பற்றிப் புக்கராயலுக்கு அறிவிக்க; அவர் உடனே பாண்டியநாட்டை அந்த வாரசுகளிடம் கொடுத்துவிட்டுவரும்படி உத்தரவுகொடுக்க; அவரும் அப்படியே செய்ய; அந்தப்பாண்டிய நாட்டு வாரசுகளும் 1451௵ முதல 1498௵ ஆகிய 48௵ ஆண்டார்கள. அப்படி ஆண்டவர்களை வைப்பாட்டிப் பிள்ளைகளென்று குடிகள் கலகம்செய்து மறுபடியும் விஜயநகரத்துக்கு முறையிட்டு அறிவிக்க; கிருஷ்ணதேவராயலு 1445—1500௵ நரசநாயக்கனையும், 1500—1515௵ தென்னமநாயக்கனையும் 1519—1519௵ நரசநாயக்கனையும; பிரதிநிதிகளாக அனுப்பி ஆண்டுவரச்செய்ததில், அவர்கள் சந்ததிகளில்.

குருகுருதிம்மநாயடு, 1519—1524ளும்,காட்டியம் காமயநாயடு, 1524—1526, சின்னப்பநாயடு; 1526—1530; ஜங்கமநாயடு, 1530—1535, விசுவநாதநாயடு, 1535—1544, வரதப்பநாயடு, 1544—1545, தொம்பச்சிநாயடு, 1545-1546, விசுவநாதநாயடு,1546-1547,விட்டலநாயடு,1547-1558,வருஷங்களில் ஆண்டபிறகு, பாண்டியநாட்டிற்குத் தக்க பாத்தியஸ்தன் என ஒரு சந்திரசேகரபாண்டியன் கிளம்பிவந்து,தனது பாதியதையைஸ்தாபித்துக்கட்டியதனால்; அந்தச்சந்திரசேகரப் பாண்டியனுக்குப் பட்டம்கட்டி ஆண்டுவரச்செய்தார்கள்- அப்போது தஞ்சையிலிருந்த வீரசேகரசோழன், பாண்டியநாட்டின் தலைநகராகிய மதுரைமீது படை எடுத்துவந்து தாக்கி பாண்டிய நாட்டைப் பிடுங்கிக்கொள்ள; அப்பாண்டியன், விஜயநகரஸமஸ்தானத்துக்குப்போய் முறையிட்டழ, கிருஷ்ணதேவஇராயலுதமது பிரதிநிதியாகிய நாகமநாயடுகாரை தக்கசண்டுதளாதிகளோடுப்போய்,வீரசேகரச்சோழனைத் தாக்கித்துரத்தி,அவனிடமிருந்த பாண்டியநாட்டைப்பிடுங்கி,பாண்டியனிடம்கொடுத்துவரும்படிகட்டளைக்கொடுத்தனுப்ப; அந்த நாகமநாயடும் அப்படியேவந்து சோழனைத்தாக்கித் துரத்தி, அவனிடமிருந்த பாண்டியநாட்டைப்பிடுங்கி, அதன்வார்சுதாரனாகிய பாண்டியனிடம் கொடுக்காமல்,தன்சொந்தமாக்கிக்கொள்ள;இதுசங்கதி விஜயநகர ஸமஸ்தானத்தாருக்குத்தெரிய, விஜயநகரத்தார் விசனப்பட்டு,இப்படி இராஜதுரோகம்செய்த நாகமநாயடுவைக்கொன்று, அவன் அக்கிரமமாகப்பிடித்துக் கொண்டிருக்கும் பாண்டியநாட்டைப்பிடுங்கி, சரியானவார்சாகிய சந்திரசேகர பாண்டியனிடம் கொடுத்துவரும்படி ஷை நாகமநாயடுவின் குமாரராகிய விசுவநாதநாயடுகாரை அனுப்ப,அவ்விசுவநாதநாயடும்வந்து,தன்தகப்பன் என்றமுறையையும் கருதாமல்; சத்தியத்துக்கு கட்டுபட்டு, தன்தகப்பனை நாகமநாயடைப்பிடித்து சிறையில் வைத்தும்,அந்நாகமநாயடுப்பிடித்து அக்கிரமமாகவைத்துக்கொண்டிருந்தபாண்டியநாட்டைப்பிடுங்கி, அதன்வார்சாகிய சந்திரசேகரபாண்டியனிடம் கொடுத்தும், அப்பாண்டியனுக்கு முடிசூட்டி, அச்சங்கதிகளை விஜயநகரராயலுக்கு அறிவிக்க, அந்த இராயலும் விசுவநாதநாயடுகாருடைய சத்தியத்தைக்கண்டுவியந்துக்கொண்டாடி, அவரை அப்பாண்டியநாட்டில் சிலவருடங்களிருந்து,அப்பாண்டியனுக்கு உதவிசெய்துவரும்படிசெய்ய,அந்தவிசுவநாதநாயடும் அப்படியேசெய்துவருகையில்;அச்சந்திரசேகரபாண்டியனும்அவன்குமாரனும்சிலவருஷங்களாண்டு சந்ததியற்று இறந்துப்போகவே; பாண்டியநாட்டிற்குத் தகுந்த வார்சுகளற்றுப்போன சங்கதியை விஜயநகரத்தாருக்குத் தெரிவிக்க; அந்தவிஜயநகர ஸமஸ்தானத்தார், விசுவநாதநாயடுகாருடைய சுத்தவீரத்துவம், சத்தியம், சுவாமிபக்தி, தருமகுணாதிசயங்களைக்கேட்டும்; பாண்டியநாட்டை அந்தவிசுவநாதநாயடுகாரே ஆளத்தக்கவல்லவர் என்று பாண்டியநாட்டுக் குடிகளுடைய வேண்டுகோளைக் கருதியும், விஜயநகர ஸமஸ்தானத்திலிருந்து தேவபிராம்மணர்களிடம் கங்கைதீர்த்தம், இராஜகில்லத்து அல்லதுகட்டளை, கத்தி, கட்டாரி, ஆடை ஆபரணங்களைக் கொடுத்தனுப்பி, பாண்டியநாட்டுக்கு பிரதானப்பட்டணமாகிய மதுரையில் கி-பி 1559ளு விசுவநாதநாயடுகாருக்கு பாண்டிய சக்கிரவர்த்தி என்றமகுடாபிஷேகம்செய்வித்து. பட்டம்கட்டிவைத்தார்கள்- அந்தவிசுவநாத நாயடுகாரும் அவருடைய பதினாறு சந்ததிகளும், பதினாறுபேருகளைப்பெற்று நாயடுகாருஸமஸ்தானத்தார் என்ற பெயரால், சுமார் இருநூறுவருஷகாலம் இந்தசருமசாஸ்திரப்படி ஆண்டார்கள்- ஆகையால் இனி அந்தநாயடுகாருசமஸ்தானசரித்திரத்தை அடுத்தகாண்டத்தில்- எழுதுகிறோம்.

இரண்டாமகாண்டம் முற்றிற்று.

## மூன்றாம்காண்டம்.

# நாயடுகாரு ஸமஸ்தானம்.

இதற்கு முன் நிற்கு இரண்டாம் காண்டத்தில் சோழ பாண்டியர்கள் ஒரு காலத்தில் மஹாமஹோன்னதஸ்திதியிலிருந்து, பிறகு மங்கலடையவே; குடிகளுக்குப் பலவித கஷ்ட நிஷ்டூரங்கள் உண்டாகியிருந்த; அச்சோழபாண்டிய நாடுகளில் நாயடுகாரு ஸமஸ்தானங்களை ஸ்தாபித்த விவரம் ஸ்பஷ்டமாகும்-

ஸ்ரீசந்திர வமிச க்ஷத்திரிய குலத்தாராகிய ஆந்திரருக்கு ஆதியில் "இராஜன், மஹாராஜன், விஜயன், சேனன், விகிரமன், போஜன், பாலன், புவனன், சிம்ஹன், சாலுகியன், வர்மன், வல்லபன், வர்த்தனன், மல்லன், காலசூரியன், கணபதி, கஜபதி, நரபதி, இராயலு என்றிதிப் பட்டபெயர்கள் வழங்கி வந்திருக்க; அந்த ஆந்திரருடைய பின் சந்ததியாருக்கு இப்போது நாயடு என்றப் பட்டப்பெயர் வழங்கி வரவேண்டியக் காரணம் என்ன என்று சிலர் எண்ணக்கூடும். அப்படி நாயடு பட்டம் வந்தகாரணம் என்னவென்றால்,

ஆந்திரர் ஆதியில் மகதநாட்டையும், பிறகு உஜ்ஜினி முதலான வடநாடுகளையும், ஆண்டுவருகையில்; அந்தக்காலத்தில் அந்நாடுகளில் சதாரணமாக வழங்கிவந்த ஸமஸ்கிருத பஷா பட்டப்பெயர்களை தரித்து கொண்டுவந்தார்கள்- பிறகுஅவர்கள் அவ்வட நாடுகளை விட்டு தென்னாடுகளை அடைந்து ஸமஸ்தானங்களைஸ்தாபித்தமையால்; அந்தந்த காலத்தையும், நாட்டையும், அங்கு வழங்கிய பாஷைகளையும் அநுசரித்து பட்டப் பெயர்களை தரிக்கச் சம்பவித்தன-

அப்படிச் சம்பவிக்கினும், அவர்களுக்கு வடநாடுகளில் வழங்கி வந்தப் பட்டப்பெயர்களையும்; பிறகு அவர்களுக்கு தென்னாடுகளில் வழங்கும் பட்டப் பெயர்களையும், பரிசோதித்துப் பார்ப்போமாகில்; அவைகள் பாடபேத சப்தரூபங்களில் வித்தியாசமானவைகளாகக் காணப் பெறினும், பொருளில் பேதம்பெறாதிருத்தல் பிரதியக்ஷமாகும்;மேலும் சிலபதங்கள்,பாஷாந்திரபிரதியயங்களால் வேறு விதமாகத் தோன்றுவதும் ஸ்பஷ்டமாகும்-

எப்படியெனில்-

இராஜா என்ற ஸமஸ்கிருதபதம் இராவு, அல்லது இராயலு என்று தெலுங்குபாஷையில் மருவி வந்ததும் பிரதியக்ஷம். இதேமாதிரியாகவே, அதிகாரி, தலைவன், எஜமானன் என்றிதிப் பொருள்களைத்தரும் நாயக என்ற ஸமஸ்கிருதபதம், தெலுங்கில் நாயடு என்று மருவியதாம்-ஆகவே, நாயடு என்றபதமும், இராஜன் என்றப் பதப்பெயருக்குள்ள பலபெயர்களில் ஒன்றாகும்.

விஜயநகர ஸமஸ்தானம் தினே தினே பல்கிப்பெருகி தெற்கே கன்னியா குமாரி வரையில் வியாபித்துக் கொண்டுவரவே, அவ்வளவு விஸ்தீரணமுள்ள பெரிய சமஸ்தானத்தை, ஒரேராஜன் விஜயநகரத்திலிருந்து திருப்தியாக ஆண்டுவருவது அசாத்தியமெனக் கண்டு; அச்சமஸ்தானத்தை நவ (9) கண்டங்களாக வகுத்தும்; அந்நவ கண்டங்கள் ஒவ்வொன்றிலும் தம் பிரதி நிதிகளாக (Governors & Viceroys) ப்போய் ஆண்டுவர தம்பந்துக்களிற் சிலரை தெரிந்தெடுத்தும், அவர்களுக்கு நாயடுகாரு என்றப்பட்டத்தைக் கொடுத்தும் அனுப்பினார்கள்-

எப்படியெனில்

விஜயநகரத்தில் அச்சுததேவராயலு அரசாண்டகாலத்தில், அவர்மனைவி ஸ்ரீதிருமலைஅம்மாளுடைய தங்கை, மூர்த்தியம் மாளை சேவப்ப நாயடுகாரு விவாஹம் செய்துகொண்டதின் நிமித்தம், அந்தச் சேவப்பநாயடுகாருக்கு சோழதேச மாகிய தஞ்சாவூரை ஸ்ரீதனமாகக் கொடுத்து ஆண்டு அனுபவித்துக் கொள்ளும்படி அனுப்பியதாக தஞ்ஜாவூர்ராஜசரித்திரத்தில் செப்பி இருப்பதை போலவே, 1837-வருஷம் ஜேம்ஸ் பிரின்சிப்பவர்கள் பதிப்பித்த ஆஸியாடிக் ஜர்னல் சரித்திரம், 6-வது வாலியம், 2-ம் பாகம், 502-505 பக்கங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது (Vide Pages 502-505 Part 2 Vol VI A The Journal of Asiatic Society by J. Prinsep)

மேலும்-விஜயநகர ஸமஸ்தானத்தை ஸ்ரீகிருஷ்ணதேவராயலு, அச்சுத தேவராயலு ஆண்டபோது, போர்த்துக்கல் தேசத்திலிருந்து வர்த்தக விஷயமாக வந்த பிராணவ் நூனிஸ் (Ferno Nuniz) என்பவர் தம் சரித்திரக் கடிதத்தில் விஜயநகர ஸமஸ்தானம் அப்போது மஹாபெரியதென்றும், அதை ஆண்ட இராயலுக்கு 200 பிரதி நிதிகள் நாயடுகாரு என்றப் பெயர்களைப் பெற்று உதவியாக விருந்து அரசாக்ஷி செய்துவந்ததைப் பார்த்ததாகவும்; போர்த்துகியபாஷையில் எழுதி இருப்பதை மேஸ்டர் சுவேல் துரையவர்கள் இங்கிலீஷில் மொழிபெயர்த்து தமது விஜயநகரசரித்திரபுத்தகம் 345-349 பக்கங்களிற் பதிப்பித்திருக்கிறார் (Vide Pages 345-349 A-Forgotten Empire by Mr. R. Sewell) ஆகவே அப்படி ஆண்டுவந்த நாயடுகாருகளிற் சிலரைப் பற்றி இதனடியில் எழுதுகிறோம்-

1. அதி வீரதிம்மப்ப நாயடுகாரு—அவர் உதயகிரி, கொண்டவீடு,பெனுகொண்ட, கடப்பை, சித்தவட்டம், கண்டிகோட்டை, நெல்லூர், கனககிரி, ஒரிசாவோரமாக இருக்கப்பட்ட நாடுகளுக்கு அதிபதி. அவருக்கு8,00,000-லக்ஷம் பொன்வராகன் வரவு. அதில் 3,00,000-லக்ஷம் பொன்வராகன் நரபதிக்குக்கப்பம் கட்டி விட்டு, பாக்கியைத் தாமெடுத்துக்கொண்டு, ஸமஸ்தான உதவிக்காக 25,000-பதாதிகளையும், 15,000-குதிரைகளையும்40-யானைகளையும் தயாராக வைத்திருக்கவேண்டும்.

2. கோபாலநாயடுகாரு-அவர் கோவாவை யடுத்த இராஜகுலம்,திருபுறம், திக்குமூலம், போகலேகலம், அடைக்கலம் என்றுதி வடமேற்கு நாடுகளுக்கு

அதிபதி. அவருக்கு 600,000-லக்ஷம் பொன்வராகன் வருமானம். அதில் 1,50,000 வராகனை நரபதிக்கு கப்பம்கட்டிவிட்டு 20,000-பதாதிகளையும் 2,500-குதிரைகளையும் 20-யானைகளையும் தயாராக வைத்திருக்கவேண்டும்.

3. "இலக்ஷுமய்ய நாயடுகாரு—அவர் தார்வாருக்குத் தெற்கேயுள்ள பங்கப்பூர் முதலான நாடுகளுக்குத் தலைவர். அவருக்கு 3,00,000 லக்ஷம்பொன் வராகன் வருமானம். அதில் 80,000 வராகனை நரபதிக்குக் கப்பம் கட்டிவிட்டு; பாக்கித்தொகைச் செலவில் 20,000 பதாதிகளையும், 1200குதிரைகளையும், 28 யானைகளையும் தயாராக வைத்திருக்கவேண்டும்.

4. நரஹரி நாயடுகாரு—அவர் முதலில் நாகலாபுரி நகை முதலானதுகளுக்கு பொக்கிஷாதிபதியாகவும், ஒண்டிக்கிராமம், பல்லாரி, ஹார்பன ஹள்ளிக் கடுத்த துர்ககவதி, இராயதுருக்கம், அஸ்தகிரி முதலான நாடுகளுக்கு அதிகாரி. அவைகளால் 4,00,000 லக்ஷம் பொன் வராகன் வருமானம். அதில் 2,00,000 வராகன் கப்பம்போக; பாக்கியில் 12,000 பதாதிகளையும், 600 குதிரைகளையும், 20 யானைகளையும் தயாராக வைத்திருக்கவேண்டும்.

5. சின்னப்ப நாயடுகாரு—அவர் மைசூரையடுத்த களாலி முதல் தொச்சி வரையிலுள்ள நாடுகளுக்கு அதிகாரி. அவைகளால் அவருக்கு 3,00,000 லக்ஷம் பொன் வராகன் வருமானம். அதில் 1,00,000 வராகன் கப்பம்போக; பாக்கியில் 10,000 பதாதிகளையும் 800 குதிரைகளையும் தயாராகவைத்திருக்க வேண்டும்.

6. கிருஷ்ணப்ப நாயடுகாரு—அவர் அசோலை முதலான நாடுகளுக்கு அதிகாரி. அவைகளால் 20,000 பொன் வராகன் வருமானம். அதில் 7000 வராகன் கப்பம்போக, பாககியில் 700 பதாதி 500 குதிரைகளுடன் சித்தமாக இருக்க வேண்டும்.

7. விஜயப்ப நாயடுகாரு—அவருக்கு இராஜப்ப நாயடு என்று பெயருமுண்டு. அவர் மைசூர், சித்தல் துருக்கம். போடியால் முதல் மங்களூர் வரையிலுள்ள நாடுகளுக்கு அதிகாரி. அவைகளால் 3,00 000 லக்ஷம் பொன் வராகன் வருமானம். அதில் 10,000 வராகன் கப்பம்கட்டி, 10,000 பதாதிகளையும் 800 குதிரைகளையும் 15 யானைகளையும் வைத்திருக்கவேண்டும்.

8. மல்லப்ப நாயடுகாரு—கிருஷ்ணராயலுடைய குதிரை வீரர். அவர் கள்ளிகோட்டை முதலான மலையாள நாடுகளுக்கு அதிகாரி. அவருக்கு 15,000 பொன் வராகன் வருமானம். அதில் 5000-வராகனைக் கப்பங்கட்டி விட்டு பாக்கியில், 6000- பதாதிகளையும் 400- குதிரைகளையும் தயாராகவைத்திருக்க வேண்டும்.

9. காலுவ நாயடுகாரு—அவர் ஒருகாலத்தில் மந்திரியாகவிருந்த தன்றி யில் சோழமண்டலத்தைச் சார்ந்த தஞ்சை, நாகப்பட்டிணம், திருக்கோவிலூர், போமகிரி, காயல் பட்டணம் முதல் இலங்கைவரையிலுள்ள நாடுகளுக்கு அதிபதியாக நியமிக்கப் பட்டிருந்தார். அவருக்கு அந்நாடுகளால் (11,00,000)

பதினொரு லட்சம் பொன் வராகன் வரவு. அதில் 3-ல் ஒருபாகத்தை நரபதிக்கு கப்பமாகக் கட்டிவிட்டு; பாக்கி இரண்டுபாகத்தைத் தமது செலவுக்கு வைத்துக்கொள்ள வேண்டியதன்றியில், தமது அந்தஸ்துக்காகவும், சமஸ்தான உதவிக்காகவும் 3000-குதிரைகளையும், 30000-பதாதிகளையும் 30-யானைகளையும் எப்போதும் தயாராகவைத்திருக்கவேண்டும்.

10. விஜயப்ப நாயடுகாரு—அவர் இராயதுர்க் முதலிய நாட்டிற்கதிகாரி. அவைகளால் 4,00,000-லக்ஷம் பொன் வராகன் வருமானம். அதில் 150,000 வராகன் கப்பம் கட்டிபாக்கியில் 150,00 பதாதிகளையும், 1000குதிரை வீரர்களையும், 50 யானைகளையும் வைத்திருக்கவேண்டும்.

11. ஆதியப்ப நாயடுகாரு—அவர் குத்தி முதலான நாடுகளிலுண்டாகும் வைரக்கற்களுக்கு அதிகாரி. அவைகளால் 3,00,000 இலக்ஷம் பொன்வராகன வருமானம்; அதில் 40,000 வராகன் கப்பம்போக, பாக்கியில் 8000 பதாதிகளையும், 800 குதிரைகளையும், 30 யானைகளையும் சித்தமாக வைத்திருக்கவேண்டும்.

12. இதே மாதிரியாகவே மதுரையை நாகம நாயடு முதல் விசுவநாத நாயடுவரையில் ஆண்ட மன்னர்கள் கட்டிவந்த கப்பத்தைப்பற்றியும், மதுரைச் சரித்திரத்தை எழுதிய மிஸ்டர் நெலசன்வர்களுக்கு கிடைத்த சாசனத்தினால் 1609-1623-ம் வருஷம் ஆண்டுவந்த விசுவநாத நாயடு பேரனாகிய முத்து வீரப்ப நாயடுகாரு விஜயநகர நரபதிக்கு 6,00,000-லக்ஷம் பொன்வராகனைக் கப்பமாகக் கட்டி வந்ததைப் பற்றியும்; எழுதி இருக்கிறார்.

இத்தியாதி சங்கதிகளினால் பலிஜவாராகிய ஆந்திரருக்கு நாயடுகாரு என்ற பட்டமும், அவர்களாண்ட நாடுகளுக்கு நாயடுகாரு ஸமஸ்தானமென்று பெயரானதற்குக் காரணமும் பிரத்தியக்ஷமாகும். இனி இதில் கண்ட நாயடுகாரு ஸமஸ்தானங்களை யெல்லாம் எழுதப்புகுந்தால்; இது ஒரு பெரிய புராணமாகிப் பலர் படிக்க விரும்பார்களாகையால், அவர்களில் நமது தென்னாடுகளில் ஆண்டுவந்தவர்களையும், இப்போது ஆளுபவர்களுடையவும் சிலர் சரித்திரங்களை மாத்திரம் சங்கிரகமாக எழுதுகின்றோம். அப்போது-

---

## கர்நாடகதேசத்தின் ஸ்திதி.

விஜயநகர நரபதி சமஸ்தானத்தைச் சார்ந்த நவ (9) கண்டங்களில் கர்நாடக (கண்டம்) தேசம் அதிகபெரிது. அதற்கு நர்மநாயடுகாரு அதிகாரியாக இருந்து ஆண்டபிறகு, அவர் சந்ததிகள் சாலிவாகன சகாப்தம் 520-ஆம் வருஷம் முதல் 638-ஆம் வருஷம் வரையில் ஆண்டுவந்தார்கள். அதில் ஒரு பாகமாகிய திராவிட தேசமென்னும் சோழ நாட்டை சகாப்தம் 670 - ஆம் வருஷம் முதல் 710-ஆம் வருஷம் வரையில் கைப்பற்றிச் சகாப்தம் 711-ஆம்

வருஷம் முதல் 720-ஆம் வருஷம் வரையில் பரிபாலித்து பிறகு அதைச் சகாப்தம் 720-ஆம முதல் 780-ஆம் வருஷம் வரையில் பிரதாப இராயலும்; சகாப்தம் 781-ஆம வருஷம் முதல் 900-ஆம் வருஷம் வரையில் கோவிந்தராயலும் அச்சுதராயலும், விதியதாராயலும் பரிபாலித்து வரசே. 901-ஆம் வருஷம் முதல் 970-ஆம் வருஷம வரையில் சிக்கராயலு பரிபாலனம் செய்தார். ச. 971-ஆம் வருஷம் மாதவராயலு சிவசமுத்திரத்தைப் பரிபாலனம் செய்த பிறகு ச. 971-ஆம் வருஷம் முதல் வெங்கடபதிராயலும், அவர் சந்ததிகளும் 1050-ஆம் வருஷம் வரையில் ஆண்டுவர, 1081-முதல் 1110-ஆம் வருஷம் வரையில் சோமசேகரராயலு ஆண்டுவந்தார். ச. 1280-ஆம் வருஷம் தேசத்தில் நாதனற்றுத் தவிக்க, 1300-ஆம் வருஷம் முதல் 1340-ஆம் வருஷம் வரை இம்மத்தூர் ராயலு ஆண்டார்கள். 1385-முதல் 1416-ஆம் வரு வரையில் நஞ்சராயலு, கேர்வர்த்தனராயலு ஆண்டுவர, அவர்களை ஜகதேவராயலு வந்து தாக்கி 1492 வரையிலும்;பிறகு1515-ஆம் வருஷம் இம்முடிஜகதேவராயலும், 1222-ஆம் வருஷமும் குமாரஜகதேவராயலும் ஆண்டுவந்ததாக பிரிவுபிரபந்தகவிலு சரித்திரம் 77-ஆவது பக்கத்தில் சொல்லப்பெற்றிருக்கிறது.

செல்லூர் சீமை கஜபதியினிடமிருந்து நரபதிக்கு சுவாதீனமான பிறகு அதை இலக்ஷ்மிராஜ, சின்னராஜ, நாராயணாரஜா ஆண்டுவந்ததாக ஒரு சரித்திரத்தில் கண்டிருக்கிறது. இப்படி பல பிரபுக்கள் கர்ணாடகதேசத்தையாண்டு வந்தாலும், இந்தக் சர்ணடக தேசம் அதிக விஸ்தீரணமானதாயும், பற்பல ஜாதி, பற்பல பாஷை, வேஷம் முதலானவைகளால் வகுக்கப்பட்டிருந்தமையாலும், இத்தேசத்தைத் திப்ருதிகரமாக ஆளுவது கஷ்டமாக இருந்தது.

அக்காலத்திலிருந்த

## கர்ணாடகதேசத்தின் எல்லைவிஸ்தீரண விபரம்.

---

பெங்காளத்தில் 1837-ஆம் வருஷம் ஜேமஸ் பிரின்சிப்பவர்களால் பதிப்பித்த ஜர்னலாப் ஆசியாடிக் சொஸைடியின் சரித்திரப்புத்தகம் 11ஆம் வாலியம் 2-ஆம் பாகம் 124-வது பக்கத்தில் கி.பி.1807-8-ஆம் வருஷம்-சென்னையில் 'லார்ட் பெண்டிகு', (Lord Bentinck) கவர்னராகவும், கர்னல் வில்லியம் மெக்லோடு (Col. William Mecold) ஆர்க்காட்டில் கமிஷனராகவும், இருந்தபோது அவர் வேண்டுகோளின்படி, செஞ்சி கோட்டை நாரயணன் எழுதிய "கர்ணடகராஜாக்களுடையசவிஸ்தார" சரித்திரத்தில் நரபதி இராயலு காலத்தில் கர்ணடக தேசத்தைச் சார்ந்த நாடுகளை அடியில்கண்டபடி எழுதியிருக்கிறார்-அதாவது அப்போது கர்ணடக தேசத்தில்

1. தொண்டமண்டலம்—அதன் பிரதான பட்டிணம் காஞ்சிபுரம்.
2. கனரா—அல்லது துளுவம்—அதன் பிரதானபட்டிணம், ஸ்ரீரங்கபட்டிணம்.
3. கொங்குமண்டலம்—அப்போது பிரதான பட்டிணம் கரூர்.

4. சோழதேசம்—பிரதான பட்டிணம் தஞ்சை.
5. தென்பாண்டிய தேசம்—பிரதான பட்டிணம் மதுரை-திருச்சிராப்பள்ளி.
6. சேரமண்டலம்—திருநகரி, கோரம், அநந்த சயனம்.

அடங்கிய விஸ்தீரணமான ஸமஸ்தானமாகையினால், அவ்வளவு விஸ்தீரணமுள்ள தேசத்தை ஒரே அரசன் ஆள்வது கஷ்டமெனக்கண்டு; கிருஷ்ண தேவராயலு காலத்தில் அக் கர்நாடகத்தை மூன்று கண்டங்களாக (ஸமஸ்தானங்களாக) வகுத்து, அவைகளுக்குத் தக்க கப்பங்களையும், அதிபதிகளையும் நியமிக்கக்கருதியும்; 1,00,000 சேனைகளுடனும் விஜயப்பநாயடு, துபாக்கி கிருஷ்ணப்ப நாயடு, விஜயராகவலுநாயடு, வெங்கடப்ப நாயடு, ஆகிய தமது பந்துக்களையும் பிரதிநிதிகளையும் அனுப்ப, பசலி 879-ஆம் வருஷம் விஜயநாயடு ராயவேலூருக்கு வந்து தங்க; சித்தூர் தொண்டமண்டல பாளையக் காரர்கள் வந்து தரிசித்தபோது; அவர்கள் ஸமஸ்தானத்துக்குக் கட்டவேண்டிய கப்பத்தை நிர்ணயித்தாகள். பிறகு அந்த விஜயப்ப நாயடுகாரின் சர்தார் சோழமண்டலத்துக்கேகி, செஞ்சி கோட்டை மன்னர்கள் கட்டவேண்டிய கப்பத்தை நிர்ணயித்தும்; பிறகு விஜயப்ப நாயடுகாரு சேர சோழ பாண்டியநாடுகளுக்குப் போய் அம்மன்னர்கள் கட்டவேண்டிய கப்பத்தையும் நிர்ணயித்தார்கள். அப்படி நியமித்த கப்பமானது வருஷம் ஒன்றுக்கு மூன்றுகோடி ரூபாயாகிய பிறகு அம்மூன்று கண்டங்களுக்கும்.

1. துபாக்கி கிருஷ்ணப்ப நாயடுகாரை செஞ்சி, நெல்லூர் முதல் கொல்லிட நதி வரையிலுள்ள நாடுகளுக்கு இராஜாவாகவும்.

2. விஜயராகவலு நாயடுகாரைத் தஞ்சை முதல் காவிரிநதி பாயும் நாடுகளுக்கு இராஜாவாகவும்.

3. வெங்கடப்ப நாயடுகாரை அதற்குத் தெற்கே இருக்கும் நாடுகளுக்கெல்லாம் இராஜாவாகவும் நியமிக்கப்பட்டு ஆண்டுவந்தார்கள். 'அவர்களில் செஞ்சியிலிருந்த துபாக்கி கிருஷ்ணப்ப நாயடு சிலமகமதியரைச் சேர்த்துக் கொண்டு சுதந்திர ரானத்தாக பிரவுடகவிலு சரித்திரம் 80 ஆம் பக்கத்தில்கண்டிருக்கிறது. கர்னல் மெக்கன்ஜி துரையவர்களுக்குக் கிடைத்த ஒரு சாசனத்தினால், கி. பி. 1585-ஹூம் ஸ்ரீரங்கராயலுடைய சகோதிரர் வெங்கடபதி ராயலு சிங்காசன மேறிய உடனே சந்திரகிரியை தமது பிரதானப்பட்டணமாகவும், வேலூரைத் தமது இராணுவம் தங்கும் தலைநகரமாகச் செய்துக்கொண்டும், செஞ்சி கோட்டையை கிஷ்ணம நாயடும், தஞ்சாவூரை, விஜயராகவலு நாயடும், மதுரையை, குமார கிருஷ்ணப்ப நாயடும்; சென்னப்பட்டணத்தை ஜகதேவராயலும், பெனுகோண்டாவை புஜபலராயலும் ஆண்டு வரும்படி நியமித்ததாகத் தெரிவிக்கப் பட்டிருக்கிறது-இப்படி பலஸமஸ்தானங்களுக்கு [illegible]புக்களாக நியமிக்கப்பெற்ற நாயடுகளும் (Vide Pages 129, 130—Vol. VI Part II. The Journal of Asiatic Society of 1837) அவர்களுடைய [illegible]களும் நெல்லூர், செஞ்சி, காஞ்சி, வேலூர், சித்தூர் சேலம்,

திரிசிரபுரம், தஞ்சை, மதுரை, திருநெல்வேலி முதலான பல விடங்களில் பரவி சுமார் 200 வருஷங்கள் வரையில் மகமதியரால் இத்தக்கன் கஷ்டப் படாமல் காத்துவந்தார்கள். பிறகு இப்போதிருக்கும் வெங்கடகிரி, காளஸ்திரி, கார்வேடிநகரம், பிட்டாபுரம், போபுலி, பர்லகிமிடி முதலான சிறு ஜமீன்கள் தவிர மற்ற நாடுகள் முறையே மகமதியர் வசமாகிப் பிறகு ஆங்கிலேயர் வச மாகி விட்டன.

மேல் குறித்த வெங்கடகிரி, காளஸ்திரி முதலானதுகள் இப்போதும் நாயடு ஸமஸ்தானங்களாக இருக்கின்றமையால், அவற்றின் சரித்திரங்களைச் சங் கிரஹமாக எழுதுகிறோம்.

---

# வெங்கடகிரி ஸமஸ்தானம்.

இச்சமஸ்தானத்தை கி. பி. 1257-ஆம் வருஷம் வேலம பலிஜவாராகிய பெட்டலநாயடுகாரு ஸ்தாபித்தார். இவர் வாரங்கல் கஜபதிராயலிடமிருந்து வந்தவர் இவருக்கு தாமநாயடு பிரசாதித்தியநாயுடு,ருத்திரநாயடு என்ற மூன்று குமாரர்கள் பிறக்க; முதற் குமாரர் மஹாவீரதீரராக இருந்தபடியால் இவருக்கு வாரங்கல் ராஜா கண்டபேரண்டபக்ஷிக் கொடியைப் பிருதாகக் கொடுக்கப் பெற்றார். இவர் மனைவியார் ஜகன்மோஹனி மாதவி. இரண்டாவது குமார ராகிய பிரசாதித்தியநாயடும் அதிக வீரதீரராகஇருந்தபடியால், நரபதி ஜராங்க கத்தை ஸ்தாபித்தார். தர்மநாயடுகாரு பத்மாதேவியை விவாகம் செய்ததில் வென்னம நாயடு, சாமி நாயடு, பிறந்தார்கள். இந்த வென்னம நாயடுவின் குமாரரான எர்ரதுளசி நாயடு கி. பி. 1293 முதல் 1323 ஆம் வருஷம் பிரதாப ருத்திரருடைய உத்திரவின்படி காஞ்சீபுரத்தில் பாண்டிய ராஜனைத் தாக்கி ஜயசீலரானார்.

இந்த எர்ர துளசி நாயடுக்கு வீராதிவீரனாகிய சிங்கம நாயுடு, வென்னம நாயடு, எச்சமநாயடு, என்ற மூவர் பிறக்க; சிங்கமநாயடுக்கு அநந்தபோக நாயடு பிறந்து, 1300-ஆம் வருஷம் சுமார் 101 பாளையக்காரருடன் எதிர்த்துச் சண்டைசெய்து ஜயித்துப் புகழ்பெற்றார்.

மற்றொரு குமாரராகிய மாதவநாயடு 1369-ஆம் வருஷம் ஸ்ரீசைலத்தை விருத்தியாக்கினார். அநந்தபோக நாயடுக்குப் பெத்த சிங்கம நாயடு, தருமநாயடு, திம்மநாயடு, அன்னம நாயடு, சின்னச்சிங்கம்நாயடு, பிறந்தார்கள். இந்தத் திம்ம நாயடுக்கு தர்ம நாயடு, சித்தி தாசநாயடு, அநுபோத நாயடு பிறந்து, 1456 முதல் 1477 ஆம் வருஷம் வரையில் நாட்டை யாண்டுவந்தார்கள். அநுபோத நாயடுக்கு பெத்த மாதவநாயடு, சின்ன மாதவநாயடு, வீரசூர நாயடு, மதுசூதன நாயடு, எச்சமநாயடு, சின்ன சிங்கம நாயடு,நிர்வாயனராம நாயடு பிறந்தார்கள். பிறகு இராஜியம் விஜயநகர அச்சுத தேவராயனுடைய ஆதீனத்துக்குள் வந்தது.

1580-ஆம் வருஷம் சிங்கமநாயடு, குமாரதிம்ம நாயடும் பிறகு பெத்தகொண்டப்ப நாயடும், திருமலை நாயடும், ஞானதிம்ம நாயடும், கொண்டம நாயடும், பிறகு பெத்த கொண்டப்ப நாயடும், இவர் குமாரர் சென்னப்ப நாயடும், பட்டத்துக்கு வந்தார்கள். இவர் கண்டிகோட்டையில் மகமதியரை மடக்கி ஜயித்தார்.

பெத்த கொண்டம நாயடு சகோதரர் எச்சம நாயடுக்கு கஸ்தூரி ரங்கப்ப நாயடு பிறந்தார். இவர் 1579-ஆம் வருஷம் விஜயநகர நரபதி ஸமஸ்தானத்தாருக் குதவியாக கோலகுண்ட, விநுகொண்ட, கொண்டவிடு, கோட்டைகளைத் தாக்கிய மகமதியரோடு சண்டை செய்து ஜயித்தார். மற்றொரு குமாரராகிய ஆர்வீட்டி திம்மப்ப நாயடுக்கு சந்ததி இல்லை. கஸ்தூரி ரங்கப்ப நாயடுக்கு எச்சம நாயடு பிறந்தார். இவர் 1602-ஆம் வருஷம் செங்கல்பட்டைச் சார்ந்த மதுராந்தகத்தை விஜயநகர வெங்கடபதி ராயரால் பஹுமானமாகப் பெற்றார். இவர் குமாரர் எச்சப்ப நாயடு மைசூரில் சண்டைசெய்து டில்லி சக்கிரவர்த்தியினால் பஹுமானங்களைப்பெற்றார். இந்த எச்சம நாயடுக்கு பங்காரு எச்சம நாயடு பிறந்து, 1639 ஆம் வருஷம் ஒரு பெரிய அக்கிரஹாரத்தைக் கட்டி 1658-ஆம் வருஷம் வேலூர் ஜுல்பிப் பகார்கானால் கொல்லப்பட்டார். இவர் குமாரர் சர்விக்ன குமார எச்சப்ப நாயடு 1700-ம்வருஷம் வேலூரில் சண்டைசெய்தும், 1712 ஆம் வருஷம் மைசூரிலும், 1714-ஆம் வருஷம் செஞ்சிக் கோட்டையிலும் பிரபல சண்டைகளைச்செய்து 1747-ல் இறந்தார். இவர் குமாரர் பங்காரு எச்சம நாயடு 1760 ஆம் வருஷம் வெங்கடகிரியில் கோட்டையைக் கட்டி 1747 முதல் 1776 ஆம் வருஷம் வரையிலாண்டார். இவர் சகோதரர் பெத்த எச்சம நாயடுக்கு சந்ததி இல்லை. ஆகவே குமார எச்சன்ன நாயடுவைத் தத்துவாங்க அவர் 1776-ஆம் வருஷம் முதல் 1802 ஆம் வருஷம் வரையிலாண்டு வருகையில்; ஐதிராலி படையெடுத்து வந்து தாக்க இந்த நாயடுகாரு அங்கிலேயரோடு சேர்ந்து 1802-வருஷம் (Lord Clive) கிளைவு பிரபுவினால் சமஸ்தான சன்னத்தைப் பெற்றார். இந்த நாயடுகாருக்கும் சந்ததியில்லாமையால் 1802-ஆம் வருஷம் பங்காரு எச்சம நாயடுகாரைச் சுவீகாரம் செய்துகொண்டார். இந்த நாயடுகாரு 1847-ஆம் வருஷம் வரையிலாண்டார். இவர் குமாரன் தான் இப்போது அந்த வெங்கடகிரி ஸமஸ்தானத்தை ஆண்டுவரும் சுமார் 38-வயதுடைய ஸ்ரீ ராஜா ஸ்ரீ கோபால கிருஷ்ண நாயடுகாரு பஹதூரவர்கள். இவர் இந்த ஸமஸ்தானத்துக்கு 28-வது சந்ததி.

இந்த வெங்கடகிரி ஸமஸ்தானம் நெல்லூர் ஜில்லாவுக்குத் தெற்கும், சென்னைக்கு வடமேற்காக இருக்கிறது. இதன் விஸ்தீரணம் 2,117-சதுரமைல் இதில் 1881-ஆம் வருஷம் கணக்கின்படி 300,865-குடிகளிருந்தார்கள். இப்போதிருக்கும் ஸமஸ்தானபதி கல்வி கேள்வி களிற் சிறந்து தேசாபிமானத்தை நாடி (Land Holders Association) நிலச் சுவான்தாரர்களுடைய சங்கத்திற்கு சிரேஷ்ட அங்கத்தினராக இருக்கிறார். இச்சமஸ்தானத்தில் மிஸ்டர் நாராயணசாமி செட்டியார் பி. ஏ., மந்திரியாக இருக்கிறார். இச்சமஸ்தானத்

தில் மிஸ்டர் நாராயணசாமி செட்டியார் பி. ஏ., மந்திரியாக இருக்கிறார். இச் சமஸ்தானத்தை நன்கு அறிய விரும்புவோர் மிஸ்டர் பாஸ்வெல் எழுதிய நெல்லூர் மானியூலில் 712-முதல்724-பக்கங்களையும்,இராபர்ட் சுவெல் சாஸ்திரியாருடைய ஆர்கியாலோஜி சரித்திரம்239,242-பக்கங்களிலும், 1875-ஹைகோர்ட்டு வக்கீல் இராமராயர் எழுதிய சரித்திரத்தையும், 1837-ஆம் வருஷம் ஆசியாடிக் ஜர்னல் 2-ஆவது வாலியம் 2-ஆவது பாகம் 107, 110, 115, 117-ஆம் பக்கங்களையும் படித்துப் பார்க்கலாம்.

---

(இரண்டாவது அத்தியாயம்.)

## காளாஸ்திரி சமஸ்தானம்.

ஸ்ரீமத் திவான் பஹதூர் இரகுநாதராவஅவர்கள்1891-ஆம் வருஷம் எழுதிப் பதிப்பித்த காளாஸ்திரி சமஸ்தான சரித்திரத்தின்படி,இந்தச் சமஸ்தானத்தைப் பன்னிரெண்டாம் நூற்றாண்டில்(கி. பி. 1112-ஆம் வருஷம்)க்ஷத்திரியவம்ச, இனிகால கோத்திரம், ஜாபிநாயடுகோரு ஸ்தாபித்தார்.

இவர் சாலிவாஹன சகாப்தம் 1033-ஆம் வருஷம் (கி. பி. 1112-ஷு) வாரங்கல் பிரதாபருத்திரராயனுக்கு உதவியாகியும், மகமதியரைத் தாக்கி ஜயித்தபடியால், இச் சமஸ்தானத்தைப் பெற்றார்.இவர் குமாரர் மாத நாயடுகோரு14-ஆம் நூற்றாண்டில் பிரபலராகி பிரதாப ருத்திரருக்கு உதவியாய்ப் பாண்டியதேசத்தை ஜயித்ததாக, மிஸடர் மெக்கன்ஜி சாசனத்தினாலும், மிஸடர் வில்கிஸ் (Wilks' Mysore Vol. I-P 13) சரித்திரத்தினாலும் ஸ்பஷ்டமாகிறது.

இவர் குமாரர் வல்லபநாயடுகோரு கஜபதிக்கு உதவியாகி நின்று,காதர்கான் என்னும் மகமதிய மந்திரியைக் கொன்றார். இவர் குமாரர் திம்மநாயடுகோரு மகமதியரை வென்று "தேவரகொண்ட" ஜாகீரைப் பெற்றார். இவர் குமாரர் அப்பாய் நாயடுகோரு "வாலூரை" ஜயித்து ஆண்டார். இவரது சகோதரர் அன்னம நாயடு காருக்கு அநேக சந்ததிகளுண்டு. இவர் குமாரர் வேங்கடப்ப நாயடுகோரு குணாசலாவிலிருந்த மகமதியரை ஜயித்து. அதைத் தன் சமஸ்தானத்துடன் சேர்த்தார்.

பதினைந்தாம் (15) நூற்றாண்டில் கஜபதி ஸமஸ்தானத்தின் மகிமை குறைய, விஜயநகர ஸமஸ்தானம் விருத்தியாக, இந்தக் காளாஸ்திரியைச் சார்ந்த தாமரால வீரப்ப நாயடுகோரு அந்த ஸமஸ்தானத்துக்கு உதவியாக நின்று மகமதியரைத் தடுத்துவந்தார். இவர் குமாரர் தாமரால வெங்கடப்ப நாயடுகோரு ஸ்ரீரங்க இராயனுகாலத்தில் (கி. பி. 1573-1585-ல்) பிரபலரானார் (Vide P. 438 Nellore Manual) இந்த ஸ்ரீரங்க ராயனை மகமதியர் தாக்கியபோது, இந்த வெங்கடப்ப நாயடுகோரு கந்தகூரியில் எதிர்த்து காதி என்னும் மகமதிய வீரனை ஜயித்தபடியால்; இராயனு மகிழ்ந்து செஞ்சி, வந்தவாசி, காளாஸ்திரி ஜாகீரை

யும், பல பிருது பட்டங்களையும் கொடுத்தார். இவருடைய குமாரர் வெங்கடப்ப நாயகோரு இராபூரி சண்டையில் ஜயசீலருனதால், இராயலு மகிழ்ந்து திரிசிராப்பள்ளி, தஞ்சை முதலிய நாடுகளை கொடுக்கப் பெற்றும், திரிசிராப்பள்ளிக் கருகில், சமயவரம் என்னும் இடத்தில் நடந்த சண்டையில் கொல்லப்பட்டார்.

இவர் குமாரர் சென்னப்ப நாயகோரு பட்டத்துக்கு வந்தபோது தேக சுகமின்மையால், இப்போது சென்னப்பட்டணமென்று பிரசித்திப்பெற்ற பட்டணம் அப்போது ஓர் மீன்பிடிக்கும் குப்பமாக இருந்த இடத்திற்குப்போய் கடல்காற்றுக்குத் தங்க; அதற்கு 'சென்னகுப்பம்' என்று பெயர் வழங்கிக் கொண்டுவந்தது. இவருடைய குமாரர் தாமரால வெங்கடாத்திரி நாயகோரு பட்டத்துக்கு வந்தகாலத்தில், தக்ஷிண நாட்டில் ஆங்கிலேயர், பிரான்சுக்காரர், டானியர், போர்த்துக் கேசர்கள் வந்து வர்த்தக ஸ்தலங்களை ஸ்தாபிக்கவேண்டிய இடங்களுக்குப் பல குருநில மன்னர்களுடைய உதவியை நாடித்திரிகையில்; இக்குருநில மன்னர்கள் எந்த ஜாதியாருக்கு உதவி செய்வதென்று மனோராஜியம் செய்து கொண்டிருந்தார்கள். இந்த தாமரால வெங்கடாத்திரி நாயகோருக்கு ஆங்கிலேயரே நல்லவர்களென்றும், அவர்களுக்கு உதவிசெய்வதே உத்தமமெனறும் யோசித்துக் கொண்டிருக்கையில்; நெல்லூரிலிருந்து தருவப்பநாயடுவும், ஆறுமுகமுதலியாரும் 1639-ஆம் வருஷம் வந்து, சென்னப்ப நாயகோருக்கும், வெங்கடாத்திரி நாயகோருக்கும் சிப்பார்சு செய்து, சென்னகுப்பத்தை ஆங்கிலேயருக்கு கொடுக்கும்படி கேட்க; இந்தத் தாமரால வெங்கிடாத்திரி நாயகோரு அப்போது சந்திரகிரியில் இருந்த நரபதி ஸ்ரீரங்கராயலுக்குத்தெரிவித்து, அவர் அனுமதியின்படி அப்போது ஈஸ்டு இந்தியாக் கம்பனிக்கு காரியஸ்தராகவிருந்த மிஸ்டர் டே (Mr. Day) என்பவர் மூலியமாகக் கொடுத்தார்.

அப்படிக் கொடுத்த அந்த இடத்திற்கு ஸ்ரீரங்கராயலுடையபட்டணம் என்று தம் பெயரிடும்படி சந்திரகிரி ஸ்ரீரங்கராயலு தெரிவித்திருந்தாலும்; இந்த வெங்கடாத்திரி நாயகோரின் தகப்பனார் சென்னப்பநாயகோரும் அந்த இடத்தை அதிகமாக விரும்பிப் பாராட்டி வந்தமையால், அவர் பெயரே விளங்கட்டுமென்று அதற்கு சென்னப்பட்டணம் என்று பெயரிடும்படி சொன்னதில், அதே பெயரிட்டும், இப்போதும் சென்னப்பட்டணம், அல்லது சென்னை என்ற பெயரால் இந்த தக்ஷணராஜதானிக்கு தலைமை நகராகப் பிரகாசிக்கிறது.

[Vide Pages 172 of the Gazetteer of Southern India; Pages of 216 Manual of the North Arcot; Pages 441, 442 of Mr. Boswells Dt. Manual of Nellore; Pages 14, 15 of Abuer's Rice & Progress of India]

இந்தத் தாமரால நாயகோருகள் மகா வீரதீரர்களாகவிருந்து, கஜபதி நரபதிகளுக்கு உதவிசெய்ததன்றியில், அரங்கசீப் சக்கிரவர்த்திக்கும், உஜனி யுத்தத்தில் உதவி செய்ததனால், 1697-ஆம் வருஷம், தாமரால அக்கப்ப நாயகோ

ருக்கு பஹதூர் பட்டமும், பல்லக்கு முதலான பிருதுகளையும் கொடுத்துக் கௌரவித்தார்.

இவருக்குச் சந்ததியில்லாமையால், இவர் அண்ணன் குமாரர் தாமரால வெங்கடப்ப நாயடு 1745-ஆம் வருஷம் பட்டத்துக்கு வந்தார். இவருக்கு அகம்மது சாயிபு மந்திரி. நாசிப்கான் 1754-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 5-ந்தேதி தாரூர் முதலான கிராமங்களையும், கம்பத்துக்குப் பதிலாக கனககிரி முதலான விடங்களையும் கொடுத்தார்.

1758-ஆம்வருஷம்மராட்டியர் காளாஸ்திரியைத்தாக்க; மறுவருஷம்வரையில் இங்கிலீஷ்காரர், பாதுகாத்தார்கள். 1781-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 26-ஆந் தேதி ஸர் ஐயர்கூட் (Sir Eyre Coote) இவரை இங்கிலீஷ்காரர்களுக்கு உதவியாக இருக்கவேண்டுமென்று கடிதமெழுத, உடனே சம்மதித்து இங்கிலீஷ் சேனைகளுக்கு வேண்டிய அரிசி, ஆடு, மாடு முதலானவைகளைச் சேகரித்துக் கொடுத்து வந்தனம் பெற்றார். இவருக்கு ஆங்கிலேயரிடமிருந்த இராஜ விசுவாசத்தைப்பற்றி 1791-ஞ் ஆகஸ்டு மாதம் 12-ந்தேதியில் ஸர், ஜார்ஜ் பார்டுநட்டு (Sir George Bardnet) அவர்களும் (Lord Cornwallis) கார்ன்வாலிஸ் பிரபுவும் புகழ்ந்து கொண்டாடி எழுதி இருக்கிறார்கள். இந்தக் குமார வெங்கடப்பநாயடு இவ்வளவு புகழுடன் 50-வருஷம் ஸமஸ்தானத்தை யாண்டு இறந்துபோக. 1795-வருஷம் இவர் குமாரர் தாமரால திம்ம நாயடுகாரு பட்டத்துக்குவந்தார்.

இவர் இயற்கையில் குரூரராயினும், ஆங்கிலேயருக்கு அன்பராக இருந்தார். இவருடைய வீரதீரத்தைப் பார்த்து கர்னாடக இங்கிலீஷ் சேனாபதியாகிய ஜார்ஜ் ஹாரிசும் (George Harris) அப்போது சென்னைக் கவர்னரான கிளைவு பிரபு (Lord Clive) முதலானவர்கள் கடிதங்கள் மூலியமாக இவர் உதவியை நாடினார்கள். 1803-ஞ் இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் இவரையும் மற்ற சுதேச குறுநிலமன்னரையும் தம் சமஸ்தான சேனைகளை எடுத்துவிடவேண்டுமென்று கட்டளையிட்டதில் அதே விசனத்தில் இறந்தார்.

இவருக்கு பெத்த வெங்கடப்ப நாயடு, சின்ன வெங்கடப்ப நாயடு என்ற இரண்டு குமாரர்கள் இருந்ததில், பெத்த வெங்கடப்ப நாயடு காருக்கு பட்டம் கிடைத்தது. இவருக்குப் பிறகு இவர் குமாரர் திம்ம நாயடுகாரு பட்டத்துக்கு வந்து 1832 ஆம் வருஷம் இறந்துபோக, இவர் மனைவி தமரால வெங்கடப்ப நாயடுகாரைச் சுவீகாரம் செய்துகொண்டதில், 1834 ஆம் வருஷம் நவம்பர் மாதம் 12 ஆந்தேதி பட்டத்தை யடைந்தார். இவர் 17 வருஷம் ஆண்டு வித்வான்களை ஆதரித்தார். 1837 ஆம் வருஷம் வட நாடுகளில் சிப்பாய் கலகமுண்டான காலத்தில் தாம் இங்கிலீஷ்காரர்களுக்கு வேண்டிய உதவிகளைத்தையும் செய்வதாக அநுதாப கடிதத்தைச் சென்னை கவர்ன்மெண்டாருக்கு அனுப்பினார். இவர் காலத்தில் ஜமீன் கர்தாயம் வசூல் செய்யும் விஷயத்தில் புது சட்டங்களுண்டாகியதால்; நஷ்டமடைந்து லக்ஷக்கணக்காக கடன்வாங்கி

1881-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 22-ந்தேதி (தம் ஸமஸ்தானத்துக்கு 6-குமாரர்களைவிட்டு) இறந்தார். இந்த 6-குமாரர்களில் ஜேஷ்டராகிய இராஜா ஓம்தராஜா இராஜா தாமராலகுமாரமுத்து வெங்கடப்ப நாயகோரு பட்டத்தைப்பெற, 1881 ஹூ மே மாதம் 17-ஆந் தேதி இங்கிலீஷ் கவர்ன் மெண்டாரால் இவைத்தைப் பெற்றார்-1 890 ஹூம் சென்னை கவர்ன் மெண்டரால், (Lord Connemara & Lord Wenlock) இந்த ஸமஸ்தானபதி சென்னைக் கவர்ன்மெண்டு மாளிகைக்குப் போய் வரும்போதும், இராஜவண்டி, தண்டு பிருதுகளுடன் போய் வரும் கவுரவம் கொடுக்கப்பட்டது.

இப்பொழுது இந்த காளாஸ்திரி சித்தூர் ஜில்லாவிலிருக்கிறது. இதில் பாமூர், காளாஸ்திரி, மாதர் பாக்கம் என்ற வடதென் பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. வடபிரிவில் 5 தாலுகாக்களும், 415 சதுரமைல் விஸ்தீரணமும், அதில் 194 கிராமங்களும் 100,000 குடிகளும்;-தென்பிரிவில் 736 சதுரமைல் விஸ்தீரணமும்; ஸமஸ்தான முழுதும் 1151 சதுரமைல் விஸ்தீரணமுள்ளதாயும், 1191-ம் வருஷம் காணிஷ் மாரிகணக்கின்படி 240,000 குடிகள் வசிக்கிறார்கள். இச்சமஸ்தான வருஷாந்திர வரவு 4 லட்சம் ரூபாய் இதில் 174,0000 பேஷ்கஷும், மற்றவரிகளில் 27,000 ரூபாய் இங்கிலீஷ் கவர்ன்மெண்டாருக்கு கட்டவேண்டும்.

---

## இந்த சமஸ்தானத்தின் ராஜ வமிசாவளி.

1 தாமராலஜாபிநாயகோரு 2 மாதநாயகோரு 3 வல்லபநாயகோரு 4 திம்ம நாயகோரு 5 இராகவ நாயகோரு 6 அப்பாய் நாயகோரு 7 தர்ம நாயகோரு 8 சென்னப்ப நாயகோரு 9 வெங்கடப்ப நாயகோரு 10 திம்ம நாயகோரு 11 வெங்கடப்ப நாயடு 12 சென்னப்ப நாயகோரு 13 வெங்கடப்ப நாயகோரு 14 ஐயப்ப நாயகோரு 15 வல்லப நாயகோரு 16 அன்னம நாயகோரு 17 மதிபதி நாயனிகாரு 18 ஸ்ரீபாத நாயனிகாரு 19 அப்பநாயகோரு 20 தர்மநாயகோரு 21 வரதப்பநாயகோரு 22 வெங்கலப்ப நாயகோரு 23 வெங்கலப்பநாயுடுகாரு 24 அச்சப்ப நாயகோரு 25 சென்னப்ப நாயகோரு 26 அக்கப்ப நாயடு 27 வெங்கடப்பநாயகோரு 28 வெங்டப்பநாயகோரு 29 திம்மப்பநாயகோரு 30 பெத்த வெங்கடப்பநாயடு 31 திம்மநாயனிகாரு 32 வெங்கடப்ப நாயடுகாரு (1877-வருஷம் இப்போதிய அதிபதி-)

[Vide History of Kalastry by Dewan Bahadur R. Ragunatha Row, 1891.]

---

(மூன்றும் அத்தியாயம்.)

# கார்வேட்டிநகர ஸமஸ்தானம்.

இது சித்தூர் அல்லது வட ஆர்காடு ஜில்லாவிலிருக்கிற ஒரு சிறியசமஸ்தானம். ஆதிகாலத்தில், ஆறு + காடு=என்னும் ஆர்க்காட்டில் இருந்த பயங்கரமான காடுகளைவெட்டி நாடாக்கியதனுல், அந்த ஆற்காட்டுக்கு அதிகாரி மகிழ்ந்து அக்காடுவெட்டியவருக்கு இந்த கார்வேட்டி அதாவது காடு + வெட்டி=கார்வேட்டி நகரை ஜாகீராகக் கொடுத்ததாய் ஒரு சாசனத்திலிருப்பதாய் மைசூர்ச் சரித்திர சாஸ்திரி மிஸ்டர் ரைஸ் அவர்கள் அபிப்பிராயப்படுகிருர். ஆயினும்

இந்தச் சமஸ்தான ஆதி உற்பத்தி சரித்திரத்திலும், மிஸ்டர் காக்ஸ் எழுதிய வட ஆர் காட் மானியூல் சரித்திரம் 223-வது பக்கத்திலும்; மிஸ்டர் ராபர்டு சுவேல் சாஸ்திரியாரின் சரித்திரம் 2-வது வாலியம,184-வது பக்கத்திலும், பின் வருகிறபடி எழுதப்பட்டிருக்கிறது. அதாவது:—

இச்சமஸ்தானத்தை ஸ்தாபித்தவர், ஒன்பதாம் நூற்றாண்டில், கோதாவரி ஜில்லா, பிட்டாபுரத்தில் சிறந்த க்ஷத்திரிய வெலமவிஜ குடும்பஸ்தர்களாகிய பொம்மராஜு, குட்டி மேகராஜு என்ற சகோதிரர்கள், இராமேஸ்வர யாத்திரைசெய்துவந்து; திருபதிமலே தரிசனத்துக்கு வந்து சுவாமியைக்கண்டு வணங்கியும், கால் நோய் பரிசிரமம் தீரத்துக்கொள்ள அடுத்திருந்த, "மட்டி குண்டா" என்னும் கிராமத்தில் சிலநாள்கள் தங்கி இருக்க; ஒரு நாளிரவில் சில கூட்டக் கொள்ளைக்காரர்கள் வந்து அந்தக் கிராமத்தையும, அதன் அதிபதியையும் தாக்கி, கொள்ளையிடும்போது; அந்த பொம்மராஜும், குட்டிமேகராஜும் எதிர்த்துக் கள்ளரையடித்து ஓட்ட; அந்தக் கிராமாதிகாரி கண்டு வியந்து, அதில் முக்கியவீரனுகிய பொம்மராஜுவைத் தன் மந்திரியாக நியமித்துக்கொண்டு ஆண்டுவருங்கால்; அவருக்கு சந்ததியில்லாமையால், அந்த உண்மையுள்ள வீரதீரனுன மந்திரி பொம்மராஜுவுக்கே இராஜியத்தைத் தந்து இறந்து போக; அந்தப் பொம்மராஜு தருமராஜிய பரிபாலனம் செய்துவந்தாராம். இவருக்கும் சந்ததி இல்லாமையால், கோதாவரி பிட்ட பூரிலிருந்த இவர்தாயாதி குமாரர் சாளுவ நரசநாயடு 1016ல்-வந்து அங்கு நரசாபுரம் என்ற ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தும்; 1020 வருஷம் சிங்காசனமேறி, 1023 வருஷம் இறந்துபோக; இவர் குமாரர் சாளுவ வெங்கடபதி நாயடு பட்டத்துக்கு வந்து சோழர் களைஜயித்து, 35-வருஷம் ஆண்டாராம்.

வேறொரு சாசனத்திஞல், சாலிவாகன சகாப்தம் 880-ஆம் வருஷம் விமலாதித்திய நாயடும்,930வெங்கடபதிநாயடும்,958ம் பீமநாயடும்ஆண்டதாகதெரியவருகிறது. 1077-வருஷம் புஜங்க நாயடு, 1236 நரசநாயடும், ஆண்டதாகத் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. இப்போது இந்தக் கார்வேட்டி நகர சமஸ்தானம் வட ஆர்க்காடுஜில்லாவில் சந்திரகிரி, காளாஸ்திரி, செங்கல்பட்டு, வாலாஜா,

சித்தூருக்கு இடையில் 9438 சதுரமைல் விஸ்தீரணமுள்ளதாயும்; நாராயணவனம், மங்கலிப்பேட்டை, திருத்தணி முதலான கிராமங்களுள்பட 798 கிராமங்களில், 125,000 ஏகர் விளைவு நிலமுள்ளதாயும்; தற்காலம் 700,000 ரூபாய் வருமானமுடையதாயும் இருக்கிறது. இதைத் தக்கபடி விருத்திசெய்தால் 10,00,000 ரூபாய் கிடைக்கலாம். கடன் அதிகமாக யிருப்பதால் ஸமஸ்தானம் இருக்கவேண்டிய ஸ்திதிக்குக் கொண்டுவர நமது ஆங்கில கவர்ன்மெண்டார் வேண்டிய முயற்சிகளைக் கையாடிவருகிருர்கள்.

---

(நான்காம் அத்தியாயம்.)

## போபுலி ஸமஸ்தானம்.

இந்த போபுலி ஸமஸ்தானம் விசாகப்பட்டணம் ஜில்லாவில், விஜயநகரத்துக்கு வடக்கே இருக்கும் புராதான நாயடு ஸமஸ்தானம். 1652 ஆம் வருஷம் பெத்த நாயடுஎன்னும் இச்சமஸ்தானத்தின் ஆதிதந்தை, இராஜாம்என்னும் இடத்துக்கு வந்து போபுலி=இராஜபுலி என்னும் பெயரால் ஒரு கோட்டையைக் கட்டினுர். 1756-வருஷம் ஸமஸ்தானத்தில் சிறு கலகங்கள் உண்டாக, அக்காலங்களுக்கு இந்தப் பெத்தநாயடுதான் காரணமென்று பொருமையினுல் சாடிகள் சொல்லி (M Bussy) புசி என்னும் பிரான்சு வீரனை விஜயநகராதிபதிதூண்டி, 11,000-சேனைகளுடன் உதவி செய்ய; போபுலிராஜர் இனி பகையாளிகளை ஜயிப்பது அசாத்தியமெனக் கண்டு, தம் மனைவி மக்களை அக்கினிக்கு இரையாக்கியும்; பிரதி மனுஷனும் பிராணனுள்ளவரையில் போர் செய்தும், போர்முகத்தில் சொர்க்கத்தை யடைந்தார்கள். தப்பி இருந்த ஒரு கிழவன் ஸமஸ்தானத்துக்கு வார்சான ஒரு பாலியனைப் புசியிடம் ஒப்புவித்து விட்டும்; உயிர் தப்பி இருந்த பிராஞ்சு வீரர், வேறு நால்வர் விஜயநகர அதிபதியின் கூடாரத்துக்குள் புகுந்து, அந்த அதிபதியைக் கைவாளால் வெட்டிக் கொன்று பழியைத் தீர்த்துக்கொண்டார்கள். அப்போது சிறுபையனுக இருந்த சின்ன இரங்காராவு என்பவனை 1794-வருஷம் (Bussy) புசி என்பவர் ஸமஸ்தானபதியாக்கி 1801வருஷம், சர்க்கார் பேஷ்கஷ் 90,000-ரூபாயாக நியமித்தார்கள். இராஜாசுவேதசலபதி ரங்காராவ்பஹதர் பிரபுவாயிருந்தபோது கி. பி. 1832ஹூம் கஞ்சாமிலும், விசாகபட்டணத்திலும், பிரபலகலகங்களுண்டாக இவர் அங்கிலேயருக்கு உதவியாக விருந்து அக்கலகத்தை அடக்கிவைத்தார்— இவர் மஹா தரும பிரபுவாக இருந்தும்; சந்ததியற்று கி. பி. 1862 வருஷம் ஆகஸ்டு 18-ம் தேதி பிட்டாபூர் சமஸ்தானத்தில் ஒரு குமாரனை சுவீகாரம் செய்துக் கொண்டு இறந்து விட்டார். அவரும் 5 வருஷம் ஆண்டு 1864 வருஷம் தமது 28ம் வயதில் இறந்து விட்டார்; அவர் மனைவி செல்லாயம்மகாரு பட்டத்தைப் பெற்று கொஞ்சகாலம் ஆண்டபிறகு, வெங்கடகிரி சமஸ்தான ராஜாவின் மூன்ருவது குமாரராகிய இப்போதிருக்கும் ஸ்ரீவெங்கடஸ்

வேதாசலபதி இரங்காராவ் பஹதூரவர்களை ஸ்வீகாரம் செய்துக் கொள்ளப்பட்டு பட்டத்தைப் பெற்றார். இவர் கல்வியில் நிபுணராணபடியால்; சென்னை சட்ட நிரூபண சபையின் ஒரு அங்கத்தினராக நியமிக்கப் பட்டிருப்பதோடு; கி. பி.1893வருஷம்,விக்டோரியா சக்கிரவர்த்தியாவர்களுக்குப் பட்டம் கட்டிய காலத்தில், இங்கிலாந்துக்கு இரண்டு தடவைபோய் மஹாராணியார், சக்கிரவர்த்தி, சக்கிரவர்த்தினிகளால் நன்கு மதிக்கப் பெற்றுவந்தார். இச்சமஸ்தானம் 920-சதுரமைல் விஸ்தீரணமும்,202 ஜாரிகிராமங்களும், 70 அகிரஹாரங்களும், 7 மோகஸ்கிராமங்களும்,முள்ளது-மொத்த வருமானம் 5லக்ஷம் ரூபாய். பேஷ்கஷ் 95315 ரூபாய் கிலவரி, 32467 ரூபாய்(Vide Pages 34 to 62 The Aristocracy of Southern India, A Vadevelu, 1881 வருஷம் கானிஷ்வாரி கணக்கின்படி அதில் 158 178-குடிகளிருந்தார்கள்.

---

(ஐந்தாம் அத்தியாயம்.)

## பிட்டாபூர் ஸமஸ்தானம்.

இது கோதாவரி ஜில்லாவில் 371 சதுரமைலும், 128 கிராமங்களும், 8.11,500 ரூபாய் வருமானமும்; 2,49,000 ரூபாய் பேஷ்கஷ் கட்டும்படியான சிறு சமஸதானம். இந்தத் தெலுங்கு க்ஷத்திரிய வெலம நாயடு, 1647-ஆம் வருஷம் அயோத்தியிலிருந்து வந்தாராம். இப்போதிருக்கும ராஜன் பெயர் இராஜாராவ கங்காதர ராமராவ. 1881-ம் வருஷம் 11,593 குடிகள் இருந்தார்கள். இவைகள அன்றியில், இப்போது இந்த ராஜதானியின் வட நாடுகளில் இருக்கும, சில ஜமீன்தார்களும், நரபதி கஜபதி ஸமஸ்தானங்களினுல் ஜாகீர் இனும் பூமிகளைப்பெற்ற பிரபுக்களும், பலிஜ தெலுங்கரேயாகர்-11526 சதுரமைலும், 442454 குடித்தொகையும், உடைய விஜயநகர விகிரம தேவரவர்களும்;911 சதுரமைல் விஸ்தீரணமும்,35,656குடித்தொகையுமுள்ள இரக்கப்பள்ளி பாலவன்சா பராசலம்தி முதலான விடங்களுக்குஇராஜராகிய பிரதாபருத்திர காலத்தில் பிரபலரான ஸ்ரீராஜா பார்த்தசாரதி அப்பாராவ் சாவே, அசுவராவ் பஹதரவர்களும்; 700 சதுரமைல் விஸ்தீரணமும், 274 கிராமங்களும், 400 சதுரமைல் காடுகளும், இலக்ஷம்ரூபாயிக்கு மேல்பட்ட வருமானமுள்ள,1898714 பேஷ்கஷ் உடைய தருப்பம்ஜமீன்தார் ஸ்ரீராஜா வீரபத்திர ராஜா பஹதரவர்களும்; கிருஷ்ணு ஜில்லா சமீலீஷ் வரமுட்ட நிஸிவிடி ஜமீன்தாரராகிய ஸ்ரீவெங்கடரங்கய்ய அப்பாராவ் பஹதரவர்களும்; பிரதாபருத்திரரால் பெருமைபெற்று இப்போது விசாகபட்டணம் ஜில்லா சங்கம்வலச ஜமீன் தாரர் ஸ்ரீமிருத்தியுஞ்சய நிஷாங்க பஹதர் அவர்களும்; கோதாவரி கொத்தம ஜமீன்தாரர் ஸ்ரீஇராஜவத்சவய்ய வெங்கடசிம்ஹாத்திரி, கஜபதி பஹதரவர்களும; கோதாவரி பல்லரவரம் ஜமீன்தார் ஸ்ரீராஜ கிருஷ்ணராவ், B. A. பஹதரவாகளும,ஒருவகை பலிஜ நாயடுமோர்களாம்.இதேமாதிரியாகவே தெற்கே

பர்க்லூர், கஞ்சுத்தி, சக்திரபதி, வடகரை முதலான நாயகசம்ஸ்தானங்களிருக்கின்றன. அவைகளின் சரித்திரம் கலப பிரயாசையால் அறியலாம்.

இனிகடப்பை, கர்னூல், அநந்தப்பூர், செல்லூர், செஞ்சி, வேலூர் முதலானவிடங்களிலிருந்து ஆண்ட நாயகோருகளுடைய சரித்திரங்கள் நிருபதியாகக் கிட்டவில்லை. ஆயினும் அவர்களைவிடகாலதேசவர்த்தமானங்களாற் சிறந்தவர்களும், பலிஜவாருக்குள் பஞ்சபாண்டவர்களாகவும், மஹாமதுக்களாகவும், மஹா சக்கிரவர்த்திகளாகவும் கொண்டாட வரப்பெற்றவர்களும்; ஆதி சந்திர வம்ச நரபதிகளின் நேரான சந்ததிகளும்; தஞ்சை, மதுரை, செய்ஹளை நாடுகளில் ஸமஸ்தானங்களைப் பெற்று பிரபலமாக ஆண்டவர்களும் ஆன; பல கவிகளால் புகழ்ப்பெற்றோங்கும் தஞ்சை மதுரை முதலான நாடுகளில் ஆண்ட நாயகோருகளுடைய சரித்திரங்களைப் பற்றி எழுதுகிறோம்.

---

(ஆறும் அத்தியாயம்.)

## தஞ்சையில் நாயடுகாரு ஸமஸ்தானம்.

## సీసమాలిక.

*　　　*　　　*　　　*
*　　　*　　　*　　　*

ప్రజ్వరిల్లెదు చోళపతులపరంపర ।
వినుడి యానందమాలీనులకును ।
క్షేమకరుండగు చవప్పనాయడు ।
యచ్యుతప్పయును యవనియందు ।
రగునాథుడు విజయరాఘవ నాయడు ।
యువరాజుమన్నారుగోత్తముగను ।
పంచపాండువులుని ప్రాబల్యముగనైదు ।
నృపతులేలిరి మహానీతిగాను॥

*　　　*　　　*　　　*

இதன் கருத்து

சோழதேசமாகிய தஞ்சை நகராதிபதிகளாகிய ஸ்ரீமான்

1. சேவப்ப நாயடுகோரு 2. அச்சுதப்ப நாயடுகோரு 3. இரகுநாத நாயடுகோரு 4. விஜயராகவ நாயடுகோரு 5. மன்னாருசாமி நாயடுகோரு ஆகிய ஐவர் பஞ்சபாண்டவர்களுக்கொப்பானவர்களாகையால், முதலில் இவர்களுடைய சரித்திரங்களைப் பற்றி எழுதுகிறோம்.

# தஞ்சாவூரில் நாயடுகாரு ஸமஸ்தானம்.

சோழர்களுக்கு ஒருகாலத்தில் பிரபல பட்டணமாக இருந்த தஞ்சாவூரானது சகாப்தம் 1365 (கி-பி 1443) விஜயநகரத்தில் புகழ்பெற்றோங்கிய பிரதாபதேவராயலு காலத்தில், அவர்களுடைய அதிகாரத்துக்கு உட்பட்டிருந்ததாக (தஞ்சாவூருக்குச் சுற்றுப்பக்கங்களிலுள்ள கோயில்களிலிருக்கும்) சாசனங்களால் ஸ்பஷ்டமாகினும்; சகாப்தம் 1377க்குச் சரியான(கி-பி 1455ஞும்) விஜயநகரத்தில் நரபதி மூல புருஷரான திருமலைதேவராயலு காலத்திலும், இந்த தஞ்சாவூர் விஜயநகரத்தாருடைய அதிகாரத்துக்குள் இருந்ததாக தஞ்சை பெரியகோயில் தென் பிராகாரத்தில் அடியிற் கண்ட சாசனம் (கி-பி 1455 வருஷம்) வரையப்பெற்றிருக்கிறது.

அதாவது

* * ஸ்ரீசகாப்தம் ஆயிரத்து முன்னூற்று எழுபத்து ஏழின்மேற் செல்லா
"நின்ற பாவவருஷத்துக்குச்செல்லும்,யுவ வருஷத்து சித்திரைமீ கவை ஸ்ரீமன்
"மஹா மண்டலேசுவரன் மேதினீ மிச்சிரகண்ட கட்டாரி சாளுவ சாளுவத்திரு
"மலை தேவமகாராசர், தஞ்சாவூர் வ* * *ண்டயம் தஞ்சமாமணிகண்டங்குறை
"நாகளாபுரம் பழமாரன் ஏரி அன்மதின் மேலகரம் வேலங்குடி அம்மை அப்பன்
"*** புரம் தென் அனூர் கருப்பூர்,மருவூர், இராஜேந்திர சோழ நல்லூர் சுங்கந்த
"விர்த்த சோழ நல்லூரான திருமலை ராஜபுரம் சமுத்திற———புறம் ஆக இந்த
"அகரங்களிற் வாரியன் காரணத்தானுக்கு நிருபம் தங்கள் அகரங்களுக்கு அவ
"தாவகக்கனே ராஜஸ்பக்கனே பிரதான கோடி கரணிக்க சோடிதலையாரிக் கம்ம
"வடை மரவடை குளவடை மற்றும் எப்பேர்ப்பட்ட பல உபாதிகளுமிழித்து
"விட்ட அளவுக்கு சந்திராதித்தவரையும் ஸர்வ மானியமாக சுகமே இருக்கவும்-
"2 இராஜாவின் அருளிசெயல்படிக்கு மந்திர மூர்த்தி வெட்டு வித்தது, (Vide
"P. 118. Part 1. Vol II, Dr. E. Haltzschis, S. Indian Inscription.

இதனாலும்; தஞ்சை தெற்கு அலங்கம், தொப்பாரங் கேட்ட பிள்ளையாரென்னும் அளகேசுவர பிள்ளையார் கோயில் கோபுர முன்பக்கத்துச் சுவர்களிற் காணும், சகாப்தம் 1454 (கி-பி-1532) சிலாசாசனத்தினாலும்; தஞ்சை வடக்கு வீதி இராஜ கோபால வென்னும் மதன கோபால சுவாமிகோயில் மூலஸ்தானத்தின் வெளிச் சுவர்களில் வரைந்திருக்கும் சகாப்தம் 1461(கி-பி-1539 வருஷம்) சாசனத்தினாலும்; பின்னும் இப்போது மறைந்து மங்கலடைந்திருக்கும் பல சாசனங்களினாலும், சோழராஜியத்தின் சிறந்த பட்டணமாகிய தஞ்சை வெகு காலமாக விஜயநகர ஸமஸ்தானத்தாருடைய அதிகாரத்துக்கு உட்பட்டிருந்ததாக பிரதியக்ஷமாகிறது-

அப்படிக்கிருந்தும்-அந்த விஜயநகரத்தாருடைய உதவியைப்பெற்று சில மன்னர்கள் சோழன் என்ற பட்டப்பெயரால் ஆண்டு வந்ததாகத் தோற்று

றது. அப்படி ஆண்டுவந்தவர்களில் வீரசேகர சோழன் தனது தாயாதிகளாற் றுக்கப்பட்டு வருந்தி, இனி தஞ்சையிலிருப்பதில் சுகமில்லை எனக்கண்டு, அப்போது பாண்டியனாக ஆண்டு வந்த சந்திரசேகரனைத் தாக்கி, அப்பாண்டிய நாட்டைப் பிடித்து, தாயாதி சச்சரவற்று வாழலாமெனக் கருதிப் படையெடுத்துப்போய்த் தாக்கி துரத்தியடிக்க; அப்பாண்டியன் அப்போது தனக்குச் சக்ரவர்த்தியாக விருந்த, விஜயநகர ஸமஸ்தானபதி இடம் போய் முறையிட்டழ, அவர் தமது தளகர்த்தராகிய நாகம நாயடு வசம் ஒரு பெருஞ் சேனையைக் கொடுத்து அனுப்பி, வீரசேகரனை யோட்டி, அப்பாண்டிய நாட்டை சந்திரசேகர பாண்டியன் வசம் கொடுத்து வரும்படி உத்திர வளித்ததாக, இப்போது சென்னை கவர்ன்மெண்டு O. M. S. கையெழுத்துப் புராதான சரித்திர ரிகார்ட்டிலிருக்கும் புது நெம்பர் 852-கொண்டக் கையெழுத்து ஓலைப்புத்தகம் தஞ்சாவூர் ராஜாக் கதையிற் சொல்லப் பெற்றிருக்கிறது.

அதாவது

* * * * * * *

తంజావూరి రాజుకథలు - తాళపత్రము - తెలుగులిపి

౮౨ పుటలు. ౪ - ౫ - ౬ - పఙ్క్తులు,

ఆదిలో విజయనగర పట్టణంలో రాయలు దేవునివారురాజ్యపరిపాలనం వుండగా, పాండ్యదేశాధి పతియైన చంద్రశేఖర పాండ్యరాజు, మధురలో రాజ్యమేలుచుండగా చోళదేశాధి పతియైన వీరశేఖర చోళరాజు తంజనగర మందుండి, మధురాపురిలో నున్న చంద్రశేఖర పాండ్యుడి మీదాయుధానికిపోయి, పాండ్యరాజును జయించి, ఆ రాజ్యమంతి నపహరించుకొన్నందువల్ల, చంద్రశేఖరపాండ్యుడుయెత్తుపడి రాయలుసమస్థానాకివచ్చి, రాయలుసముఖాన, వీరశేఖరచోళుడు తమరాజ్యం బలాత్కారముగా అపహరించు కొన్నందువల్ల ఈవర్త్తమానం మీదగ్గిర రప్పించుచ్చుకొని మీఆజ్ఞవుంచి నడపించుకొని వస్తున్నారుగనుక, లోకమందు "దుర్బలస్య బలో రాజా" అనేన్యాయమున్నది (గనుక) మాకుగతియేమి ఆజ్ఞాపిస్తున్నారో, ఆప్రకారం, నడచుకొంటున్నారమని, మనవిజేసుకొన్నందున, రాయలువారు ఈమాటలువిని,ఆగ్రహపడి, తోశ్చానాఅదికారియైన నాగమనాయునివారిని రప్పించి,దక్షణదేశమంత మీతో శేవఖానావు కుఅడమానంజేసి, మీమనుష్యులు ఆదేశానికంతా దాసీలువుంచ్చి, వారివారిపేష్కసుర్కాలు మీకుచెల్లుతు, మియిలాకాలోవుండగా, పాండిడిరాజ్యంలో తమబలాత్కారముచేసి కప్పకోవలెను - కాబట్టి- దక్షిణదేశములంతా మియిలాకాలో వున్నదిగనుక,

మీాకే సయిన్యసమేతముగాపోయి ఆదుష్టుడైన వీరశేఖరచోళుని కొట్టి - హతపరచి పాండ్యునికే అతనిదేశం యథాప్రకారం ఇప్పించి, ఆచోళదేశమును ఖిల్లిచేసి సర్కారయిలాఖాలో మనుష్యులని చెప్పించిరమ్మని, రాయలుఆజ్ఞాపించిన ప్రకారం దండుసమేతముతో రాగానే, చోళరాజ్యానికి వచ్చియుద్ధముచేశి, వీరశేఖరచోళణ్ణితెగటార్చి ఆరాజ్యం తనవసంజేసుకొని, మధురకుపోయి, చోళదువుంచివున్న రవుతులను తరిమి కొట్టి, ఆరాజ్యమంతితమ వరవుప్రకారం పాండ్యుడికి ఇయ్యక, అదిన్ని తానేఅపహరించుకొన్నందున, అతనికుమారుడు, విశ్వనాధనాయని వారిని రాయిలు అంపించి, అతడు వచ్చి తండ్రినిరాజాజ్ఞ ప్రకారముజెయించి, తనవశంజేసుకొని, రాజ్యంపాండ్యునికి యిచ్చినంతలో, చంద్రశేఖరన్ని- సంతానమున్ను - అత్సవంశస్తులు లేనందువల్లనున్ను తననిమిత్యం విశ్వనాధనాయడు తండ్రియని చూడగ, జెయించిరాజ్యంతనకిచ్చి నాడని బహుసంతోషముత్తుడై, అతనిపుత్రస్వీకారం జేసుకొని, తనరాజ్యానికి అరుహాజేశిన ప్రకారంరాయలుహరు ఆదేశానికి, విశ్వనాధనాయుణిరాజు గావించి, పట్టాభిషేకంచేశి, అతడు కొన్నిసంవత్సరములు రాజ్యమేలుతావుండగా, ఆరాయలకు తర్వాత అచ్యుతదేవరాయలు, అతనిభార్య తిరుమలమ్మకు చెల్లలైన, మూర్తమ్మను శ్రీచేవప్పనాయునివారికివివాహంబుజేసి, కావలసిన వస్తువాహనములున్ను ఆబరణములిచ్చి చోళదేశాన్ని-నాయడువెనమ్మి, చేవప్పనాయన్ని- శ్రీధనంగానిచ్చి, చోళదేశమ్ము- పంపించి విరక్తుణ్ణోజేసిఅంపిచిరి. * * * *

Tanjure Rajulu Cbaritra-The History of Tanjure Rajas-Preserved in charector Telugu Pages 82, Lines 4-5-6-Injured. Collections of Col Mecprenziss, Collection.—

இதன்கருத்தாவது.

ஆதியில் விஜயநகரத்தில் இராயலு ராஜியபரிபாலனம் செய்யும்போது பாண்டிய நாட்டரசனாகிய சந்திரசேகபாண்டியன் மதுரையில் ஆளுகையில், சோழ தேசாதிபதி வீரசேகரசோழன் தஞ்சையிலிருந்து மதுரையிலிருக்கும் சந்திரசேகர பாண்டியன்மேல் சண்டைக்குப்போய், அப்பாண்டியனை ஜயித்து, அந்த ராஜியத்தை அபகரித்துக் கொண்டபடியால், சந்திரசேகர பாண்டியன் விஜயநகரம்போய் இராயலு சமுகத்தில், வீரசேகர சோழயன் அக்கிரமமாக தன்நாட்டைப் பிடுங்கிக் கொண்டபடியால், எங்களைப்பாது காப்பதாக, கப்பம்வாங்கிவரும் தாங்கள் இக்காலத்தில் உதவி செய்யவேண்டுமென்று வேண்ட; இராயலு கேட்டு விசனபட்டு கோபித்து, தென்தேசனில் கப்பம் வாங்கிவரும் நாகமநாயடைத் தருவித்து, இந்த அக்கிரம நடவடிக்கைகளைச்

சொக்லி, தக்க தண்டு தளாதிகளுடன் போய் அச் சோழனைக்கண்டித்து ஓட்டி, அவன் பிடித்துக் கொண்டிருக்கும் பாண்டியநாட்டை சந்திரசேகரனிடம் கொடுத்து விட்டு; சோழன் பட்டணமாகிய தஞ்சையை சமஸ்தான சர்காரில் வைத்து வரும்படி கட்டளை இட்டனுப்ப; அந்த நாகம நாயடும் அப்படியே சோழ நாட்டில்ச் செய்துவிட்டு, பாண்டியநாட்டைப் பிடித்து அதைத்தாமே அனுபவித்துவர; இராயலு கேட்டு விசனப்பட்டு, விசுவநாயடுகாரை அனுப்பி, நாகம நாயடுகாரைக் கண்டித்து அவரிட மிருந்த பாண்டிய நாட்டைப் பிடுங்கி சந்திரசேகர பாண்டியனிடம் கொடுத்து வரும்படி கட்டளை இட்டனுப்ப, அவரும் வந்து அப்படியே செய்து, செய்தியனுப்ப, இராயலு கேட்டு அதிக சந்தோஷத்தோடு கொண்டாடிக் கொண்டிருக்கையில், சந்திரசேகரபாண்டியன் இறந்து, அவன் சந்ததியற்றுப்போன சங்கதி இராயலு கேட்டு, தமது இஷ்டப்படி நடந்துகொண்ட விசுவநாதநாயடை சுவீகாரபுத்திரனாகக் கொண்டும், அப்பாண்டிய நாட்டிற்கு அதிபதியாக நியமித்தார்-பிறகு சோழநாட்டிற்குத் தகுந்த அரசன் இல்லாமல் அலைவதை அறிந்து, அந்தராயலுகாருக்குப் பிண பட்ட மடைந்த ஸ்ரீஅச்சுததேவராயலு காரு தமது மனைவி திருமலைஅம்மகாருக்குத் தங்கையாகிய மூர்த்தி அம்மகாரை விவாஹம் செய்துகொண்ட சேவப்ப நாயடுகாருக்கு ஆடையாபரண ஆனைக் குதிரை முதலான வரிசைகளைக் கொடுத்தும், சோழதேசத்தை தககபடி ஆளுவதற்கு அச்சேவப்ப நாயடே ஏற்றவரெனக் கண்டு, அச்சோழதேசத்தையே அவருக்கு ஸ்ரீதனமாகக் கொடுத்தும் ஆண்டு அனுபவித்துக்கொள்ளும்படி அனுப்பினார்&சேனபதேயாம்

*   *   *   *   *   *

இந்த சரித்திர சாசனத்தினால் தஞ்சையில் நாயடுகாரு ஸமஸ்தானம் உண்டான விவரம் ஸ்பஷ்டமாகும்.

---

## தஞ்சையில் நாயடுகாரு முதல் ஸமஸ்தானம்.

# சேவப்ப நாயடுகாரு.

கி-பி. 1549 முதல் 1572 வருஷம் வரையில்

தஞ்சையில் நாயடுகாரு ஸமஸ்தானத்தை முதல்முதல் ஸ்தாபித்தவர்சேவப்பநாயடு காரு. இவருடைய மந்திரியின் மூத்த குமாரராகிய இராஜசூடாமணி தீக்ஷதரவர்கள் இயற்றிய ருக்மணிபரணியம் என்னும் காவியத்தின் முதல் சருக்கம், 34-வது, சுலோகத்தினால், இந்தசேவப்ப நாயடுகாரின் தந்தை திம்மப்ப நாயடு காரென்றும், தாயார் வய்யமாம்பாள் என்றும் தெரியவருகிறது சந்திரவமிச க்ஷத்திரிய குலதிலகரான ஸ்ரீஅச்சுததேவராய லுடைய மனைவியார் திருமலைஅம்பாள் அவர்களுடைய இளைய சகோதிரி மூர்த்தியாம்பாள் என்னும் மங்கையை மணம் புரிந்ததனால், தஞ்சாவூரை ஸ்ரீதனமாகப்

பெற்றதாய் தஞ்சாவூரிவாரு இராஜசரித்திரம் என்னும் கிரந்தத்திலும்,விஜய விலாசம் என்னும் கிரந்தத்திலும் வேறு அநேக சாசனங்களிலும் ஸ்பஷ்டமாகிறது.

இந்த சேவப்ப நாயகோரு முதலில் விஜயநகரத்தை அடுத்த நாகலாபுரில் இருந்த தண்டுக்கு தளகர்த்தராக இருந்தவர். இவர் மஹா வீரதீரனும், மதியூகியுமாயிருந்ததோடு, சத்தியம், சாந்தம், சிவபக்தி, விஷ்ணுபக்தி, தருமம், தயை முதலான குணங்களிற் சிறந்து விளங்கியபடியால்; அப்போது தஞ்சையிலும் அதை அடுத்த விடங்களிலும் சோழர்களுடைய சந்ததிகள் என்று சிலர் எழுந்து அடிக்கடி சண்டைச்சச்சரவுகளைச் செய்துக் குடிகளை வருத்திவந்தவர்களை அடக்கியாளவும், கல்வி, நாகரீகம், தெய்வபக்தி முதலான சீர்திருத்தங்களைப் பல்லாண்டாகப் பெற்றிருந்த சோழநாட்டாரைச் சாந்தமாகவும், சுகமாகவும் வாழும்படிச் செய்ய சக்தியுள்ளவர் இந்தச் சேவப்ப நாயகோரே எனக்கண்டு, விஜயநகரத்தார் சோழநாட்டையே ஸ்ரீதனமாகக் கொடுத்தனுப்பினார்கள் போலும்- சேவப்ப நாயகோரு தஞ்சை ஸமஸ்தானத்தைக் கைக்கொண்ட உடனே, குடிகளுக்கு இன்றியமையா அநேக சத்சாதனங்களை ஸ்தாபிக்க முயன்றார்- முதலில் தஞ்சையிலும் அதைச் சார்ந்த இடங்களிலும் பரக்கவிருந்த சைவ வைணவாதி க்ஷேத்திரங்களில் கால கிரமமாக பூஜைகள் முதலான நித்திய நைமித்திகாதிகிரியைகளை கிரமமாகச் செய்துவரும்படி கட்டளை இட்டார். தஞ்சாவூரி ராஜசரித்திரத்திற் கண்டபடி அநேக கோயில் கோபுர ஆவிகூப தடாகங்களை செப்பநிடசெய்த்தார். தஞ்சைக் கோட்டைக்குள் சகல ஜனங்களும் சுத்தமான தண்ணீரை சதா உபயோகிக்கும்படியாக சிவகங்கைக் குளத்துக்குப்பாய்ச்சல் ஏரியாகிய சேவப்பனேரி அல்லது சேப்பன்தளம் ஒன்றை வெட்டி வைத்ததில்; அது இப்போதும் இவர் பெயரை பலரும் புகழும்படி குடிகளுக்கு உபயோகமாகி பிரகாசிக்கின்றது-தஞ்சைக் கோயிலுக்கு அடுத்திருக்கும் பெரியகோட்டையையும், இந்த சேவப்ப நாயகோரால் கி-பி. பதினாறும் நூற்றாண்டில் கட்டிவித்ததாக மேஸ்டா சுவேல் துரைப் பதிப்பித்த அண்டிகுட்டிபட்டி புத்தகம் 277-வது பத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

ஸாஹிஉத்தியரத்னாகரம், 3-வது சர்க்கம், 6-வது சுலோகத்தின்படி திருவண்ணாமலையில் கோயிலுக்கு வெளியில்அகன்று ஆழ்ந்து அழகாக இருக்கும் குளமும், அந்தக் கோயிலின் முன்னிருக்கும் சிறந்த கோபுரமும் இந்த நாயகோரு கட்டிய கைங்கரியங்களாம். இவர் காலத்தில் அதாவது சகாப்தம் 1494 வருஷத்துக்கு சரியான கி-பி 1572 வருஷம் திருவண்ணாமலையில் சிவநேசன், லோகநாதன் என்ற இரண்டு சகோதிரர்கள் கோபுரம் ஒன்று கட்டியதாக அந்த திருவண்ணாமலை கோவிலில் சிலாசாசனம் எழுதப்பட்டிருக்கிறது.

இந்தச் சேவப்ப நாயகோரு செய்த தருமங்கள் கேவலம் இந்து மதஸ்தர்களுக்கு மாத்திரமல்ல, மகமதியர் முதலான ஏனைய மதஸ்தர்களுக்கும் செய்ததாக இப்போது தஞ்சாவூர் புகைவண்டி ஸ்டேஷனுக்கு அடுத்த சமசநுப்

பள்ளிவாசலில் ஒரு கல் கம்பத்தில் சகாப்தம் 1472 சரியான இ-பி 1549 வருஷம் செதுக்கப்பட்டிருக்கும் சிலாசனத்தினால் ஸ்பஷ்டமாகிறது.

அந்தச்சாசனத்தின் நகல் இது

"சாதாரண வருஷம் மார்கழி மாதம் ௰௬௨ தஞ்சாவூரிலிருக்கும் சமசருப் "பள்ளிவாசல் பக்கிரிகளுக்கு நிலம் விடவேண்டுமென்று தேவப்ப நாயக்கர் "நாஞ்சிக் கோட்டையிலிருக்கும், எண்ணையக்காரனை அழைப்பிக்க உங்கள் "எல்லையிலே ஏழுவேலி நிலம் விடு என்று சொன்னபடியினாலே நாயக்கர் அய் "யன் அவர்கள் உத்தாரப்படிக்கு சம்மதித்து * * * * மேற்கு இந்த நாங்கெல் "லைக்குள்ப்பட்ட நிலத்தை சந்திராதித்த வரைக்கும், ஆண்டு அனுபவிச்சுக் "கொள்ளக் கடவீராகவும், இந்தப்படிக்கு நாயக்கர் அய்யன் அவர்களும், மண் "ணையார்காரும் சம்மதித்து விட்டது. இதக்கு யாதாமொருவர் தத்த * * விக்கி "னம் பண்ணினார்கள் ஆனால் காசி ராமேசுரத்தில் காராம்பசுவைக் கொன்ற "தோசத்திலே போவார்கள். துலுக்காகள் யாதாமொருவர் விக்கினம் பண்ணி "னார்களானால் மக்காவிலே பெற்றதாயை ஜனசெய்தபாவத்திலே போவார்கள். "யிதக்குவெட்டியான் " * * * ||-|| " என்பதேயாம்.

இப்படி சமரசமாகத் தருமராஜிய பரிபாலனம் செய்து வந்த சேவப்ப நாயகோரு ஸாஹித்ய ரத்னாகரம் 3-ம் சர்க்கம் 9-17 சுலோகங்களிற் சொல்லி இருக்கிறபடி; தமது ஜீவகாலத்திலேயே தமது புத்திரசிகாமணியாகிய அச்சுதப்ப நாயகோருக்கு தஞ்சையில் பட்டம் சூட்டிய பிறகு, பரமபதத்தை அலங்கரித்தார். இந்தச் சேவப்ப நாயகோருக்குப் பிறகு-

---

# அச்சுதப்ப நாயகோரு ஸமஸ்தானம்.

இ-பி. 1577 முதல் 1614 வருஷம் வரையில்



அச்சுதப்ப நாயகோரு தஞ்சையில் சிங்காசனமேறினார்-இவருக்கு ஸாஹித்ரத்னாகரம் 3-ம் சர்க்கம், 38-வது சோலோகத்தின்படி சின்னசேவப்ப, அச்சுதப்ப நாயகோரு என்னும் மற்றொரு பெயர் வழங்கி வந்தாலும், இவரது தந்தைக்குப்பேருபகாரியாக இருந்து; தஞ்சை ஸமஸ்தானத்தையே ஸ்ரீதனமாகக் கொடுத்த விஜயநகர அச்சுததேவராயலுடைய பெயரை சதாஞாபகத்திலிருக்கும்படி கருதியே, இவருக்கு அச்சுதப்பநாயகோரு என்ற பெயரிட்டதுபோலும். இவருடைய ஆளுகையைப்பற்றி தஞ்சாவூரிவாரு சரித்திரமென்னும் ஆந்திரகிரந்தத்தில் விவரமாக தெரிவிக்காவிடினும்; ஸாஹித்யரத்னாகரம், ருக்மணீபரணியம், டிஸ்டிரிகட்டு மானியூல் சரித்திரமுதலானதுகளில் ஒருவாறு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இவர் கல்வியைக்கற்று தெளிந்தவராக இருந்ததோடு, தம்மைப்போலவே உலகோர் கற்றுய்யும்படி கல்வியை விருத்தி செய்தார்.

ஸ்மிருதிகளிற் சொல்லியபடி தக்கோருக்கு தானதருமாகளைச் செய்துவந்தார். ஸ்ரீரங்கக்ஷேத்திரதிற்கு மானியமாக அநேக கிராமங்களை விட்டதன்றியில்; ஸ்ரீரங்கநாதருக்கு இரத்னபீடம், இரத்னகிரீடம், பற்பலரத்னபதக்கங்கள், கால்சலங்கை முதலான ஆபரணங்களைச் செய்து சமர்ப்பித்தும், காவிரியாற்றின் கல்அணையைப் பழுதுபார்த்து புதுப்பித்தும்; மாயவரம் மத்தியார்ச்சுனம் (திருவிடைமருதூர்), கும்பகோணம், திருவலம்ஞ்சுழி, விருத்தாசலம், திருவையாறு, இராமசேது முதலியவிடங்களில் படித்துறைகளையும், புஷியமண்டபங்களையும் கட்டுவித்தார். ஸாஹித்யரத்னகரகாவியம், 3-ம் சர்க்கம், 46,47 48,50-வது சுலோகங்களின்படி தமதுபெயரால் அநேக புது அக்ஹாரங்களைக் கட்டுவித்து, அவைகளில் அநேகவிடங்களிலுள்ள வேதநிதிகளான விப்ரர்களைத் தருவித்துக் குடியேற்றினர். ருக்மணிபரிணயகாவியம், 1-ம் சர்க்கம், 43—45-சுலோகங்களின்படி சிதம்பரம், திருப்பதி, காளஹஸ்தி முதலான க்ஷேத்திரங்களுக்கு அநேகத் திருப்பணிகளைச் செய்வித்திருப்பதால், இவர் காலத்தில் இவரது அரசாக்ஷி திரிசிராப்பள்ளிமுதல், கீழ்சமுத்திரக்கரைவரையிலும், இராமேச்சுரமுதல் விருத்தாசலம் வரையிலும் எட்டி இருந்ததாகத் தோன்றுகிறது—

இவருடையபெயரும், ஸமஸ்தானமும் இவ்வளவு மஹோன்னதஸ்திதியை அடைவதற்குக் காரணம் இவருடைய மதிநுகிய மந்திரியே என்று தோன்றுகிறது. அவர் ஸாஹித்யரத்னகரம் 10-வது சர்க்கம் 1-2-சுலோகங்களின்படி கர்ணாடக பிராம்மணரான கோவிந்த தீக்ஷிதர்—அந்த மந்திரியின் உத்திரவின்படி, கி-பி 1605ஆம் வடமொழியிலிருந்த திருவையாற்றுப் புராணத்தைத் தமிழிற் மொழிபெயர்க்கப்பெற்றதாக அந்தப் புராணத்தின் 18-வது செய்யுளில் அடியிற்கண்டபடிப் பாடப்பெற்றிருக்கிறது—அதாவது,

"மலிபுனல்சூழ் சோணாடு தஞ்சையிற் காத்திடுமரசர் மதியமைச்ச
ரொலிமறைதேர் கோவிந்ததீட்சிதராயன் திருவாக்குடைமையாலே
கலியுகத்துச்சகாண்டு மூவைந்நூற்றிருபதின்மேற்காணுமேழாய்ப்
பொலிவருடத்லையாற்றுப் புராணவடமொழிதமிழாற் புகலுற்றேன்"

நிற்க, பழய சோழராஜ வமிசத்தார் அங்குமிங்கும் சண்டைச் சச்சரவுகளைச் செய்வதைக் கண்டித்தும் (ஸாஹித்ரத்னகரம் 6-சர்க்கம், 8-வது சுலோகத்தின்படி) நாகப்பட்டணத்திற் கடல்மார்க்கமாக வந்திறங்கின மகமதியர்களை முறியடித்தோட்டினதாகவும் தெரியவருகிறது—

இவர் மனைவியின்பெயர் மூர்த்தி ஆம்பாள் அம்மாள், ரத்னகரம், 3-ம் சர்க்கம், 20-ப் சுலோகத்தின்படி, இரத்நாட்டுக்குச் சமீபத்தில் ஒரு கிராமத்திற்கு மூர்த்தமாம்பாபுர மென்று இன்னும் பெயர் வழங்கிவருகிறது—அன்றியும், தஞ்சை பிரஹதீசுவரஸ்வாமிகோயில் இரண்டாவது கோபிரத்துத் தென்பக்கத்து பிரகாரத்தில், இவர்காலத்தில் அதாவது சகாப்தம் 1499-க்குச்சரியான

கி-பி-1577ஆம் தட்டாருக்குவிட்ட சர்வமானிய சாசனம் இப்போதுமிருக்கிறது. அதன் நகல் அடியில் வருமாறு—

"ஸ்வஸ்திஸ்ரீசகாப்தம் 1499இதன்மேற் செல்லாநின்ற வெகுதானிய வரு
"ஷம் ஆனிமீ 12உ சோமவாரமும் பிரதம துவாதசியும் பெற்ற புண்ணிய
"காலத்து சேவப்பநாய்க்கர் அய்யன் தஞ்சாவூர் தட்டாருக்குக் கொடுத்த தரும
"சாசன பட்டயம் கந்தரோலு நாயக்கர் குருநாதன்சிங்கபள்ளி நாகபத்த சேஷா
"ஸ்திரியும் சொல்ல தங்களிர் கிழிப்பித்தபடியாலே சக்கிராதித்தவரையும்,சர்வ
"மானியமாக நடக்கவும், இந்த தருமத்திற்கு அகிதம் பண்ணினவன் கங்கைக்
"கரையிலே காராம்பசுவைக்கொன்ற தோஷத்திலே போகக்கடவாராகவும்,
"இந்த தருமத்தை அகிதம்பண்ணினவன் ஆயிரம்லிங்கத்தைப் பிடுங்கின தோஷத்திலே போகக்கடவன்."

இதே மாதிரியாக திருவையாறு புஷ்யமண்டபத்தில் கி-பி-1614-5ஆம் சிலாசாசனம் வரையப்பட்டிருக்கிறது—இது நிற்க—கி-பி-1614ஆம் கர்னாடகாதிபதி திருவேங்கடதேவராயலுக்கு சந்தானமில்லாமையால், அவன் சகோதிரன் மகன் பட்டத்தை அடைய, அதை வெங்கடதேவருடைய மனைவியும் அவள் தந்தையும் 20000 பேர் சேவகருக்கு தலைவனாக இருந்த ஜக்கராஜனும் தடுத்து புதியமன்னனைக்கொன்றுவிட, அவன் மகனான பாலியனை 800 படைச் சேவகருக்கு தலைவரான யாசபூபதி அல்லது எச்சமநாயடு தன் ஆதரவில் வைத்து பாதுகாத்தும்; ஜக்கரேறுடு சண்டைசெய்து தஞ்சை அச்சுதப்ப நாயடுகாருடைய உதவியை நாடியதை, ஜக்கராஜன்பார்த்து பாண்டியனுடைய சகாயத்தைத் தேடினான். இதையறிந்த அச்சுதநாயடுகாரு தமது ஜீவியகாலத்திலேயே தமது குமாரரான இரகுநாத நாயடுகாருக்கு பட்டாபிஷேகம்செய்து ஸமஸ்தானத்தைக் கொடுத்துவிட்டு, தாம் ஸ்ரீரங்கத்துக்குப்போய் ஸாஹிதியாத்னுகரம் 12-ம் சர்க்கம் 94-ம் சுலோகத்தின்படி உள்ளநாள் உள்ளவரையில் வாசம்செய்துக்கொண்டும், ஸ்ரீரங்கநாதரை சதா தரிசித்துக்கொண்டும், காலம் கழித்துவிட்டார்—இவருக்குப்பிறகு—

---

# இரகுநாத நாயடுகாரு ஸமஸ்தானம்.

கி-பி 1614 முதல் 1630 வரையில்

---

அச்சுதப்ப நாயடுகாருக்குப் பிறகு தஞ்சை ஸமஸ்தானத்துக்கு அதிபதியாகமுடிசூடப்பெற்ற இரகுநாத நாயடுகாரு இயற்கையில் கல்விபிரியர். இவருக்கு இந்துதருமசாஸ்திர முறைப்படிக்கு பட்டாபிஷேகம் செய்விக்கப்பெற்றதுஇவரை ஒரு தட்டிலும், பசும்பொன்னை ஒரு தட்டிலும் வைத்து நிறுத்தி அப்பொன்னை எல்லாம் பிராம்மணர்களுக்கு பங்கிட்டுக் கொடுத்ததன்றியில்

பொன்னாலமைந்த பிரம்மாண்டம், பொன்குதிரை, பொன்தேர், பொன்யானை காமதேனு, கற்பகவிருக்ஷம் முதலியதானங்களும், ஆயிரம் கோதானமும் செய்யப்பெற்றதாக, ஸாஹித்யரத்னாகரம் 12-ம் சர்க்கம், 56 முதல் 82-வது சுலோகங்களிற் சொல்லப்பெற்றிருக்கின்றது. இவ்வளவும் இவரது தந்தைக்காலத்தில் மந்திரியாக இருந்த கோவிந்த தீக்ஷதரே இவர் காலத்திலும் இருந்து செய்வித்தார்—

இவர் கும்பகோணம், விஜயராகவபுரம், ஸ்ரீரங்கம், இராமசேது முதலான விடங்களில் இராமஸ்வாமி முதலானகோயில்களைக் கட்டிவைத்ததுடன்; இவருடைய அன்னசத்திரங்களில் பிரதிதினம் ஒன்றுக்கு 24000 ஜனங்களுக்கு சாப்பாடிட்டு வந்தார். ஸாஹித்யரத்னாகரம், 13-ம் சர்க்கம் 74-79 சுலோகங்களின்படி ஜக்கராஜன் பாண்டியனோடுச் சேர்ந்துத் தூண்டிவிட, அப்பாண்டியன் காவிரியாற்றின் கல்லணையை உடைத்துவிட; உடனே இரகுநாத நாயகோரு அப்பாண்டியன் மீதுப் படையெடுத்துச் சென்று, அவனை முற்றிலும் முறியடித்தோட்ட, அப்பாண்டியன்பயந்து தனது குமாரத்தியை இரகுநாதநாயகோருக்கு விவாஹம் செய்துக்கொடுத்துச் சமாதானம் செய்துக்கொண்டான். பிறகு முன் இறந்துபோன கர்னாடக ராஜனுடைய குமாரனை நாயகோரு இரகுநாத விலாசம் 4-ம் அங்கத்தின்படி, கர்னாடக ஸமஸ்தானத்தின் சிங்காசனமேற்றி உதவிசெய்தார்.

இந்த இரகுநாத நாயகோரு இயற்கையில் கல்விபிரியரென்று முன்னமே சொல்லி இருக்கிறோமல்லவா-இவர் சரித்திரத்தைப்பற்றி தஞ்சாவூர் இராஜாக்கள் என்னும் தெலுங்கு கிரந்தத்தில் பரிக்ஷிக்கையில், இவர் மஹாவித்வசிகாமணி என்றும், கும்பகோணம் முதலானவிடங்களில் இராமஸ்வாமிகோயில் முதலானதுகளைக் கட்டுவித்து, அனேக தருமங்களைச் செய்துவந்தாரென்றுமாத்திரம் சொல்லப்பெற்றிருக்கின்றனவேயன்றி, இவர்காலத்திற் சிறந்துவிளங்கிய வித்துவான்களைப்பற்றி பிரஸ்தாபிக்கவில்லை. ஆயினும், அக்குறைவை இப்போது (கி-பி-1903-லும்) தஞ்சை நாயக்கராஜவமிச சரித்திரத்தைப் பதிப்பித்த ஸ்ரீ குப்புசாமிசாஸ்திரிகள் நீக்கினார். அதாவது அவர் இரகுநாதநாயகோருடைய ஸமஸ்தானத்தை அலங்கரித்த சில விசேஷ வித்துவான்களுடைய சரித்திரசங்கதிகளை வெகு பிரயாசப்பட்டு சம்பாதித்து பதிப்பித்திருக்கிறார். அச்சிறு நூலிற்கண்ட வித்வான்களாவன.

(1) கோவிந்த தீக்ஷதர்=இவர் ஹரிவமிச சார சரித்திரம் என்றப் பெயரால் 23 சர்க்கங்களுடைய காவியத்தை இயற்ற, அதற்கு அப்பய்ய தீக்ஷதர் "ஹரிவமிசஸாரசரிதவியாக்கியானம்" எழுதினார். ஸங்கீதவிஷயமாக "ஸங்கீதசுதா நிதி" என்றொரு கிரந்தத்தையும் இயற்றியதன்றியில், இரகுநாதநாயகோருக்கும் அவர் தந்தைக்கும் மஹாமந்திரியாகவுமிருந்தார்.

(2) எகியநாராயணதீக்ஷதர்-இவர் மேல்சொன்ன கோவிந்த தீக்ஷதருடைய ஜேஷ்டகுமாரரும் ஸாஹித்யரத்னாகரகாவியம், இரகுநாத பூபவிஜயம், இரகுநாத விலாச நாடகம் முதலான கிரந்தங்களை இயற்றினவர்.

(3) வேங்கடேசுவரமஹீதீக்ஷதர்=இவர் மேலே சொன்ன யஜ்ஞநாராயண தீக்ஷதருடைய சகோதரர். இவர் வார்த்திகாபரணம், சங்கீத விஷயமான சதுர்த்தண்டி பிரகாசிகை,முதலான கிரந்தங்களை இயற்றியதோடு(கி-பி.1638ல்( கங்காதரண காவியம் 1 சர்க்கம், 51-வது சுலோகத்தின்படி நீலகண்ட விஜய சம்புகாவியம் செய்த நீலகண்டதீக்ஷதருக்கு ஆசாரியராய் இருந்ததாகத் தோற்றுகின்றார்-

(4) இராஜசூடாமணிதீக்ஷதர்=இவர் புகழ்பெற்ற பவஸ்வாமி பட்டருக்கு 6-வது தலைமுறையார். வட ஆர்காடு ஜில்லா, வேலூர்தாலுக்கா, சத்தியமங்கலமென்னும் கிராமத்தில் ஸ்ரீநிவாச தீக்ஷதருக்குப் பிறந்தவர்- ஒருநாளிவர் இரகுநாதநாயடு சமூகத்தில் வானத்தின் காக்ஷியைப்பற்றி பிரபலமாக வர்ணிக்க, நாயடுகாரு வியந்து இரத்தினகேடதீக்ஷதர் என்று பட்டம் சூட்டினார்- இந்த தீக்ஷதர் பாலியத்தில் வடக்கே நவதீவபம் போய் கல்விகற்று பட்டாசாரியர் என்ற பட்டம் பெற்றதாக ருக்மணி பரிணியம், 4-வது சுலோகத்தினால் தெரிய வருகிறது- இவர், ருக்மணிபரிணியம். கம்ஸதுவம்ஸனம், கார்திமத்தியுபயமம், ரத்னகேடவிஜயம்; சித்திரமஞ்சரி, சிங்காரஸர்வஸ்வம்; காவிய தர்ப்பணம், அலங்காரசூடாமணி, ஸாஹித்திய ஸமாராஜ்யம்; தந்திர சிகாமணி, ஸங்கர்ஷ முக்தாவளி, நியாய சூடாமணித் தர்ப்பணம்,முதலான காவிய, நாடக, பாண, அலங்கார சாஸ்திர கிரந்தங்களியற்றியவராகத் தெரியவரினும்; இவருடைய தந்தை கேட்டஸ்ரீனிவாசதீக்ஷதர் பாவன புருஷோத்தம முதலான 18 நாடகங்களையும், சதகண்ட விஜயம முதலான 60 காவியங்களையும், ஸாஹித்திய சஞ்சீவினி, பாவோத்பேதம், ரஸாஸ்ரவம், முதலான அலங்கார கிரந்தங்களையும், வேதாந்த ரத்னாவளி, வாததாராவளி, மணிதருப்பணம், அத்வைத கவுஸ்தபம், விதிநிர்ணயம், ஸர்வஸமய ஸர்வஸ்வம், ஸ்மிருதிரத்ன பிரதீபம், ஷட்பங்கம் முதலான வியாசியான கிரந்தங்களையும், பரிசுத்தி, தத்துவாவபோதம் முதலான சாஸ்திர கிரந்தங்களையும் இயற்றியவர். பாவன புருஷோத்தம நாடகத்தின்படி, வெங்களாம்பாபுரம் போத சமுத்திரம் முதலான அக்கிரஹாரங்களையும்,செஞ்சிக்கோட்டையில் வெங்கடேசப் பெருமாள்கோயில் கோபுரங்களையுங் கட்டிப் புகழ்பெற்ற செஞ்சிக் கோட்டைக்கரசரான சூரப்ப நாயடுகாரினால் ஆதரிக்கப்பட்டவராக தெரியவருகிறது-

(5) குமாரதாதாசாரியர்=இவர் சடமர்சன கோத்திரஸ்தரும், தாதாசாரியருடைய வமிசத்தைச் சார்ந்த ஸ்ரீநிவாசாசாரியருடைய பௌத்திரரும், வேங்கடேசாச் சாரியருடைய புத்திரராம். இவர் பாரிஜாதாபஹரணம் என்னும் நாடகத்தை இயற்றியவர்-அந்நாடகத்தில் தஞ்சையின் பெருமையையும்,இரகுநாத நாயடுகாரின் பிரதாபத்தையும் பற்றிப் புகழ்ந்து அவர்காலத்திலேயே இயற்றினார்-

(6) பாஸ்கரதீக்ஷதர்=இவர் கோனேரி ராஜபுரத்திற் பிறந்தவர்- இவர், ஆத்யபரிக்ஷை, அல்லது பாஸ்கரதீக்ஷிதீயம், தப்தமுத்திராவித்ராவணம், முத

லான கிரந்தங்களை இயற்றி அவைகளில் ஆத்மபரீக்ஷையின் துவக்கத்தில் இரகுநாத நாயடுகோரால் தமக்கு குறைவற்றச் செல்வம் கொடுக்கப் பெற்றதாகச் சொல்லி இருக்கிறார்-இந்த வித்துவானுடைய தந்தை அத்வைததீபிகை, பேதத்திக்காரம், முதலான கிரந்தங்களை இயற்றிய நிருஸிம்மா சிரமிஸ்வாமிகளுடைய சிஷ்யரான உமாமகேசுவராசாரியர்-

(7) இவர்களன்றியில் இந்தத் தஞ்சை ராஜாதிபதியாகிய இரகுநாதநாயடுகாரும் ஒரு சிறந்த வித்வானாக இருந்தாரென்பதற்கு இவரியற்றிய பாரிஜாதபஹரணம், நாளாப்பியுதயம் அச்சுதாப்பியுதயம், இராமாயணஸங்கிரஹம், மஹாபாரதஸங்கிரஹம் முதலான கிரந்தங்களே சாக்ஷியாக இருக்கின்றன-சந்திரவம்ச க்ஷத்திரிய ஆந்திரர்களுக்குள் விஜயநகரம் ஸ்ரீகிருஷ்ணதேவராயனுக்குப் பிறகு, கல்வியை விருத்திபாக்கியவர் இவரேயாம்-

ஸ்ரீராஜசூடாமணிதீக்ஷிதர் இயற்றிய ஆநந்தராகவ நாடகத்தின் கடைசி சுலோகத்தின்படி இந்த இரகுநாத நாயடுகாருக்கு அச்சுதப்பநாயடுகாரு, இராமபத்திர நாயடுகாரு என்ற இரண்டு புதல்வர்கள் பிறந்தார்கள்-இவர்களில் அச்சுத நாயடுகாருக்கு அச்சுதவிஜயராகவ நாயடுகாரு அல்லது விஜயராகவலு நாயடுகாரு என்ற பெயர்கள் வழங்கிவந்தன- இவரே மூத்தவரானபடியால் இரகுநாத நாயடுகாருக்குப் பிறகு தஞ்சை ஸமஸ்தானாதிபதியானார்-

---

# விஜயராகவலு நாயடுகாரு ஸமஸ்தானம்.

கி-பி. 1630 முதல் கி-பி. 1670 வருஷம் வரையில்.

---

இரகுநாத நாயடு காருடைய ஜேஷ்ட குமாரராகிய இந்த விஜயராகவலு நாயடுகாருக்கு அச்சுதவிஜயராகவலு நாயடுகாரு என்றப் பெயரும் வழங்கி வந்ததார்கள் இவருடைய காலத்திலும் கோவிந்ததீக்ஷிதரே மந்திரியாக இருந்தாரென தஞ்சைடிஸ்டிரிகட்டு மானுயூல் சரித்திரம் 287-751 வது பக்கங்களிலும், ஸ்ரீ சரவணபிள்ளை யவர்கள் எழுதிய மோஹநாங்கி நாடகத்திலும், தஞ்சாவூர் இராஜாக்கள் சரித்திர முதலான கிரந்தங்களிலும் தெரிவிக்கப் பெற்றிருக்கினும்; இந்த கோவிந்ததீக்ஷிதர் விஜயராகவலு நாயடு காரின் தந்தைக்கும், இவர் பாட்டனுருக்கும் மந்திரியாக இருந்ததாகவும், சாசனங்கள் இருக்கிறபடியாலும், கி-பி. 1605 வருஷம் கோவிந்த தீக்ஷிதர் பஞ்சனத மஹாத்மியத்தைத் தமிழில் மொழிபெயர்த் தெழுதியதாகவும் தெரியவருகிறபடியாலும்; இந்த விஜயராகவலு நாயடு காருடைய பாட்டனார் அச்சுதப்ப நாயடுகாருடைய காலம் கி-பி. 1577 வருஷம் என்று சாசன மிருக்கிறபடியாலும் இந்த விஜயராகவலுநாயடுகாரு கி-பி.1660வருஷம் நாகப்பட்டணத்தை டச்சுக்காரருக்குக் கொடுத்ததாக இப்போது பட்டேவியாவில் கவர்ண்மெண்டு கண்காக்ஷிசாலை

யில் இருக்கும் வெள்ளிசாசனப் பட்டயம் சாக்ஷி சொல்லுகிறபடியாலும்; அந்தச்சாசனத்திற்குப் பிறகு இரண்டு வருஷங்களுக்கெல்லாம் விஜயராகவலு நாயடுகாரு தேகவியோகமடைந்ததாக தஞ்சை டிஸ்டிரிகட்டு மானியூல் சரித்திரம் 760-வது பக்கத்தில் கண்டிருக்கிறபடியாலும்; இந்த கோவிந்த தீக்ஷிதரே இந்த விஜயராகவலு நாயடுகோருக்கும் மந்திரியாராக இருக்கக்கூடுமோ என்று சந்தேகம் ஜனிக்கிறது.

தஞ்சை ஜில்லா டிஸடிரிகட்டு மானியூல் சரித்திரத்தை, த்தஞ்சாவூர் இராஜாக்கள் சரித்திரமென்னும் தெலுங்கு கிரந்தத்தைப் பார்த்து எழுதியதாகத் தோன்றுகின்றது. அப்புத்தகம் இப்போது எங்கையோ மறைந்துப்போய் விட்டதாக ம-ா-ா-ஸ்ரீ குப்புசுவாமி சாஸ்திரிகள் தம் புத்தகத்தில் எழுதி இருக்கிறார். அப்புத்தகம் இப்போது எங்கேயும் மறைந்துப் போகவில்லை. சென்னை கவரன்மெண்டு கண்காக்ஷி சாலையில் O. M. S. L. கீழ்நாட்டு கையெழுத்து கிரந்தசாலையில் பத்திரமாகவைத்துப் பாதுகாத்து வருகிறார்கள். அதை இப்போதும்போய் வாங்கிப் படிக்க விருப்பமுடையவர்களுக்கு கொடுத்து வருகிறார்கள்.

அந்தப்புத்தகத்தினால் இந்த விஜயராகவலு நாயடுகாரு மஹா வைஷ்ணவ பக்த்தர் சிரோமணி என்றும், தம் குடிகளுடைய க்ஷேமத்தைக் கருதி பிரதி தினமும் 12000 பிராம்மண சாதுக்களுக்கு பிரீதி போஜனமிட்டபிறகு, தாமும் தம் அரண்மனையாரும் உண்டு வருவது வழக்கமானபடியால்; ஒருகாலத்தில் தஞ்சையிலும் அதன் சுற்றுப்பக்கங்களிலும் ஓய்வற்றஜடி மழைப்பொழிந்து வீதிகளெல்லாம் ஆறுகளாகி, பிரவாக மெடுத்ததோடுகையில், பிராம்மண போஜனத்துக்காக அடுப்பிற்கு விறகு அகப்படாமற் தவித்து அந்த கஷ்டத்தை விஜயராகவலு நாயடுகாரிடம்விண்ணப்பஞ்செய்ய, அவர் தமது அரண்மனையின் ஒருபாகத்திலிருந்த மாடிமேடைகளை இடிப்பித்து; அதிலுள்ள தூலம், விட்டம், சட்டம், துலாககட்டை, கம்பம், நிலவு கதவு, ஜன்னல் ஸ்தம்பங்களை எல்லாம் இடித்து எடுத்துக்கொண்டுவந்து எரித்துவிட உத்தரவு செய்ததாகவும்; அந்த உத்தரவின்படி சமயல்காரர்கள் 3-நாள்கள் செய்து; வீட்டில் வீட்டொடு கட்டப்பட்டிருந்த மரச் சாமான்களை எல்லாம் பிடுங்கி எரித்துவிட்டு, பின்னும் விறகில்லையென்று சொல்ல, நாயடவர்கள அரண்மனையிலிருக்கும் பட்டுபட்டாவளி, பீதாம்பரம், காசிதுப்பட்டா சால்வை முதலான விலை உயர்ந்த ஆடைகளை எல்லாம் கிழித்து எண்ணெயில் துவைத்து அடுப்பெரித்து அந்தணர் போஜனத்துக்கு ஹானிவராதபடி செய்வித்ததாகவும் சொல்லப்பெற்றிருக்கிறது மேலும்,—

இப்படிப்பட்ட காலத்தில் ஸ்ரீரங்கத்திலிருக்கும் ஸ்ரீரங்கநாச்சியார் மூக்கிலிருந்த ஒரு விலையுயர்ந்த இரத்தின மூககுத்தி காணுமற்போய்விட்டதாகவும், அதை அந்த அம்மன்கோயில் ஸ்தானிக பிராமணர் திருடியதாக ஸ்தலத்தார் எண்ணி அந்த ஸ்தானிகனை அடித்து வதைக்க, அந்த ஸ்தானிகர் அந்த வதையைச் சகிக்கமுடியாமல், இந்த தஞ்சை விஜயராகவலு நாயடவர்களிடம் வந்து

மூறையிட; நாயடவர்கள் கேட்டுபரிதவித்து இது விஷயமாக மனோசாச்சியம் செய்துகொண்டிருக்க, தமது அரண்மனையில் இருந்த ஒரு பிராமண ஸ்திரீக்கு ஸ்ரீரங்க நாச்சியார் ஆவேசம் வந்து சொன்னதாவது “ஸ்ரீ விஜயராகவநாயடு காரு மஹா பக்த சிரேஷ்டரானபடியினால், அவருடைய கட்டளையின்படி பிரதிதினமும் 12000 பிராம்மணருக்கு போஜனமிடாமல் தாம் சாப்பிடுவதில்லை யென விரதம் பூண்டிருக்க; மழையினால் விறகுகள் அகப்படாமல், அரண்மனையின் ஆடைகளை எல்லாம் எடுத்து எண்ணெயிற் றுவைத்து அடுப்பெற்றிய போது, உண்டான புகையைச் சகிக்கமுடியாமல் அநேக பரிசாரகர்கள் ஓடிப்போய் விட்டார்கள். இனி 12000 பிரம்மணருக்கு காலக்கிரமத்திற் போஜனமிடாவிட்டால், விஜயராகவநாயடவர்களுடைய வீரவிரதம் கெட்டுப்போய் விடுமென்று, ஸ்ரீரங்கநாச்சியாரே பரிதபித்து,ஒரு ஏழை பிராம்மண பரிசாரிக ஸ்திரீயைப் போல் வேஷம்தரித்து வந்து சமயற்செய்ய; அச்சமயற்வீட்டு புகை அதிகமாக எழும்பி, அந்த பரிசாரக பிராம்மண ஸ்திரீயின் முகத்திலும், மூக்கிலும் தாக்கி வருத்தியதனால்; அந்தம்மை நொந்து அங்கிருந்தக் கழனித்தொட்டியில் மூக்கை சீந்தியபோது, அந்த மூக்குத்தி அக்கழனித்தொட்டியில் விழுந்திருக்கிறதென்றும்; ஆகவே, கோயில் அர்ச்சகரை அடித்து வதைப்பது பாவமென்றும், அவர்களை வதைக்கக்கூடாதென்றும் வாக்குச்சொல்ல, அவ்வாக்கின்படி அக்கழனிப்பாத்திரத்தைத் தேடிப்பார்க்க, அப்பாத்திரத்தில் ஆவ்வாபரணம் இருக்கக்கண்டு, நாயடவர்களுக்கு அதிக ஆநந்தமுண்டாகி, அம்மன் தனது அரண்மனைக்கு வந்த மகத்துவத்தைப்பற்றி பேன்மேலும் கொண்டாடி அதை எடுத்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு, ஆநந்த பாஷ்பம் சொரிந்தும், அதைப்போல எட்டுமூக்குத்திகளைச் செய்வித்தும்; 24,000 பூவராகனால் ஒரு பொன் பிரதிமை நாச்சியாரைச் செய்வித்தும், அதன் மூக்கில் அந்த மூக்குத்தி ஆபரணத்தைத் தரிப்பித்தும், சகல வாத்திய கோஷங்களுடனும், இராஜ மரியாதைகளுடனும் அனுப்பிவிட்டு, அன்றுமுதல் ஸ்ரீரங்கநாதரும், நாச்சியாரும் தம்மிடம் கொண்டிருக்கும் காருணியத்தைக்கருதி “இனி பிரதிதினமும் காவிரியில் ஸ்நானம்செய்து ஸ்ரீரங்கநாதரையும், நாச்சியாரையும் தரிசிக்காமல் உண்ணேம், என்ற வீர விரதத்தைக் கைக்கொண்டு, சுமார் முப்பது மைல் தூரத்திலிருக்கும் ஸ்ரீரங்கத்துக்கு பிரதிதினமும்போய்வர பல்லக்குதூக்கும் போயர்களை நியமித்து அப்படியே போய்வந்தாராம். இந்த விஜயராகவநாயடுகாருடைய சமுகத்தில் சோமசுந்தர சுவாமிகள் என்ற ஒரு தபோநிதியும், மஹாமதியூகியான மந்திரியும், இரங்கப்ப நாயடு என்ற தளகர்த்தரும் அக்கிராஜா என்ற குதிரைவீரரும் வீரபாஹு மற்றும் புத்திமான்களான பிரதானி, இராயசம், கொத்தவால் முதலான அதிகாரிகளிருந்து இராஜாங்கத்தைக் கிரமமாக நடத்திவந்தார்கள்.

இவர் காலத்தில் காஞ்சிபுரத்திலிருந்த ஸ்மார்த்த, ஸ்ரீவைஷ்ணவ பிராமணர்களைத் தருவித்து காவிரிநதி யோரமாக இருக்கும் கிராமங்களில் குடியேற்றி கல்வியையும் ஞானத்தையும் விருத்தியாக்கி வந்தார்கள்.

இப்படிப்பட்ட புத்திமான்களால் சூழ்ந்திருந்த விஜயராகவநாயடு தஞ்சாவூர், பெரியகோட்டை, அரந்தாங்கிக்கோட்டை, பட்டுக்கோட்டை, இராமநாதபுரம் ஜமீனில் உள்ள திருப்பத்தூர்கோட்டை, வள்ளமகோட்டை, திருக்கட்டுப் பள்ளிக்கோட்டை, செங்கோட்டை, பண்டை நல்லூர், தீவிக்கோட்டை முதலான கல்கோட்டைகளையும்; மாயவரம், காவேரிநதி தீரத்திலிருக்கும், புஷ்பமண்டபம், மத்தியார்ஜுனத்தில் புஷ்பமண்டபம்செப்பனிட்டும், மன்னாருகுடியில் இராஜகோபால சுவாமி கோயில், ஹரித்திராநதி என்ற பெரிய தெப்பக்குளம் பின்னும் அந்த ஜில்லாவிலிருக்கும் அநேக விஷ்ணு கோயில் களைக்கட்டி வைத்தும்; குடிகளிடம் ஆறில் ஒரு கடமை வாங்கிக்கொண்டும், தருமராஜ்ய பரிபாலனம் செய்துவருவதைக் கண்டு ஐரோப்பிய நாட்டாராகிய போர்த்துகேசியர் தஞ்சையில் முதல் முதல் கால்வைத்தார்கள். பிறகு 1620-ஆம் வருஷம் முதல் 1845-ஆம் வருஷம் வரையில் தரங்கம்பாடிக்கு டேனிஸ் சுக்காரர்களும். 1636-ஆம் வருஷம் பிரஞ்சுக்காரர்களும் காரைக்காலுக்கு வந்ததாக இப்போது ஆபிரிகா செட்டாவிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ பிளாசை, சோ-விருத்தாசலம்பிள்ளையவர்கள் அபிபிராயப்படுகிறார்கள்.

இப்படி மிக்கமேன்மைபெற்று வாழ்ந்துவருங்கால் விஜயராகவநாயடு காருக்கு வயது எண்பதாகி, முதிர முதிர வியாகூலங்களும், கஷ்டங்களுமுண்டாகி விசனப்பட்டிறக்கவேண்டிச் சம்பவித்தது.

அதற்குக் காரணம்;அவர் பிள்ளைகளும் துர்மந்திரர்களுடைய துர்போதனைகளுமேயாம். அதாவது: அவரது மூத்தகுமாரனாகிய மன்னாறுசாமி நாயடுமே, தளகர்த்தன் இரங்கப்ப நாயடு குமாரன் வீரபானு என்னும் அரங்கநாதனும், விப்பிரன் வெங்கண்ணனும்,பாலிய சிநேகிதர்களாக விருந்துவேடிக்கை விநோதயாகக் காலம் கழித்து வருங்காலத்தில், மன்னாறுசாமி நாயடு தமது சிநேகிதன் ரங்கனுக்கு எழுதிய அந்தரங்கக் கடிதத்தையும், இராஜமுத்திர மோதிரத்தையும், திருச்சியிலிருந்து குமாரசாமி என்று பொய்வேடம் பூண்டுவந்த அளகிரியவன், தஞ்சை சமஸ்தான மந்திரியாகிய கோவிந்த தீக்ஷதருடைய குமாரத்தியும், இராகவேந்திர தீக்ஷதருடைய மனைவியுமாகிய சுலக்ஷணிக்குக் கொடுத்து, அவள் இராஜ உத்தியானவனத்தில் ஏகாந்தமான இராஜ கிரஹத்திலிருக்கும்போது போய் பிடித்தும், இழுத்தும் முத்தமிட்டுமே முத்திரை மோதிரமிட்டும் அவமானப் படுத்தியதால்; அவள் அந்தச் சங்கதியைப்பற்றி தனது தந்தையிடம் முறையிட; அவர் அரசனாகிய விஜயராகவநாயடுகாருக்கு அறிவிக்க; அவர் அவ்வித அக்கிரமம் செய்தவர் இன்னாரென்று சரியாக விசாரித்து அறியாமல், தன் மகன்தான் செய்திருப்பானென்று பிடித்துக் கொண்டுவரச்சொல்லி சிறையில் போட்டு விட்டதாக தஞ்சை நாயக்கர் ஸமஸ்தான சரித்திரத்தைப்பற்றி நாகை நீலலோசனிப் பத்திரிகையில் ஸ்ரீமான் T. இராஜம் ஐயங்காரவர்கள் B. A. எழுதிய சரித்திரத்தால் ஸ்பஷ்டமாகிறது. ஆனால் இது விஷயத்தில் யாழ்ப்பாணம் ஸ்ரீ சரவண முத்துப் பிள்ளையவர்கள் எழுதிய "மோஹனாங்கி" சரித்திரத்தில் வேறுவிதமாகச் சொல்லப் பெற்றிருக்

இறந்து. அதாவது தஞ்சை தளகர்த்தராகிய "இரங்கப்ப நாயடு" தமது குமாரன் வீரபானு என்னும் அரங்கநாதன் விஜயராகவலு நாயடு குமாரத்தி மோஹனாங்கி என்னும் "மங்கம்மாளை" விவாகம் செய்வித்துக்கொண்டால், இராஜ்யபரிபாலனம் தன் குமாரனுக்கு கிட்டுமென்றெண்ணி, கோவிந்தாசாரியாருக்கு பரிதானம் கொடுத்தும், அந்த ஆசாரியருடைய குமாரத்தி விஷயத்தில் மன்னாறு செய்த குற்றங்களைப்பற்றித் தூண்டியும், அந்த ஆசாரியைக் கொண்டு விஜயராகவலு நாயகோரிடம் மன்னாறு நாயடுவின்மேல் பல சாடிகளைச் சொல்வியும், முக்கியமாக விஜயராகவலு நாயடுவைக் கொல்லப் பிரயத்தனப் படுவதாகச் சொல்ல, மன்னாறுசாமி நாயடை இராஜ கலகக்காரனுக்கி சிறையில் வைக்கும்படியாகச் செய்து விட்டதாகத் தெரிவித்திருக்கிறார். இது விஷயத்தில் தக்க சாசன மகப்படாமையால்உண்மை இன்னதென்று அறிபக்கூடவில்லை. அன்றியும் இந்த விஜயராகவலு நாயடுகாரு காலத்தில் கோவிந்த தீக்ஷதரே மந்திரியாக இருந்ததற்குத் தகுந்த சாசனங்களகப்படவில்லை என்று முன்னமேசொல்லி இருப்பதால்; இந்தக்கதையை உண்மையான தென்று நம்பக்கூடவில்லை; ஆயினும், மஹாவீரதீரனுன மன்னாறை மந்திரிகளுடைய தூர்ப்போதனையினால் இராஜகைதியாகச் சிறையில்வைக்கச் சம்பவித்ததனுல்; விஜயராகவுலு நாயடுகாருக்கு உண்டான வியாகூலம் கொஞ்ச நஞ்ச மல்ல.

இப்படி புத்திரனுல் வியாகூல முண்டான தோடுகூட; தம் புத்திரியினுலும் பிரபல வியாகூல முண்டாகச் சம்பவித்தது. அதாவது-தமது அதிரூபலாவணியமும், இயற்கை அறிவும் பெற்ற மதிவிலாசனி என்னும் மங்கம்மாளை, தமது தளகர்த்தரான இரங்கப்ப நாயடு குமாரன் அரங்கனுதனுக்கு விவாஹம் செய்வித்துத் தமது அரண்மனையில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று எண்ணமிட்டிருக்க; அதற்கு விரோதமாக மதுரைப் பூபதியும், திரிசிராப்பள்ளியிலிருந்த சொக்கநாத நாயடும் அந்த மங்கம்மாளையே விவாஹம் செய்வேனென்று பிடிவாதம் செய்ததேயாம்—

மதுரைக் கதிபதியாகிய சொக்கநாத நாயடுவின் தந்தை இறந்ததும்,அந்த ஸமஸ்தானத்தின் குலகுருவாகிய பத்த பெரியசுவாமி களும்,பேஷ்கர் சின்ன தம்பி முதலியாரவர்களும், மந்திரியும் தளாதிபதியார் வெங்கட கிருஷ்ணப்ப நாயடும்கூடி சொக்கநாதருடைய தாயாராகிய மங்களவிலாசனியிடம் போய் சொக்கநாதருக்குத் தக்க பெண்ணைத் தேடி விவாஹம் செய்வித்து பட்டங் கட்டாவிடில் ஸமஸ்தானம் கெட்டுபோகுமென்று சொல்ல; அந்த அம்மையும் தனது சகோதிரர் நாகபூஷணருடைய குமாரத்தி விலோசனியை விவாஹம் செய்வித்து சிங்காசன மேற்றுகவென்று உத்தரவு கொடுத்தார். இது சங்கதியை அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சொக்கநாதர், திடுக்கிட்டெழுந்து 'தஞ்சை விஜயராகவலு நாயடு குமாரத்தி மங்கம்மாளை மணஞ் செய்வித்தால் மாத்திரம் செய்துக்கொள்வதேயன்றி; மற்றப் பெண்களைச் செய்துக் கொள்ளமாட்டேன்," என்று ஒரே பிடிவாதமாகச் சொல்லிவிட; மாதாவும மந்திரிகளும், இது விஷயத்தைப் பற்றிச் சில நாட்கள் வரையில் பேசாமல்

ஆறவிட்டு பிரஸ்தாபிக்க; அந்தச் சொக்கநாதர் முன் சொன்ன வார்த்தையை மாற்றமாட்டேன் என்று சாதிக்க; பிறகு விதியின்றி அந்தத் தஞ்சை மங்கம்மாளை விவாகம் செய்ய தீர்மானித்து; தளகர்த்தர் வெங்கட கிருஷ்ணமநாயடு காரையும், இராஜ புரோஹிதர் பண்டித பிராமணர்களையும், தக்க ஆடை ஆபரண பண்டபலாதி பஹுமானங்களைக் கொடுத்து தஞ்சைக்குப் பெண்விஷயமாகத் தூதாகப் போய்வர அனுப்பினார்கள். அவரும் அப்படியே விஜயராகவனு நாயடும் அவருடைய மந்திரிகளும் கொலுவிருக்குந் தருணத்தில் தூது வந்த காரியத்தைச் சொல்லியனுப்ப; விஜயராகவர் மிக்க கோபம் கொண்டு, தன்குடும்பத்தில் சொக்கநாதர் பெண்ணைக் கேட்கத் துணியலாமாவென்று இட்டியும், தூதுவந்தவெங்கிடகிருஷ்ணம நாயடுவையும், மந்திரி முதலான சபையார் முன் அவமானமாகப்பேசியும், அவர் கொண்டுவந்த ஆடை ஆபரணவரிசைகளை வாங்கிக்கொள்ளாமல் வாபீசாக அனுப்பிவிட்டார்.

அந்த விஜயராகவனு நாயடுகாரு அப்படி தூது வந்தவரையும், சொக்கநாதரையும் இராஜ சபையில் அவமானமாகப்பேசி பெண்கொடேனென்று சொன்னதற்குப் பல காரணங்கள் சொல்லுகிறார்கள். அவைகளில்-முதலாவது சொக்கநாதருடைய பாட்டனார் திருமலைநாயடு காருக்கு இந்தத் தஞ்சாவூர் சமஸ்தானப் பெண்ணாகிய அச்சுதராகுநாதம்மகாரைப் பட்டஸ்திரியாக முன் விவாகம் செய்வித்து கொடுத்ததில், ஒரு நாள் திருமலை நாயடுகாரு தாம் மதுரையில் கட்டிவைத்த சிற்பலங்காரங்களைக் காட்டி எப்படி இருக்கின்றன வென்றுக் கேட்க, அந்தத் தஞ்சை அச்சுதாகுநாதம்மாள் தன் தகப்பனார் வீட்டு சாக்கடை வேலைக்குச் சமானமானதென வேடிக்கையாகச் சொல்ல; அந்த வார்த்தையைக்கேட்ட திருமலை நாயடுகாரு கோபவேசங்கொண்டு கையிலிருந்த கட்டாரியால் ஒரேகுத்தாகக் குத்திக் கொன்று விட்டபடியால்; இப்படி முரட்டுத்தனமுள்ள மதுரை ஸமஸ்தானத்தார் வீட்டுக்கு இனி தஞ்சை ஸமஸ்தானப் பெண்ணைத் தருவதில்லையென்று பிரதிக்கினை செய்துகொண்டதனால், அந்தப் பிரதிக்கினையை அனுசரித்துச் சொக்கநாதருடைய தூதவனை அவமானப் படுத்தியதாக சிலர் கருத்து- 2-வது- விஜயராகவனு நாயடு குமாரன் மன்னாறு தனது பிதாவின் பிராணனைப் போக்கி, பட்டம் கட்டிக் கொள்வதாக சில துஷ்டர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, அந்த மன்னாறுசாமி நாயடை சின்னக்கோட்டையிற் சிறையில் வைத்துவிட்டதால்; இனி விஜயராகவனுக்குப் பிறகு தஞ்சைப்பட்டத்துக்குத் தகுந்த வயதுடைய ஆண்சந்ததி இல்லாமல் விஜயராகவனு நாயடு மைத்துனர் இரங்கப்ப நாயடு குமாரன் ஆரங்கநாத நாயடுக்கு தனது குமாரத்தியை விவாகம் செய்வித்தும், பிறகு தமது ஸமஸ்தானத்தையே ஸ்ரீதனமாகக் கொடுக்க தீர்மானித்திருந்தபடியால், சொக்கநாதர் தூதனை இப்படி அவமானம் செய்தனுப்பியதாகச் சிலர் கருத்து.

3-வது கோவிந்த ஆசாரியருடைய குமாரத்தியைக் கெடுக்கத் தீர்மானித்த மன்னாறுசாமி நாயடை தஞ்சையின் பட்டத்துக்கு வராமல் தடுத்து சிறையில் போட்டுக் கொன்று பழியைத் தீர்த்துக்கொள்ள எண்ணமிட்டிருந்த கோவிந்த

தீக்ஷிதருக்கு இரங்கப்ப நாயடு லஞ்சங்கள் கொடுத்து துதித்து, தஞ்சை சமஸ்தானத்துப் பெண்ணை, தன் மகனுக்கே வாய்க்கும்படி கெஞ்சிக் கேட்டுக் கொண்டமையால்; அந்தக் கோவிந்த தீக்ஷிதர், அடிக்கடி அரண்மனைக்குள் போய்; அரசிக்கும், அரசனுக்கும் அரங்கநாத நாயடுவைப்பற்றிப் போற்றியும்; சொக்கநாதன், மூடன் குடும்பத்தைச்சார்ந்த மூடன் என்றும்; அவனும் அவன் தாயார் முதலானவர்களும் சைவ மதாபிமானிக ளாகையால்; அப்படிப்பட்ட வீட்டிற்கு வைணவமதாபிமானமுள்ள வீட்டின் பெண்ணைக் கொடுத்தால், மஹாபாவமென்று சொல்லியும், விஜயராகவலு நாயடுவின் மனதை மாற்றிய தால்; அவர் சொக்கநாதருடைய தூதுவனை இப்படி அலக்ஷியமாகப் பேசி அவமானப்படுத்தி யனுப்பியதாக சிலர் கருத்து. பின்னும் சிலர் பற்பலவிதமாக மனோராச்சியம் செய்து சொல்லுகிறார்கள். அப்படிப் பலர் பலவிதமாகச் சொல்லுவதற்குக் காரணம்; விஜயராகவலு நாயடுகாருக்கு அப்போது வயது 82-ம், அத்தோடு வைணவத்தில் பக்தி அதிகமாகி, சதா ஸ்ரீரங்கநாதர் தியானத்திலும், பூஜையிலும் கண்களை மூடிக்கொண்டு காலத்தை கழித்துக் கொண்டும், இராஜாங்க காரியங்களை எல்லாம் அவர் மைத்துனர் இரங்கப்பநாயடு வசத்திலும், அவர் குமாரன் அரங்கநாதனிடத்திலும், மந்திரி மார்களிடத்திலும் விட்டு விட்டும்; அந்த துர்மந்திரிகள் சொல்லும்வார்த்தைகளை யெல்லாம் தேவவாக்காகக் கொண்டும், அவர்களிஷ்டபடி தலையாட்டிக்கொண்டும், சதா ஸ்ரீரங்கா! ஸ்ரீரங்கா! என்று பாடிக்கொண்டும் பரவசமாக நின்றதேயாம்.

இப்படி தஞ்சாவூர் ஸமஸ்தானகாரியங்கள் சீர்கெட்டிருக்கும் தசையில், தூதாக வந்துபோன வெங்கடகிருஷ்ணப்ப நாயடு, தாம் தஞ்சைக்குத்தூதாக வந்த விடத்தில் உண்டான அவமானத்தையும், அசங்கதத்தையும், தமது அரசர் சொக்கநாதரிடமும், பேஷ்கார் சின்னத்தம்பி முதலியாரிடமும் மற்றுமுள்ள இராஜமஹிஷி முதலானவர்களிடமும் போய்ச்சொல்ல; அவர்கள் திடுக்கிட்டு விசனப்பட்டு, அந்தோ! "தஞ்சை விஜயராகவர் தம்பெண்ணைக்கொடாவிட்டால் பாதகமில்லை, நமது சமஸ்தானத்தையும், சமஸ்தான தூதவனையும், தமது இராஜசபையில் இவ்வளவு அவமானமாகப்பேசி யனுப்பியது இராஜதருமமல்லவென்றும்; அக்குற்றத்திற்குத் தகுந்த மன்னிப்பு கேட்டுக்கொள்ளாவிட்டால், அவரோடு சண்டை செய்யப்படுமென்றும், சமாசாரமனுப்பினார்கள்.

இந்தச் சமாசாரத்தைக் கேட்ட விஜயராகவலு நாயடு கர்ஜித்து, தமது மந்திரி பிரதானிகளை நோக்கி "பார்த்தீர்களா? இந்த சொக்கனுடைய குறும்பு, இந்தப் பயலை நான் மன்னிப்பு கேட்கிறதா? இவனுடைய ராஜியத்தைப் பிடுங்கி, பாழ்த்துப்போகச் செய்து விடுகிறேன் பார்! சொக்கனை சண்டைக்கே வரச் சொல்," என்று சொல்லியனுப்பிவிட்டார்.

இது சங்கதியைக் கேட்டு வந்து திரிசியில் சொக்கநாதர் சமுகத்தில் தூதுக்காரர்கள் பயபக்தியுடன் சொல்ல; சொக்கநாதரும், அவர் ஸமஸ்தானத்தாரும் அதிகவிசனப்பட்டும், விஜயராகவ நாயடுகாருடைய மூத்தவயதையும், பக்தி

தரும குணங்களைக் கருதியும், பூர்வசம்பந்தத்தைக் கருதியும், அவரோடெப்படி சண்டைச் செய்வதென்று வெகு நேரம் யோசித்தும்; கடைசியாக, அவர் மதுரைச் சொக்கநாத ஸமஸ்தாநாதிபதியையும், அவருக்கு பிரதிநிதியாகத் தூது போன தளவாய் வெங்கட கிருஷ்ணப்ப நாயகரையும், இராஜசபையில் பஹிரங்கமாகச் செய்தனுப்பிய அவமானத்தை நீக்கிக்கொள்ள விதியின்றி சண்டை செய்ய தீர்மானித்தார்கள்-தீர்மானித்தாலுமென்ன? விஜயராகவநாயகரோ மஹாபக்தி சிரேஷ்டராகவும், மந்திர தந்திர சதுரங்கச் சேனைகளில் சிறந்தவராணபடியாலும், அவரை யுத்தத்தில் வெல்வது சாதாரணமல்லவென்று அறிந்து, உடனே 10000 சாம்பற் பூசிணிக்காய்களைத் தருவித்து, அவைகளைத் துண்டு துண்டுகளாக வெட்டியும், அவற்றின் ஜலத்தில் சொக்கநாதர் எட்டு நாட்கள் நின்று, மந்திர ஜபம் செய்துவிட்டும் (பிறகு 1670-ஆம் வருஷம்) வெங்கட கிருஷ்ணப்பநாயகர், பேஷ்கார் சின்னதம்பி முதலியார்வசம் 10000 சேனைகளை கொடுத்தனுப்பித் தானும் பின் படையோடு குதிரைவீரனாகப் போக; சின்னதம்பி முதலியாரும், வெங்கட கிருஷ்ணப்பநாயகரும் வேகமாய்ச்சேனையை நடத்திக்கொண்டுபோய், முதலில் வல்லம் கோட்டையைத் தாக்கிச் சண்டை செய்ய, அப்போது அதை காவல் காத்துக் கொண்டிருந்த தஞ்சாவூரார் சேனை எதிர்த்தும் முடியாமையால், அந்த வல்லம் கோட்டை திரிசிராப்பள்ளியார் வசமாகிவிடவே; திரிசிராப்பள்ளியார் தைரியங்கொண்டு தஞ்சைக்கருகில் பத்தேரிகளை நியமித்தும், கோட்டையை நாடி பத்துப் பீரங்கிக் குண்டுகளைச் சுட்டு சொக்கநாதர் சண்டைக்கு வந்திருக்கிற சங்கதியைத் தெரிவித்தார்கள். தெரிவித்தாலுமென்ன? விஜயராகவநாயகரு அப்போது விஷ்ணு பூஜையில் உட்கார்ந்துகொண்டும், கண்களை மூடிக்கொண்டும், ஸ்ரீரங்கநாதா! இராஜகோபாலா! என்று ஸ்தோத்திரமும், ஜபமும் செய்துகொண்டுமிருக்க; வேவுகாரர்கள்போய் "சுவாமி! சொக்கநாதருடைய சேனை நமது வல்லம் கோட்டையைப்பிடித்துக் கொண்டு, இப்போது தஞ்சைக்கோட்டையைப் பிடித்துக்கொள்ள உள்ளே வந்துவிட்டார்கள்" என்று சொல்ல, நாயகரு வெகுநேரம் பேசாமலிருந்து, பிறகு கண்களைத் திறந்துப் பார்த்து; வேவுகாரர்களைநோக்கி கர்ஜித்து, "நமது பூஜைபூரணமாகமுடிகிறவரையில்" நம்மிடம் யாவரும் வரவும்பேசவும் கூடாதென்று அதட்டி சொல்லிவிட்டு; மறுபடியும் கண்களை மூடிக்கொண்டு ஸ்ரீரங்கநாதா! இராஜகோபாலா! வென்று சொல்லிக்கொண்டு வெகுநேரம் பூஜையிலேயே இருந்து விட்டார்-

இது நிற்க- இந்த விஜயராகவநாயகருடைய வயதையும், பக்திவிசுவாசத்தையும், தரும சிந்தைகளையும், பூர்வபந்து சம்பந்தத்தையும் சொக்கநாதர் சிந்தித்து, இவருடன் சண்டைசெய்ய விருப்பங்கொள்ளாமல், இனிமேலாகிலும் சமாதானத்துக்கு வரக்கூடுமோ என்று தூதுவர்களை கேட்டுவரும்படி சொல்லி அனுப்பினார்-

அப்போது தான் பூஜையைப் பூரணமாக முடித்து, கண்களைத்திறந்துப் பார்த்து; தூதுக் காரர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்து, "ஷத்

ரிய சிங்கம் சமர்களத்திலும் சமாதானத்தை நாடுமோ” என்று கர்ஜித்து, தமது தளவாய் இரங்கப்பநாயடு, வீரபாஹு, அக்கிராஜு, கோத்தாவுத்தாகிய நால்வரை அழைத்து, உடனே ஆயுதபாணிகளாகி சண்டைக்குப் புறப்படுங்கள் என்று கட்டளையிட, அந்நால்வரும் காலதேசவர்த்தமானங்களை அனுசரித்து, மஹாவித்வசிகாமணியும், வீராதி வீரருமாகிய அரசர் குமாரர் ஸ்ரீ மன்னாருசாமி நாயடுகாரை இப்போதாவது சிறையிலிருந்து விடுதலைசெய்விததால், நலமென்று ஸ்ரீ விஜயராகவ நாயடுகாரை வணங்கிவேண்ட, அவரும் காலவித்தியாசத்தைக் கருதி விடுதலை உத்திரவு கொடுத்து, அந்நால்வரை அனுப்பி மன்னாருசாமி நாயடை அழைத்துவரும்படி கட்டளைஇட, அவர்களும் அப்படியே போய் மன்னாருசாமி நாயடை விடுதலைச்செய்வித்து அழைத்து வந்து, அரசர் சமுகம்விட; அம்மன்னாருசாமி நாயடும் தமது தந்தையின் பாதங்களில் வீழ்ந்து தண்டம் சமர்ப்பித்து, கைகளைக் கட்டிக்கொண்டு வணங்கி நிற்க: விஜயராகவநாயடு தமது அருமைக்குமாரராகிய மன்னாருசாமி நாயடுகாரை ஏறிட்டுப் பார்த்து-

“அடேமன்னாரு! மதுரைத் திரிசிப்புரத்தாசனான சொக்கன் நம்மவீட்டின் பெண்ணை விவாஹம்செய்துத் தரவேண்டி தூதனுப்பினான்! அந்த மூர்க்கன் குடும்பத்திற்கு, நமது குடும்பப் பெண்ணை கொடுக்கமாட்டோமென்றும் அத்தூதுவனையும், சொக்கனையும், சபையிற்திட்டி அவமானப்படுத்தி அனுப்பியதற்கு, அச்சொக்கன் தனது அவமானத்தைநீக்கிக் கொள்ளக்கருதி, இதோசண்டைக்கு தண்டுதளாதிகளை அனுப்பி இருக்கிறான்-இப்படிப்பட்ட தருணத்தில் நாம், சொக்கனுக்கு பயந்து,நமது அருமைப் பெண்ணை விவாஹம் செய்துக் கொடுதது, சமாதானம் செய்வித்துக்கொள்வது தகுதியா? அல்லது நமது க்ஷத்திரியதருமததிற்கு தக்கபடிக்கும்,நமது பெரியோருடைய அந்தஸ்துக்கு தக்கபடிக்கும், கேவலமானவர்களுக்கு பயப்படாமல் சண்டை செய்து ஜயித்து நமது குடும்பத்தின் அந்தஸ்தையும், பிரதிக்கினையையும்பாதுகாப்பது தகுதியா! உடனேசொல்”! என்று வினவ-

## அப்போது மன்னாருசாமிநாயடு சொன்ன

### பத்தியம் (காவியம) இது

కం॥ మణిక్రిందుపరచిజలనిధి,। త్రిణముఁ పైనుంచిఅతనిదేకువేసుమీ।
మణి మణియెత్రిణముత్రిణమే । రణవిజయదిలీప విజయరాఘవభూపా॥

என்று சொன்னார்- அதாவது-

சமுத்திரத்தின் அடியில் இருக்கும் இரத்தினமணிகளின்மேல், குப்பையைக் கூழங்களைப்போட்டு மூடினும், அந்தரத்தினமணிகள் மங்கலடையாமல், பிரகாசித்து, அக்குப்பைகூழங்களையும் பிரகாசிக்கும்படி செய்யும்-

அதாவது "கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்று சொல்ல: விஜயராகவலு நாயகோருகேட்டு;" அந்தோ! இப்படிப்பட்ட கல்விமானும், வீரதீரனுமான மன்னுறை துர்மந்திரிகளுடைய வார்த்தைகளைக்கேட்டு சிறையில் வைத்தோமே என்று சிறிதுநேரம் விசனப்பட்டு, பிறகு மன்னுறைத்தாவி உச்சி முகந்து முத்தமிட்டுப்பார்த்து

"அடே மன்னுறு! உன் வீரதீரத்திற்கு நாம் மெச்சினோம்-ஆனால் இந்தச் "சண்டையோ பிரமாதமாக முடியும்போலிருக்கிறது-ஒருவேளை இந்த உயுத் "தத்தில் நாம் வீரசொர்க்கத்தை அடைந்தப்பிறகு, சொக்கன் வந்து நம்மப் "பெண்ணை எடுத்துக்கொண்டுபோய் விவாகம் செய்துக்கொள்ளக்கூடும்! அந்த "அவமானத்திற்கு இடமில்லாதிருக்கும்படி, அந்தபுரத்தில் இருக்கும் நம்ம அரி "வையர் எல்லாரும் நமக்கு முன்னமே வீரசொர்க்கத்தை அடைவதற்கு உருவி "யகத்திகளோடுதயராக இருக்கச்சொல்! அந்த அரிவையர் அந்தப்புரத்தை அ "ரைநொடியில் பஸ்பமாகும்படி நான்கு மூலைகளிலும் வெடிமருந்துகளை நிறப்பி "யப்பானைகளைப் புதைப்பித்து, நமது குறிப்பை அறிந்த உடனே நெருப்பிட்டு "வெடித்து விழும்படி உத்திரவுசெய்துவா", என்று அனுப்ப-மன்னுறு நாயடும் அந்தப் புரத்துக்குப் போய் தமது தாய், தங்கை, தாரம் முதலானவர்களைக் கண்டுத் தழுவி, தமக்குச் சம்பவித்த காலவித்தியாசத்தைச் சொல்லி விசனப் பட்டும், பிறகு தந்தையவர்கள் அனுப்பிய ஆகினையைச் சொல்ல, அந்த ராஜ மஹிஷிகளும், உடனே சுத்த ஸ்நானம் செய்து, மஞ்சள் குங்குமம் புஷ்பங்களை அணிந்தும்,மஞ்சற் பட்டுப் புடவைகளைக் கட்டிக்கொண்டும்,கத்திகட்டாரிகளை கைகளிலேந்திக்கொண்டும், இராஜ உத்திரவிற்கு எதிர்ப்பார்த்துக்கொண்டிருக்க, வெடிக்காரர் வெடி மருந்துகளைப் பானைகளில் நிறைத்து, அந்தபுரத்தின் நான்கு மூலைகளிலும் புதைத்து; தீவர்த்தியை, கையிலேந்தி வேந்தர் உத்திரவுக்கு எதிர்பார்த்திருந்தார்கள்-அந்தப் பெண்மணிகள் வெந்து இறந்த இடத்தை இப்போதும் இராக்காலங்களில் அணுக அஞ்சுகிறார்கள்-

இப்படிப்பட்ட தருணத்தில் விஜயராகவலு நாயகோரு இனி ஸ்ரீரங்கத்துக்குப் போய் ஸ்ரீரங்க நாதரை நேரில் தரிசிப்பதற்குவழிஇல்லாததைக்கண்டு, தமது அரண்மனையின் மாடியின்மேல் மர உப்பிரிகைப்போட்டு, அதன்மேலேறி ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தின் கோபுரங்களை தரிசித்து வணங்கி இறங்கிவந்தும், இராஜவீரவேஷம் தரித்தும், வயதின் கோலத்தினுல் தொங்கிக் கொண்டிருந்த கண் இரப்பைகளைத் தங்கக் கம்பிகளினுற்றூக்கிக் கட்டிக்கொண்டும், இராஜ ஆடை ஆபரணம் தட்டிசல்லடம் கட்டிக்கொண்டும், இடது கையிற் கட்டாரியையும், கேட்டியத்தையும், வலதுகையிற் இராஜபட்டாகத்தியையும் பிடித்துக் கொண்டும், ஸ்ரீரங்கநாதா! இராஜகோபாலா என்று கூப்பிட்டு கற்ஜித்து சண்டைக்குப் பிறப்பட, கூடவிருந்த மன்னுறுசாமி நாயடும், தக்க தட்டிசல்லடம் கட்டிக்கொண்டும், கட்டாரியும், கத்தியை ஏந்திக்கொண்டும் இராஜருக்கு முன் அணியாகச் சண்டைக்குப்போக-விஜயராகவலு நாயகோருபார்த்து-

“ அடே மன்னாறு! நீ எனக்குப் பின்னாலும் அக்கிராஜா, வீரப்பாஜு முதலான
“ வர்களுடன் பின் அணியில் நில்? ஏனெனில், ஒருவேளை உனக்கு எதிரிக
“ ளுடைய கத்தியடிப்பட்டு விழுந்து, வீரசொர்க்கமடைவாயானால்- உன்னைப்
“ பார்க்கும் என் கண்களில் (புத்திரசோகத்தினால்) கண்ணீர்த் ததும்பி, கண்களை
“ மூடிக்கொள்ளும்; மேலும் நீ எனக்குமுன் இறப்பாயானால், புத்திரசோகத்தினால்
“ என்கைகளின் வலிமைக்குன்றிச் சண்டைசெய்ய சக்திபற்றுப் போகக்கூடும்
“ என்று சொல்ல-மன்னாறு நாயடு கேட்டு வணங்கி, “ தந்தையே ! தாங்கள்
“ சகல சாஸ்திரங்களைக் கற்று தெளிந்தவர், அப்படிக்கிருக்க, இப்படிச் சொல்ல
“ லாமோ! தாங்கள் தந்தை, நான் குமாரன்,-தாங்கள் அரசர், நான் சேவகன்,
“ இப்படிக்கிருக்க, தங்களுடைய உப்பைத் தின்றதற்கு, இப்படிப்பட்ட தருணத
“ திலல்லவா நான் தங்களுக்கு முன்னின்று உதவிசெய்ய வேண்டும். இப்படிப்
“ பட்ட தருணத்தில் நான் தங்களுக்கு முன்னின்று தங்கள் பகைவரைத்
“ தாக்காவிட்டால், நான் இருந்தும் பிரயோஜனமில்லை,” என்று பலவாறு பஞ்சிக்
“ கெஞ்சிக் கேட்டு சமாதானப்படுத்தி, ஆயுதபாணியோடு சமர்களத்தின் முன்
இளஞ் சிங்கம் கர்ஜித்து குதிப்பதைப் போல் குதித்துவர, தொக்கநாதருடைய
தளாவாய் வெங்கடகிருஷ்ணப்ப நாயடுகோரும் ஆயுதபாணியோடு முன்வந்தார்.

இந்த மன்னாறுசாமி நாயடும், பாலியத்தில் வில்வித்தை, மல்யுத்தம், சாமவித்தை, பட்டாகத்தி சுழல் வித்தையிற் பயின்றவராகையால், அவருக்கு அவ்வித்தைகளில் சமானமான சக்தியை உடைய வெங்கட கிருஷ்ணப்ப நாயடுகோரோடு வெகுநேரம் நின்று கத்திச் சண்டைகளைச் செய்துவர, முதலில் மன்னாறு நாயடு பட்டாகத்தியால் வெங்கட கிருஷ்ணப்ப நாயடுகோருடைய சிரசைப் பார்த்து அடிக்க, அது அவர் தலைப்பாகையைத் தூக்கி எறிந்து சிறு காயப்படுத்த, வெங்கட கிருஷ்ண நாயடுகோரு மஹாவீர கோபத்துடன் மன்னாறு நாயுடு தலையைப் பார்த்து அடிக்கத் தலைவேறு, உடல்வேறாக அறுப்பட்டு விழுந்தன.

இதை அறிந்த விஜயராகவலு நாயடுகோரு இனி தப்புவது அபூர்வமென அறிந்து, அந்தப் புரத்துக்குச் சேதியை அனுப்ப, அங்கிருந்த இராஜமஹிஷிகள் உடனே ஒருவரை ஒருவர் கத்திகளால் வெட்டிக்கொண்டுச்சாக; அவர்களில் ஒரு இராணியார் தமது அருமையான நான்கு வயதையுடைய ஆண் குழந்தையை, அதற்குப் பால் கொடுத்த தாதியிடம் கொடுத்துப், அச்சிசுவின் போஷணைக்காக தாமணிந்திருந்த நவரத்தின ஆபரணங்களைக் கொடுத்தும், யாருக்கும் தெரியாமற் போய் வளர்த்திக்கொள்ளும்படி யனுப்பிவிட்டும், அந்த இராணியும் தம்கத்தியால் வெட்டிக்கொண்டு இறந்தார்- இத்தியாதிகளைப்பார்த்துக் கொண்டிருந்த மங்கம்மாளும், மற்றவர்களும் தம் வாள்களால் வெட்டிக் கொண்டு வீரசொர்க்கமடைய; உடனே வெடிமருந்துக்காரன் நான்கு மூலைகளிலும் புதைத்திருந்த மருந்துப்பானைகளுக்கு தீயை மூட்ட, அவைகள் ஏககாலத்திற் குபீரென்று பீறிட்டுக் கொண்டு, பல பீரங்கி சப்தங்களோடு பயங்கர இடிசப்தம்போல வெடித்து; அந்தபுரத்தை அஸ்திவாரத்தோடு

கிளப்பி வெடிக்கச்செய்து எங்கும் புகைமயமாக்கியது- இந்தச் சங்கதியை அறிந்து விஜயராகவலு நாயடுகாரு இனி தாம் உலகிலிருப்பதில் பிரயோஜனமில்லையெனத் தெளிந்து, தமது தளவாய் முதலானவர்களோடு வெங்கடகிருஷ்ணப்ப நாயடுடன் மஹா பயங்கரச் சண்டைசெய்ய, அக்கிராஜுவும், வீரபாநு முதலானவர்களும் எதிரிகளால் வெட்டப்பட்டு விழுந்து இறந்தார்கள்.

இனி விஜயராகவலு நாயடுகாருத் தனியாக நின்று கத்திச் சண்டைசெய்கையில், எதிரியின் சேனைகள் நாலாபக்கங்களிலுமிருந்து துப்பாக்கிகளுக்குகுண்டுகளைப்போட்டு சுட்டுக்கொண்டு வந்து வளைத்துக் கொள்ளவே, விஜயராகவலு நாயடுகாருப்பார்த்து, ஒரு தூதுவனை எதிரித்தலைவன் வெங்கட கிருஷ்ணப்ப நாயடுவிடமனுப்பி, "தூரத்திலும், மறைவிலுமிருந்துத் துபாக்கிதண்டுகளினுல்ச்சுட்டுக் கொல்வது, ஆண்பிள்ளைகள் செய்யும் உயுத்தமல்ல, பேடிகளான பெண்பிள்ளைகள் செய்யும் உயுத்தம், அரசர்கள் ஆண்சிங்கங்களைப்போல ஒருவரோடு ஒருவர் நேர்நேராக நின்று சண்டைசெய்வதே ஆண்பிள்ளைத்தனம்", மஹாவிஷ்ணுபக்தனுகிய என்னை திரிசிராப் பள்ளியார் துபாக்கி குண்டில் சுட்டுக் கொன்ருல் அவர்களுக்கும் அப்ரகியாதி, எனக்கும் வீரசொர்க்கம் கிட்டாமற் போகக்கூடும்," என்று சொல்லும்படிகட்டளை இட, அந்ததூதுவனும் அப்படியேப்போய்ச் சொல்ல, அதற்கு வெங்கட கிருஷ்ணப்ப நாயடுகாரும் இணங்கி, தமது சேனையில் துப்பாக்கிகளை சுடுபவர்களை நிறுத்திவிடும்படி கட்டளைக்கொடுத்துவிட்டும், கத்திக்கட்டாரிக்காரர்களை மாத்திரம் முன்வந்து நிற்கும்படி திட்டம் செய்துவிட்டும், தாமும் கத்திகட்டாரியுடன் வந்து விஜயராகவலுநாயடுகாருடன் நேர்நேராக நின்று நெடுநேரம் சண்டைசெய்தார்- விஜயராகவலு நாயடுகாரு கத்திகட்டாரிவரிசையில் அதிகவல்லவரானபடியால்; நெடுநேரம் பயங்கரசண்டை செய்தாலும், விருதாப்பியவயதினுலும், புத்திர சோகத்தினுலும், குடும்பசோகத்தினுலும் அதிகநேரம் நின்று சண்டைசெய்ததனுல் சற்றுத் தளரவே, வாலிபவயதும், மகாவீரதீரமுடைய வெங்கட கிருஷ்ணப்ப நாயடு வெகுமும்மரமாக தளராமல் சண்டைசெய்ய, அவருக்குப் பக்கத்திலிருந்த ஒரு வீரன் சமயம் பார்த்து தனது பட்டாகத்தியை ஓங்கி விஜயராகவலு நாயடுகாருடைய கழுத்தைப்பார்த்து வெட்டவே அரிஹரி! ஸ்ரீரங்கநாதா! இராஜகோபாலா! என்று சொல்லிக்கொண்டு விழுந்து வீரசொர்க்கத்தை அடைந்தார்- இந்தச் சண்டை தஞ்சை வடகரு கோட்டைவாசலுக்கு அடுத்த இராஜகோபாலசாமி கோவில்வாசலில் நடந்தது-

உடனே வெங்கடகிருஷ்ணப்ப நாயடுகாருடைய சேனைகள் கோட்டைமாடியின் மேலேறி திரிசிரபுர ஜயக் கொடியை நாட்டி "சொக்கநாதவிஜயீபவா! என்று ஜயபேரிகை முதலான வாத்தியங்கள் கோஷித்தார்கள்- இந்த ஜயத்தைப்பற்றி வெங்கடகிருஷ்ணப்ப நாயடு உடனே சவிஸ்தாரமாக எழுதி இரண்டு குதிரைச் சவாரிக்காரரிடம் கொடுத்து திரிசிபுரத்திற் கனுப்பினுர்-

இங்கு தஞ்சையில் இப்படி நடந்துக் கொண்டிருக்க, அப்போது ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் அநேக அர்ச்சகர்கள், இந்தச சண்டை எப்படி முடியுமோ

வென்று வெகு நேரம் பேசிக்கொண்டிருந்து, அர்ச்சகர்கள் மாமூல்படி அந்த ஸ்ரீ ரங்கர் கோயில் பூஜைகளை முடித்துக்கொண்டு தம் தம் வீடுகளுக்குப்போயிருக் கையில், தஞ்சை விஜயராகவலு நாயடுகாரு வழக்கபடி தமது பெட்டபிள்ளை களுடன் ஸ்ரீரங்கநாதர் சேவைக்கு வந்திருக்கிறபடியால் (அர்ச்சகர்) யாவரும் வந்து கோயிலைத்திறந்து பூஜைகள் செய்யுங்கள் என்று சேவர்கள் போல சிலர் வந்து சொல்லவே, அர்ச்சகர்களும் ஓடிப்போய்ப்பார்க்க, விஜயராகவலு நாயடு காரும் பல்லக்கில் வந்திருக்கக் கண்டு, ஒரு வேளை இரண்டு அரசர்களுக்கும் சமாதானமாகிவிட்டபடியால், மாமூல்படி கோயிலுக்கு வந்தாரோ என்று எண்ணி, கோயிலைத் திறந்து பூஜைகளைச்செய்து, தீர்த்தம் சடகோபம் முதலான பிரசாதங்களை சாதித்துக்கொண்டிருக்க, விஜயராகவலு நாயடுகாரும் அவருடன் வந்த ஆட்களும் மாயமாக மறைந்துவிட, அர்ச்சகர்கள் ஆச்சரியப்பட்டு, ஸ்ரீ விஜயராகவ நாயடுகாரு மஹாபக்த சிரேஷ்டரான படியினால், ஸ்ரீரங்க நாத ருக்குள் ஐக்கியமாகி விட்டார் போலும், என்றெண்ணி, இது சங்கதியை திரிசிர புரத்திலிருக்கும் சொக்கநாத நாயடுகாரு சமுகத்திலும் சொல்ல, ஆச்சரியப்பட் டார்களாம். இது நிற்க- தஞ்சையிலிருந்து தளவாய் வெங்கட கிருஷ்ணப்ப நாயடு எழுதிய ஓலை திரிசிரபுரத்திற் சொக்கநாதர் சமுகத்தில் வந்து சேர, சொக்கநாதரும் அவருடைய மந்திரி முதலான சபையாரும், தாயார் முதலான குடும்பத்தார்களும் கேட்டு அதிகவிசனப்பட்டு, கேவலமான ஒரு பெண்ணைப் பற்றியவார்த்தையினாலே தஞ்சாவூர் சமஸ்தானமே பேர் சொல்லக்கூட புத்திர மித்திரகளத்திராதிகளற்றுப் போகும்படி சம்பவித்ததைப் பற்றி அதிகமாகச் சிந்தித்தும், இனி நடந்து போன காரியத்தைப் பற்றிச் சிந்திப்பதில் பிரயோ ஜனமில்லை என்று எண்ணியும்; தம்மையும் தமது தூதனையும் அவமானப் படுத்திய அரசனை அடியோடு அதம் செய்து ஜயித்ததைப் பற்றி சந்தோஷித் தும், உடனே தஞ்சையிலிறந்த விஜயராகவலு நாயடுகாரு முதலான இராஜ குடும்பத்தாரை இராஜ மரியாதையுடன் எடுப்பித்து தகனம்செய்வித்தும், அவர்களுடைய அந்தஸ்துக்கு தக்கபடி கருமாதி காரியங்களை நடப்பித்தும், இராஜ பொக்கிஷத்தை பந்தோபஸ்து செய்வித்தும், நகரில் தகுந்த சேனுவீரரை வைத்துப் பாதுகாத்தும், தமக்குப்பால் கொடுத்து வளர்த்த சவலைத்தாய்க்குமார ரான அழகிரிசாமிநாயடு காரிடம் ஸமஸ்தானத்தைக் கொடுத்து வரும்படி வெங் கட,கிருஷ்ணப்ப நாயடுக்கு உடனே பதில் ஓலை எழுதி அனுப்பிவிட்டும்; சொக்கநாதர் சகல பிருதுகளுடன் காவிரிநதிக்கு வந்து சத்தஸ்நானம் செய் தும், 120 கோதானத்தையும், 12000 சில்லரைதானங்களையும், 24 குதிரை தானங்களையும், 60 கன்னிகாதானங்களையும், 120,2 உபயனதானங்களையும், 12 கிராமங்களை அக்கிரஹாரங்களாகச் செய்வித்தும், ஸ்ரீரங்கம், ஜம்புகேசு வரம், மதுரை, இராமேசுவரம் முதலான க்ஷேத்திரங்களில் அபிஷேகங்களை யும், இலக்ஷம் பிராம்மணர்களுக்கு போஜனமும் செய்விக்கும்படி உத்திரவளித் து விட்டும்; தாம் அரண்மனைக்கு வந்து அன்றிரவெல்லாம் உபவாசமிருந்து,மறு நாள் உண்டு உலாத்திக்கொண்டிருக்க; தஞ்சையிலிருந்து வெங்கட கிருஷ் ணப்ப நாயடு தஞ்சை பொக்கிஷத்தையும், ஆயுதங்களையும், யானை குதிரை

முதலான தகளையும் கொண்டுவந்து தங்கபுஷ்பங்களினால் சொக்கநாதர் பாதங்களை பூஜித்து, தாம் தஞ்சையில் சண்டைசெய்து ஜயித்தவைபவங்களை எல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்ல, சொக்கநாதர் கேட்டு சந்தோஷப்பட்டு அவர்களுக்கும், அவர்களுக்கு உதவியாகப் போன பாளையக்காரர்களுக்கும் வஸ்திராபரணங்களையும், சர்வமானியங்களையும் கொடுத்தும் மரியாதை செய்வித்தும், அவரவர்கள் ஸ்தலங்களுக்கு போகும்படி கட்டளை இட்டனுப்பியதாக தஞ்சாவூர் ராஜாக்கள் சரித்திர புத்தகத்திற் சொல்லப் பட்டிருக்கிறது- இந்த தஞ்சை உயுத்தத்தில் இவ்வளவு பராகிரமத்தைக்காட்டிய வெங்கட கிருஷ்ணப்பநாயடு, திண்டுக்கல் இரங்கண்ண நாயடு குமாரரென்றும், இவருக்கு அப்போது தக்க உதவியாக நின்றவர், திண்டுக்கல் சின்ன கதிரப்ப நாயடு என்றும் தெரியவருகிறதன்றியில்; இந்தச் சண்டை முடிந்த பிறகு சொக்க நாதர் சந்திரகிரி துப்பாக்கி லிங்கப்ப நாயடு குமார்த்தி மங்கம்மாளை விவாஹம் செய்துகொண்டதாக கனம் டெயிலவர்கள் தமது சரித்திரம் 2-வது புத்தகம் 199-வது பக்கத்திற் சொல்லி இருக்கிறார்—நிற்க

தஞ்சாவூர் நாயக்கர் ஸமஸ்தானசரித்திரத்தைப் பற்றி நவநாடகமாக எழுதிய ம-ா-ா-ஸ்ரீ பி.ஏ.சரவணமுத்து பிள்ளையவர்கள்,அவருடைய கிரந்தம்344-பக்க முதல் 372-பக்கங்களில் தஞ்சை உயுத்தத்தின் கடைசீ பாகத்தைப் பற்றி வேறுவிதமாக எழுதி இருக்கிறார்- அந்த ஸ்ரீ சரவணமுதத்துப் பிள்ளையவர்கள் பி-ஏ. பட்டதாரியாகவும், சென்னை கவர்ன் மெண்டு O. M. T. கீழ்நாட்டு கையெழுத்து பிரதி,புத்தகச் சாலையின் தலைவராக இருந்து,அநேகபுராதான சரித்திராசாதன ரிகார்டுகளைப்படிக்க அனுகூல மிருந்தபடியால்; அவர்; எழுதியச் சங்கதிகள் சரியான சங்கதிகளென்று நம்பவேண்டி இருக்கின்றன; ஆகவே அதன் சங்கிரஹத்தை இதனடியிற் சுருக்கமாக எழுதுகிறோம்-

அதாவது தஞ்சை விஜயராகவலு நாயடுகாரை சமாதானத்துக்கு வரச் சொக்கநாதர் பலதரம் வேண்டியும், சம்மதிக்காமல் சண்டைசெய்தே தீர வேண்டுமென்று ஒரேபிடியாகச் சாதித்து தமது அந்த புரத்திலிருக்கும் மனைவி மக்களனைவரையும் மருந்து வெடிவைத்துக் கொல்லும்படி உத்திரவளித்த போது, அவர் புத்திரி மங்கம்மாள் கேட்டு மதிமயங்கி தவிக்கும்போது, அவருடைய தோழிகளான விமலையும், இலக்ஷிமியும் கூடி தஞ்சை ஸமஸ்தானத்துக்குச் சம்பவிக்கும் ஆபத்தை விவரமாகச் சொல்லி, இபபடிப்பட்ட காலத்தில் மங்கம்மாளே மாறுவேடமும், புற்காவும்போட்டுக் கொண்டு கோட்டைக்கு வெளியில் வெண்குதிரைமேல் நிற்கும் சொக்கநாதரிடம்போய் அவர்பாதத்தில் விழுந்து, தமது ஸமஸ்தான குடும்பத்தை கெடுக்காமல் பாதுகாக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டால்; அவமானமிறங்குவார் என்று சொல்ல; மங்கம்மாளும் விதியின்றி இணங்கி,மாறு வேடம் தரித்துக் கொண்டு கோட்டை நந்தாவன வாசல்வழியாக இரகசியமாகப் போய்,சொக்கநாதருக்குச் சொல்லியனுப்ப; அவரும் பரிதாபத்தோடு ஓடிவந்தும்; மங்கம்மாள் விண்ணப்பத்தைக்கேட்டும், விசனப்பட்டும், விதியின்றி அவ்வளவோடு உயுத்தத்தை நிறுத்திவிடும்படி

வெங்கடகிருஷ்ணப்ப நாயுடுக்குச் சங்கதி சொல்லியனுப்ப, அந்த ஆள் போய் சொல்வதற்குள் விஜயராகவலு நாயடுகாரும், அவர் குமாரன் மன்னாருநாயடு வாயும் முதலானவர்கள் வெட்டுப்பட்டுக்கொல்லப் பட்டார்களென்றும், அந்தப் புரஸ்திரீகளும் அக்கினிக்கு இரையாகி விட்டார்களென்றும் சங்கதியைச் சொக்க நாதர் கேட்டு அதிகவிசனப்பட்டு மங்கம்மாளுக்குச் சொல்ல; அந்தம்மாள் திடு மென விழுந்து ஒப்பாரிட்டு அழ; உடனே அருகிலிருந்தவர்கள் பலவாறு வைரி யஞ்சொல்லி சமாதானப்படுத்திவிட்டுமே; கோட்டைக்குள் எங்குபார்த்தபோதி லும் பிணக்காடாகக் கிடந்திருந்த பிரேதங்களில் விஜயராகவலுநாயடுகாரு டையவும், மன்னாருநாயடு காருடையவும், அவர் தாயார் முதலானவர்களுடை யவும் பிரேதங்களைத் தேடி எடுப்பித்தும்; அவர்களுககு இராஜ மரியாதைகளுட னும், யானைப்பட்டாளம், குதிரைப்பட்டாளம, பதாதிப்பட்டாளம் இரண்டு பேரிகை, மூரகொடிமுதலான வைபவங்களுடனுமஎடுப்பித்துக்கொண்டுசொ க்கநாதரும், மங்கம்மாள முதலானவர்களும் மயானத்துக்கு கூடப்போய், மங்கம் மாள் மூலியமாக தகனம செய்வித்து வந்து, தஞ்சையிலுள்ள பெரிய பிரபுக் களையும் உத்தியோகஸ்தர்களையும்சபையாகக்கூட்டி. தாம்(சொக்கநாதர்)எழுந்து தஞ்சைவாசிகளே! நாம் உங்கள் தஞ்சையைப் பிடிக்க இந்த யுத்தம் செய் தோமல்லம்; எம்மையும், எமது தூதனையும் இராஜ சபையில் அவமானப்படுத் தியதைக் கருதிச் சண்டைக்கு வந்தோம்; அப்படி வந்தும், அடிக்கடி சமாதான துக்கு அழைததோம், விஜயராகவர் சம்மதிக்காமல் மூரட்டுப் பிடியாகச் சண் டைசெய்ததனால் அவர் தம் குடும்பத்தோடு சாகச்சமபவித்தது; அதற்காக உங் களைவிட நாம் மெத்த விசனப்படுகிறோம்; இனி இத்தஞ்சைக்கு ஆர் அரசர்க இருந்தால் உங்கள் சம்மத மெனக்கேட்க; நாட்டின் பிரபுக்கள் கேட்டு, "விஜய ராகவலு நாயடுகாரு துர்மந்திரிகளுடைய வார்த்தைகளைக்கேட்டு இப்படிச் செய்துவிட்டார். இனி இதைப்பற்றி பிரலாபிப்பதில் பிரயோஜனமில்லை; தஞ் சை சமஸ்தானத்துக்கு தத்காலத்துக்கு சரியான வாரிசு ஸ்ரீ மங்கம்மாளாகை யால்; அந்தம்மையைத் தாங்களே தரும விவாஹம் செய்துக்கொண்டு, தாங்க ளே அரசராக இருக்கவேண்டுமென்று வேண்ட," சொக்கநாதர் கேட்டு, தம்மு மதுரை ஸமஸ்தானம் பெரியதாகையால், தாம் தக்க பிரதி நிதியை நியமித்து அடிக்கடி வந்துப் பார்ப்பதாகச் சொல்லி, மங்கம்மாளை மூடுபல்லக்கில்வைத்து திரிசிபுரம் கொண்டுபோய் தம் தாயாரிடம் விட, அந்தம்மை ஆலிங்கனமும் செய்தும், முத்தங்கொடுத்தும், மிக்க கம்பீரமாக மங்கள விவாஹம் செய்வித்து ஆனந்தித்ததாகச் சொல்லி இருக்கிறார்.

இப்படி சரித்திரக்காரர்களுடைய அபிபிராயங்கள் ஒருவாறு வித்தியாசப்படி னும்; இத்தஞ்சை ஸமஸ்தானத்துக்கு நேர்ந்த நஷ்டத்தையும், கேவலம் ஒரு பெண்ணைப்பற்றியும், ஒரு கோபமானவார்த்தையைப்பற்றியும் ஒரு இராஜ குடும்பத்தின் மன்னன் மனைவி புத்திரன் புத்திரகளத்திராதிகள் பாழ்த்துப் போகச் சம்பவித்ததை எண்ணிப்பார்க்கும் எவர் மனதுதான் துடிக்காது. மந்திரிகளுடைய துர்போதனைகளாலயே இப்படி நடந்ததாக அநேகர் அபிப் பிராயப்படுகிறார்கள்.

திரிசிராப்பள்ளி சங்கதிகள் இப்படி இருக்க, தஞ்சைக்கு புது அரசனாக நியமிக்கப்பட்ட அளகிரிநாயடு சொக்கநாதருக்கு ஆதியில் பால்கொடுத்து வளர்த்த செவிலித்தாய் மகன், அவன் தஞ்சைக்கதிபதியாகவே, துர்-அஹங்காரியாகியும், சொக்கரைச் சட்டைசெய்யாமலும், அவருக்கு விரோதமாக அடுத்திருந்த பாளையக்காரர்களை வசப்படுத்திக்கொண்டும் வந்ததன்றியில்; தஞ்சை சமஸ்தானத்தில் புராதனமாகஇருந்த உத்தியோகஸ்தர்கள் சிப்பந்திகள்எல்லவரையும் வேலையைவிட்டுப் போகச்சொல்லி;அவர்களுடைய சொத்துக்களை ஸமஸ்தானச் சொத்துக்களென்று விவாதம் செய்தான்.

இப்படி நீக்கப்பட்ட வேலைக்காரர்களில்ஒருவராகிய வெங்கண்ணா என்றஒரு நியோகி பிராமணர். விஜயராகவலு நாயடு காலத்தில் இராயசம் வேலையிலிருந்து பழகினவர். அவரை வேலையைவிட்டு நீங்கும்படி செய்யவே; அந்தப்பிராமணர், தன் பழியைத்தீர்த்துக்கொள்ள சமயம் பார்த்துக்கொண்டிருக்கையில்; விஜயராகவலு நாயடுவின் துலதிய குமாரன் சுமார் நான்கு வயதுடைய பையனை ஒரு தாதி எடுத்துக் கொண்டுபோய் நாகபட்டணத்தில் ஒரு செட்டியாரிடம் வளர்ப்பதாக சங்கதி தெரிந்துப் போய்ப்பார்க்க, அந்தப்பயன் படித்துக்கொண்டிருக்க; அங்கு ஒருவருஷமிருந்து, அந்த செட்டியாருக்கு நம்பிக்கையுண்டாகும்படி செய்வித்துக்கொண்டு, அந்தப் பையனுக்கு பன்னிரண்டு வயதுக்குமேலாகி யிருந்தபடியால்; அந்தப் பையனாகிய செங்கமல தாசனையும், அவனை வளர்த்த தாதியையும், செட்டியாரையும், தட்டிக்கொடுத்து, தைரியம் சொல்லி, நூறு ஜனங்களையும் பல்லக்கிகளையும் தயார் செய்து, அவர்களை அழைத்துக்கொண்டு பீஜப்பூர் சிகந்தர் பாதுஷாவிடம் கூட்டிக்கொண்டுபோய் நடந்த சங்கதிகளை எல்லாம் சொல்லி முறையிட; அந்த பாதுஷாவானவர் விஜயராகவலு நாயடு குடும்பத்துக்குச் சம்பவித்த அலங்கோலத்தைப்பற்றி பரிதபித்தும், அந்த ராஜாங்கத்தை அளகிரி நாயடு இடமிருப்பதைப் பிடுங்கி இந்தச் செங்கமலதாச நாயடு வசம் கொடுக்கவேண்டிய உதவி செய்ய வேண்டுமென்று எண்ணினார். எண்ணினாலுமென்ன! அப்போது தஞ்சையிலிருந்த அளகிரிநாயடு சொக்கநாத நாயடு காரின்மனுஷனானபடியாலும்;அந்தச் சொக்கநாதர் மதுரைக்கதிபதியும், பெருத்த சேனைகளை உடைய வராகையாலும், அவரால் நியமித்த அளகிரி நாயடுவையும் அவரையும் ஜயிப்பது கஷ்டசாத்தியமாக முடியுமென்று யோசித்துக்கொண்டிருக்க; வெங்கண்ணா என்ற பிராமணர் ஒரு உபாயம் சொன்னார்- அதாவது தாம் (வெங்கண்ணா) தஞ்சைக்குப்போய் அளகிரிநாயடுடன்போய் உறவுசெய்தும், அந்த அளகிரி நாயடு திரிசி, சொக்கநாதருக்கு எழுதும் கடிதங்களை அவமரியாதையுண்டாகும்படி எழுதிவித்தும்; அவைகளால் தஞ்சை அளகிரி நாயடுக்கும், சொக்கநாத நாயடுகாருக்கும் மனஸ்தாபமுண்டாக்கி இருவரும் பகைவர்போல ஒருவருக்கொருவர் உதவிசெய்யாதபடி செய்துவிட்டு வருகிறதாக, பாதுஷாவிடம் சொல்ல; அவரும் கேட்டு, இது நல்ல உபாயமென்று நம்ப, அந்த வெங்கண்ணாவும் தஞ்சைக்கு உடனே வந்து, அதேமாதிரியாகவே தஞ்சைக்கும், திரிசிரபுரத்தாருக்கும் சங்கடங்கள் உண்டாகும்படி சதியோசத்தை

ச் செய்வித்து வந்து பாதுஷா இடம் சொல்ல; அவனும் இந்த சமயம்பார்த்து தம்மிடமிருந்த மஹாராஷ்டிர வீரனாகிய எக்கோஜியிடம் 12000 குதிரைப் பட்டாளத்தையும் 2000-ம், பதாதிகளையும் அனுப்பிதர, அந்த எக்கோஜியும் பாதுஷாவின் உத்தாவின்படி வந்து,பெங்களூரில் தன்சகோதிரனிடம்ஒருமாதம் தங்கி, அவ்விடத்திலிருந்து கொஞ்சம் குதிரைப்பட்டாளத்தையும், பதாதிகளை யும் கூட்டிக்கொண்டு ஐயம்பேட்டைக் கருகில் வந்து, அளகிரிநாயடுவின் சேனையோடுதாக்க; எக்கோஜியின் 400-மராட்டிய வீரர்களும், அளகிரிநாயடு வின் 500-வீரர்களும் மடிந்தார்கள். இதனால் அளகிரிநாயடு இனி மராட்டி யரை ஜயிப்பது கஷ்டமெனக் கண்டு, திரிசிரபுரத்திலிருக்கும் சொக்கநாதரை உதவிசெய்யவேண்டுமென்று மன்றாட; அப்போது அருகிலிருந்த வெங்கட கிருஷ்ணப்பநாயடுமுதலானவர்கள் இந்த ஆபத்துகாலத்தில் உதவிபுரியவேண்டு மென்று சொல்ல,இந்த அளகிரிநாயடு தஞ்சைக்கரசனான பிறகு தம்மை அலட் டைசெய்து துர் அஹங்காரியாக இருப்பதைக்கொண்டும் தமக்கு எழுதிய கடி தங்களை ஏன் தக்கமரியாதையாக எழுதவில்லை என்று கேட்டதற்கு, தஞ்சாவூ ரார் மதுரைக்காரருக்கு மாமூலாக எழுதுவதுப்போலவே தாம் எழுதியதாக வெங்கண்ணனுடைய துர்போதனையினால்கர்வத்தோடு சொல்லியனுப்பியதால்; அப்படிப்பட்ட அளகிரிநாயடுக்கு தாம் எவ்வித உதவிசெய்யமாட்டோமென்று சொல்லி யனுப்பிவிட்டார்.

“எட்டிமரமானாலும் தான் நட்டமரமென்ற” பழமொழிப்படி, அளகிரி யின் அஹங்காரத்தைச் சட்டைசெய்யாமல், இப்படிப்பட்ட ஆபத்துகாலத்தில் சொக்கர் உதவிசெய்திருந்தால்; தஞ்சாவூர் மராட்டியர் வசமாகாமல் இன் றளவும் நாயடு ஸமஸ்தானமாகவே இருக்கும். சொக்கநாதர் இராஜ தந்திரத் தை அனுசரிக்காமல், தஞ்சை அளகிரியின் அதிவிநயமான வேண்டுதலுக் கிறங் கி உதவி செய்யாமல் போகவே; எக்கோஜி தஞ்சைக்கே முற்றுகைபோட்டுப் பிடிக்கும்தருணத்தில், அளகிரிநாயடு பயந்து மைசூர் எல்லைக்குள் போய்விட; அந்த தஞ்சை ஸமஸ்தான சிங்காசனத்தில் செங்கமலதாசு நாயடை உட்கார வைத்தும்; வழக்கபடி மகுடாபிஷேகம் செய்வித்தும்,உயுத்த செலவுக்கு கும்ப கோணம், மன்னாறுகோயில், பாபநாசமாகிய மூன்றுதாலுக்காக்களில் கின் திருந்த கிஸ்தித்தொகைகளை வசூல் செய்து கொண்டும் பீஜப்பூருக்குப்போக பிரயத்தனப்படச்சே; தஞ்சைக்கு விஜயராகவலு நாயடு சந்ததியே பட்டத் துக்கு வந்து விட்ட சந்தோஷத்தினால், விஜயராகவலுநாயடு கோட்டைக்குள் புதைத்து வைத்திருந்த பொக்கிஷக் குழியை பழய பொக்கிஷாதிபதிகாட்ட; அதைவெட்டிப்பார்க்கையில் அதில் 20 லக்ஷம் வராகனும், பத்துலக்ஷம் ரூபாய் களும்,6-லக்ஷம் இரத்தினநகைகளும் அநேக லக்ஷம்சானூர் காசிகள் அகப்பட, அவைகளை எடுத்து தமக்கு உதவிசெய்த எக்கோஜி சொந்த செலவுக்கு 15 லக்ஷம் ரூபாயும், அவர் திவானுக்கு இரண்டு லக்ஷம் ரூபாயும், சையது சாயி புக்கு லக்ஷம் ரூபாயும், மற்ற சில்லரையாக ஐந்து லக்ஷம் ரூபாயும், தர்பார் செலவுக்கு 5 லக்ஷம் ரூபாயுமாக கொடுத்து; தாமும், வெங்கண்ணரும் ஐயம்

[illegible] செய்து பீஜப்பூருக்கு அனுப்பிவைத்தார்கள்.

இப்படிப் பட்டமடைந்த செங்கமலதாஸனுக்கு, இராயசம் வெங்கண்ணனை மந்திரியாக நியமிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள; அச்செங்கமலனை வளர்த்த தாதியானவள் பிரவேசித்து, இந்தச் செங்கமலனை வளர்த்த நாகப்பட்டினம் செட்டியாரை மந்திரியாக நியமிக்க வேண்டுமென்று வம்புகள் செய்ய; செங்கமலன் பெற்றதாயாருக்குச் சமமான தாதியின் வார்த்தைக்கிணங்கி செட்டியாரையே மந்திரியாக நியமிக்க நேர்ந்தது.

இப்படி தஞ்சை சமஸ்தானத்துக்கு செட்டியாரை மந்திரியாக நியமித்ததின்; இராயசம் வெங்கண்ணாவுக்கு அதிக விசனமும் பொறாமையுமுண்டாகி, சமயம்பார்த்து பீஜப்பூருக்குப்போய் பாதுஷாவையும், எக்கோஜியையும் கண்டு, செங்கமலதாசன் செங்கோலைச் செலுத்த சக்தியற்றவனென்றும், அதனால் குடிகள் பலவித கஷ்டங்களை யனுபவிக்கிறார்கள் என்றும், இனி பாதுஷாவின் கப்பமும் கிரமமாகச் செல்லமாட்டாதென்றும், சாக்குகள் சொல்லி, எக்கோஜியை மறுபடியும் தண்டுடனனுப்பி தஞ்சையை வசமாக்கிக் கொள்ள வேண்டுமென்றும் சொல்லப்; பாதுஷா கேட்டு, நாமே ஒருவனை சிங்காசனத்திலேற்றி, அவனை நாமே சிங்காசனம் விட்டு நீக்குவது இராஜ தருமமல்லவென்றும், அவன் பாக்கித் தொகையை மாத்திரம் கிரமமாக வசூல் செய்துகொள்வது நியாயமானதென்றும், பாதுஷா மனதில் தோன்றி அக்கருத்தை எக்கோஜிக்கும் தெரிவித்தும், ஒரு சிறிய தண்டுடன் தஞ்சைக்கனுப்ப, அந்த எக்கோஜியும் வந்து கும்பகோணத்தில் சேனையைத் தங்கச் செய்து இளைப்பாற்றிக்கொண்டிருந்தார்.

இந்தச் செங்கமலதாச நாயடு, விஜயராகவலு நாயடு குமாரனென்று டிஸ்டிரிக்ட் மானுயூல் சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கினும், அவன் விஜயராகவலு நாயடுகாருடைய பேரன் என்று கனம் டெயிலர் புத்தகத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் அச்செங்கமலதாச நாயடு சதா விஷ்ணுபக்தியிலீடுபட்டும், சத்தியத்திறகும் சுவாமி பக்திக்கும் பயந்தவராகையால், நிரபராதியான தம்மீது எக்கோஜி படையெடுத்துவர ஏதுகாரணமுமில்லையே யென்று எண்ணியிருந்தார். பிறகு வேவுகாரர்கள் ஓடிவந்து செங்கமலனை வணங்கி எக்கோஜியின் சேனைகள் கோட்டைக் கருகில் வந்துவிட்டதென பலதரம் சொல்லியும், [illegible] தளர்த்திகளோடு போய் தடுக்காமல், எக்கோஜி சேனை வரும் வழியில் துளசியைக் கொண்டுபோய் போட்டுவிடுங்கள், எக்கோஜி மராட்டியனும் [illegible] சேனைத் தலைவனுமாக இருப்பினும், பிறப்பில் இந்துவானபடியால், விஷ்ணு ஸ்வரூபமான துளசியைத் தாண்டி வரமாட்டானென்றும் சொல்லி அனுப்பிவிட்டு, [illegible] [illegible], வேவுகாரர்களும் [illegible] கோட்டையிலிருந்து இராஜதானியைப் பிடிக்க [illegible] கொண்டுபோய் எக்கோஜி [illegible]

போட்டுவிட்டார்கள். மேற்படி [illegible] மராட்டியர் அதை மிதித்துக்கொண்டு யாதொரு தங்கு தடையில்லாமல் கோட்டையை வந்து வளைத்துக் கொண்டு, உயுத்த ஸிலவையும் [illegible] ஆரம்பித்தார்கள்.

எக்கோஜி வந்த உத்தேசத்தை அறியாத செங்கமலதாசன், மராட்டியர் விஷ்ணுபக்தியும் இந்து மதாபிமானமுமில்லாத அசத்தியர்களென்றும்; இனி அவர்களோடு எதிர்த்து சண்டைசெய்வது சத்தியவான்களுக்கும்; சுவாமிபக்தியுள்ளோருக்கும் தகாதென்றும் எண்ணி, கோட்டையின் வாசலைத் திறந்துவிடச் சொல்லிவிட்டு, தாம் அரியலூர் பாளையக்காரரிடம் அடைக்கலம் புகுந்தார்.

இது விஷயத்தைப்பற்றி தஞ்சாவூரிவாரு சரித்திரத்தில் வேறுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது-எகோஜி கும்பகோணத்தில் தங்கி இருந்தபோது பொறாமைகொண்ட வெங்கண்ணன போய் "இப்படிப்பட்ட சோழ தேசத்துக்கு தாங்கள் இராஜராக இருப்பதுபோய் ஒரு துலுக்கனுக்கு கீழிருந்துக்கொண்டு, இந்த செங்கமலனிடம் கப்பம் வாங்கி பிழைப்பது புருஷத்தனமல்லவே, என்று பலவாறு சொல்ல," எக்கோஜிகேட்டு நமமைப்போனற இத்துவாகிய செங்கமலனைக் கெடுத்து, அவன் இராஜியத்தைப் பிடுங்கி வாயில் போட்டுக்கொளவது தருமமல்லவென்றும், இது சங்கதியைக் கேட்டால் பாதுஷா தம்மிடம் சிறையிலிருக்கும் எகோஜியின் தந்தையையும், தம்மையும் கொன்று விடுவானென்றும்; மேலும, தஞ்சைக்கு அருகில் திரிசிரபுரததாரிருப்பதால், அவர்கள் செங்கமலனுக்கு உதவி செய்ய ஆரமபித்தால், தூரதேசத்தாருகிய தமக்கு கஷ்டம் வந்து விடுமென்று சொல்லி வெங்கண்ணனைக் கண்டித்தும், வெங்கண்ணன் கேளாமல் ஸமஸ்தானத்தை எப்படியாவது கெடுத்து விடவேண்டுமென்று ஒரு உபாயம் செய்தார்- அதாவது "எக்கோஜி செங்கமலதாசனைக் கொன்று தஞ்சையைப் பிடித்துக் கொள்ள சமயம் பார்ப்பதாயும், உடனே கோட்டையை விட்டு வெளியே ஓடிப்போகாவிட்டால் பிராணன் மிச்சமாகாதென்றும் பயப்படுத்தி, ஆஷாட பூதியாகிய வெங்கண்ணன் செங்கமலதாசுக்குக் கடிதம் எழுத, பதிநான்கு வயதையுடைய செங்கமலதாச பயந்து அரியலூருக்கு ஓடிப்போகவே; இது சங்கதியைப்பற்றி அந்த வெங்கண்ணன் சொல்லி, எக்கோஜியின் மனதை கலக்கவே, எக்கோஜியும் கோட்டைக்குள் வந்து செங்கமல தாசருடைய சதயத்தையும பக்தியையும் பார்த்தும், அவர் அனுவியமாக கோட்டையை விட்டுப் போனதைப்பற்றி விசனப்பட்டும்; அவரை மறுபடியும் தருவித்து பாதுஷாவின் கப்பத்தையும் [illegible] கட்டி விட்டு, எப்போதும் போல தஞ்சை ஆண்டுவரும்படி சொல்லியனுப்ப; இராயசம் வெங்கண்ணன் இப்படிச் செய்யதகாதென்றும், எக்கோஜிக்கு [illegible] தந்திரோபாயங்களைச் சொல்லி, தஞ்சையைத்தாமே ஆண்டுவரும்படி [illegible], எக்கோஜி இப்படிப்பட்ட அக்கிரமம் செய்தால் பாதுஷா அங்கீகரிக்க மாட்டாரென்றும், தாமும் இப்படிப்பட்ட அக்கிரமத்தை நடத்த இஷ்டப்படவில்லை

என்றும் சொல்லிக்கொண்டே இருக்கையில், பீஜப்பூர் பாதுஷா இறந்துவிட்டதாகவும், அவர் சந்ததிகள் அச்சமஸ்தானத்திலிருக்கும் இந்து உத்தியோகஸ்தர்களுக்கு கொடுத்திருந்த பெரிய உத்தியோகங்களைப் பிடுங்கித் தம் இனத்தாரான மகம்மதியருக்கே கொடுத்துவருவதாகவும் சங்கதி வந்தமையால், "பணமென்றால் பிணமும் வாய்திறக்கும்" என்ற பழமொழிப்படி, மஹாயோகியரான ஏக்கோஜியின் மனமும்கெட்டு தஞ்சாவூருக்குத்தாமேராஜன் என்றுபட்டங்கட்டிக்கொண்டார். இவரிப்படி தஞ்சையிற் பட்டங்கட்டிக்கொள்ளவே, செங்கமலதாச நாயடு பயந்து அரியலூருக்குப்போகச் சம்பவித்தது-அப்போது அந்த அரியலூர் மதுரைஸமஸ்தானத்தைச்சார்ந்ததாகவும், அச்சமஸ்தானத்தார்தமது தஞ்சை குடும்பத்தாருக்கு பழய பகைவரானபடியினாலும், என்ன கஷ்டம் சம்பவிக்குமோ வென்று மனோராச்சியம் செய்யச்சே; அப்போது அந்த அரியலூருக்கதிபதியாக இருந்த இரங்கப்ப நாயடு எதிர்வந்து செங்கமலருடைய பயத்தைப் போக்கி, தக்க மரியாதையுடன் அழைத்துப்போய் ஆதரிக்க; தஞ்சை மன்னருக்கு மராட்டியராலுண்டான கஷ்டத்தைக் கேட்டு சேதுபதி ஒரு சிறிய தண்டுடன் சண்டைக்குவர, சேதுபதியின் உள்உளவை அறிந்த வெங்கண்ணன் 2000 குதிரைப்பட்டாளத்தோடும் 6000 பதாதிகளோடும்போய்த் தாக்கி தந்திரமாக வசப்படுத்தி சமாதானமாக்கிவிட்டார் பிறகு செங்கமலதாச நாயடு புதுக்கோட்டைக்குவர அங்கு அவரையும், அவர் குமாரர்களான விஜயமன்னாறு நாயடுவையும், பங்காருசாமி நாயடுவையும், தக்க மரியாதையோடு வரவழைத்து வைத்திருக்கையில்; இலங்கையைச் சார்ந்த கண்டிதேசத்தில் இராஜனாக இருந்த நாயடுகாருக்கு இந்த விஜய மன்னாரப்ப நாயடு குமாரத்திகளை விவாஹம் செய்வித்துக்கொடுத்ததில், அவர் இவர்களுக்கு பூண்டி, நாட்டட ஜாகிராகக் கொடுத்தும்; பிறகு தமக்கு சந்ததி இல்லாமையால் இந்த விஜயமன்னார் நாயடு குமாரர் விஜயராகவலு நாயடுகாரை சுவீகாரம் செய்துக்கொண்டும், சிம்ஹாஸனத்திற்கு அரசனாக்கினார்கள்-மற்றொரு குமாரராகியபங்காருசாமி நாயடு ஐம்புகேசுவரத்தை யடுத்த கொண்டையம்பேட்டையிற் குடிபுகுந்தார். இப்படித் தஞ்சையில் அதிக வீரதீரத்துடனும், பக்தி விசுவாசத்துடனும் ஆண்டுவந்த நாயடு ஸமஸ்தானம் தேசாபிமானம், மதாபிமானமற்ற மன்னர்கள்காலத்தில், மற்ற மன்னர் வசமாகச சம்பவித்தது என்ன பரிதாபமான விஷயம்! இந்த தஞ்சை நாய்க்கருடைய வம்சாவளியைநாகை நீலோசனி பத்திரிகையில் ஸ்ரீமான் பி. ஏ. இராஜமய்யங்கார் எழுதி வந்த வாசகங்களிலும், ஸ்ரீ சரவணப்பிள்ளை எழுதிய மோஹனாங்கி புத்தகத்திலும் ஸ்ரீ-குப்புசாமி சாஸ்திரிகள் எழுதிய நாயக்கராஜ சரித்திரத்திலும் தஞ்சை சரித்திரத்திலும் விவரமாக காணலாம்.

---

ஏழாவது அத்தியாயம்.

## தஞ்சாவூரில் மஹாராஷ்டிர ஸமஸ்தானமன்னர்கள் வம்சாவளி.

1. பாபாஜி பவுசைலே—இவர் புனாவுக் கருகிலுள்ள மூன்று கிராமங் களுக்குத் தலைவர்.
2. மாலோஜி—நைஜாமிடம் வேலையிலிருந்தவர்.
3. வாஜோஜி
4. சஹோஜி—1544-ஆம் வருஷம் பிறந்தவர். துங்காபாய் மோஹினி யை மணந்தார்.
5. மேற்படி மனைவி ஜீஜிபாய்.
6. எக்கோஜி-வெங்கோஜி தஞ்சையைசெங்கமலனிடமிருந்து பிடுங்கினர்
7. சாந்தோஜி சம்சாரி புத்திரனல்லன்.
8. சாஹோஜி—1648-1711 சந்ததியற்றவர்.
9. சார்போஜி—1711-1729 மேற்படி
10. துக்கோஜி—1729-1736
11. பாபாசாஹிப்—1736-37 ஸ்ரீ ஜானுபாய் புருஷர்.
12. சாஹோஜி—1749 சகோதிரன் சண்டைக்காக ஆங்கிலேயர்உதவியை தேடினுர். 1765-ல் இறந்தார்.
13. பிரதாபசிங்கு மகாராஜா - வைப்பாட்டி மகன் 1778-ல் இறந்தார்.
14. துலாஜி ராஜா—1765-1788 ஆற்காடு நவாப்புடன்,1767-ல் சண்டை இட்டார்.
15. அமர்சிங் மகாராஜா—1788-1898 அவிவேகன்.
16. சார்போஜி ராஜா—1798-1833 தத்து புத்திரன்.
17. சிவாஜி மகாராஜா—1833-1855 பொம்மைராஜா.
18. விஜயமோகன முத்தாம்பாபாய் கடைசிராணி.

நாயடுகோருகளுக்குப் பின் பட்டத்துக்கு வந்த மஹாராஷ்டிர மன்னர் களில் பெரும்பாலர், சிற்றின்பத்தில் காலம்போக்கி; மிதமிஞ்சிய கடன்களை வாங்கிக் கெட்டுப்போய் விட்டாலும், தஞ்சையில் சங்கீதம் சிற்பவிஞ்ஞான வித்தை முதலான சில சீர்திருத்தங்கள் விருத்தியாயின. விருத்தியாகியும் என்ன? அரசர் இராஜாங்க விஷயத்தைக் கவனிக்காமல், அருமையான காலத் தையும்,அருத்தத்தையும், அரிவையர்க் கீந்து அழிந்து விட்டபடியால், 1857ம்

வருஷம் தஞ்சை நகரம் [illegible] சேர்த்துக்கொள்ளப்பட்டது. இந்த மஹாராஷ்டிரருடைய விருத்தாந்தத்தை கடைசி அத்தியாயத்தில் விவரமாகக் காணலாம்.

எட்டாவது அத்தியாயம்.

# மதுரையில் நாயகோரு ஸமஸ்தானம்.

இப்புத்தகத்தின் இரண்டாவது பாகத்தின் கடைசியில், மதுரையில் சரியான பாண்டியர்களிருந்து ஆண்டுவராமையால்; குடிகள் கஷ்டப்படுவதைக் கண்டு விஜயநகர ஸமஸ்தானத்தார் அப்பாண்டிய தலை நகருக்கு

கி. பி. 1404 வருஷம் இலக்ஷ்மண நாயகோரையும்,

ஷை 1449-1500 வருஷம் நரச நாயகோரையும்

ஷை 1451 ஷை முத்தன்ன நாயகோரையும்

ஷை 1500-1515 வருஷம் தென்னமநாயகோரையும்

ஷை 1515-1519 வருஷம் நரசிம்ம நாயகோரையும்

ஷை 1519-1524 வருஷம் குருகுரு திம்மநாயகோரையும்

ஷை 1524-1526 வருஷம் கட்டியம் காமய நாயகோரையும்

ஷை 1526-1530 வருஷம் சின்னப்ப நாயகோரையும்

ஷை 1530-1535 வருஷம் ஜகதேவ நாயகோரையும்

ஷை 1535-1544 வருஷம் விசுவநாத நாயகோரையும்

ஷை 1544-1545 வருஷம் வருதப்ப நாயகோரையும்

ஷை 1545-1546 வருஷம் தொம்பச்சி நாயகோரையும்

ஷை 1546-1547 வருஷம் விசுவநாத நாயகோரையும்

ஷை 1547-1558 வருஷம் விட்டல நாயகோரையும் பிரதிநிதிகளாக அனுப்பி ஆண்டுவரச் செய்ததாகச் சொல்லி இருக்கிறோம்.

அப்படி வந்து ஆண்டவர்களுடைய சரித்திரங்களைச் சரியாக எழுத சரியான சாதனங்கள் எமக்கு கிட்டாமையால்; கேவலம் கேள்வியினாலும், யுக்தியினாலும் எழுதி காலத்தைப் போக்குவதைவிட சிலாசாதனங்களினால் தெரிவிக்கப்பட்டிருக்கிற சரியான சரித்திரம் எழுதுவது சிரேஷ்டமல்லவா?

அப்படி சரியான சிலாசாதனங்களால் தெரியவருகிற சரித்திரம் ஸ்ரீவிசுவநாத நாயகோருடையவும் அவர் சந்ததிகளுடையவும் சரித்திரங்களாகையால் அவைகளைப் பற்றிச் சங்கிரகமாக எழுதுகிறோம்.

# மதுரையிலாண்ட நாயடு ஸமஸ்தான வம்சாவளி.

## సీసమాలిక.

శ్రీవిష్ణుమూ_ర్తికి చెలువయౌాలక్ష్మికి । తమ్ముడై వెలసిన ధన్యచంద్ర।
వంశసంభవులైన, వరమహాక్షత్రియు।లనియెడు శ్రీగౌరనాన్వయులగును।
పరగుచుండెడికోట, బలిజెవారను పేర । వ్యవహరింపుచునుండువార
లైన। బహుళశ్రీపాండ్య భూపతులపరంపర । వివరంబు తెలియుడి, విశ్వ
మందు । నాగమనాయుడు, నయవిశ్వనాదుడు । పెద్దకృష్ణప్పయు,
పృదివియందు । పెద్దవీరప్పను పేరు నాయుడు విశ్వ।నాథుండు కృష్ణప్ప
నాయడుమఱి।ఘనవిశ్వనాదుడు, కస్తూరి రంగప్ప ముద్దుకృష్ణప్పయాము
ఖ్యులైన । స్థిరముద్దువీరప్ప, తిరుమలనాయుడు । మంగమ్మసువిజయ
రంగచొక్క । నాథనాయుడును, మీనాక్షమ్మకడగాను । పద్నాల్గు
మనువులపాటిగాను । పద్నాల్గు ప్రభువులు భాగురంగార్యుల। శిష్యరా
జ్యంబును చేయుచుండ్రి &c. * * * *

*விஜய நகரத்தின் ஸமஸ்தானம் அச்சுததேவராயலு காலத்தில் (கி. பி. 1559-ஆம் வருஷம்) பாண்டிய நாடு ஸ்வாதீனமாகி, விசுவநாத நாயடைத் தமது பிரதிநிதியாக நியமித்தார்கள். அவர் சந்ததி வமிசாவளி விவரமாவது:—*

1. நாகம நாயடுகாரு சகாப்தம் 1460 or கி. பி. 1538 வருஷம்.
2. விசுவநாத நாயடு (1)—1559-1563
3. குமார கிருஷ்ணப்ப நாயடு-1563-1573-
4. கிருஷ்ணப்பநாயடு, பெரிய வீரப்ப நாயடு, விசுவநாதநாயடு 1573-95
5. லிங்கயநாயடு, விசுவநாத நாயடு-1595-1602.
6. முத்து கிருஷ்ணப்ப நாயடு—1602-1609-வருஷம்.
7. முத்துவீரப்பநாயடு—1609—1623-வருஷம்.
8. திருமலநாயடு—1623—1659-வருஷம்
9. முத்து அளகிரிநாயடு—1559-1660-ஒரு
10. சொக்கநாத நாயடு—1660-1682-வருஷம்.

11. முத்துலிங்கய்யநாயடு 1677-வருஷம்.
12. இரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயடு 1682-1689.
13. மங்கம்மகாரு—1689—1904-வருஷம்.
14. விஜயரகுநாத சொக்கலிங்கநாயடு—1704—1731-வருஷம்.
15. மீனாக்ஷியம்மகாரு—1731—1736-வருஷம்.
16. பங்காரு திருமலைநாயடும், விஜயரகுநாத நாயடுகாரும்-1736.

இப்படிப்பாண்டியநாட்டில் 16-நாயடுகாரு சந்ததிகள் ஆண்டுவந்தார்கள்.

இவர்கள் காலத்தில் பாண்டியநாடு பலவிதத்திலும் சீரும் சிறப்பும் பெற்று பிரகாசித்தது. ஆகையால் அப்படி ஆண்டவர்களில் சிலருடைய சரித்திரங்களை மாத்திரம் சங்கிரகமாக இதனடியில் எழுதுகிறோம்.

## மதுரையில் நாயடு ஸமஸ்தானம்.

மதுரையில் (பாண்டியநாட்டில்) நாயடுகாரு ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தவர்களில் முதன்மையானவர் ஸ்ரீ விசுவநாத நாயடுகாரு என, ஸ்ரீஸ்தலப் புத்தகத்தினாலும், மிஸ்டர் டெயிலர் (Mr Taylor) கிரந்தத்தினாலும், கனான் பெண்டிரிக்கார்டுகளினாலும் ஸ்பஷ்டமாகிறது. இந்த விசுவநாத நாயடு மதுரையில் நாயடு ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தகாலம் கி. பி. 1559-ஆம். இவருடையதந்தை விஜயநகர ஸமஸ்தான உக்கிராணகர்த்தராயும், பிறகு ஸமஸ்தான தளகர்த்தராயுமிருந்த கோட்டயநாகம அல்லது நாகப்பநாயடு. அவர் அப்போது விஜயநகர ஸமஸ்தானத்துக்கு இருந்த 56 இராஜியங்களில் நாற்பதினாயிரம் குதிரைப்பட்டாளமும், நாலாயிரம் யானைப்பட்டாளமும், பத்தாயிரம் ஒட்டகைப் பட்டாளமுமாகிய பெரிய சேனைகளுக்கு சிரேஷ்டதளகர்த்தராக இருந்ததன்றியில்; தம்சொந்த காப்புக்கு ஆறுபிரம் குதிரைப்பட்டாளத்தையும், 20,000 பதாதிகளையும் வைத்துக்கொண்டும், அவைகளின் செலவுக்காக, ஆறுகாடுமுதல் திருவநந்தபுரம் உள்படவிருந்த குறுநிலமன்னர்களிடம் பேஷ்கஸ்வசூல்செய்துக்கொள்ள அதிகாரம்பெற்றிருந்தார். அவருடைய தவப்புதல்வர் தான் விசுவநாத நாயடு.

அந்த கோட்டய நாகமநாயடுகாருக்கு புத்திரசந்தான மில்லாத கவலையால், அநேகவிரதங்களைப்பூண்டும், கடைசியாக காசிக்ஷேத்திரத்திற்குப் போய் கங்காநதிக்கரையில் அகோர தபசுசெய்துவந்ததில், ஒரு ஆண்குழந்தைபிறந்தது. அக்குழந்தை ஸ்ரீ காசிவிஸ்வநாதருடைய கிருபையால் பிறந்தமையால், அம்மகனுக்கு விசுவநாதன் என்றுபெயரிட்டார். இந்த விசுவநாதன் பிறந்த வருஷம் 1500 என்று சிலரிகார்டுகளில் காணப்பெற்றாலும், வேறுசிலசாசனங்களினால் 1510 வருஷம் என்றுதெரிவிக்கப்பெற்றிருக்கிறது. இப்படி இவர்பிறந்த வயதைப்பற்றி சிலசாசனங்கள் வித்தியாசப்பெற்றிருக்கினும், இவர் மதுரைக்கதிபதியாகும்போது சுமார் நாற்பது வயதுக்குள் இருக்கவேண்டும்.

இந்த விசுவநாதர் சிறுபையனாக இருக்கும்போதே கல்வி, கேள்விகளில் அதிகவிருப்பமுள்ளவராக இருந்ததன்றியில், தன் தந்தையைப்போலவே யுத்தத் தொழிற்பயிற்சியிலும் சிறந்து சுத்த வீரனாகி, அப்போது விஜயநகரத்தை நாடிவந்த மகமதியரைத் தாக்கி தன் தோள்வலிமையைக் காட்டியதனால்; 1535-ம் வருஷம் அச்சமஸ்தானத்தின் சேனைத்தலைவராக நியமிக்கப்பெற்றார்.

மதுரையில் பாண்டியருடைய வார்சுகளில் ஒருவராகிய 'சந்திரசேகர பாண்டியன்' ஆண்டு வரும்போது, தஞ்சையிலிருந்த 'வீரசேகர சோழன்' படையெடுத்துப் போய்ச்சண்டைசெய்து, ஜயித்துப் பாண்டியநாட்டைச் சோழநாட்டோடுசேர்த்துக்கொள்ள; அப்போதுசக்தி சகாயமற்ற சந்திரசேகர பாண்டியன் சங்கடப்பட்டு, விஜயநகர சமஸ்தானாதிபதி அச்சுததேவராயனு அவர்களிடம் போய் முறையிட; விஜயநகர ஸமஸ்தானபதி அப்பாண்டியன் விஷயத்தில் பரிதபித்து, 1564-ம் வருஷம் தமது தளகர்த்தர் நாகம நாயடுகாரைத் தருவித்து, தக்க தண்டு தளாதிகளைக் கொடுத்து, தெற்கே தஞ்சைக்குப்போய் வீரசேகரனுடைய கொட்டத்தை யடக்கி, மதுரையைச் சந்திரசேகர பாண்டியனிடம் கொடுத்து வரும்படி சொன்னார். அந்த நாகமநாயடும் ஸமஸ்தானத்தின் உத்திரவின்படி சாலிவாகன சகாப்தம் 1400௵-ம் காளயுக்தி௵-ம் பங்குனி மாதம், 15-ம் தேதி தஞ்சைக்கு வந்து வீரசேகரனைத் தாக்கி; மதுரையைப் பிடித்து சந்திரசேகர பாண்டியனுக்கு (கட்டளைப்படிக்) கொடுக்காமல், பேராசையினால் தாமே பாண்டியனென்ற பட்டத்தைக்கொண்டு ஆண்டுவர; விஜயநகர ஸமஸ்தானபதிக்குத் தெரிந்ததில், அவர் அதிக விசனப்பட்டு, தமது ஸமஸ்தான மந்திரி பிரதானி போர்வீரர் கூடிய சபையைக் கூட்டி, அச்சபைக்கு முன்பாக நாகம நாயடு செய்த இராஜதுரோகத்தையும், அக்கிரமத்தையும் பற்றிப் பிரஸ்தாபித்தும்; இப்படிப்பட்ட இராஜதுரோகியின் சிரசைக் கொண்டுவந்து எனது பாதத்தண்டையில் வைக்கும் வீரன் இச்சபையில் இல்லையோ? வென்று பலதரம் வீரகோபத்துடன கர்ஜித்துச் சொன்னார்.

அப்போது அந்தச் சபையில் ஒருவராக இருந்தவரும், பாண்டியனை மோசஞ்செய்த ஷை நாகம நாயடுவின் குமாரனுமாகிய இந்த விசுவநாயடு எழுந்து வணங்கி, "பிரபு துரோகியும், எனது பிதாவுமாகிய நாகம நாயடுவின் சிரசைக் கொண்டுவந்து, தங்கள் பாதத்தடியில் வைத்து, தங்கள் புகழை பாண்டிய நாடெங்குமோங்கும்படி செய்விக்க இதோ சித்தமாக இருக்கிறேன், உத்திரவு தர வேண்டும் என்று கேட்க; விஜயநகர சமஸ்தானாதிபதி கேட்டு இந்த விசுவநாதன், நாகம நாயடுவின் குமாரனாகையால், இவனும் தனது தந்தையோடு சேர்ந்துகொண்டு, பின்னும் பலவித வம்புகளைப் பாண்டிய நாட்டிற்குச் செய்து விடுவானோ என்று சந்தேக முற்றாலும்; விசுவநாதன் சிறுபிராய முதல் சத்தியம், சுவாமி பக்தி, இராஜ பக்திகளிற் சிறந்தவரென்று நேரில் கண்டிருந்தவராகையால், அவரிட மிருக்கவேண்டிய சந்தேகத்தை விட்டு, பூரண நம்பிக்கை வைத்தும், தக்க தண்டு தளாதிகளைக் கொடுத்து மனுப்பினார்.

இராஜவிசுவாசத்தில் சிறந்த விசுவநாதரும் தெற்கே மதுரைக்கு வந்தும், தமது தகப்பனாரிடமே நாகம நாயுடுடன் பிரமாத சண்டைசெய்தும், அவரைப் பிடித்துச் சிறையில் வைத்தும், கலகத்தை யடக்கியும், சந்திரசேகர பாண்டியனைச் சிங்காசனமேற்றியும், இப்படி நடந்த சங்கதிகள் யாவற்றையும் விஜயநகர ஸமஸ்தானத்துக்குத் தெரிவிக்க; இராயரும் கேட்டு, விசுவநாதருடைய வீரதீரத்தையும், இராஜ விசுவாசத்தையும் பற்றிப் புகழ்ந்து, இவ விசுவநாதரால் சிறையாகப் பிடிக்கப் பட்டிருந்த நாகம நாயுடை விசுவநாத நாயுடு மேலிருந்த விசுவாசத்தின் பொருட்டு விடுதலை செய்யும்படியாகவும், விசுவநாதரைப் பாண்டியனுக்கு கொஞ்சகாலம் உதவியாகவிருந்து சகாயம் செய்யும்படியாகவும் சொல்லியனுப்பினர்.

இப்படிப் பட்டம் பெற்ற இந்த சந்திரசேகர பாண்டியன், கைப்பாட்டி மகன் என்றும், அத்தோடு இராஜ்ய பரிபாலனம் செய்யும் சக்தியும், சேனையும் அற்றவனென்றும்; ஆகவே, மதுரையில் மறுபடியும் கலகங்களுண்டாகுமென்றும், அப்போது விசுவநாதரிடம் போதுமான தண்டு தளாதிக ளிருப்பதோடு, இவருடைய இனத்தார் இத் தென்னாட்டில் இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் குடியேறி இருப்பதால், அரசருக்கு அவர்களுடைய சகாயமும் கிடைக்குமென்றும், கடைசியாக விசுவநாதர் சத்தியம், சாந்தம், சுவாமிபக்தி, பரோபகாரம், குடிகளிடத்து பச்சாதாப முதலான குணச்சிறப்புகளை இயற்கையாகவே பெற்றிருப்பதாலும், இப்படிப் பெற்ற விசுவநாதரென்னும் உத்தமனை மதுரையில் சில காலம் தங்குப்படி செய்யவேண்டுமென்றும், மதுரைக் குடிகள் திரண்டு விஜயநகரத்தாரிடம் முறையிட்டுக்கொள்ள; அவ்விஜயநகரத்தாருஞ் சந்தோஷமடைந்து, விசுவநாதரை மதுரையிலிருந்து பாண்டியனுக்கு வேண்டிய உதவியையும், குடிகளுக்கு வேண்டிய சகாயத்தையும் செய்யும்படி உத்தரவனுப்ப; விசுவநாதரும் சமஸ்தான உத்திரவின்படி பாண்டியனுக்கு உதவிகள் செய்துகொண்டும், அப்போது பழனி திண்டுக்கல் மதுரைக்கடுத்த பயங்கரமான காடுகளைக் களைந்து விவசாயம்செய்து ஜீவனம் செய்யும்படி தம்மினத்தாருக்கு நிலங்களைக் கொடுத்தும், குடித்தனத்துக்கு வேண்டிய சாதனங்களையும் செய்து வருகையில்; சந்திரசேகர பாண்டியன் பரமபதமடைய, அவன் பாலிய குமாரன் வீரபாண்டியன் சிங்காசன மேறினன். அந்தப் பாலிய பாண்டியனும் அற்பாயுசாக இறந்துவிடப், பாண்டிய நாட்டிற்கு வார்சுக ளில்லாத குறையைப் பற்றி விஜய நகரத்தாருக்கு அறிவிக்க; அவர் விசுவநாதருடைய உண்மையையும், உதாரத்தையு மறிந்து இவரையே பாண்டியநாட்டிற் கதிபதியாக்கி, சிங்காசனமேற்றி ஆண்டுவரச் செய்யவேண்டுமென்று தீர்மானித்து, மகுடாபிஷேகத்துக்குக் கங்கை ஜலத்தோடும், விஜயநகர துரைத்தனத்தின் பிரதிநிதியோடும், பிராமண பண்டிதர்களும் உத்தரவின் படி மதுரைக்கு வந்து விசுவநாதருக்கு இரவுத்திரி நாம வருஷம், கார்த்திகைமாதம் 15ம் தேதி கூடிய சுபதினத்தில் பாண்டிய நாட்டுக்குப்பட்டம் கட்டிவைத்தார்கள்.

---

# விசுவநாத நாயக்கரின் ஸம்ஸ்தானம்.

கி. பி. 1559-ஆம் முதல் 1563-வரையில்.

இப்படிப் பாண்டியநாட்டுக்குப் பட்டம் கட்டிய விசுவநாத நாயக்கரு சிங்காசனமேறி இராஜ்யபாரத்தைத் தாமே நேரில் நடத்த வாய்க்கவே; பாண்டிய நாட்டுக் குடிகள் இவருடைய தரும குணங்களையும், சுத்த வீரத்தனத்தையும் கண்டு இவரிடம் நம்பிக்கை யுண்டாகி நாட்டுப்புறங்களுக்கு வலசையாகப் போயிருந்த பெரும்பான்மையான மானமுள்ள குடிகளெல்லாரும் மறுபடியும் நாட்டில் வந்து வசிக்க ஆரம்பித்தார்கள். குடிதனம் விவசாயம் செய்யுங் கிருஷிகர் குதூகுலமடைந்து கிருஷிககு வேண்டிய கரடு நிலங்களைத் தர்காஸ்துசெய்து தருமபடி தேடிக்கொண்டுவந்தார்கள். பிரம்மஞானத்திற் சிறந்த பிராமணர்களெல்லாரும் தங்களுக்கு வேண்டிய அக்கிரஹாரங்களையும், கோயில் குளங்களையும் நியமித்துத் தரும்படி தோத்திரம் செய்துகொண்டு வந்தார்கள். விசுவநாதர் சோழன் மீது படையெடுத்து வந்தபோது இவருக்குத் துணைநின்று சண்டை செய்து உதவிய உறவினர் முதலானவர்கள் தங்கள் விசுவாசத்துக்கும், உதவிகளுக்கும் தக்க பருமான மிராசு மானியங்களைத் தரும்படி கேட்க எதிர்பார்த்தார்கள். மேலும் புராதன பாண்டியர்களுடைய கைப்பாட்டி மக்களிற் சிலர் கள்ளர் மறவர் முதலான சிலர்களைக் கூட்டி நாட்டில் குட்டிக்கலகங்கள் செய்ய ஆரம்பித்தார்கள். இப்படிப் பாண்டிய நாடு தலைவிரிக்கோலமாக இருப்பதை யறிந்த விசுவநாத நாயக்கரு, இத்தியாதி குறைகளை நீக்கிக் குடிகளுக்குச் சுகவாழ்வை உண்டாக்கவேண்டிய வன்மையைத்தர தமது இஷ்டதேவதையை வணங்கி வேண்ட; அத்தேவதையின் அருளால் அப்பேர்த அரியநாயகம் என்னும் உத்தம மந்திரி அகப்பட்டார்.

## அரியநாயக முதலியாரவர்கள்,

இந்த அரியநாயகம் எவரென்றால், காஞ்சீபுரத்துக்கு அருகில் மெய்ப்பேடு என்னும் கிராமத்தில் ஒரு ஏழை வேளாளர் குடும்பத்தில் பிறந்தவர். இவர் சிறு குழந்தையாக இருந்தபோது, பெற்ற தாயார் இவரை ஓர் பாயின்மேல் படுக்கவைத்து ஜலத்துக்கு வெளியே போயிருக்கும்போது, ஒரு பெருநாகம் வந்து இக்குழந்தையின் உடலைச் சுற்றிக்கொண்டும், அதன் படத்தைக் குழந்தையின் தலைக்குமேல் குடைபோல் மறைத்தும் நிற்க; மாதா வந்து பார்த்து பயந்து பாம்பை யோட்டிப் பிள்ளைக்குண்டான பயங்கரத்தை பெரியோரிடம் சொல்ல, அப்பெரியோர் கேட்டு, இந்தப் பிள்ளை பிரபல பிரபுவாக வாழ்வானென்று சொல்லினராம். பிறகு பிள்ளைக்குப் பதினைந்து வயதானபோது ஓர் பிராம்மண

ஜோஸியர் கண்டு "நீ பிரபல பிரபு ஆவாய்! அப்போது உனக்குண்டாகும் சொத்தில் கால்பாகம் எனக்குத் தரவேண்டும்" என்று ஜோஸியம் சொன்னாராம்.

இப்படி அரியநாயகம் சிறுபிள்ளையாக இருந்தபோதே இவருடைய பிற்காலத்துப் பிரபலத்தைச் சொல்லுவதற்குத் தகுந்தபடி, இவர் கல்வியில் முக்கியமாகக் கணிதத்தில் நிபுணராயும், மல்யுத்தம், வில் யுத்தம் முதலான யுத்தப் பயிற்சிகளிற் சிறந்தவராகி இருந்தபடியால்; விஜயநகர சமஸ்தானபதியினிடம் யாதாவது ஒரு வேலையைச் சம்பாதிக்கலா மென்று போக; அங்கு இராயலு சமஸ்தானத்தில் ஓர் சிக்குமுக்கலான கணக்கினால் சபையார் சர்ச்சித்துக் கொண்டிருந்ததை, இந்த அரியநாயகம் கண்டு, உடனுக்குடனே அக்கணக்கின் விவரத்தை வெட்ட வெளியாக்கியும், இராயலுடைய ஜாதகத்தை பரிசோதித்து ஜோஸியம் சொல்லியும்; நவராத்திரிகாலத்தில் கொல்லும் எருமைக்கழுத்தின் குறிப்பான இடத்தைக்காட்டியும் வந்ததினால் இராயலுக்குச் சந்தோஷம் ஜனித்து, தமது அரண்மனையில் ஒரு கணக்குப் பிள்ளைவேலையில் அமர்த்திக் கொண்டார். இவர் இப்படி சிறுவேலையில் அமர்ந்திருக்கும் நாளில், இவருடைய புத்தி யூகத்தை இராயலுகண்டு இவரைத்தமது மந்திரிகளில் ஒருவராக்கியும் இவருக்கு பல்லாக்கு மரியாதையையும், முதலியார் என்ற பட்டத்தையும் கொடுத்து மரியாதைச் செய்தார்.

அதாவது விஜயநகர ஸமஸ்தான பிரபுக்கள் பிரதிவருஷமும் காட்டிற்குள் வேட்டைக்குப்போய், ஓர் காட்டெருமையை வலைவீசிப் பிடித்துவந்து, தமது ஸமஸ்தானத்தில் பிரதிவருஷம் நடக்கும் நவராத்திரிகொலு உற்சவகாலத்தின் பத்தாம்நாள் உற்சவம் கோட்டைக்காவல் காளிகாதேவியின் முன் ஒரே வெட்டில் சிரம்வேறு முண்டம் வேறாக வெட்டிப்பலி கொடுப்பது புராதான வழக்கம். அவ்வழக்கத்தை அனுசரித்து அந்த வருஷமும் காட்டிற்குள் சென்று கம்பீரமான ஒரு காட்டெருமையைப் பிடித்துக்கொண்டு வந்து, கோட்டைக்காவல் காளிகாதேவியின் முன் பலி கொடுக்க வந்தபோது, அந்தக் காட்டெருமையின் கொம்புகள் அதிகமாக நீண்டும், விரிந்தும் இருந்தமையால், அப்படிப்பட்ட பயங்கர கொம்புகளையுடைய எருமையை ஒரே வெட்டில் வெட்ட முடியாமல் காவலாளிகள் மனோராச்சியம் செய்தார்கள். அந்த எருமையின் சிரசு ஒரே வெட்டில் துண்டிக்கப் படாவிடில், சமஸ்தானத்துக்கே கெடுதியுண்டாகுமென்ற சகுன பயமிருப்பதால், இந்தப் பயத்தைக் கருதி இக்கருமத்தைச் செய்ய இராயலு முதலானவர்கள் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏக்கமுற்றிருக்கையில்; இத்தியாதிகளை அறிந்த அரியநாயகம் ஓடிவந்து அந்த எருமையை எப்படி நிற்க வைத்து, எந்த விடத்தில் எப்படி வெட்டினால் துண்டாகும் என்னும் உபாயத்தைச் சொல்ல; அந்த உபாயத்தின்படி காவற்காரர்கள் வெட்ட, எருமையின் கழுத்து ஒரே வெட்டில் வெட்டப்பட்டதைக் கண்டு, இராயலும் மற்றுமுள்ள ஸமஸ்தானத்தாரும் அரியநாயகத்தின் ஆழ்ந்த யுக்திக்கு ஆநந்தித்து, அவரை அரண்மனையில் அந்தஸ்தான உத்தியோகத்

தில் அமர்த்தினார்கள், இந்த விருத்தாந்தத்தைப் பற்றி கனம் டெயிலர் (W. Taylor's) வேறு விதமாக எழுதி இருக்கிறார்- அதாவது அப்போது 16 வயதை யுடைய இந்த விசுவநாத நாயடுகாரின் சொற்பனத்தில் காளிகாதேவியார் வந்து, அந்த எருமையின் கழுத்தை வெட்டவேண்டிய விடத்தைக் குறிப்பாகச் சொன்னதாகவும், அந்த சொற்பனத்தின்படி விசுவநாத நாயடு எழுந்து ஸமஸ்தான ஆயுதச் சாலையிலிருந்த 2, முதல் 8.அங்குல் அகலமுள்ள கத்தியைக்கொண்டு வந்து எருமையின் கழுத்தை வெட்டி கீர்த்திப்பெற்றாராம்.(Vide Pages 7.15 Vol2 - O. H. N. by Rev. W. Taylor)

இப்படி அரண்மனையில் அந்தஸ்தான உத்யோகவில் அமர்த்தப்பட்ட அரிய நாயகம், அன்றொருநாள் அதிவீரதீரரென்ற சில மல்லக ஜட்டிகளோடு மல்ல யுத்தம்செய்து ஜயித்த சங்கதி யறிந்த இராயலு அவரை ஒரு தளகர்த்தராக வும் நியமித்துக் கொண்டிருந்து, நாகம நாயடுக்கு விரோதமாக விசுவநாத நாய டுத் தெற்கே தண்டுடன் போனபோது இந்த அரியநாயகத்தையும் துணையாக அனுப்பினார்.

இப்படித் துணையாகவந்த அரியநாயகம் பாண்டியநாட்டை ஜயித்தபிறகு, கேவலம் தண்டு தளாதிகளை விசாரணைச் செய்துகொண்டிருந்தார். இவருடைய மனோவலிமையையும்,தேக தாருட்டியத்தையும்,தீரத்தன்மையையும்,சத்தியம் சாந்தம், சுவாமிபக்தி, பரோபகாரம் இராஜவிசுவாசம் முதலான குணச்சிறப்பு களையும் நன்கறிந்திருந்த விசுவநாத நாயடுகாரு தம் சிங்காசன மேறியபிறகு தமது தரும ராஜிய பரிபாலனத்துக்கு உண்மையாக உதவி செய்ய,இந்த அரிய நாயகத்தைவிடத் தக்கவர் கிடையாதென்று தெரிந்து,இவரையே தமது முதல் மந்திரியாகவும்,தளவாய் தளகர்த்தராகவும் நியமித்தும், இவருக்கு "முதலியார்" அதாவது பாண்டிய நாட்டு நாயடு ஸமஸ்தானத்திற்கு முதன்மையானவரென்று முடிசூட்டினார்.

இப்படி முதலியார் என்று மகுடம் பூண்ட அரியநாயக முதலியார் மந்திரி தளகர்த்தராக நியமிக்கவே; அரியநாயக முதலியாரும் உடல்வேறு உயிரொன் றாக விசுவநாத நாயடுடன் கூடி, அவருடைய ஸமஸ்தான காரியங்களை எல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்து, தீர்மானித்துப் பாண்டிய நாட்டிற்கு நன்மை செய்யவேண் டிய காரியங்களைக் கையாடினார்கள்.

---

## விசுவநாத நாயடுகாரும், அரியநாயக முதலியாரும் பாண்டியநாட்டிற் செய்த காரியங்கள்.

---

மஹாமதியூகியாகிய அரியநாயக முதலியாரை மந்திரியாகக் கொண்டு விசுவநாத நாயடுகாரு, முதலில் மதுரை மீனாக்ஷியம்மன் கோயிற் சுவரின் ஓர மாகக் கட்டப் பெற்றிருந்த புராதான பாண்டியருடைய கோட்டை கொத்த

[illegible] [illegible] அந்தவிடத்தில் இருக்கும் [illegible] [illegible] கட்டுவித்தார். புராதன கோயில் [illegible] [illegible] செப்பனிட்டுப் பிராமணர்களுக்கு வேண்டிய அக்கிரஹாரங்கள், வீதிகள், வாய்க்கால்கள், குளங்கள், குட்டைகளை உண்டாக்கினர். கிருஷித்தொழிலுக்குப் போதுமான ஜல வசதிகள் பக்குவமாக இல்லாமையால், வைகை நதியின்மேல் அணை கட்டி நதியின் மேற்பாகத்தில் அநேகம் கால்வாய்களை வெட்டியும், அவ்விடங்களிலுள்ள நிலங்களை உழுது பயிரிடக் குடிகள் வசிக்கத் தக்க கிராமங்களைக் கட்டுவித்தார்கள். இத்தியாதி செலவுகளுக்கு ஸமஸ்தானத்தில் போதுமான திரவிய மில்லாமையால், விசுவநாத நாயகரே தமது தந்தை நாகம நாயடுடைய (பிரைவேட்) சொந்தப் பொக்கிஷத்திலிருந்து பொருளைத் தருவித்தும், மந்திரி அரியநாயக முதலியாருடைய உயுக்தி யோசனையின்படி பணத்தைச் செலவழித்தும் குடிகளுடைய சுகத்தை விருத்தியாக்கினர். இப்படிச் செய்யவே, இதற்கு முன்பு ஒரு காணிபூமியைக்கூடக் கிருஷிசெய்யாதவர்களெல்லோரும், கிருஷி வேலைக்காரம்பத்ததில் காட்டுப்புரத்தில் பயிரிடாத பூமியைக்காணப தபூர்வமாகி விட்டதன்றியில்; அக்காலத்தில் தஞ்சை ஸமஸ்தானத்துக்குச் சார்ந்திருந்த திரிசிராபள்ளிவரைக்கும் பயிரிட்டுச் சிலசமயங்களில் தஞ்சை மன்னருடைய பூமியிலும் பயிரிடச் சம்பவித்து, இரண்டு இராஜாகளுக்குள்ளும்(பாண்டிய தஞ்சை ராஜர்களும்)எல்லைத் தகராறும் உண்டாகச் சம்பவித்தது. அன்றியும் அக்காலத்தில் இராமேசுவரம் ஸ்ரீரங்கம் யாத்திரை செய்யும் சாதுக்களுக்குத் தக்க வழிகளும், வசதிகளும இல்லாமையால் யாத்திரைக்காரர் காடு கரடுகளிலும் கள்ளர் மறவர் கைகளிலும் சிக்கித்தத்தளிப்பதையும் நீக்கக்கருதித் திரிசிராப்பள்ளி நாட்டை மதுரைக்கும்,மதுரையைச் சார்ந்த வள்ளங்கோட்டையைத் தஞ்சாவூருக்கும் மாற்றிக்கொண்டால் நலமென்றத் தகுந்த நியாயங்களுடன் தஞ்சை மன்னருக்கு அறிவிக்க; அவரும் தமது கேவல ஸ்திதியைக் கருதிச் சம்மதித்துக் கொண்டார்.

இப்படிச்சம்மதித்ததத்திரிசிராப்பள்ளியைக்கொடுக்கவே, அங்கிருந்த புராதனக்கோட்டையை நீக்கி, அதே இடத்தில் புது கோட்டையைக்கட்டியும், அந்நகரத்தைசுசுற்றிலும் இரட்டை மதில் சுவர் எழுப்பியும், அதன்கீழ்அகன்ற வாய்க்கால்களை வெட்டிக்காவிரிஜலத்தால் நிறப்பியும், கோட்டைக்குள அநேக அக்கிரகாரங்கள், வீடுகள, வீதிகள், கிணறுகள், கோயில்கள், கடைகள், பண்டசாலைகள் முதலானவைகளை நியமித்தும், நானுதேசத்துக்குடிகள், கிருஷிகர், வர்த்தகர், கைத்தொழிலாளர்கள் வந்து வசிக்கும்படியான வசதிகளை நியமித்தும்; காவிரிநதியின் இருபக்கங்களிலுமிருந்தபயங்கரமான, காடுகளைவெட்டி, யாத்திரைக்காரர் நிர்ப்பயமாகச்சஞ்சாரம்செய்யவும்; அவர்களுடன் துணையாகப் போய்வரச் சில சிப்பாய் சேவகர்களை நியமித்தும்; ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் அநேக வேலைகளைச் செப்பனிட்டுப் புதுப்பித்தும், [illegible] [illegible] வரவே; பற்பலநாட்டுப் பணக்காரரான யாத்திரிகர் பணபயம் [illegible] யாத்திரைசெய்தும்,இக்காட்டின் செழிப்பையும் [illegible] [illegible]

இந்த [illegible] தங்கள் [illegible] விஸ்வாசம் [illegible] செய்யவும் ஆரம்பித்தார்கள். இப்படி விசுவநாதநாயடு திரிசிரபுரத்தில் சேர்ந்திருந்து தங்கள் செய்து வருகையில், தெற்கே திருநெல்வேலியைச் சேர்ந்திருந்த போலிருந்த அரியநாயகமுதலியாரைப் 'பஞ்சபாண்டவர்கள்' என்ற பெயரால் பஞ்சபாண்டியர்களுடைய சந்ததிகளென்றும், அவர்கள் விசுவநாதருடைய ஆக்கினைக்கு அடங்கிக்கிடக்கமாட்டோமென்றும், காயத்தட்டேரி யிருந்து எதிர்த்தார்கள். அவர்களுக்கு அரியநாயகம் பலவிதமான புத்திமதிகளைச் சொல்லியும்; தந்திரங்களைச் செய்தும் வெல்லக்கூடாமையாலும்; அப்போது தம்மோடு இருந்த சேனை கொஞ்சமாக இருந்தபடியாலும், இக்கஷ்டத்தை உடனே விசுவநாதருக்கு அறிவித்தார்.

விசுவநாதர் இச்சங்கதியைக்கேட்ட உடனே காலதாமதமின்றிக் காலாள் குதிரைபட்டாளங்களுடன் திருநெல்வேலிக்குவந்து, அந்தப்பஞ்சபாண்டியர்களைக் கண்டு பகிரங்கச் சண்டைக்கு வரும்படி கேட்க; அவர்கள் விசுவநாத நாயடுவின் பட்டாள வல்லமையைக்கண்டு, அவருடன் எதிர்த்து சண்டைசெய்யச் சேனையும் திரவியமுமில்லை எனறும்; விசுவநாதர் ஒருவருடனே ஓரே காலத்தில் மல்ல உயுத்தம் செய்ய மாத்திரம் தங்கள் ஐவருக்கும் சக்தி இருக்கின்றதென்றும் சொல்லி யனுப்ப; விசுவநாதரும் அதற்குச் சம்மதித்துத் தமது சேனையையும், ஆயுதத்தையும் அரியநாயகரிடம் கொடுத்துவிட்டு; அவருக்கு எதிராகவே வந்து, அந்த ஐந்து பாண்டியர்களிடம் தாம் தனியாக நின்று மல்லயுத்தஞ்செய்து, எதிரிகளில் முக்கியமானவனைக்கொன்று ஜயித்ததில்; மற்ற நால்வரும் விசுவநாதருடைய தோள் வலிமைக்கு மெச்சி திருநெல்வேலியையும், அதையடுத்த நாடுகளையும் விட்டுப் போய்விட்டார்கள். (Vide the History of Carnatic Governors) இப்படி ஜயித்த விசுவநாத நாயடுகோரு திருநெல்வேலியைப் புதியகட்டிடங்களினாலும; கோயில், கோபுரங்கள் குளங்களினாலும் புதுப்பித்தும்; தாம்பிரபரணி நதிக் கரையோரமாக விருந்த அசங்கியமான குடிசைகளை நீக்கிப் புது வீடுகளைக் கட்டுவித்தும, தாம்பிரபரணி நதியின் ஜலத்தைக் குடிகளும், கிருஷிகர்களும் உபயோகப்படுத்திக் கொள்ளக் கால்வாய், வாய்க்கால் முதலிய பாசனவசதிகளை நியமித்தும்; பிராமணருக்கு வேண்டிய கோயில் கோபுரம், அக்கிரஹாரங்களை நியமித்தும், குடிகளால் நல்ல புகழையும், பிரதிஷ்டையையும் பெற்றார்.

விசுவநாதர் இப்படித் தெற்கே திருநெல்வேலியிற் சேர்ந்திருந்தவர்களைச் செய்துவருகையில்; திண்டுக்கல்லை யடுத்த கம்பம் கூடலூர்த் தலைவன் சோழன் தன்னைத் தாக்கியபோது, பாண்டியர் உதவிசெய்யாமல் விட்டுவிட்டபடியால்; தான் விசுவநாதருக்குக் கிரமப்பிரகாரம் கப்பம் கட்டுவதில்லை என்று கலகஞ்செய்ய ஆரம்பித்தபடியால், உடனே தக்க தன்மைகளுடன் திண்டுக்கல் சார்புக்குப்போய்க் கலகக்காரனிடம் சண்டைசெய்து, அவன் கோட்டையைப் பிடித்து, அவன் கொட்டத்தை அடக்கினார்.

இப்படித் தெலுங்கர்களின் கலகங்களை யடக்கிக் கோட்டைகளுங் கட்டியிருந்துகொண்டு வந்தாலும்; வேறொரு கஷ்டம் சம்பவித்தது. அதாவது, விசுவநாத நாயகர் மதுரைக்கு வரும்போது அவருடன் வந்த நாயமோர்களும், கன்னடியார்களும், வேறுசிலரும் வேண்டிய உதவிகளை உண்மையோடு செய்துவந்தமையால்; அவர்கள் விசுவநாத நாயகர் பாண்டிய நாட்டிற்குச் சக்கிரவர்த்தியானதில், தமக்குத் தக்க சிறு ஸமஸ்தானங்களையும், சம்பத்துக்களையும், பஹுமானங்களையும் கொடுப்பாரென்று பொறுமையோடு காத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குத் திருப்தியாகக் கொடுத்துக் கௌரவிப்பது கஷ்டமாக விருந்தது. ஆயினும், விசுவநாத நாயகரும், அரியநாயக முதலியாரும் இக்கஷ்டத்தை நீக்க ஓர் உபாயம் செய்தார்கள். அதாவது, பாண்டிய நாட்டைச் சுற்றிலும் 72-கொத்தளங்க ளிருந்தமையால், அக்கொத்தளங்களுக்குத் தக்க வீரரைத் தலைவர் அல்லது பாளையக்காரராக நியமித்தும்; அவர்கள் இராஜாங்கத்துக்கு உதவியாக வருஷாந்திரம் இவ்வளவு ரொக்கம் கப்பமாகக் கட்டும்படிக்கும், ஸமஸ்தானத்தின்மேல் எதிரிகள் சண்டைசெய்ய வரும்போது, தக்க தண்டுதளாதிகளைக் கொடுத்து உதவி செய்யும்படிக்கும், இதற்காதி செலவுகளுக்குச் சில பல கிராமங்களையும், பட்ட பிருதுகளையும், அப்பாளைய காரர்களுக்குக் கொடுத்துக் கௌரவித்தால்; அவர்கள் ஆனந்த மடைந்து இராஜவிசுவாசமாகவும், தம் பின் சந்ததியாருக்கு உதவியாகவும் இருக்கக்கூடு மென்றும் எண்ணி ஏற்படுத்தியதேயாம்.

---

## THE ZAMENDARS OF MADURA.

# பாண்டியநாட்டின் பாளையப்பட்டுகள் அல்லது ஜமீன்கள்.

இந்தஎண்ணத்தின்படி 72 பாளையப்பட்டுகளை ஸ்தாபித்தும், அவைகளுக்குத் தம்மினத்தாரில் உதவிசெய்த வீரர்களையும், மற்றப்படி பொதுவாகப் பாண்டிய நாட்டிற்கு உதவி செய்தவர்களையும் பாளையக்காரர்கள் அல்லது ஜமீன்தாரர்களாக நியமித்தும், அவர்களுக்கு இனமாக அநேக கிராமங்களையும், பிருதுகளையும் கொடுத்தார்கள். மதுரைச்சீமையின் விருத்தாந்தத்தில், மதுரையைச்சுற்றியும் அம்மயநாயக்கனூர், நிலக்கோட்டை, வடகரை, போடிநாயக்கனூர், கோம்பை, தேவாரம், கண்டமநாயக்கனூர், தோட்டயநாயக்கனூர், காமநாயக்கனூர், மாதவநாயக்கனூர், தும்பிச்சிநாயக்கனூர், சந்தையூர், எழுமலை, பாவாலி, கவுண்டன் கோட்டை, கன்னிவாடி, விருப்பாக்ஷி, ஆயக்குடி, எமனேசுபுரம், ஒன்னதூர், கூளப்பநாயக்கனூர், நிலக்கோட்டை, இராசக்கநாயக்கனூர், சத்திரப்பட்டி, மாரூர், மருங்காபுரி, செங்குருச்சி, பிள்ளைவிழுப்பி, இராமகிரி, இடையகோட்டை, தோகைமலை, வீரமலை, வெள்ளியகுன்றம், சிறுபாலை, மாம்பறை,

பள்ளியப்பநாயக்கனூர், எரியோடு, சொக்கம்பட்டி, மீராநூற்று, தவசிமடை, அம்பட்டரை, தேவதானப்பட்டி, புதுக்கோட்டை, இலக்கியன், இராமநாதபுரமாகிய 47 பாளையப்பட்டு க்ஷேமாத்திரம் குறித்திருக்கின்றன. மற்ற 25 பாளைபட்டுகள் மறைந்திருக்கும் காரணம் தெரியவில்லை.

போடிநாயக்கனூர்ப் பாளையக்காரர், 1336-வருஷம் மகமதியரால் தாக்கப் பட்டு இங்கு வந்தார்கள். இவர்கள் ஒருவகை மலையாளத்தார். இவர்களில் எட்டுத் தலைவர் பிரபலரானார்கள். கடைசித் தலைவரான "சிலாபோடி நாயக்கரும், அவர் குமாரர் "பங்காருமுத்து நாயமே," 60-ஆவது கொத்தளத்துக்குத் தலைவரானார். வைகை நதிக்கு வடக்கே வடகரை ஜமீன்தாரராயிருக்கும் "ஸ்ரீ ராமபத்திரநாயடு காருடைய ஆதிபிதா" நாகம நாயடுடன் காசிக்குப்போயும், அவருடன்கூட மதுரைக்கு வந்தும் உதவிசெய்ததனறியில்; கம்பம் சண்டையில்தக்க உதவி செய்ததனால் அவர் சந்ததிகளுக்குப் பழனிக்கருகிலிருக்கும் வடகரை பாளையப்பட்டு கொடுக்கப்பட்டது. தவசிமேடு பாளையப்பட்டுக்கதிபதி சொட்டலநாயடு, குட்டியைச் சார்ந்த தொட்டிய ஜாதியர். இவருடைய ஆதி தந்தை நாகம நாயடு தேக உபாதையோடு பழனிக்குபோனபோது வைத்தியம் செய்து உதவியதனால் இப்பாளையப்பட்டைப் பெற்றார். இப்படியே மற்றப் பாளையக் காரர்களும் ஒவ்வொரு காரணத்தைப் பற்றிப்பாளையக்காரரானார்கள்.

மதுரை ஜில்லா இங்கிலீஷ்காரர் வசமாகி மிஸ்டர் வின்சு(M.Wynch) காலத்தில் (1795-ஞு நவம்பர்மீ 24உ) மதுரையைச்சார்ந்த 24 பாளையப் பட்டுகளின் விவரமாவது —

(1) கோம்பை:—3000 சக்கிரம் வருமான முள்ளது.1500 சர்க்கார் கிஸ்தி. சக்கிர மென்றால் கிட்டத் தட்ட இரண்டு ரூபாய் விலையுள்ள நாணயம். அப் பாஜி கவுண்டர் பாளையக்காரர்,கம்பிலியஜாதி, அவருக்கு 100 சேவகர்களுண்டு.

(2) எச்சக்க நாயக்கனூர்:—500 சக்கிரம் வருமானம். பாளையக்காரர், கம்பளியஜாதி. வாலிபர்.

(3) தேவாரம்:—357 சக்கிரவருமானம். 110 சக்கிரம் சர்க்கார்கிஸ்தி. பாளையக்காரர் கம்பளத்தார். போடி நாய்க்கனூர் மாப்பிளை.

(4) போடி நாயக்கனூர்:— 7000 சக்கிர வருமானமுள்ள பெரியபாளையப் பட்டு, திருமலபோடி நாய்க்கர் என்பவர் பாளையக்காரர். கம்பளத்தார், 5000 சக்கிரம் கிஸ்தி தரக்கூடுமாம்,

(5) கண்டப்ப நாயக்கனூர்:—பெரிதும், உபயோகமற்ற நிலமுள்ளது 4500 சக்கிரம் வருமானம். 1900-சக்கிரம் சர்ககார்கிஸ்தியுள்ளது.

(6) தேவதானபட்டி:—4000 - சக்கிரம் வருமானம். 3100 சர்க்கார் கிஸ்தி. நல்லதாச நாய்க்கர் என்னும் பாளையக்காரர் கம்பளத்தார்.

(7) தொட்டியன்கோட்டை:—1600 சக்கிரம் வருமானம். கல்நாக்கன் கா

லத்தில் 850-சக்கிரம் சர்க்கார்கிஸ்தி. தொப்பைட்டப்பநாயக்கரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(8) நிலக்கோட்டை:—9000 சக்கிரவருமானம். 7000 சக்கிரம் கிஸ்தி. கோலப்ப நாயக்கரென்ற பாளையக்காரர் கம்பளத்தார்.

(9) அம்மைய நாயக்கனூர்:—அநேக மலை நாடுகளுடன் சேர்ந்த பெரிய பாளையப்பட்டு. 11,000 சக்கிரம் வருமானம். 8,600 சக்கிரம் சர்க்கார்கிஸ்தி. சுந்திரப்பநாயக்கரென்ற பாளையக்காரர் கம்பளத்தார்.

(10) அம்பலத்தாறு.—2000 சக்கிரம் வருமானம், 1500 சக்கிரம் சர்க்கார் கிஸ்தி. மகாபலநாயக்கரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(11) தவசுமேடை:— 65. சக்கிரம் சர்க்கார்கிஸ்தி. சோட்லநாய்க்கரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(12) எமகாலபுரம்:—550 சக்கிரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரர் கம்பளத்தார்.

(13) மறவநாடு:— கம்பளஜாதி, சின்ன அளகிரி நாய்க்கர் பாளையக்காரர். 600 சக்கிரம் சர்க்கார் கிஸ்தி.

(14) சொக்கம்பட்டி:—பழனிமுத்து நாய்க்கர் பாளையக்காரர்.

(15) எரியோடு:—12 கிராமங்களும் 39 சிறு கிராமங்களுமுள்ள பெரிய பாளையப்பட்டு. 9000 சக்கிரம் வருமானம். 6700 சக்கிரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரராகிய முத்துக்குமாரவேலு பெல்லகொண்டம நாய்க்கர், வடுகர்.

(16) பள்ளியப்ப நாய்க்கனூர்:—2000 சக்கிரம் வருமானம். 1000 சக்கிரம் சர்க்கார் கிஸ்தி. பழனியப்ப நாய்க்கரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(17) இடையகோட்டை:—நல்ல பாளையப்பட்டு. சர்க்கார் கிஸ்தி 2237-சக்கிரம். பாளையக்காரர் கம்பளத்தார்.

(18) மாம்பறை:—400-சக்கிரம் சர்க்கார் கிஸ்தி. சாகரம் தொம்மநாயக்கர், கம்பளத்தார்.

(19) பழனி:—பெரிய பாளைப்பட்டு. இது பழனி, இட்டம்பாடி, ஆயக்குடி என்று மூன்று பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. இந்தப் பாளையப்பட்டு முன் 80,000-ரூபாய் கிஸ்திகட்டிக்கொண்டு வந்து, பிறகு 16,000 -சக்கிரமாகக்கட்டியது, 25,000-சக்கிரம் கட்டக்கூடியஸ்திதியிலிருக்கிறது. இதன் முன் பாளையக்காரராகிய வேலாயுத நாய்க்கர், வேடஜாதியார்.

(20) ஆயக்குடி:—8000 சக்கிரமவருமான முடையது. 4000 சக்கிரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரராகிய ஒபிளிகொண்டம நாயக்கர் வேடஜாதி.

(21) விருபாக்ஷி:—மலைநாடாகிய இது பெரியபாளையப்பட்டு. 12000 சக்கிரம் வருமானம், 6000 சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரர் குப்பண்ண நாயக்கர், கம்பளத்தார்.

(22) கன்னிவாடி:—இது 14 பெரிய கிராமங்களும் 48 சிறு கிராமங்களுமுள்ள பெரிய பாளையப்பட்டு. 21,000 சக்கிரம் வருமானம். 12300 சர்க்கார்கிஸ்தி.

(23) மாதூர்:—பெரிய பாளையப்பட்டு. கடனில் மூழ்கிவிட்டபடியால், கவர்ன்மெண்டார் மானேஜ்மெண்டில் இருக்கிறது. பாளையக்காரர் வேங்கடசாமி நாயடு.(Vide Pages 9 to 16 Pages IV Dt. Manual Madura.).

இனிவடகரை,எட்டியாபுரம், இராமநாதபுரம,சிவகங்கை,புதுக்கோட்டை முதலான சில பெரிய பாளையப்பட்டு ஜமீன்களின் சங்கதிகளைச் சங்கிரகமாக இதனடியிற்காணலாம்.

## வடகரைஜமீன்தாரரின்விவரம்

வடகரை ஜமீன்தாரரவர்களுடைய ஆதிதந்தையாகிய ஸ்ரீராமபத்திரநாயடு காரு மதுரையில் முதலில் ஆண்டுவந்த இராஜா கோட்டய நாகம நாயடுகாருடைய சேனைத தலைவராக இருந்தவர். இந்த நாகம நாயடுகாருக்கு புத்திர சந்தானமில்லாக் குறைவால் காசிக்ஷேத்திரம் யாத்திரைப் போன போது, அவருடைய சமஸ்தானத்தை இந்த ஸ்ரீராம பத்திர நாயடுகாரு அவருக்குப் பிரதிநிதியாக இருந்து இராஜபத்தை யாண்டுவந்த தன்றியில; நாகமநாயடுகாரு சோழராஜாவின்மேல்படையெடுத்துப் போனபோதும்,பிறகு ஸ்ரீவிசுவநாத நாயடுகாரு மதுரையைப்பிடிக்க வந்தபோதும்,தக்க உதவிசெயதுவந்ததன்றியில்; கம்பம் கோட்டையை முற்றுகைப்போட்டதில் விசேஷ உதவி செய்ததனால், அவரைப் பழனிக்கருகிலும, வைகை நதிக்கு வடகரையிலுமிருக்கும் வடகரை பாளையப் பட்டுக்கு பாளையக்காரராக ஆக்கினார். இந்த வடகரை பாளையக்காரரும், சொக்கம்பட்டி,ஊற்றுமலை,பாளையக்காரர்களும் இராமநாதபுரம் சேதுபதியவர்களுக்கு மற்றப் பாளையக்காரர்களைப்போல எவ்விதமான வணக்கமும் செய்வதில்லையாம். 1795௵ம் இதன் வருமானம் 6500 சக்கிரமாம்.

இப்போது இந்த வடகரை ஜமீன்தாரராக இருக்கும பூமான் வீ. இராமபத்திர நாயடுகாரு வாலிபர். கோர்ட்டாப் வார்ட்ஸில் சுமார் 13-வருஷங்களிருந்தும், பிறகு வேறு உபாத்தியாயரிடம் முறையாகக்கற்று தெளிந்தும், சர்வகலாசாலை பிரவேச பரிக்ஷையில் தேறியவர். சுந்தரபுருஷரும, கருணையுள்ளவரும், தேசாபிமானமும்,மதாபிமானமுமுடையவர்.1901௵ம மதுரையில்கூடிய மகாஜன மஹா சபையில் "கோர்ட்டாப் வார்டஸ்" என்னும பிரபுக்களுடைய (மைனர்) மக்களை ஏனைய ஜாதியாரிடமும், ஏனைய மதஸ்தரிடமும் கல்விகற்க விடுவதனாலுண்டாகும் சாதக பாதகங்களைப்பற்றி பிரபல நியாயங்களோடு ஆங்கில பாஷையில் பேசியதை நாம் காதால் கேட்டும், கண்ணால் கண்டும் களிப்புற்றோம். அந்த உபந்யாசம் மதுரை மகாஜன கூட்டத்தின் ரிபோர்ட்டு 96-97-98 வது பக்கங்களில் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. அதைத் தமிழில் மொழிபெயர்த்து

நமது நாட்டிலிருக்கும் ஒவ்வொரு ஜமீன்தாரர்கையில்கொடுத்துப் படிக்கச்செய்தும், அதில் குறித்த புத்திமதிகளின்படி நடக்கவும் செய்தால்; நமது ஜமீன்தாரர்களுக்கு நல்லகால வருமென்பது திண்ணம்.

இந்த ஸ்ரீ இராமபத்திர நாயகோருடைய சுகுணங்களை நேரிலறிந்த சென்னை கவர்ன்மெண்டு சட்ட நிரூபண சபையைச் சார்ந்த ஆனரெபில் ஸ்ரீநிவாசராயரவர்களே (அந்தரிப்போர்டு 99-100-வது பக்கங்களில் புகழ்ந்து கொண்டாடி இருக்கையில்; இனி அவரைப்பற்றி நாம் விசேஷமாக எழுதுவதனுவசியம்.

---

## எட்டியாபுரம் ஜமீன்தாரர்.

இப்போது மதுரையைச் சார்ந்த குண்டம நாயக்கனூரை யடுத்த வல்லநாதிடிவிசனுக்கும், திருநெல்வேலியைச்சார்ந்த எட்டியபுரத்துக்கும் தலைவராகிய ஸ்ரீஇராஜாஜகவீரராமவெங்கடேசுவர எட்டப்பநாயக்கர்பஹுதூரவர்களுடையமுன்னோர்களும்,ஆதியில்விஜயநகரத்தாராலும்,பிறகுமதுரைகுமாரகிருஷ்ணப்ப நாயக்கராலும்,மூத்துகிஷ்ருணப்ப நாயக்கராலும்கவுரவப்படுத்தப்பெற்றவர்கள். எப்படியெனில், இந்தகுடும்பத்தின் பத்தாவது சந்ததி யாகிய நல்லம நாய்க்கர் மஹாவீரதீரரானபடியால், விஜயநகர ஸமஸ்தானத்துக்குப் போக; அங்கு கோட்டைத்தலைவாசல் காவல்காரனுகிய சோமனை ஜயித்துக்கொண்டு உள்ளே பிரவேசிக்க வேண்டும்; அல்லது அந்தசோமனுடைய கால்விரலுக்கும் கேட்டுவாசலுக்கும் கட்டி இருந்த தங்கச்சங்கலிக்குள் நுழைந்துப் போகவேண்டுமாம்.இந்த நல்லம நாயக்கர் அந்த சோமன் தலையைவெட்டி ஜயித்து உள்ளே பிரவேசிக்க, விஜயநகர ஸமஸ்தானபதி கண்டு வியந்து, பொன்னால் ஒரு தலையைச் செய்து கொடுத்து,அதை யோர்பிருதாகஇடது கால்முழங்காலில் கட்டிக்கொள்ளவும், அந்த சோமனுடைய இரத்தத்துணியை கொடியாக வைத்துக்கொள்ளவும் உத்திரவுகொடுத்தார்; மேலும் அந்த சோமனுடைய எட்டு சகோதிரர்களைக்கொல்லாமல் பாதுகாத்ததற்காக எட்டப்பன்,அதாவதுஎட்டுபெயருக்குத் தந்தை என்று பொருள்படும்படியான பட்டத்தைவகிக்கவும்,இராஜ விநிரிவரிசை முதலானதுகளைக் கொடுத்து மரியாதை செய்தனுப்பினாராம். அன்று முதல் இந்த ஸமஸ்தானத்துக்கு எட்டியாபுர ஸமஸ்தானமென்று பெயர் வந்ததாம். இந்த குடும்பத்தாரில் சிலர், மதுரை பாண்டியர்களுக்கு உதவிசெய்து மாணியங்களையும்,மரியாதைகளையும் பெற்றிருப்ப தன்றியில்,1567 ஜகவீர ராம குமார எட்டப்ப நாயக்கர்,மதுரை சக்கிரவர்த்தியாகிய குமார கிருஷ்ணப்ப நாயக்கருக்கு உதவியாகி, திருவநந்தப் புரத்திற்போய் கப்பம் வாங்கி வரும் வழியில் இறந்துவிட்டபடியால்; மதுரை நாயக்கர் இந்தஜமீனுக் குருமூருமலையை இனுமாகவும், ஐயன் என்றப் பட்டத்தை தரித்துக் கொள்ளவும் உத்திரவு கொடுத்தார்.

இதே மந்திரியாகவே மதுரை முத்து கிருஷ்ணப்ப நாயக்கர் காலத்தில் அவருக்குதவியாக திருவாங்கூர்ப் புரத்துக்குப் போய் சர்க்கார் பாக்கியை வசூல் செய்து பஹுமானங்களைப் பெற்றார். இந்தசமஸ்தானத்தார்செந்தமிழிலும்,சங்கீதவித்தையிலும் ஏராளமான பொருளை செலவிட்ட பிரபுக்கள். இப்போது இந்த சிறுஸமஸ்தானம் 647 சதுரமைல் விஸ்தீரணமுள்ளதாயும், 415428 ஏகர் நிலத்தில், 374441 ஏகர் விளைவுள்ள நிலமுடையதாயும், 415000 ரூபாய் வருமானமும், இதில் 135000 பேஷ்கஷ் கட்டக்கூடியதாயு மிருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவில் விளையும் 60 லக்ஷம் ரூபாய் பருத்தியில், இந்த ஸமஸ்தானத்தில் 30 லக்ஷம் ரூபாய் விளைகின்றது. தற்காலத்திய வாலிப ஜமீன்தாரர் 1899 பட்டத்தைப் பெற்று, ஸ்ரீ ராயபகதூர் ஜகநாத செட்டியாரவர்கள் சகாயத்தினால் திருப்தியாக நடத்திவருகிறார்.

இப்படி பாண்டிய நாட்டை பாதுகாக்க 72 பாளையப்பட்டுகளும், ஜமீன்களும் இருக்கினும், இவைகளில் எல்லாவற்றிலும் சிறந்த சிறிய ஸமஸ்தானங்களாகவும், நாயகொரு ஸமஸ்தானத்துக்கு வேண்டிய உதவிகளைச் செய்து அவர்களால் புகழ் பிருதுகளும் பெற்றவை இராமநாதபுரம், சிவகங்கை, புதுகோட்டை ஸமஸ்தானங்களாகையால், அவற்றின் சரித்திரங்களைச் சங்கிரகமாக எழுதுகிறோம்.

---

## இராமநாத சேதுபதி ஸமஸ்தானம்.

இராமநாதபுர ஸமஸ்தானம் எப்போது எவரால் ஸ்தாபிக்கப் பட்டதோ விவரமாகத் தெரிவிக்கும் சரித்திர சாதனங்கள் கிடைக்கவில்லை. ஆயினும், இக்ஷ்வாகுவம்ச திலகராகிய ஸ்ரீராமர் வனவாசம் செய்தபோது, அவருடைய உத்தமபத்தினிச் சீதையை இராவணேசுவரன் எடுத்துக்கொண்டுபோய் இலங்கையில் வைத்திருக்கிற சங்கதியைக் கேட்டு, அந்த இராவணனை ஜயித்து சீதையை மீட்கவந்ததில்; இடையில் சமுத்திர மிருக்கக் கண்டு, அச்சமுத்திரத்திற்கு வாராவதியைக் கட்ட ஆரம்பித்தபோது, அவருக்கு அடுத்த விடங்களிலிருந்த வீரதீரமுள்ள ஒரு ஜாதியார் வந்து வேண்டிய உதவிகளைச் செய்ததனால்; அவர்களுடைய நன்றியை நன்குணர்ந்த ஸ்ரீராமர் அவர்களைப் புகழ்ந்து கொண்டாடி மறவோம் என்றார். என்றால், 'இலங்கைக்கு வாராவதி கட்டிய காலத்தில் நீங்கள் செய்த உதவியை என்றும் மறக்கமாட்டோம்' என்பது கருத்தாம். ஆகவே, இந்த ஜாதியாருக்கு அன்று முதல் 'மறவர்' என்ற பெயருண்டாகியதாம். இந்த மறவர்களில் (1) செம்பு நாட்டு மறவர், (2) கொண்டயன் கோட்டை மறவர், (3) அதிநார் நாட்டு மறவர், (4) அகத்து மறவர், (5) உரையூர் நாட்டு மறவர், (6) உப்புக்கோட்டை மறவர், (7) தூசிக்காட்டை மறவர் என எழுவகுப்பார்களுண்டு. இவர்களுடைய மதம் சைவம். (Vide P. 113. 114. M. D. Manual.)

அதைக்காக்க ஒருசிறு சேனையைவைத்து விட்டும், வழியில் காணும் கிராமங்களில் புகுந்துகொள்ளையடித்தும் கொலைகள் செய்துகொண்டும், மதுரை ஸமஸ்தானத்துக் கருகில் வந்து விட்டனர். இந்த மகமதியர் வழிகளில் செய்த கொள்ளைகளினல் அங்கங்குள்ள குடிகள் பயந்து அடுத்திருக்கும் சத்தியமங்கலம், திரிசிராப் பள்ளிக்கு வலசையாக ஓடிப்போய் விட்டார்கள். இப்படி குடிகள் நாலாபக்கங்களிற் பறந்துபோகவே; பஞ்சமும், பேதி வாந்தியும் சம்பவித்து, மகமதியர் சேனைகளுக்கு உணவும், மருந்தும் கிடையாமல் மண்மாரியாக மாண்டுவிட்டார்கள். தப்பித்தவறி இருந்த சொற்ப சொத்தையும், கள்ளர்கள் புகுந்து கொள்ளையடித்துக் கொண்டார்கள். இத்தியாதிகளினல் மகமதிய மன்னர் மனமொடிந்து திரிசிராப்பள்ளி கோட்டைக்கருகில் வர; அந்த கோட்டையை முத்து அளகாத்திரியும் அவர் சேனைத் தலைவர் லிங்கம நாயடும் அதிக கம்பீரமாக காத்துக்கொண்டிருந்தபடியால்; மகமதிய மன்னர் ஜயம்சயாமல், செலவுக்கு அதிக கஷ்டமாகி மூன்று வருஷத்திய கப்பத்தையாவது கொடுங்கள் என்று கெஞ்சியும்; மதுரையார் கொடாமையால், அவர்கள் தம்மூர்போய் சேருவதற்கு மாத்திரம் சொற்ப தொகையைக் கொடுக்க, அதைபெற்றுக் கொண்டு சேனையைக் கூட்டிக்கொண்டு தமது நாட்டுக்கேகினர்கள். இப்படி ஜெயம் பெற்ற முத்து அளகாத்திரி நாயடு மதுரைக்குப்போய் இராஜகீய காரியங்களைக் கவனிக்காமல், சிற்றின்பராய் ஸ்திரீகள் இன்பத்தில் மூழ்கி அதனல்வியாதி கண்டிறந்தார். இவர், கனம் டெயிலர் கணக்கின்படி சகாப்தம் 1594ளும் (கி. பி. 1672) சுபகிருதுமுதல் விரோதி விகிருதியாகிய பத்து வருஷங்கள் ஆண்டார்.

---

## ஸ்ரீ சொக்கநாதர் அல்லது சொக்கலிங்க நாயடுகாரு ஸமஸ்தானம்.

---

கி-பி. 1659-வருஷம்முதல் 1682-ளுவரையில்.

மாதர் மோகத்தில் மூழ்கி மடிந்த முத்து அளகாத்திரி நாயடு பட்டத்திற்கு, அவர் குமாரர் சொக்கநாத நாயடு வந்தார். அப்போது அவருக்கு வயது பதினறு; ஆகவே, ஸமஸ்தான காரியக்களைத் தமது தகப்பனரிடம் உண்மையாக இருந்த பிராமண பிரதானியும், பிராமண இராயசனும் நடத்திவந்தார்கள். வந்தாலுமென்ன? அவர்களுக்கு பேராசை யதிகரித்து, ஸமஸ்தானத்தைத் தம்வசத்திலேயே வைத்துக்கொள்ளக் கருதி, சொக்கநாதருக்கு வேண்டிய பந்து மித்திரர்களையும், அவர் க்ஷேமத்தைக் கருதிய பிரபுக்களையும், பாளையக் காரர்களையும் ஹிம்சித்தும், அவர்களை ஸமஸ்தான

வேலைகளிலிருந்து நீக்கியும்; அநேக அகிரம நடவடிக்கைகளைக் கையாடி வந்தார்கள். ஸமஸ்தான ஸ்திதி இப்படியிருக்க, முன்னொருகால் அதிக பிரபல ஸ்திதியிலிருந்து இப்போது மங்கலடைந்த தமது முன்னோர்கிய விஜயநகர ஸமஸ்தானத்தை உயிர்பெற்றோங்க விரும்பி, அதன் அதிபர் நரசிங்க தேவராயலுக்கும், அவர் குடும்பத்தாருக்கும் தக்க உதவி செய்யவேண்டுமென்று கருதியும், செஞ்சிகோட்டை நாயகோருக்கு வேண்டிய உதவி செய்தும், அக்கோட்டையை மகமதியர் கையிலிருந்து பிடுங்க வேண்டுமென்றும், சொக்கநாதர் மனதில் தோன்றித் தமது தளவாயையும், தளகர்த்தர் லிங்கம நாயடுவையும் 40,000 சேனையோடு மகமதுசகோசியைத் தாக்க அனுப்ப; சமஸ்தான துர்மந்திரிகள் எதிரிக்கு முன்னாடியாக இந்தசங்கதியனுப்பியும், தளவாய் தளகர்த்தர்களுக்த்தகுந்த லஞ்சம் கொடுத்து சரிபடுத்திக்கொள்ளும்படி தூண்ட, மகமதிய நபாபும் அப்படியே செய்ய, சொக்கநாதநாயடுவின் சேனைகள் வீண்பணச்செலவுடன் திரும்பி வந்துவிட, இத்தியாதிகளைக்கண்டு சொக்கநாதர் கண்டிக்க; துர்மந்திரிகள் அவரைச் சமஸ்தானகாரியங்களில் பிரவேசிக்காதபடிசெய்தும், சிறையிலிருப்பவரைப்போல் இரண்டொருஅறைகுள்வைத்தும், அவருடன்யாரும்போய் பேசாதவிதமாகச் செய்தும், அவரது தம்பியாருக்கு பட்டம் கட்ட, லிங்கம நாயடு மூலியமாக பிரயத்தனப்படும்போது; இத்தியாதி சங்கதிகளை அரண்மனையின் ஒருஸ்திரீயினால் கேட்டு; சொக்கநாதர் இரகசியமாக சில வீரர்களைச் சம்பாதித்து மறைத்துவைத்துக்கொண்டிருந்து; மந்திரியும், இராயசனும் அருகில் வந்தஉடனே கண்ஜாடையால் தூண்டி, இராயசனை அந்த விடத்திலேயே துண்டுத்துண்டாகவெட்டிக் கொல்லுவித்தும்; மந்திரி பிராமணனானபடியால், அவரைக் கொலைசெய்யக் கூடாதென்றெண்ணி அவர்கண்களைப் பிடுங்கச்செய்வித்து துரத்திவிட்டும்; அவர்களோடு கலந்திருந்த லிங்கமநாயடையும் தக்கபடி சிக்ஷிக்க யோசிக்கையில், அவர் அசாத்திய வீரனானபடியால், "ஆகாதவனை அடுத்துக் கொல்" என்னும் பழமொழிப்படி முதலில் மரியாதையாக உறவாடி வருகையில் "குற்றமுள்ள நெஞ்சும் குதித்து தடிக்கும்" என்னும் பழமொழிக்கொக்க சொக்கர் எப்படியாவது தன்னைக்கொன்றுவிடுவானென்று ஓடிப்போய் தக்ஷணமகமது கோசியினிடம்சேர்ந்து சொக்கரோடு சண்டைசெய்ய 12,000 பதாதிகளையும் 7000 குதிரை வீரரையும் கூட்டிக்கொண்டு வந்தார். அப்போது திரிசிராப்பள்ளியைக் காக்க 50,000 சேனையிருந்தும், லிங்கமநாயடு உள் தந்திரமெல்லாம் அறிந்தவனானதையால் புதிதாகநியமித்த பிராம்மண மந்திரிக்கும் லஞ்சம் கட்டித் தந்திரமாகஜயிக்கப் பார்த்தார். இந்தச் சூதை யறிந்த சொக்கநாதர் அந்தப் புதுபிராமண மந்திரியையும் வேலையிலிருந்து நீக்கிவிட்டு, தாமே நேரில் சேனையைநடத்திவர ஆரம்பிக்கவே, சேனைகள் தைரி

யங்கொண்டு ஒரேமூச்சாக நின்று மகமதியர் சேனையைத்தாக்க, அவர்கள் தோல்வியடைந்து தஞ்சை நாயடுவின் சமஸ்தானத்துக்கோடி, அவர் தய வைப்பெற்று மறைந்திருக்க, இது சமஸ்தானமெங்கும் பிரசித்தியாக, சொக்க நாதருடைய சக்தியையும், சுத்த வீரத்தனத்தையும் கண்டு சிறு பையன்கள் முதலானவர்களும் வலியவந்து அவர்பட்டாளத்தைச் சேர, 70,000 சேனை யோடு தஞ்சைநாட்டின்மேல் படைஎடுத்துப்போக லிங்கமநாயடும் மகமதிய ரும் பயந்து செஞ்சிகோட்டைக்கு ஓட்டம் பிடித்தார்கள். தஞ்சைமன்னன் தாசானு தாசனுகி சமாதானம் செய்துகொண்டான்.

இந்தக்காலத்தில் (1662-ம்வருஷம்) மதுரையில் அநேக கெட்ட சகுனங்களுண்டாயின. அதாவது பிறந்த பிள்ளைகள் பற்களைப் பெற்றிருந் தனவாம். காறை பூச்சிகளும், புழுக்களும் பிறந்தபயிர்களைப் பாழத்துப் போகச்செய்தனவாம். பிரஜைகள் யாதொரு வியாதியுமின்றி திடீரென்று விழுந்து செத்துக்கொண்டு வந்தார்களாம். நாட்டில் குடித்தனம் கெட்டுப் பஞ்சம் அதிகரித்ததாம், பஞ்சத்தால் செத்தவர்களைப் புதைக்க வகையற்று நாற்றமெடுக்க, அதனுல் வாந்திபேதிகண்டு கணக்கற்ற ஜனங்கள் மடிந்து விட்டார்களாம். இத்தியாதி දுர்ப்பிக்ஷகாலத்தினுல் குடிகள்பயந்து நொந்த சமயத்தில் (1662 அல்லது 6 வருஷம்) மகமதியருடைய மந்திரியும், முன் மதுரை ஸமஸ்தானத்தில் மந்திரியாகவிருந்து மோசம் செய்ததனுல் சர்க் கார் வேலையிலிருந்து நீக்கிவிடபட்டிருந்த வனமய்யன் என்னும் பிராம ணர் ஒருபெரும் (மகமதிய) சேனையைக்கூட்டிக்கொண்டு திரிசிராப்பள்ளி யைத் தாக்கவர; சொக்கர் அதிக தைரியத்தோடு எதிர்த்து மகமதியர் சே னையைத் துரத்தியடிக்க, அவர்கள் திரும்பிப்போகும்போது வழியில்கண்ட கிராமங்களை எல்லாம் கொள்ளையடித்தும், குடிகளைவதைத்தும், குடிகளைக் கொளுத்தி குட்டிச்சுவராக்கிக்கொண்டும் போய்விட்டார்கள். இந்தயுத்தத் தில்தஞ்சை விஜயராகவலுநாயடு மகமதியருக்குதவிசெய்த காரணத்தைப் பற்றி சொக்கநாதர் படை எடுத்துப்போய் வல்லத்தின் கோட்டையைப் பிடித்துக்கொள்ள, தஞ்சைமன்னர் தஞ்சமென்றுவந்து சமாதானம்செய்து கொண்டார்.

இப்படிமதுரை ஸமஸ்தானத்தின் மேல் மகமதியர் படைஎடுத்து வந்தபோது சேதுபதியானவர் தக்கசகாயம் செய்யாமையால்; அம்மறவர் நாட்டின்மேலும்படையெடுத்துப்போக,அச்சேதுபதிசொக்கருடையசேனை யின் பலத்தைக்கண்டு பயந்து ஒருகாட்டுக்குள் போய் மறைந்துகொள்ள சொக்கர் திருப்பத்தூர், மானுமதுரை, புதுகோட்டை, காளியர்கோட்டை களைப் பிடித்து சுவாதீனமாக்கிக் கொண்டும்; தமது சேனையைத் தமது அதிகாரிகள் வசத்தில் விட்டுவிட்டும், சிலவைதீக சடங்குகளுக்காக மதுரை

க்குப் போக, இதுசமயந்தியிருந்த சேதிபதி திடீரென்றுவந்து சொக்கரு டைய சேனையைத் தாக்க, சொக்கநாதரும் தமக்கு அகப்பட்ட கோட்டை களும் வெற்றியும் போதுமென்று எண்ணி பெரும்பான்மையான தமது சேனையைத்தமது கோட்டைகளைப் பாதுகாக்கத் தருவித்துக்கொண்டார். 1666-வருஷம் நாட்டில்சண்டை சச்சரவின்றி சமாதான மேலிட்டோங்க, சொக்கநாதர் சொர்னகோகரணதானம் செய்தார். அதாவது. பசும்பொன் னினால் ஒருபசுவைச்செய்து அதனுள் இராஜன் புகுந்துவந்தபிறகு, அப் பொன் பசுவைப் பிராமணர்களுக்குதானம் செய்துவருவதேயாம். இந்த வழக்கம் இப்போது திருவநந்தபுரத்தில் நடந்துவருகிறது. சொக்கநாதர் இப்படி சமயசடங்குகளில் புகுந்து சமாதானமாக காலம்கழிக்கையில், இவருடைய மந்திரி பிரதானிகள் ராஜனுக்குத் தெரியாமல் குடிகளைவரு த்தி ஏராளமான பணம் பிடுங்கிச் சொந்தஉபயோகப் படுத்திக்கொண்டு வந்தார்கள். இப்படிப்பட்ட துஷ்டதனமாக லஞ்சம்வாங்கும் உத்தியோக ஸ்தர்களைத் தக்கப்படி சிக்ஷிக்காமல், அவர்களுக்கு சொல்ப அபராதம்போ ட்டுவந்து மிரட்டிவந்ததனால், அந்தத்துஷ்ட உத்தியோகஸ்தர்கள் தமக்கு விதித்த அபதாரத் தொகையையும் குடிகளைவருத்திப்பிடுங்கி படாதுபாடு படுத்தி வந்தார்கள். இப்படி மந்திரிபிரதானிகள் பரிதானம் வாங்கிக்குடி களை வருத்திவரும் வழக்கம் மதுரையில் மாத்திரமல்ல, தஞ்சை, செஞ்சி ஸமஸ்தானங்களின் உத்தியோகஸ்தர்களுமிப்படியே செய்து வந்தார்கள்.

இப்படிச் சொக்கநாதருடைய உத்தியோகஸ்தர்கள் குடிகளை வரு த்தி லஞ்சம்வாங்கி வந்ததோடு, சர்க்கார் பொக்கிஷத்திலும் பொய் கணக்குகளைஎழுதி கொள்ளையிட்டுவரவே, இராஜபொக்கிஷமும் பாழ்த் துக்கொண்டு வந்தது. இத்தியாதி அக்கிரமங்களைக் கண்டிக்க திரிசிராப் பள்ளியில் போய் தங்கி, தக்கஏற்பாடுகளைச் செய்யச் சொக்கருக்குச் சொ குசான அரண்மனையில்லாததைக்கருதி தன்பாட்டனார் திருமலைநாயகரால் எவ்வளவோ கஷ்டப்பட்டும், காசைச் செலவழித்தும் கட்டிய, மதுரை மஹால் அரண்மனையை இடித்து அதிலிருந்த அழகுள்ள ஸ்படிக ஸ்தம்பங் கள், விட்டங்கள், சட்டங்கள் பீடங்கள் முதலான கல்சாமான்களை இடிப் பித்து வண்டிவண்டிகளாக ஏற்றித்திரிசிராப்பள்ளிக்கு அனுப்பினார். இப்படி அந்தமாக்ஷிமைபொருந்திய மஹாலின் முக்கால் பாகம் இடித்தபிறகு, அப் போது மந்திரியாகிய சின்னதம்பிமுதலியார் பார்த்துப் பலவிதமாகத் தடுத் துவந்ததனால் இப்போதிருக்கும் கொஞ்சபாகத்தை மாத்திரம் மதுரையில் இடிக்காமல் விட்டுவிட்டார்.

இப்படிப்பட்ட காலத்தில் இச்சொக்கருடைய ஜன்மவிரோதி யான லிங்கமநாயுடு இவருக்கு ஆபத் சிநேகிதரானார். இப்படியானதற்

குக் காரணம் தெரியவில்லை. இராஜீய காரியமாக விஜயராகவன் குமாரத்தியைச் சொக்கருக்கு விவாஹம் செய்துகொடுக்கச் சம்மதித்து இப்படிச்சமாதானமாக்கிக் கொண்டதாக ஒரு சாசனம் சொல்லுகின்றது. ஆனால் 1674-ஆம் வருஷம் சொக்கநாதர் தஞ்சாவூர் அச்சுத விஜயராகவலு நாயடவர்களுடைய குமாரத்தி மங்கம்மாளை விவாஹம்செய்ய விரும்பி தளவாய் வெங்கட கிருஷ்ணப்பநாயடுவைத் தூதாக அனுப்ப, அந்தத் தஞ்சைமன்னர் வெங்கட கிருஷ்ணம நாயடை இராஜசபையில் அவமானமாகப் பேசித் துரத்தியதால், அது சங்கதியைக் கேட்டசொக்கர், அந்த அவமான அழுக்கைத் தஞ்சைமன்னர் இரத்தத்தினால் கழுவியே தீரவேண்டு மென்று கருதி, ஒருபெரிய சேனையை வெங்கட கிருஷ்ணம நாயடுடன் அனுப்ப, இரு கக்ஷியார்க்கும் பிரமாதசண்டை நடந்ததில் விஜயராகவலு நாயடு முதலானவர்கள் கொல்லப்பட்டும்; பிறகு, அந்தத் தஞ்சைப்பெண்ணை (மங்கம்மாளை) விவாகம் செய்துகொண்டதாக தஞ்சாவூரு சரித்திரம் முறையிடுகிறது. இந்த விஷயத்தைத் தஞ்சை ராஜாக்கள் சரித்திரத்திலும், மிஸ்டர் சரவணமுத்துப்பிள்ளை எழுதிய மோகனாங்கி என்னும் நவநாடகத்தைப் பார்த்தாலும் விவரமாக அறியலாம்.

இவ்விதமாக விவாகம் செய்துகொண்ட சொக்கநாதர் வரவர சிற்றின்பப் பிரியராகியும் பாரதம், பாகவதம் இராமாயணாதிகிரந்தபடன காலக்ஷேபத்தில் காலம்கழித்து' சமஸ்தான வேலைகளில் அசட்டையாக இருப்பதைக்கண்டு, தளவாய் முதலான தூர்மந்திரிகள் சொக்கருடைய தம்பியாகிய முத்து அளகாத்திரி நாயடுக்குக் கோள்சொல்லி அவரையே ஸமஸ்தான பதியாக்கி தாம் ஸமஸ்தானத்தில் கொள்ளையடிக்க பிரவர்த்தித்தார்கள்.

இப்படிப்பட்ட காலத்தில் கோவிந்தப்பய்யன் என்ற ஒரு பிராமணர் முத்து அளகாத்திரிக்கு அந்தரங்கசினேகிதனும் மந்திரியுமாகி; சொக்கநாதரையே சொர்க்கத்துக்கு அனுப்பதக்க தந்திரங்கள் செய்து கொண்டு வந்தார். இந்த கோவிந்தப்பய்யர் முன் தஞ்சையில் மந்திரியாகவிருந்து, அந்தச் சமஸ்தானத்தை நாசமாக்கியவரென்று சிலருடைய கருத்து. சிலர் அந்தக் கோவிந்தப்பய்யருடைய சகோதரன் என்றும் சொல்லுகிறார்கள். சமஸ்தானத்திலிருந்த பெரிய உத்தியோகஸ்தர்களை எல்லாரையும் வதித்துக்கொண்டும், சின்னகதிரப்பன் முதலான் வீரர்களை மனமொடிந்துபோகும்படி பேசியும், அவர்கள் கப்பத்தொகையை அதிகப்படுத்தியும், இப்படியே சொக்கநாதருக்கு பிரதிகூலமான காரியங்களையெல்லாம் செய்துகொண்டு வந்ததன்றியில் ; இரகசியமாக தஞ்சைக்குப் போய் அவ்விடத்திய அரசன் அளகிரி நாயடுவைச் சொக்கநாதருக்குக்

கப்பம் கட்டாதபடி தடுத்தும், அளகிரியைப் பகையாளியாக்கிவிட்டதாக ஒரு சாசனத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சதிமோசம் செய்தவர் வெங்கண்ணாவென்ற நியோகிபிராம்மணரென்று தஞ்சை சரிம்திரத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. மதுரை சமஸ்தானம் இப்படி சீர்கெட்ட ஸ்திதியி லிருப்பதை யறிந்த எக்கோஜி 1675-ஆ பெரும் சேனையோடு வந்து சமஸ்தானத்தைச் சார்ந்த சில கோட்டைகளுக்கு முற்று கைப்போட்டு பிடித்துக்கொண்டும்; திரிசிராப்பள்ளியை மாத்திரம் சொக்கருக்கு விட்டுப்போனார், இக்காலத்தில் ஸமஸ்தானத்தில் கடும் பஞ்சமுண்டாகிப் பல்லாயிரம்பேரைப் பரலோகத்துக்கனுப்பிவிட்டது.

இத்தியாதி அசம்பவங்களை அறிந்த எக்கோஜி தஞ்சையை வசமாக்கிக்கொண்டு தானே ராஜனாகப் பட்டங்கட்டிக் கொள்ளவே, மதுரை ஸமஸ்தானத்தில் சிலபிரதான பட்டணங்களைப் பிடிக்கவும், பிரபல சேனையைத்திரட்டிக்கொண்டு தக்காணத்து இடல்கான் வர, சொக்கநாதர் கேட்டு இனிச் சிற்றின்பத்திலும் பேரின்பத்திலும் காலம் போக்கிக் கொண்டிருந்தால் தமது இராஜியமே போய்விடுமென்று தெரிந்து திடீரெனஒரு வாலிபனைப்போல் கர்ஜித்து எழுந்தும் தமக்கு அநுகூலராகவிருந்தவர்களுடைய சேனைகளோடு தமதுசேனையைச் சேர்த்தும், சண்டைக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். மகமதியரும், மைசூராரும்மயங்கிநிற்க, சிவாஜி என்னும் மஹாராஷ்டிர வீரன் 1677 ஆம் தென்தேசங்களை நாடிவருகிற சங்கதி தெரிந்து பயத்தோடு பார்த்துக்கொண்டிருக்க, சிவாஜியும் வந்து செஞ்சிகோட்டையைப் பிடித்துக்கொண்டும், தஞ்சையிலிருந்த தனது சகோதரன் எக்கோஜியைச் சினேகபாவங்காட்டி தருவித்துப் பிடித்து அந்தஎக்கோஜி கால்களில் விலங்கைமாட்டி, அவன் சொத்தைப் பிடுங்கப்பார்க்கையில்; எக்கோஜி தந்திரமாக விலங்கை நீக்கிவிட்டு கொல்லிடத்தில் குதித்து நீந்திக்கொண்டு அடுத்தகாட்டில் மறைந்துகொண்டான். இந்தவேளையில் வடக்கில் மோகல் சமஸ்தானத்துக்கும், விஜயநகரசமஸ்தானத்துக்கும் பிரபல சண்டைகள்உண்டாகப்போகிறதாகச் சங்கதியைக்கேட்ட சிவாஜி தமது சொந்ததம்பி சந்தோஜிராவைத் தக்ஷணசேனைத்தலைவனாக விட்டுப்போனார். இது சமயமறிந்தசொக்கநாதர் தஞ்சாவூரைப் பிடிக்கப்போகவே, எக்கோஜி அறிந்து தமது சகோதரன் சந்தோஜியிடம் போய் போதுமானபொருள் கொடுப்பதாகவும், இந்தச்சமயத்திற் உதவி செய்யவேண்டுமென்றும் வருந்திவேண்டிக் கொள்ள; சந்தோஜியும் சம்மதித்து எக்கோஜிக்கு உதவியாகப்போக சொக்கநாதர் திரும்பி திரிசிராப்பள்ளிக்கே வந்துவிட்டார். இப்படிசொக்கநாதர் தஞ்சைக்குப்போன சமயமறிந்து, மைசூரா பெரும்படையோடு

வந்து இரண்டொரு கோட்டைகளுக்கு மூற்றுகைப்போட, அம்முற்றுகையை நீக்கவகையற்று தத்தளிக்க நேர்ந்தது. அப்படியாவதற்குக் காரணம்.

சொக்கருடைய தம்பி முத்துலிங்கனுடைய துர்மந்திரியாகிய கோவிந்தப் பய்யன் தந்திரமாக சொக்கநாதருக்கு புத்தி சுவாதீனமில்லை என்று பறையடித்தும், அவரை சிறையில் போடும்படி செய்தும்; முத்துலிங்க நாயடுக்கு மகுடாபிஷேகம் செய்வித்து விட்டபடியால், கொடுங்கோலனாகிய கோவிந்தப்பயனாலும், முத்துலிங்கனாலும் குடிகள் அதிகமாகவருந்த சம்பவித்தது. இத்தோடுகூட 1677 வருஷம் டிசம்பர்மாதம் மலையாள நாட்டிற் பெய்த மிதமிஞ்சிய மழையினால் திரிச்சி, மதுரைமுதலான நாடுகளில் அனேக கிராமங்களையும் குடிகளையும் வெள்ளம் வாரிக்கொண்டுபோக; பஞ்சமும் வாந்திபேதியும் பிரபலமாகி பல்லாயிரம் ஜனங்கள் பரகதியடைந்தார்கள். இப்படிப்பட்ட காலத்தில் முத்துலிங்க நாயடு மூடதனத்தினால் முன்னும் பின்னும் யோசிக்காமல், சொக்கநாதர் அபிமான புத்திரனாக வளர்த்துவந்த ரஸ்தம்கானை தனது சேனைத் தலைவனாக நியமிக்க; அந்தமகமதிய தளகர்த்தனும் அதிகாரம் கைக்கொண்டபிறகு கோவிந்தப்பய்யனுடைய அக்கிரம நடவடிக்கைகளையும், முத்துலிங்கருடைய மூடதனத்தையும் அறிந்து, சமயம்பார்த்து சிறையில் வைக்கப்பட்டிருந்த சொக்கலிங்கரை விடுதலை செய்தும், அந்தச் சிறைச்சாலையில் முத்துலிங்கனையும், கோவிந்தப்பய்யனையும் போட்டு பூட்டி அப்போது ஸமஸ்தானத்தை வளைந்துகொண்டிருந்த மைசூராரைத் துரத்தியடித்தும் சொக்கநாதரைச் சுதந்திரம்பெறச செய்தான். இப்படிச்செய்த ரஸ்தம்கான் இரண்டு வருஷம் மரியாதையாக நடந்துகொண்டிருக்கையில், இந்தரஸ்தம்கான் தனக்குச்செய்த பழியைத்தீர்க்க பக்குவம் பார்த்துக் கொண்டிருந்த கோவிந்தப்பய்யர் அவன்மேல் பல துர்வதந்திகளையுண்டாக்கி, சேதுபதி முதலானவர்களுக்குச் சங்கதி ரகசியமாக அனுப்பித் தருவித்தும் ரஸ்தம்கானைத் துண்டுதுண்டாகவெட்டிக் கொல்லும்படி செய்தும், இப்படிச்செய்து சொக்கநாதருடைய தயவை மறுபடியும் சம்பாதித்துக்கொண்டான். சம்பாதித்தாலுமென்ன, 1682-ம் வருஷம் சொக்கநாதர் பாடு கேவல ஸ்திதிக்கு வந்துவிட்டது. அதாவது இந்த ஸமஸ்தானத்தைப் பிடுங்கி வாயில் போட்டுக்கொள்ளமைசூரார் மறவர் சிவாஜி மகன் சம்போஜி, மேற்படியார் தம்பிஎக்கோஜி முதலானவர்கள் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்

இந்நால்வரில் மைசூர் சேனைத்தலைவனாகிய குமாரராயன் தஞ்சை, செஞ்சிக்கோட்டைகளைப் பிடித்து அவற்றின் வார்சுகளுக்குக் கொடுக்கவிரும்பி, தமது பொதுப் பகையாளிகளாகிய மகமதியர், மராட்டிய

[illegible] தாக்க, சொக்கநாதருடைய உதவியை முதலில் நாடினர். இந்த வார்த்தைகளுக்கு சொக்கநாதர் இணங்காமல், சோம்பலாகவும், அசட்டையாகவும் இருக்க, மைசூர் வீரன் எக்கோஜி சம்போஜியின் உதவியை நாடி, அந்த இரண்டு மராட்டியர் தமக்கு உதவிசெய்தால், மதுரை நாட்டைப்பிடித்து மூவரும் பங்கிட்டுக்கொள்ளலாமென்று சங்கதி அறிவித்தான். இந்தச் சூதையறிந்த மராட்டியமன்னர், மைசூர் வீரனைப்பிடித்து சிறையில் போட்டுவிட்டு, தமது சேனைகளைநடத்திக்கொண்டு மதுரைக்கோட்டை தவிர மற்ற சிறுகோட்டைகளை வசமாக்கிக்கொண்டுவர, மறவர்கள் மதுரைக்கொட்டையை யாதரித்தார்கள். இத்தியாதி அசம்பவங்களைக் கண்ட சொக்கநாதர் தமது நிர்ப்பாக்கிய ஸ்திதியை நினைந்துநினைந்து மனமொடிந்து 1682-ஆம் வருஷம் கனம் டெயிலர் சரித்திரத்தின்படி. சாப்தம் 1610- 2- 1688) பரிதாபிவருஷம் முதல் பிரபவ வருஷமாகிய 16 வருஷங்கள் ஆண்டு மரணமடைய, அவர்குமாரர் இரங்ககிருஷ்ணமுத்து வீரப்பநாயடு சிங்காசனம் பெற்றார்.

## ஸ்ரீரங்க கிருஷ்ணமுத்து வீரப்பநாயடு. ஸமஸ்தானம்.

கி. பி. 1682 முதல் 1686வரையில்.

---

சொக்கநாத நாயடு பட்டத்துக்கு வந்தபோது வயது 16. அதாவது ஒருபாடசாலை வாத்தியாருக்குமுன் கைகட்டிக்கொண்டு பாடம் படிக்கவேண்டிய ஒருவாலிபனுடைய வயசு அப்படிப்பட்டகாலத்தில் அவரைத் தக்கஉபாத்தியாரிடம்விட்டு படிப்பு சொல்லிக்கொடுத்தும், புத்திசாலியாக்கவேண்டியதைவிட்டு; பெரிய ஸமஸ்தானத்தைஆள விட்டதினால் கல்வியறிவும் அனுபவமுமற்று ஸமஸ்தானத்தைச சின்னபின்னமாக்கிவிட்டார். அப்படிப்பட்டவருக்குப் பிறகு அவர் பட்டத்தையடைந்த அவர் குமாரருக்கும் வயது 15. ஆகவே ஸமஸ்தானத்தின் அநேக கோட்டைகளை அந்நியர் பிடித்துக் கொண்டதோடு, உள் நாடுகளில் கள்ளர்களே தமயிஷ்டப்படி கொள்ளையடித்துக் கொண்டுவந்து தாமே குறுநிலமன்னராகி விட்டார்கள்.

இப்படிப்பட்டகாலத்தில் இராமநாதபுரத்தின் சேதுபதி இறந்துபோக, இராஜசூரிய சேதுபதி அப்பட்டத்திற்குவர, அவர் பட்டமேறிய ஆறுமாதத்திற்குள் யாதொரு தப்புநடவடிக்கைகளை நடத்தியதாக தளவாய் வேங்கடகிருஷ்ணப்ப நாயடுக்குத் தெரிந்து அவர்இந்த சேதுபதியைப்பிடித்து சிறையில்போட, அங்குஇறந்தார். அவருக்குப்பதிலாக, அதன் முதலானவர்கள் சிலநாள்கள் சேதுபதியாக இருக்கினும், பழய சேதுபதியின் வைப்புக்குமாரராகிய இரகுநாதன் அல்லது கிழவன் சேதுபதி பட்டத்தையடைந்து (36-வருஷம்) ஆண்டார்.

இந்தக் கிழவன் சேதுபதி காத்தாயி என்னும் ஒரு கள்ளஜாதிப் பெண்மேல் மோகங்கொண்டு கலியாணம் செய்துகொண்டதால் அவர் சகோதரர் இரகுநாதருக்கு "தொண்டமான்" என்று பட்டம் சூட்டி புதுக்கோட்டைக்கு அரசாக்கினாராம். இந்தக்கிழவன் சேதுபதி மதுரை மன்னனுக்குச் செய்த உதவிக்காக "பரராஜ கேசரி" என்ற பட்டப்பிருதைப் பெற்றார் நிற்க—மைசூராரும், மஹாராஷ்டிரர்களும் மதுரை ஸமஸ்தானத்தின் பல கோட்டைகளைப் பிடித்துக்கொண்டதன்றியில், மதுரை ஸ்ரீரங்க முதலான பெரிய கோயில்களிலிருக்கும் ஆடையாபரணங்களையும் அடித்துக் கொண்டுபோக பிரயத்தனப் பட்டார்கள். இத்தியாதி அக்கிரமங்களைக் கண்டிக்க மதுரைஇளவரசருக்கு அப்போது சொத்தஞ்சேனையுமில்லாமல் சுவாமியே கதியென்றுசும்மாயிருந்து விட்டார். இப்படி இரண்டுமூன்று வருஷங்கள் செல்ல மைசூராருக்கும், மஹாராஷ்டிரருக்கும் பணக் கொள்ளையினால் பொறாமை யதிகரித்து. ஒருவரையொருவர் தாக்கிக்கொண்டு தந்தம் நாட்டுக்குப் போய்விட, மதுரை சமஸ்தானத்தை மூடிக்கொண்டிருந்த மூடுபனியைப் போன்ற பகைவர் பயம் பாழ்த்தது.

அப்போது இந்த அரங்க கிருஷ்ண முத்து வீரப்பருக்கு 20-வயதாகியதாலும், இயற்கையறிவும் காரிய நிர்வாக சக்தியும், சுறுசுறுப்பும், சுதந்திர நாட்டமும், விருத்தியாகிய தாலும்; உடனே, தமது ஸமஸ்தானத்திலிருந்து லஞ்சம் பரிதானம் வாங்கும் உத்தியோகஸ்தர்களையும், பாவையரைக் கூட்டிக்கொடுக்கும் பாவிகளையும், குடிகளை வருத்தும் துஷ்டர்களையும் நீக்கிவிட்டு நல்ல படிப்பும், யுத்தியும், சத்தியமும், சாந்தமும், சுவாமி பக்தி முதலான குணச்சிறப்புகளையுமுடையவர்களைத் தெரிந்தெடுத்து நியமித்தும், சர்க்கார் கந்தாயத்தைக் கிரமமாக வசூல் செய்யாமல் விட்டு பாழ்த்துக்கிடந்த பொக்கிஷத்தைப் பூரணமாக்கியும்;சமஸ்தானத்தின் ஒவ்வொருவேலையையும் ஒவ்வொருவரும் பிரதி தினமும் சரியாகச் செய்தார்களா இல்லையா என்பதைத் தெரிந்தும், மேல் விசாரணை செய்தும் வந்ததன்றியில், தாமும் கொஞ்சமேனும் சோம்பலையும், சுகத்தையும் விரும்பாமல், குதிரைமீது ஏறிக்கொண்டு போய் திருநெல்வேலியில் நடக்கும் வேலைகளையும், திரிசிராப் பள்ளியில் நடக்கிற வேலைகளையும் பார்த்து வருவார். சிலசமயங்களில் இரவில் வீதிகளில் திரிந்து வேவுகாரர்களை நம்பாமல் தாமே உண்மை கண்டு பிடித்தும், சில சமயங்களில் திண்டுக்கல்லுக்குப் போவதாகப் போய், வேறுவழியில் வேறு இடங்களில் உத்தியோகஸ்தர்களுடைய நடவடிக்கைகளை நேரில் பார்த்தும் உண்மை கண்டு பிடிப்பார். இத்தியாதி விஷயங்களில் மதுரையில் இதற்குமுன் ஆண்ட எந்த மன்னனும் இப்படி அதிகாரம் செய்யவில்லை என்று குடிகளால் புகழப் பட்டதன்றியில்; குடிகளும் தம் நேர் நிர்வாகங்களை நேரில்வந்து சொல்லிக்கொள்ள இடமும் கொடுத்தார். அதற்கு ஒரு உதாரணமாக.

இந்த வாலிப ராசன் திரிசிராப்பள்ளியில் ஆண்டு வருகையில், சில ஏழைக் கிறுஸ்தவர்கள் வந்து தாம் வசிக்கக் கொஞ்சம் இடம் கொடுக்க வேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு அரங்க கிருஷ்ணர் இரக்கம் கொண்டு கோட்டையில் எவருக்கும் உபயோக மில்லாமல் காலியாக யிருக்கும் ஒரு நிலத்தை அக்கிறுஸ்தவர்களுக்கு தருமமாகக் கொடுக்கும்படி சொல்ல, அந்த இடத்தை முன்னடியாக ஸமஸ்தான உத்தியோகஸ்தர் சூதாகவினால் அறிந்த சில பிராம்மணர்கள் எனக்கு உனக்கு வேண்டுமென்று கலகஞ் செய்தும்; அரசனிடம் வந்து, **"அரசே அந்த இடத்தைக் கிறிஸ்தவர்களுக்கு கொடுக்கக் கூடாது, அது எங்கள் சுவாமியாகிய விக்கிரகத்தை வைத்து பூசை செய்ய வைத்திருக்கிறோம், அதை அவர்களுக்குக் கொடுத்துவிட்டால் எங்கள் சுவாமிவிக்கிரகங்களை எங்கே கொண்டுபோய் வைக்கிறது"** என, அரசன் கேட்டு, பிராமணரென்றும் சுஜாதி இந்து மதஸ்தரென்றும் பாராமல், நிர்தாக்ஷண்யமாக "உங்கள் சுவாமிகளாகிய விக்கிரகங்களை வைக்க இடமில்லாவிட்டால் அவைகளைக் கொண்டுபோய் ஆற்றில் போட்டுவிடுங்கள், உயிருள்ள சுவாமிகளாகிய, ஏழை சனங்கள் அந்த இடத்திலே வாழட்டும் என்று சொல்லிவிட்டாராம். இவ்வார்த்தையைக் கேட்ட பிராமணர்கள் பயந்து திரும்பி விட்டார்கள். இப்படி சுதந்திரம் காட்டியது கேவலம் பிராமணர்களிடத்தில் மாத்திரமன்று; மற்ற மேலான அதிகாரிகள் அக்கிரமம் செய்தாலும் அதைக்கண்டித்து வந்தார். அதற்கொரு திருஷ்டாந்திரமாவது,—டில்லியில் அப்போது மிக்க கம்பீரமாக ஆண்டுவந்த மொகலாய் பாதுஷா அவர்கள் வருஷத்திற் கொருதடவை தமது பழைய ஜோட்டைச் (செருப்பை) ஒரழகிய, பெரிய யானையின் அவுதாவில் வைத்தும், அதற்குத்தக்க சில நபாபுகளையும், பக்கிரிகளையும், சேனைகளையும், சேர்த்தும், இந்தியாவில் உள்ள ஒவ்வொரு இராஜ சமுகத்திற்கு அனுப்பியும், அந்தந்த ராஜர்கள் தம் தம் மரியாதைகளுடன் வந்து அழைத்துப்போயும் தமது ஸமஸ்தான சிங்காசனத்தின் மீதில் அந்த ஜோடுகளை வைத்தும், புஷ்பங்களைப்போட்டும் பூசை செய்தும் வணங்கியபிறகு, அந்த ஜோட்டுடன் கூடவந்த நபாபு பக்கிரி தண்டு தளாதிகளுக்குத் தக்க மரியாதைகள் செய்தனுப்பிக்க வேண்டுமென்றும், அப்படிப்பூசை செய்யாதவர்கள் சிட்சிக்கப்படுவார்களென்றும் சகல மன்னர்களுக்கும் தெரிவித்தும், தெரிவித்தபடியே நடத்திக்கொண்டும் வந்தார்கள்.

அந்த வழக்கத்தின் படியே அரங்ககிருஷ்ண முத்து வீரப்ப நாயடு ஸமஸ்தானத்துக்கும் அந்த பாதுஷாவின் ஜோடுகளைக் கொண்டுவந்த யானையும், பரிவாரங்களும் வந்து நகர்புறம் நின்று சங்கதி தெரிவிக்க, அரங்க மன்னரும் கேட்டு அட! இப்படிப்பட்ட ஹீனமான பிழைப்பும் புருஷ ஜன்மத்துக்கிருக்குமோ! என்று எண்ணி தமது காரியஸ்தர்களைத் தருவித்தும், அவர்கள் மூலியமாக, இராசன் தேகசவுக்கிய மில்லாதிருக்கிறார் என்று சேதி சொல்லி யனுப்ப; அவர்களும் அப்படியே போய் சொல்ல, அம் மகமதியர் மகத்தான கோபங் கொண்டு, விதி யில்லாமல் ஜோடுதூக்கும் யானையை வாத்திய கோஷத்துடன் கோட்டைக்குள் விட்டு, யானையையும் தண்டு தளாதிகளையும் வெளியில் நிறுத்தி

விட்டு ஜோட்டை மாத்திரம் ஏறு பல்லக்கி லேற்றிக்கொண்டு இராஜ கொலு மண்டபத்துக் கருகில் வைத்தும், அங்கிருக்கும் அந்த நவரத்தின கசிதமான சிங்காசனத்தையும், அதன்மேல் அழகிய ராஜனும், அவனைச்சுற்றி மந்திரி பிரதானி முதலானவர்கள் சூழ்ந்திருப்பதையும் பார்த்து பெருமூச்சுவிட்டும், தமது பல்லக்கில் வந்த ஜோட்டைக் கவனிக்காமல் அசட்டையாக இருப்பதைக் கண்டு கோபங் கொண்டும், பல்லக்கிலிருக்கும் ஜோட்டை எடுத்து வெளியில் வைத்து, அதை இராஜனுக்குக் காட்டியும், அதை இராஜ சிங்காசனத்தின் மீது வைத்து வணங்கவேண்டிய விதங்களைச் சொல்ல; இளஞ்சிங்கமாகிய அரங்க கிருஷ்ணன் கோபத்தோடு கீழே குதித்துவந்து, அந்த ஜோட்டை வணங்காமல், அதைத் தன் காலில் மாட்டிக்கொண்டு: "இன்னொருகால் ஜோடெங்கே? உங்கள் பாதுஷாவுக்கு இந்த பழைய ஜோடுதவிர வேறு புது ஜோட்டையிரெண்டாக அனுப்பத் தெரியவில்லையோ?", என்று பரிகாசமாகச் சொல்ல, அம்மகமதியர்களுக்கு கோபம் அதிகரிக்க; அவர்களை அருகிலிருக்கும் பிரம்புக்காரர்களை அழைத்து ஆள் ஒன்றுக்கு ஐந்தடி அடித்து அனுப்புங்களென்று சொல்லி, அவர்கள் சேனையானையைத் துரத்திவிட்டாராம். அன்று முதல் பாதுஷா ஜோட்டைப் பூஜைசெய்ய அனுப்புகிறவழக்கத்தை விட்டாராம். இம்மாட்டோ! இன்னும் இந்தவாலிப நாயகனின் சுதந்திர சாமார்த்தியத்தைப்பற்றி பலவிதக் கதைகளைச் சொல்வதுண்டு.

இந்தவாலிபநாயக்கர் இப்படிப்பட்ட சுதந்திரம் விரும்பி யாகையால், இவருடைய மந்திரி பிரதானி உத்தியோகஸ்தர்கள் தம் இஷ்டப்படி எக்காரியமும் செய்ய இடமில்லை. ஆகவே இவருடைய சக்தி சாமார்த்தியத்தைக் கண்டமைசூராரும், மஹாராஷ்டிரரும், இவரோடு நேர்நின்று சண்டைசெய்யப் பயந்தார்கள். இப்படிப்பட்ட காலத்தில் இராமநாதபுரம் கிழவன் சேதுபதி எக்கோஜியின் உதவியினால் இந்த ரங்ககிருஷ்ண நாயக்கருக்கு விரோதமாகச்சண்டைசெய்ய யோசித்தாலும், இவருடைய சேனையின் பலத்தினால் சேதுபதியின் ஜயம் முடியவில்லை. அவருக்கு உதவியாகப் போன எக்கோஜியின் சேனையைத் துரத்தி தஞ்சாவூருக்குப் போகச்செய்தார். இந்த ரங்ககிருஷ்ணநாயக்கர் சமரசஞானியாகி கிறிஸ்தவர்களையும் மரியாதையாக நடத்திவந்தாலும், மறவஜாதியார் கிறிஸ்தவர்களைத் தலையெடுக்காமல் கண்டித்து ஜான்-டி-பிரிட்டோ (John de Britto) என்ற போதகரையும் கொலைசெய்து போட்டார்கள். 1689-ஆம் வருஷம் இந்த ரங்ககிருஷ்ணம் நாயக்கருக்கு திடீரென்று அம்மை வியாதிகண்டு (சகாப்தம் 1619 ஹூ கி பி (1695) விபவமுதல் பவ வருஷமாகிய 7 வருஷங்களாண்டபிறகு) இறந்து விட்டார். அவருடைய ஏகபத்தினி விரதத்தை மெச்சிய மனைவி "முத்தம்மாள்" உடனே உடன்கட்டை யேறப்போனாள். அப்போது ஸமஸ்தானத்துக்கு வேறு சந்ததி யில்லாமையாலும், அந்த முத்தம்மாள் பூரண கர்ப்பவதியாக இருந்தமையாலும், பிள்ளை பிறந்தவுடனே அந்த விரதத்தைச் செய்யலாமென்றும், அவருடைய மாமியார் "மங்கம்மாளும்" மற்ற நெருங்கிய பந்து மித்திரர்களும் சொன்ன சத்தியவாக்கை நம்பியிருக்க, புருஷப் பிரஜையைப் பெற்று மறுநாளே உடன்கட்டையேற உத்தரவு கேட்க, இன்னுங்

கொஞ்சகாலம் போகட்டுமென்று சாக்குப் போக்குகள் சொல்லிவர, அந்தம்மாள் பிரசவ அறையில் பன்னீர் வாங்கிக் குடித்து அதனால் சீதசன்னி கண்டு சுவர்க்கலோகபதவியை அடைந்தாள். ஏனைய பெண்டுகளைத் தம்மாதாவைப் போலபாவித்துவந்த இரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயடுக்குப்பிறகு அவர்குழந்தைக்கு மூன்றுமாத வயதான உடனே, மதுராபுரி பட்டத்தைக் கட்டினாலும், அக்குழந்தைக்குப்பிரதிநிதியாக அவர் பாட்டியார் மங்கம்மகாரு ஆண்டுவந்தார்.

## ஸ்ரீ மங்கம்மகாரு ஸமஸ்தானம்.

1687௵ முதல் 1699௵ வரையில்

மங்கம்மாள் இயற்கையாகவே தருமகுணமும் இராஜதந்திர ஞானமும், சத்தியமும், சுவாமி பக்தியு முடையவராகையால்; மதுரை சமஸ்தானம் திருமலைநாயடுகாருகாலத்தில் மேன்மைப் பட்டிருந்ததைப்போலவே அந்தம்மாள் காலத்திலும் மேன்மைப்பட ஆரம்பித்தது.

அந்தம்மாள் செய்த தருமங்களுக்குக் கணக்கில்லை. இராமேச்சுவர முதல், காசி வரையில் யாத்திரைக் காரருக்கு வசதியான ரோட்டுகளையும், சாலைவிருக்ஷங்களையும், சத்திரங்களையும், தண்ணீர்பந்தல்களையும், சுவாமிமண்டபங்களையும், கோயில்கோபுரங்களையும் உண்டாக்கிவைத்தார். அவருடைய திருப்பணிகளில்சில இன்றளவும்அவர் பெயரைப் புகழ்ந்துக்கொண்டாடுகின்றன. அவர் காலத்தில்வைத்த சாலை விருக்ஷங்களில் சில இன்றளவும் அவர் பெயரைப் பாடிக்கொண்டிருக்கின்றன. அந்தம்மாள் இப்படி மிதமிஞ்சிய தருமங்கள் செய்ததற்கு காரணம் ஒருநாள் தாம் மறந்துபோய் தம் தாம்பூலத்தை இடதுகை விரலால் வாயிலிட்டுக் கொண்டாராம். அந்தப் பாவம்தீர இப்படிசெய்ததாக சிலர்சொல்லுகிறார்கள்; ஆயினும், அந்தம்மாள் உண்மையில் தருமமெல்லாம் திரண்டு ஒருங்கு வந்த இயற்கைத் தருமத்தாய் என்று சொல்லலாம்.

மங்கம்மாள் செய்த தருமங்கள் இந்து மதஸ்தர்களுக்கு மாத்திரமல்ல, ஏனைய மதஸ்தர்களுக்கும் செய்து வந்தார்கள். 1691-ம் வருஷம் (Father Mello) "மெல்லோ பாதிரி" யாரை மறவ நாட்டார் பிடித்துச் சிறையில் போட்டுக் கொலை செய்யத் தீர்மானித்திருக்கிற சங்கதி மங்கம்மாளுக்குத் தெரிய வந்த உடனே, அந்தப் பாதிரியாருக்கு எவ்வித தீங்கும் செய்யாமல், உடனே விடுதலை செய்தனுப்ப வேண்டுமென்று தெரிவிக்க, அந்தச் சேதுபதியும் உடனே விடுதலை செய்து அனுப்பிவிட்டார்.

திருவனந்தபுர சமஸ்தானத்தார், மதுரை சமஸ்தானம் மங்கலடைந்ததென்று எண்ணி தாம் கட்ட வேண்டிய கப்பத்தைக்கிரமமாகக்கட்டி வராமையால், 1697-ஆம் வருஷம் ஒரு சேனையை அவருடைய குலோன கோட்டைமீது அனுப்பினார்கள். அந்தச் சேனையைக் கண்ட திருவனந்த புர அரசன் முதலில் மதுரையாருக்குப் பயந்தவனைப்போல பாசாங்கு காட்டிப் பிறகு சமயம் பார்த்து தனது சேனையைவிட்டு மதுரைச் சேனையைச் சித்திரவதை செய்யும்படி செய்ய, அனேகர் மாண்டு சிலர் மாத்திரம் திரும்பி திரிசிராப்பள்ளிக்கு வந்துசேர்ந்தார்கள்.

இது சங்கதியை மங்கம்மாள் கேட்ட உடனே தமது சேனையை இப்படி அக்கிரமமாகச் சித்திரவதை செய்து பழியைத் தீர்த்துக்கொள்ள ஒரு பெரிய சேனையைத் திரட்டி தமது தளவாய் நரசப்பையரை அனுப்ப, அவரும் திருவநந்தபுரம் போய் பிரபல சண்டைசெய்து ஜெயித்து ஏராளமான பொன்வெள்ளி நாணயங்களையும், பீரங்கிகளையும் எடுத்துக் கொண்டு அந்த ராசன் கட்ட வேண்டிய கப்பத்தையும்பாக்கி இல்லாமல் வசூல் செய்துகொண்டு வந்தார்.

1700-வருஷம் திருநெல்வேலி ஜில்லாவில் சில பெரிய புலிகள் காட்டிலிருந்து வந்து குடிகளைக் கொன்று குடிகள் நடமாடாதபடி செய்துவருவதை மங்கம்மாள் காதில்விழ, உடனே தக்க மல்லக ஜட்டிகளையும், வேட்டைக்காரர்களையும் அனுப்பி அப்புலிகளைக் கொன்று அக்குடிகளுக்கு நிம்மதியை யுண்டாக்கினார். இந்தம்மாளுடைய தரும குணங்களைக் கேள்விப்பட்ட (Father Boachet) போசிட் பாதிரியார் இந்த ராஜ மஹிஷியை நேரில் கண்டு களிக்கவேண்டுமென்று தளவாய் மூலியமாக மனுவை யனுப்ப, மங்கம்மாளவர்கள் அந்தப்பெரியவரைத் தமது மந்திரி மூலியமாகத் தருவித்தும் அவர்க்கு வேண்டிய உதவிகளைச் செய்யும்படி கட்டளையிட, தளவாய் நரசப்பையரும் அதேமாதிரியாக உத்தரவுகொடுக்க, அந்தப் பாதிரியார் அரண்மனைக்குள் வந்து, மந்திரியோடுக் கலந்துபேசித் தாம் மஹாராணியாருக்கு இனாமாகக் கொண்டுவந்த கண்ணாடிக் குலோப் முதலானதுகளைத் தந்தனுப்ப, மங்கம்மாளும் அன்புடன் பெற்றுக்கொண்டு, தாம்அந்த புரஸ்திரீ யாகையால், வெளியில் வந்து அவரோடு பேசக்கூடாததைப் பற்றி விசனப்படுவதாகவும், பாதரியாருக்கு என்னவேண்டுமோ அதைச் செய்விக்கச் சித்தமாக இருப்பதாகவும், சொல்லி யனுப்ப, பாதரியார் கள்ளர் முதலான துஷ்டர்கள் கிறிஸ்தவர்களை வருத்தாமல் பாதுகாக்க வேண்டுமென, அப்படியே செய்வோமென சொல்லி அப்பெரியவரை இராஜபல்லக்கில் ஏற்றி சகல வாத்தியங்களோடு நகர்வலம் சுற்றி அவருடைய இடத்தில் கொண்டுபோய் விட்டுவரும்படி உத்தரவு செய்தார்.

இக்காலத்தில் தஞ்சை மஹாராஷ்டிர இராசன் திரிசிராப் பள்ளியையடுத்த படுகை பூமிகளை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகத் தமது நாட்டுடன் சேர்த்துக்கொண்டு வருவதை தளவாய் நரசப்பையன் அறிந்து, அக்காரணமாக ஒரு சேனையைக் கூட்டிக்கொண்டு, தஞ்சாவூருக்குப்போக, அது சங்கதியை யறிந்த மஹாராஷ்டிரர் சேனை யெதிர்த்து காவிரி நதியி லிறங்கித்தாக்க வர; அப்போது காவிரியில் புதிதாக வந்த பெரிய வெள்ளம் அநேக மஹாராஷ்டிர சேனா வீரரை அடித்துக்கொண்டு போய்விட; மதுரைச்சேனை தஞ்சாவூரைச் சார்ந்த சில கோட்டைகளைப் பிடித்துக்கொண்டும்; தஞ்சைக்கும் முற்றுகை போட; மஹாராஷ்டிர ராசா இந்த யுத்தத்துக்குக் காரணம் தமது மந்திரி, "வரபோஜி பாண்டின்" தான் என்று எண்ணி, அப்பண்டிதர் தலையை வெட்டிக் கொல்லத் தேடுகையில்; அந்த வரபோஜி நேரில் வந்து அரசே! இது என் குற்றமன்று, எனக்கு 8-நாள் வாயிதா கொடுத்தால் மதுரையாரைச் சமாதானம்

செய்து விடுகிறேன், என்று உத்தரவு கேட்டுக்கொண்டு, ஊரிலுள்ள வர்த்தகர், பிரபுக்களிடம் ரொக்கம் கடன் வாங்கியும், கஜானாவிலிருந்த பணத்தை எடுத்தும், கிட்டத்தட்ட 5,00,000-ரூபாய் சண்டைச் செலவில், முக்கால் பாகத்தை மங்கம்மாள் போதத்தில் வைத்தும், மற்ற பாகத்தைத் தளவாயின் தர்மை முதலான வர்களுக்கு இலஞ்சம் கொடுத்தும் சமாதானமாக்கி அனுப்பி விட்டார்.

1701-ஆம் வருஷம் மங்கம்மாளும் தஞ்சை மன்னரும் கூடி மைசூரார் மீதில் படை எடுத்தார்கள். அப்படிச் செய்வதற்கு காரணம்— மைசூர் மன்னர் காவிரி நதியின்மேல் பெரிய அணைபக்கட்டி, அதன்ஜலத்தை எல்லாம் தனது நாட்டு பயிர் பச்சைகளுக்கு வடித்துக்கொள்ள, காவிரி நதியை நம்பியிருந்த திரிசிராப்பள்ளி, தஞ்சை நன்செய்ப்பயிர்கள் நஷ்டமடைந்து வந்ததியாம். மதுரை தஞ்சை சேனைகள் மைசூரை சேருவதற்குமுன், காவிரியில் பிரமாதமாகப் பிரவாகம் வந்து அந்தப்புது அணையை அடியோடு அடித்துக்கொண்டு போய்விட்டபடியால், தண்ணீர் தாராளமாக திரிச்சி தஞ்சைக்கு வரக்கண்டு சேனைகளைத் திரும்ப தருவித்துக் கொண்டார்கள்.

1702-வருடம் தளவாய் நரசப்பையன் தன் சேனையோடும், தஞ்சை சேனையோடும் கூடி தம் ஸமஸ்தானத்துக்கு அடங்கி நடவாமல் வம்பு செய்த கிழவன் சேதுபதியோடு சண்டை செய்யப்போனதில்; சேதுபதியால் தாக்கப்பட்டு கொல்லப்பட்டார். என்ன விந்தை கேவலமான இராமநாத பாளையப்பட்டுச் சேனை பிரபலமான பாண்டிய நாட்டாருடையவும் தஞ்சை நாட்டாருடையவும் பெரிய சேனையைத்தாக்கி துரத்தி யடிக்கச் சம்பவித்தது. இதற்குக் காரணம் மதுரை தஞ்சை சேனைகள் பற்பல ஜாதி மதஸ்தர்களாகவும், தேசாபிமான மற்று கூலிக்கு மாரடிப்போராகவும் இருந்தார்கள், ஆனால் மறவர்சேனையோ ஒரேஜாதி, ஒரே மதம், ஒரே இனம், ஒரே எண்ணமாகி தேசாபிமானத் தோடு சண்டை செய்ததினால் அச்சிறு சேனா பெரும் சேனையை வென்றது.

1704-அல்லது 1705-ல் மங்கம்மாளுடைய பேரனுக்கு மைனர் நீங்கி சமஸ்தானத்தை ஆளும்படியான வயது வந்துவிட்டபடியால், அந்தம்மாள் தனது மந்திரி அச்சயன் என்பவருடைய துர்ப்போதனை யினால் அப்போது இராஜியத்தை வாலிபனுக்குத் தரமறுக்கவே; வாலிபன் கட்சியார் மங்கம்மாளைத் தந்திரமாக பிடித்து ஜெயிலில் போட்டதன்றியில்; வேண்டிய உணவுகளைத் தயார்செய்து கைக்கெட்டாத தூரத்தில் வைத்து; வதைத்து அவ்வேதனைத் தில் சாகும்படி செய்து விட்டார்கள். அந்தோ! என்ன அநியாயம்! இவ்வளவோடு விட்டார்களா? இந்தம்மாளைச் சொல்லாதவார்த்தைகளைச்சொல்லி நிந்தித்தார்கள். இந்தம்மாள் கல்வியும் நாகரிகமும் விருத்தியாகும் இக்காலத்தில் பிறந்திருந்தால் தன் ஜாதிக்கும், தன் தேசத்துக்கும் சிரோபூஷணமாகப் பிரகாசிப்பார். ஆனால், டெய்லர் சரித்திரத்தின்படி மங்கம்மாள் சகாப்தம் 1635வது (கி.பி. 1713) யுவ்வருஷம் முதல் நந்தன வருஷமாகிய 18-வருஷங்கள் ஆண்ட

(விஜைய ரங்கநாத அல்லது விஜையரங்க.)

## சொக்கலிங்கநாயடு சமஸ்தானம்.

கி. பி. 1705-ஆம் வருஷம் முதல் 1741-ஆம் வருஷம் வரையில்.

மங்காத புகழ் பெற்ற மங்கம்மாளுக்குப் பிறகு அவருடைய பேரனாகிய விஜயரங்க சொக்கநாத நாயடு பட்டத்துக்கு வந்து 26-வருஷங்கள் ஆண்டார். ஆண்டாலுமென்ன, தர்மப்பிரபுவானதையால் பிரதிதினமும் கோயில் கோபுரங்களைக்கட்டி வைப்பதிலும்; அக்கிரஹாரங்களை ஸ்தாபிப்பதிலும், பிராமணர்களுக்கு வாரிவாரி கணக்கற்றுக் கொடுப்பதிலும்; பிரதி வருஷமும், திவ்விய தேசயாத்திரை செய்வதிலும்; தமது காலத்தையும், காசையும் தொலைத்துவிட்டபடியால், ஸமஸ்தான காரிய கர்த்தர்கள் குடிகளைப் பல விதத்திலும் ஹிம்சித்து பொருள் பிடுங்கி பயி பாடு படுத்தினார்கள். மதுரையிலிருந்த ஸமஸ்தான சேனைகளுக்கு கிரமமாக சம்பளம் கொடாமையால், பிரஜைகள் கலகங்களுண்டாக அது சேதுபதி முதலான வர்களுடைய உதவியால் அடக்கப்பட்டது. இப்படி இராஜாங்க வேலையை சுத்தமாகக் கவனிக்காமல்; இரவும் பகலும், விஷ்ணு தியானத்தில் காலம் போக்கியும், சுஜாதிகளுக்குள்ளுண்டான ஜாதி கட்டுப்பாடுகளின் விவரங்களை விசிதமாகியும், அன்னியஜாதியார் பலிஜவாளைப்போல பட்டம் தரித்துக்கொண்டு வருவதைக் கண்டித்துக்கொண்டும், இராக்காலங்களில் யாருக்கும் தெரியாமல் ஏகாந்தமாகதம்பூரைமீட்டிப் பாடி ஸ்ரீ ரங்கநாதனை த் தரிசித்துக் கொண்டே வந்தும் 1731-ம் வருஷம் பரமபத மடைந்தார். கனம் டெயிலர் சரித்திரத்தின் படி சகாப்தம் 1654-ஞ (கி பி. 1713) விஜய வருஷமுதல் விரோதி விக்ருதி யாகிய 19- வருஷங்கள் ஆண்டார். இருவருக்கும் புத்திர சந்தான மில்லாமையால், ஸமஸ்தானம் இவர் மனைவி மீனாக்ஷியம்மாள் வசமாகியது:

## ஸ்ரீ மீனாக்ஷியம்மாள் அதிகாரம்.

1731-ம் முதல் 1738-ம் வரையில்,

இந்த மீனாக்ஷியம்மாள் மதுரை சமஸ்தானத்தை ஆண்டுவந்த சரித்திரம் விபரமாகத்தெரியவில்லை. ஆனால் இந்த மீனாக்ஷியம்மாள் திருமலை நாயடுபட்டத்திற்குபாத்தியஸ்தரும், திருமலை நாயடவர்களுடைய தம்பிமாருடைய குமாரருமாகிய குமார திருமலை நாயடுவின் புத்திரர் பங்காரு திருமலை நாயடுவினுடைய சிறு குழந்தையைச் சுவீகாரம் செய்து, அந்த பிள்ளைக்கு சரியான வயது வருகிற வரையில் தமது சகோதரனாகிய வேங்கடராயலு,பெருமாள் நாயடை பிரதிநிதிகளாகக் கொண்டு ஸமஸ்தான காரியங்களை நடத்தி வந்தார்.

இந்த நியமனம் தளவாய் வேங்கடாசாரியருக்கும், வேறு சிலருக்கும்திருப்தியைக் கொடாமையாமல், ஸ்வீகாரம் செய்துகொண்ட பிள்ளையின் பிதாவாகிய பங்காரு திருமலை நாயடு நேரான வாரிசாகையினால், அவனை விட்டு அவர் பிள்ளைக்கு பட்டங்கட்டுவது சரியல்ல வென்று சொல்லி அந்த பங்காரு

திருமலையைபிக்கு பட்டம்கட்ட பிரயத்தனப் பட்டார்கள். இதனால் ஸமஸ்தானத்தில் இரண்டு கக்ஷிகளாகி, இக்கட்சிகளில் பங்காரு திருமலை நாயடு கக்ஷி பலமான கக்ஷியாக விருந்தபடியால், கோட்டைக்குள் புகுந்து இராஜ்யபரிபாலனத்தைக் கைக்கொண்டு மீனாக்ஷியம்மாளைத் தவிக்கும்படி செய்துவிட்டார்கள்.

இப்படிப்பட்ட காலத்தில் (1734-வருஷம்) ஆறுகாட்டு நவாப்பாகிய "டாஸ்டு அலிகான்" என்பவர் தனது ஜேஷ்ட குமாரராகிய "சப்தார் அலிகானுக்கு, தென்னாடுகளில் சிலவற்றைப்பிடித்து ஆளுவதற்கு கொடுக்கக் கருதி, தகுந்த சேனையைத்திரட்டி அதற்குத் தனது குமாரன் சப்தார் அலிகானையும், மருமகன் சந்தா சாய்பையும் தலைவர்களாக நியமித்துத் தஞ்சை மதுரை காட்டார் கிராமமாக கப்பம் கட்டவில்லை என்ற சாக்குக்கொண்டு சண்டைக்கு அனுப்பினார். அவர்களும் அப்படியேவந்து தஞ்சையைப் பிடித்தும், அதைச் சந்தா சாஹிபின் தம்பி பாடாசாயுபு வசத்தில் விட்டுவிட்டும், திருவனந்தப்புரத்துக்குப்போய் அதைப்பிடித்து சின்ன பின்னமாக்கியும், கடைசியில் 1734-ஆம் வருஷம் திருச்சிராப்புள்ளிக்கு வரப் பங்காரு திருமலை நாயடு கக்ஷிக்காரர்கள் சப்தார் அலிகானைக்கண்டு பேசி, மீனாட்சி ராணியை, சிறையில் வைத்து, அந்த ராஜியத்தைப்பிடுங்கி "பங்காரு திருமலை" நாயடுக்குக் கொடுத்தால் 30,00000 (30 - லக்ஷம்) ரூபாய் இனாமாகக் கொடுப்பதாகச் சொல்ல, நபாபும் சந்தோஷமாக அங்கீகரித்துக் கொண்டார். ஆனால், திரிசிராப்பள்ளிக் கோட்டை பலமான கோட்டை யாகவும், அதை மீனாக்ஷி ராணியின் பலமான காப்புச்சேனை காவல் செய்துக் கொண்டும் இருந்தமையால்; இக்கோட்டையைப் பிடிக்க சப்தார் அலிகானால் முடியாதென்று கண்டு, இரு கட்சியாரையும் தருவித்து அவரவர் களுக்கிருக்கும் நியாயங்களை விசாரித்துத் தக்க பாத்தியஸ்தர் களுக்கு சமஸ்தானத்தைத் தரப்படும் என்று சொல்லி இரு கட்சியாரையும் முச்சலிக்கா எழுதித்தரும்படி சொன்னார். இந்தச் சமாதானத்துக்குச் பங்காரு திருமலை நாயடு கக்ஷியார் ஒத்துக்கொண்டாலும், மீனாக்ஷியம்மாள் கக்ஷியார் ஒத்துக் கொள்ள மாட்டோமென்று சொல்லி விட்டார்கள். அதன்மேல் இக்காரியத்தை முடிக்கும்படி சந்தா சாஹிபை விட்டுவிட்டு ஆர்க்காட்டுக்குப் போய் விட்டார்.

இந்த அசந்தர்ப்பத்தைகண்ட மீனாக்ஷியம்மாள் கக்ஷியார், சந்தாசாயிபு இந்த கக்ஷியில் பிரவேசியாமல் திரிசிராப் பள்ளியை விட்டுப் போய்விட்டால், நல்ல பகுமானம் தருவதாகச் சொல்ல, அவர் இந்தச் சமயத்தைப் பார்த்து, மீனாக்ஷி ராணியார் ஒருகோடி ரூபாய் இனாமாகக் கொடுத்தால் மாத்திரம் திரிசிராப்பள்ளிக்கோட்டையை ராணியார் வசமே இருக்கும்படி செய்து விடுவதாகச் சொல்ல; இந்த வெறும் வார்த்தையை நம்ப மாட்டோமென்றும், குரான் மீது சத்தியம் செய்து கொடுத்தால் மாத்திரம் நம்புவோமென்று இராணியார் கக்ஷியார் சொல்ல? சந்தாசாய்பும் சம்மதித்து, இராணியின் தமயனுரை காவிரி கரையிலிருக்கும் தளவாய் மண்டபத்துக்குக் கூட்டிக்கொண்டு போய்; ஒரு செங்கல்லை எடுத்து அந்தத் துங்கத்தட்டில் வைத்தும், அதன்மேல் அதைக்கொ

ரான் என்று காட்டியும், ஒரு மேன்காப்புத் துணியைப்போட்டு மூடியும், அதைப் பலதரம் தொட்டுக் கும்பிட்டும், அதன் சாக்ஷியாக மீனாக்ஷிராணியார், கக்ஷியை விட்டு வேறு கட்சியைச் சார்வதில்லை என்றும், இராணியார் கக்ஷிக்குவேண்டிய உதவிசெய்து சமஸ்தானம் இராணியரிடம் இருக்கவேண்டிய உதவியனைத்தும் செய்வதாக சத்தியம்செய்து கொடுக்க, இந்தச்சூதை யறியாத மூடர்களான மீனாக்ஷியின் கக்ஷியார் சந்தோஷமாகச் சம்மதித்துக் கொண்டு, சந்தாசாயபைக் கோட்டைக்குள் கூட்டிக்கொண்டு வந்தும், அனேக ஆடையாபரணங்களைக் கொடுத்தும், அனேக யானை குதிரைகளைத்தாம் கொடுக்க சம்மதித்த தொகைக்கு ஈடுகாட்ட; அவர் இன்றுமுதல் மீனாக்ஷியின் கக்ஷியிலிருப்போமெனப்பகிரங்கப்படுத்தினர்.

இக்காலத்தில் பங்காரு திருமலை நாயடும், அவர் குமாரரும் இனி திரிசிராப்பள்ளியில் குடியிருந்தால் பிராண அபாயமுண்டாகு மென்றஞ்சித் தத்தளித்துக் கொண்டிருக்கிற சங்கதி மீனாக்ஷியம்மாளுக்குத் தெரிய வந்தது. பங்காரு திருமலைநாயடு சரியான வார்சு என்றும், அவருக்குதவி செய்யவேண்டுமென்றும் எண்ணங் கொண்டே மீனாக்ஷியம்மாள் அவர் பிள்ளையைத் தத்து வாங்கிக் கொண்டார். ஆனால் கக்ஷிடா வேசத்தினாலும், சில துஷ்டர்களுடைய ஆண்டுதவினாலும், இவர் விரோதியாகத் தோன்றினரென்று எண்ணிப், பரிதாபப்பட்டும், அவரையும் அவர் குடும்பத்தையும் திண்டுக்கல் முதலான விடங்களில் போய் குடி இருந்துகொண்டு அவற்றில் வரும் வருமானத்தில் ஜீவனம் செய்யும்படி கட்டளைக்கொடுக்க, அவரும் விதியின்றி அங்கு போயினர்.

இந்த ஏற்பாடு சந்தாசாயபுக்கு திருப்தியைக் கொடாமையால் தகுந்த தண்டுகளுடன் வந்து இரு கக்ஷியாரையும் ஜயித்து ஸமஸ்தானத்தைப் பிடுங்கிக் கொள்ள ஆற்காட்டிற்குப்போய், 1736-ஞ தக்க தண்டுகளோடு வந்து திருசிராப் பள்ளியைச் சுவாதீனம் செய்துகொண்டும், மீனாக்ஷியம்மாளைக் கேவலம் பேருக்கு மாத்திரம் ராணியாராகத் தோற்றும்படி செய்தும், அந்தம்மாளுடைய மந்திரிகளாகிய கோவிந்தையர், இராமையன் முதலானவர்களோடு 8,000-குதிரை பட்டாளத்தோடு டங்காரு திருமலை நாயடைத் தாக்கும்படி யனுப்ப, அவர்கள் முதலில் திண்டுக்கல்லைத் தாக்கியும், பிறகு மதுரைக்கும்வந்து தாக்க, பங்காரு திருமலைநாயடு பயந்து சிவகங்கை ராஜனிடம் அடைக்கலம் பெற்றார். அவர் அந்த நாயடு குடும்பத்தை வெள்ளிக்குறிச்சி கோட்டையில் வைத்து பாது காத்தார். இந்தச் சம்பவத்தினால் சந்தாசாஹிபு தைரியங்கொண்டு மதுரை ஸமஸ்தானத்தின் பெரும்பாகமான நாடுகளையெல்லாம் பிடித்துக்கொண்டும் திருசிராப்பள்ளிக்குப் போய், இனி மீனாக்ஷியைச் சுதந்திரமாக்கிவிட்டால் தனக்கு கெடுதியுண்டாக்கு மென்றெண்ணி, சிறையில் போட்டடைக்க யோசித்திருக்கும் சங்கதியையறிந்த அந்த மீனாக்ஷியம்மாள் மானத்துக்குப் பயந்து பிராணத்தை உண்டு பரமபதமடைந்தனள். கனம் டெயிலர் சரித்திரத்தின் படி சகாப்தம் 1659 (கி. பி. 1737) பரிதாபிமுதல் நளவருஷம் வரையில் ஐந்து வருஷங்களாண்டார். இக்காலத்தில் பங்காரு நாயடு புத்திசாலியாகவும், அவருடைய கக்ஷிக்காரர்கள் தைரியசாலிகளாகவும் இருந்தால், மீனாக்ஷியம்மாள் இறந்த உடனே ஸமஸ்தானத்தைக் கைப்பற்றி கொண்டிருக்கலாம். சொற்ப சேனையோடும், சொற்பச் சொத்தோடுமிருந்த சந்தாசாயபை எதிர்க்க பங்காரு நாயடு கக்ஷியாரிடம் போதுமான பொருளும், போர்வீரரு மில்லாமையால், அவரைத் தடுக்கப்பயந்து அச்சந்தா சாயபை விட பலசாலியான ராஜன் உதவியை நாட பங்காரு திருமலை நாயடு பிரயத்தனப்பட்டார்.

அப்போது சத்தாராவில் மஹாராஷ்டிரர் பிரபல ஸ்திதியிலிருந்தமையால், அவர்களிடம் போய் முறையிட, அக்காலத்தில் நிஜாமலியும் கர்னாடக தேசத்தைப் பிடித்து டாஸ்து அலிகானைச் சிக்ஷிக்க விரும்பி இருந்தமையாலும், இரண்டு துரைத்தனத்தாரும் கூடி 60,000 குதிரை வீரரையும், 50,000-பதாதிகளையும் சேர்த்து 1739-வருஷம் இராகோஜிபான்ஸ்லேயோடு அனுப்பினார்கள்.

இதை யறிந்த டாஸ்து அலிகான் தமது சேனையை ஒரு இந்து தளகர்த்தனுட னனுப்பி எதிர்க்கும்படி சொல்லி தூர தேசங்களிலிருந்த தமது குமாரன் சதாத்து அலிகானையும், மருமகன் சந்தாஸாஹிபையும் உடனே ஆற்காட்டுக்கு வரும்படி சேதி யனுப்பி சேனையைத் திரட்டிக்கொண்டிருக்கையில் மகாராஷ்டிர வீரன் மகமதியருடைய இந்து வீரனை மயக்கி, லஞ்சம் கொடுத்து சுஜாதி அபிமானத்தால் மகமதியரை மோசம் செய்ய வேண்டுமென்று சொல்லி சரிப்படுத்தி கொண்டும், புதுச்சேரிக் கருகில் வந்து சண்டை செய்தும், யானையின் மேலிருந்த டாஸ்து அலிகானை கீழே விழும்படி செய்துக் கொன்றுவிட, அந்த டாஸ்து அலிகானுடைய பெண்களையும் குடும்பத்தையும் மஹாராஷ்டிரர் கெடுக்காதபடி, அப்போது புதுச்சேரியில் கவர்னராக விருந்த (M. Dumas) டுமாஸ் என்பவர் தம் கோட்டையில் அடைக்கல மாக வைத்துப் பாதுகார்த்தார்.

இத்தியாதி சங்கதிகளை கேட்ட சப்தர் அலிகான் வேலூருக்குவந்து மறைந்துகொள்ள, மஹாராஷ்டிரர் கூடவேவந்து பிடித்து உயுத்த செலவுக்காகநூறு லக்ஷம் ரூபாயும், இந்து ராஜாக்களிட மிருந்து பிடித்த கோட்டைகளையும், அந்தந்த ராஜனிடமே தந்துவிட வேண்டுமென்றும் சமாதானஞ் செய்ய, இச்சமாதானத்தின்படி சந்தாசாயபு திரிசிராப் பள்ளிக் கோட்டையைத் தரமாட்டேனென்று சொல்ல, அவர்சேனையோடு மஹாராட்டியர் சண்டைசெய்தும், அவர் தம்பி படேசாயிபை சண்டையில் கொன்றும், சந்தா சாயிபைச் சிறைபிடித்து சத்தாரா பட்டணத்துக்குக் கொண்டு போனார்கள். இப்படிப்போன மஹாராஷ்டிரர், பங்காரு திருமலை நாயடுக்கு வாக்கு தத்தம் செய்தபடி மதுரை ஸமஸ்தானத்தைத் தராமையால், நொந்து நைஜாமிடம் போய் முறையிட்டார். அவர் இவர் விஷயத்தில் மஹாராஷ்டிரர்களும், மகமதியர்களும் செய்த மோசத்தைக்கருதி பரிதாபப்பட்டும்; தம்மால் ஆற்காட்டுக்கு நூதனமாக நியமிக்கப்பட்ட அன்வர் உட்டின்கான் வசம் ஒப்புவித்து அவருக்குப் பிரதிதினமும் சாப்பாட்டுச் செலவுக்கு 100-ரூபாயும், அவர் குமாரனுக்கு பிரதிதினமும் நூறு வராகனும் கொடுத்து கூடிய சீக்கிரத்தில் அவர்கள் சமஸ்தானத்தை அவர்களுக்கு கொடுக்கும்படி சொல்லி யனுப்ப; அந்த அன்வர் உட்டின்கான் அப்படியே கொஞ்ச காலம் செய்துகொண்டு வந்து, மேன்மை பெற்ற மதுராபுரி சமஸ்தானத்தைப் பங்காரு திருமலை நாயடுக்குக் கொடுக்க பிரியப்படாமல், பேராசையினால், அவருக்கு பாஷாணமிட்டுக் கொன்றுவிட்டார். இதுசங்கதியை யறிந்த அவர் குமாரர் 1748-ஆம் வருஷம் ஆற்காட்டை விட்டு சிவகங்கைக்குப் போய் வெள்ளிக்குறிச்சியை யடைந்தார்.

1741-ஆம் வருஷம் மதுரை சமஸ்தானம் நாதனற்ற நாடாகி விட்டது. 1743-ஆம் வருஷம் நிஜாமுல்முலுக்கு படை எடுத்துவந்து மஹாராஷ்டிரர்களை ஓட்டிவிட்டார். 1744-முதல் 1748-வரையில் மதுரை நாடு அன்வர்டீன் மகமதலி வசமாகியது. பிறகு மாயாணா என்னும் தளகர்த்த தன் வசமாக, அவரும்

ராமனாதபுரம் சிவகங்கை மன்னர்களும் கூடி மதுரைக்கு சரியான வார்சாகிய பங்காரு திருமலை நாயடு குமாரர் விஜய குமார் நாயடுகாரை 1752-ஆம் வருஷம் ஸமஸ்தானபதியாகப் படம் கட்டிவைத்தார்கள்.

## விஜயகுமார நாயடுகாரு 1752-முதல் 1752-வரையில்

அப்படிக்கட்டினாலும் 1752-ஆம் வருஷம் நவம்பர் மீ 29-ந்தேதி அவரைசிங் காதனத்தைவிட்டுநீக்கி வெள்ளக்குரிச்சிக்கே போகும்படி மகமதியர்கள்செய்து விட்டார்கள். பிறகுமகமதியமன்னர்களுக்குள்ளாகவே சண்டைசச்சரவுகள்நடக்க 1700-வருஷம் மைசூர்ஐதர் ஆலியும்படையெடுத்துவந்து பிடிக்கக்கூடாமல்பின் னடைந்து போய்விட்டார். பிறகு பல மகமதியர்கள் சண்டைகளைப் போட் டுக்கொண்டு வர, 1785-வருஷம் மதுரை ஆங்கிலேயர் வசமாகிவிட்டது. 1790-வருஷம் செப்டம்பர் மாதம் மிஸ்டர் "மேக்லோடு" அவர்களை ஈஸ்டிந்தி யாக் கம்பெனியாரால் ரெவினியு கலெக்டராக நியமிக்க, அன்று முதல் குடிக ளுக்கு கஷ்டங்களும் நிஷ்டூரங்களும் அடிக்கடி நடந்து வந்த அநியாய சண்டை சச்சரவுகளும், கொள்ளைகளும், கொலைகளும், பஞ்சங்களும், பலி நோய்களும் நீங்கச் சுகமாக வாழுங்காலம் வாய்த்தது. சுதேச குறுநில மன்னர்களால் மதுரை சமஸ்தானத்தில் இடையில் சம்பவித்த கஷ்டங்களை இக்காலத்தில் எண்ணிப் பார்த்தாலும் எப்படிப்பட்டவருடைய மனமும் கலங்கும். ஆண் டவர் கிருபையால் ஆங்கிலேயர் வர அந்தப் பயம் அற்றது.

மதுரை ஸமஸ்தான நாயடுகார்கள் விசுவநாத நாயடு முதல் ஆண்ட அர சர்களுடைய சரித்திரங்கள் ஆங்கிலபாஷையில் மிஸ்டர் நெல்ஸன் எழுதியமது ரைமானியூல் 87- முதல் 264-வது பக்கங்கள் வரையில் விவரமாகக் காணலாம். அச்சரித்திரங்களினால் நாயடு காருகள் தேசாபி மானத்தையும், இராஜ தந்திரத் தையும் அனுசரிக்காததனாலும், சோம்பல் சிற்றின்பத்தினாலும், துர்மந்திரிக ளுடைய துர்ப்போதனைகளினாலும்,ஸமஸ்தானம் சீர்கெட்டு ஏனையர்வசமாகியது ஸ்பஷ்டமாகும்.இக்குறைவுகளில்லாவிடில் நாயடு ஸமஸ்தானம் இன்றளவும் பிர காசிக்கும்.நாயடுகாருகள் தக்ஷண தேசங்களில் ஸமஸ்தானங்களைஸ்தாபிக்க ஆரம் பித்த காலமுதல் அந்தம்வரையில் சண்டைச் சச்சரவுகளிலேயே தமது அறு மையான காசியையும், காலத்தையும் செலவிட நேர்ந்தபடியால், நாட்டில் கல்வி முதலான விஷயங்களை கவனிக்கக் காலமில்லாமற் போயவிட்டது. அப்படியி ருந்தும் அவர்கள் காலத்தில் மதுரை ஸமஸ்தானத்தில் பல பாடசாலைகள் ஸ்தாபிக்கப் பெற்றும், அவைகளில் 10,000-வித்தியார்த்திகள் இலக்கிய இலக் கண தர்க மீமாசாதி கிரந்தங்களைப் பக்ஷித்து வந்ததாக வீரமாமுனிவர் முத லான ஏனைய நாட்டார் நேரில்வந்து பார்த்து ஐரோபாகண்டத்தாருக்கு எழுதி இருக்கிறார்கள். நாயடுகாருகள்ஈசுவர பக்திக்கு ஈடுபட்டு, கோயில் கோபுரம் மடம் தடம் அகிரஹாரங்கள் தருமசத்திரங்களைக் கட்டி அவைகளுக்காக அளவ ற்றப் பொருளைச் செலவு செய்திருத்தல் இப்போதும் இத்தென் னாட்டில்பாக் கப் பார்க்கலாம்.

## இப்போது கவர்ணமேண்டாருக்கு அகப்பட்டிருக்கும் திருசிராப்பள்ளி மதுரை முதலானவிடங்களில் ஆண்டுவந்த

## நாயடுகார்களுடைய தருமசாசனங்கள்.

| வருஷம் | சாசனங்கள்கொடுத்தவர் பெயர்கள். | இப்போதுஅச்சாசனங்கள் இருக்குமிடம். | சாசனங்களின் விவரம். |
|---|---|---|---|
| கி-பி | | | |
| 1560 | விசுவநாதநாயடுகொடுத்தது | அன்னியூர், தென்ஆர்காடு | சிலாசாசனம் |
| டிை | டிை | திருநெல்வேலியில் | தாமரசாசனம் |
| 1569 | குமாரகிருஷ்ணப்பநாயடு | விஜயபதி திருநெல்வேலியில் | சிலாசாசனம் |
| 1573 | வீரப்பநாயடு | மதுரையில் [லியில் | do |
| 1578 | கிருஷ்ணப்பநாயடு | கிருஷ்ணபுரம் திருநெல்வே | do |
| 1583 | பெத்தவீரப்பநாயடு | மதுரை | do |
| 1596 | இராமகிருஷ்ணநாயடு | do | தாமிரசாசனம் |
| 1597 | கிருஷ்ணப்பநாயடு | do | do |
| 1598 | குமார கிருஷ்ணப்பநாயடு | திருநெல்வேலியில் | do |
| 1613 | முத்துவீரப்பநாயடு | மதுரையில் | சிலாசாசனம் |
| 1620 | வீரப்பநாயடு | கோயமுத்தூரில் | தாமிரசாசனம் |
| 1623 | முத்துவீரப்பநாயடு | மதுரையில் | சிலாசாசனம் |
| டிை | டிை | do [யில் | do |
| 1635 | திருமலைநாயடு | ஆண்டியூர், திருநெல்வேலி | do |
| 1637 | டிை | கபிலமலை, சேலத்தில்[லியில் | தாமரசாசனம் |
| 1648 | டிை | கைலாவிகுலம், திருநெல்வே | சிலாசாசனம் |
| 1652 | டிை | எருமாபட்டி, சேலத்தில் | do |
| 1653 | டிை | மதுரையில் | do |
| 1654 | டிை | do | தாமிரசாசனம் |
| 1655 | டிை | கோயமுத்தூரில் | do |
| 1656 | டிை [பநாயடு | மதுரையில் | do |
| 1657 | இரங்க கிருஷ்ணமுத்துவீரப் | திருநெல்வேலியில் | do |
| 1659 | திருமலைநாயடு குமாரர் | திருச்செங்கோடு, சேலத்தில் | சிலாசாசனம் |
| 1661 | சொக்கலிங்கநாயடு | நெணிமேணி, திருநெல்வேலி | do |
| 1562 | டிை. | திருசிராபள்ளியில் [யில் | தாமிரசாசனம் |
| 1663 | விஜயரங்கசொக்கலிங்கநாயடு | திருச்செங்கோடு, சேலத்தில் | சிலாசாசனம் |
| 1665 | சொக்கலிங்கநாயடு | நெணிமேணி, திருநெல்வேலி | do |
| 1665 | டிை | கோயமுத்தூரில் [யில் | தாமிரசாசனம் |
| 1678 | முத்துலிங்கநாயடு [பநாயடு | மதுரையில் | do |
| 1686 | இரங்ககிருஷ்ண முத்துவீரப் | அரும்பாவூர் திரிசியில் | சிலாசாசனம் |
| 1691 | மங்கம்மகாரு | திருசிராப்பள்ளியில் | தாமிரசாசனம் |
| 1692 | விஜயரங்கசொக்கநாதநாயடு | திருநெல்வேலியில் | do |
| 1695 | டிை | do | do |
| 1700 | மங்கம்மகாரு | மதுரையில் | do |
| 1706 | டிை | திருநெல்வேலியில் | சிலாசாசனம் |
| 1710 | விஜயரங்கசொக்கநாதநாயடு | மதுரையில் | தாமிரசாசனம் |
| 1715, 1716 | டிை | திருநெல்வேலி, திருசிராப்ப | do |
| 1724, 1727 | | ள்ளி, திருநெல்வேலி, திருசி | do |
| 1729, 1731 | | ராபள்ளி மதுரை, திருநெல் | do |
| 1732 | மீனாக்ஷி அம்மகாரு | திருசிராபள்ளியில்[வேலியில் | do |
| 1733 | டிை | சமயபுரம், திருசிராப்பள்ளி | ஆக 45 சாசனம் |

பாருங்கள்! ஸ்ரீசந்திரவம்சக்ஷத்திரியகுல திலகராகிய யயாதியின் சந்ததியில் பலிஜராஜர் வம்சத்திலுதித்த ஆந்திரராஜர்களில் ஆறேழுபெயர் மகத நாட்டைவிட்டு, தெற்கேவந்து, உஜ்ஜினி, வாரங்கல், கொண்டவீடு, கலியாணி, விஜயநகரம் முதலான விடங்களில் விக்கிரமார்க்கர், சாளுக்கியர், காலிசூரியர், கஜபதிகள், நரபதிகள், என்றுதிப் பெயர்களால் புதுராஜியங்களை ஸ்தாபித்து தருமபரிபாலனம் செய்தும்; பிறகு அவர்களுடைய சந்ததிகளில், சேவப்பநாயடு, அச்சுதப்பநாயடு, இரகுநாதநாயடு, விஜயராகவநாயடு, செங்கமலநாயடு என்பவர்கள் தஞ்சை சமஸ்தானாதிபதிகளாகியும்; விசுவநாதநாயடு, குமாரகிருஷ்ணப்பநாயடு, வீரப்பநாயடு, விசுவப்பநாயடு, முத்துகிருஷ்ணப்பநாயடு, முத்துவீரப்பநாயடு, திருமலைநாயடு, குமார முத்துகிருஷ்ணப்ப நாயடு, முத்துவீரப்பநாயடு, சொக்கநாதநாயடு, முத்து லிங்கநாயடு, மங்கம்மகாரு, இரங்ககிருஷ்ண முத்துரவீப்பநாயடு, விஜயரகுநாத சொக்கலிங்கநாயடு, மீனாக்ஷி அம்மகாரு, பங்காரு திருமலைநாயடு, விஜயகுமார ரகுநாத நாயடு முதலானவர்கள் பாண்டியநாடாகிய மதுராபுரி அரசர்களாகியும்; பிறகு விஜயபூபாலநாயடு, அங்கிதாங்கிதராஜ, கோண்டசாலமஹாராஜ, கீர்த்திசிம்ஹல மஹாராஜ, இராஜசிம்ஹல மஹாராஜ, விக்கிரம சிம்ஹலமஹாராஜ முதலானவர்கள் இலங்கை என்னும் சிம்ஹலத்தீவின் ஸமஸ்தானாதிபதிகளாகியும் பிரபலமாக இந்த இராசிய பரிபாலனம் செய்து வந்து, கடைசியில் அவர்களுக்குள் தேசாவபிமானம், ஜாதிமதாபிமான முதலானதுகளற்றுப் போனதினால், ஸமஸ்தானங்களை இழந்து தவிக்கும் காலத்தில், ஜாதிவித்தியாசத்தினாலும், கல்விச்செல்வமில்லாமையினாலும் "குப்பை உயர்ந்தது, கோபுரம் தாழ்ந்தது" என்னும் பழமொழிக்கொக்க பரதகண்டத்தின் புராதன சந்திரவம்ச க்ஷத்திரியராகிய பலிஜவாருடைய இப்போது அந்தஸ்தும், பிரதிஷ்டையும் குறைந்துவர, கேவலமான ஜாதியார்கள் கவரைகளென்றும், பலிஜவாண்ரென்றும், நாமம் போடுவோர்களில் அநேகர் நாயுடுகாருகளென்றும் பெயர்களை தரித்துக் கொண்டும், நல்ல குடும்பங்களில் சிலரோடு கொள்வினை கொடுப்பினைசெய்ய ஆரம்பித்து விட்டார்கள்.

தொண்டமண்டலம் பூவைசியகுல உயர்துளுவ வேளாளர் சரித்திரம் என்னும் பெயரால் காஞ்சீபுரத்தில் மகாநாடு தர்மராய முதலியாரிடமிருந்த சுமார் நூறு வருஷங்களுக்கு முன் எழுதின புராதன கையெழுத்து புத்தகத்திலிருந்து 1891-ம் வருஷம் மிஸ்டர் பம்மல் விஜயரங்க முதலியார் பதிப்பித்த புத்தகத்திலிருந்து ஐரோபியர் இந்நாட்டுக்கு வந்தகாலத்தை அறிவுள்ளபடி இதனடியில் பிரசுரிக்கிறோம்.

"இந்த இந்தியாவில் தொப்பிக்காரர் வந்ததும் அந்தந்த தேசங்களைப் பிடித்ததும், சென்னபட்டணத்துக்கு வந்த கவர்னர்களுடைய விபரம் தெரியப்படுத்துதல்.

கி. பி. 1,600-ம் வருஷம் மார்கழி மாதம் 31-ந்தேதி இத்தேசத்துக்கு இங்கிலீஷ்காரர் வர்த்தக சங்கதியுண்டுபண்ண லைசென்செபத்தென்கிற இராஜாத்தியார் பட்டோலையைக் கட்டளையிட்டார்.

1 02-ம் வருஷம் இந்துதேசத்துக்கு இங்கிலீஷ் கப்பல்கள் புறப்பட்டன.

1609-ல் உலாந்தாக்காரர்பழவேர்க்காட்டைக்கைவசம்பண்ணிக்கொண்டார்கள்.

1620-ல் டென்மார்க்கர்ஐப்பசி 5-ந்தேதி தரங்கன்பாடியில் காலிங்கராயபிள்ளை முன்னிலையாய் தஞ்சாவூர் இராஜாவினிடத்தில்தரங்கன்பாடியில் கோட்டையைக்கட்டிக்கொள்ள உத்திரவு பெற்றுக்கொண்டார்கள்.

1621-ம் தை மாதம் தரங்கன்பாடியில் கோட்டையைக் கட்ட ஆரம்பித்தார்கள்.

1639-ல் டே (Day) என்பவரால்சென்னபட்டணமும் கோட்டையுமுண்டாக்கப்பட்டது கவுல் செங்கல்பட்டு நாயக்கர் மூலியமாக சந்திரகிரி ராஜாவிடத்தில் பெறப்பட்டது. சந்திரகிரி ராஜ வம்சத்தார் முன் விஜய நகரத்தில் அரசாண்டார்கள்.

1658-ல் உலாந்தக்காரர் போர்த்துகீசரிடத்தில் மன்னாறு யாழ்ப்பாணத்தைப் பிடித்தார்கள்.

1666-ல் பிராஞ்சுக்காரர் சிந்து வியாபாரம் துவக்கினார்கள்.

1670-ல் பிராஞ்சுக்காரர் புதுவை நகரத்தை கைவசம்பண்ணிக்கொண்டார்கள்

1680-ல் ஒரு பெரிய வால் நக்ஷத்திரம் வானத்திலே காணப்பட்டு மூன்றுநாள் பரியந்த மிருந்தது.

1739-ல் சென்னையினருகே பெருங்காற்றடித்து சில கப்பல்கள் முறிந்து முப்பதினாயிரம் ஜனங்களிறந்துபோனார்கள்.

1746-ல் புரட்டாசி மாதம் 21-ந்தேதி பிராஞ்சுக்காரர் சென்னபட்டணத்தை பிடித்தார்கள்.

1756-ல் பிராஞ்சுகாரர்பேரில் இங்கிலீஸ்காரர் சண்டைக்கு ஆரம்பித்தார்கள்.

1759-ல் மாசிமாதம் 11-ந்தேதி சென்னபட்டணத்தை பிராஞ்சுகாரர் பிடிக்க வந்தார்கள்.

1761-ல் கர்னல் கூட்டு புதுவையை முதல் விசைப்பிடித்தார்.

1771-ல் இங்கிலீஷ்காரர் தஞ்சாவூரை முற்றுகைப் போட்டார்கள்.

1772-ல் திருசிராப்பள்ளியில் மருந்து கிடங்கு பத்திக்கொண்டது-

1773-ல் தஞ்சாவூரைப் பிடித்தார்கள்.

1777-ல் லார்டு பிகட்டு (Pigot) இறந்தார்.

1777-ல் ஐப்பசி மாசம் 17ந்தேதி புதுவைநகரத்தை இரண்டாம்தரம் இங்கிலீஷ்காரர் பிடித்தார்.

1780-ல் ஐதருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் சண்டைக்கு ஆரம்பம்.

1780-ல் புரட்டாசி மாசம் 10-தேதி காலனல் பெயிலி (Col. Baillie) தண்டு தக்கோலத்தில் மூழ்கிப்போனது.

1781-ல் ஆனி மாசம் 1-ந்தேதி பரங்கிப்பேட்டையில் சண்டை.

பார்த்துக் கொண்டு நிற்க,—அந்த பாகவதர்கள், கர்மகர்த்தாவைப் பார்த்து "வேறென்று நானறியேன்" என்னும் தனியனை அனுசந்தித்து, புத்திரனுஞ் சொல்லி அனுக்கை பெற்று "மமபிதுருஹ யேக்ஷ்டிய பரமபத பிராப்த்தியார்த்தம் நாராயண பலிநபேண கர்மம் கர்த்தும் யோக்கியதா சித்திம் மனுக்கிரஹேயண" என்று புத்திரன் சுவாமிகளை பிரார்த்தித்து, அந்த அனுக்கை சம்பாவனையை ஸமர்ப்பித்து; ஸ்வாசார்யாராதனஞ் செய்தும், அனந்தரம் முத்தத்திலாவது, உள்ளேயாவது மெழுகி, ஒற்றைக் கோலமிட்டு, வாழையிலை போட்டு,அதன்மேல் தண்டுலம் பரப்பி, நானகு மூலைகளிலும் நான்குகலசங்கள் நடுவில், ஒரு கலசம் நூல் சுத்திவைத்து, உதகம் பூரித்து, புதுவஸ்திரங்கள் தரித்து, அந்த கும்பங்களுக்குள்ளே தனித்தனியே தர்ப்பை கூர்ச்சங்கள் கட்டிப் போட்டு; அந்த கும்பங்களுக்கெல்லாம் மாவிலை, தேங்காய், சந்தண புஷ்பங்களா லலங்கரித்து; அந்த கும்பங்களுக்குள்ளே சுவர்ண புஷ்பங்கள் சமர்ப்பித்தும்; கர்மகர்த்தாவாகிய புத்திரன் கிழக்கு முகமாகவிருக்க வேண்டும். அவருக்கெதிரி லிருக்கிற கும்பந்தொடங்கி ஸ்ரீ சைலேசதயாபாத்திராதி, தநுமகமன த்தியாய வரையில் அநுசந்தித்து,முடிவில் நமஃ வென்று ஆழ்வாராசாரியர்களை ஆவாஹனம் பண்ணி, மானஸீகமாய் சோடசோபசாரஞ் செய்தும், கால யுக்தமாய் ஸ்வாமிகள் முக்கியமாய்கொஞ்சந் திராவிடவேதம் சேவிப்பித்தும் கும்பங்களுக்கெல்லா மொரேதடவையாய், சதாஸாதபயாமி"என்று அக்ஷதை போட்டு புனர்பூஜை செய்தும் ,—

வேறேயொரு ஸ்தானத்தில் சுத்திசெய்த பலகைப்போட்டு, அந்த சரம விக்கிரஹத்தை வடக்கே திருமுடியாய் படுக்கவைத்தும், புத்திரன் முதலிய பந்துக்களாகிய ஸ்திரீ புருஷர்களும், தனித்தனியே எண்ணெய்தொட்டுசிரசில் வைத்தும், அப்படியே சிகைக்காயைத் தொட்டு வைத்தும், முன் கொண்டுவந்த கடஜலங்களால் தீர்த்தமாட்டி பின்பு, பஞ்ச கலசங்களால் தீர்த்தமாட்டி, திருமேனிதுவட்டி,புதுவஸ்திரந்தரித்தும்,பன்னிரெண்டு திருமண்காப்புஸ்ரீசூரணங்கள் தரிப்பித்து,பெருமாள் சந்நதி திருமாலை சாத்துபடிகளை சாதித்து,வஸ்திர பூஷணங்களால் அலங்கிருதம்பண்ணி அந்த பஞ்ச கலசங்களையும் தக்ஷிணை சகிதமாய் சுவாமிகளுக்கு விநியோகஞ் செய்யவேண்டும்.

## ஸ்ரீ சூர்ண அநுக்கை விவரம்.

அனந்தரம், வடக்கு முகமாய் இருக்கிற உபாத்தியாயர், கிழக்கு முகமாயிருக்கிற கர்த்தாவுக்கு "அசேஷ ஸ்ரீ வைஷ்ணவ பாதமூலம் சமர்ப்பித, ஹிமாம் தக்ஷிண யதோக்தத்தக்ஷிணி மிபஸ்விக்ருத பிதுருஹ யக்ஷய,பரமபத பிராப்தியர்த்தம் கோவில்,திருமலை பெருமாள்,கோவில் ஜீயர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள் எழுந்தருளி, ஸ்ரீசூர்ண பரிபாலனஞ் செய்ய கிருபைசெய்தருள என்று உபாத்தியாயர் சொன்னபிரகாரம்;கர்த்தா, ஸ்வாமிகளைப் பார்த்துபிரார்த்தித்து, நாராயணபலி செய்த விடத்தில், சுத்திசெய்த உரலுலக்கைக்கு புதுவஸ்திரம், திருமண் ஸ்ரீசூரணங்கள் தரித்து, தர்ப்பை, மாவிலைக்கட்டி ஒரு தொன்னையில் குழைத்ததிருமண், ஒரு தொன்னையில் குழைத்த ஸ்ரீசூரணம், ஒருதொன்னையில் நெய்யமுது சேர்த்து அந்த உரலுக்குள் தனித்தனியே வைத்து, கர்மகர்த்தா முதலிய பாகவதர்கள் உலக்கையை யெடுத்து, இராமாநுஜ நூற்றந்தாதியில் "மொழியைக்கடக்கும் பெரும்புகழான்"என்னும் பாசுரத்தை அநுசந்தித்து, உலக்கையாலுரலில் மூன்றுதரம் மெள்ளக் குத்தி, உலக்கையை கீழே வைத்து,

விட்டு ; பின்பு அந்த மூன்று தொன்னைகளையும் ஒரு தட்டில் வைத்து ஸ்வாமிகள், பந்துக்கள், இஷ்டர்களுக்கும் விநியோகமாகக் காட்டி : அவர்கள் ஒரே விரலால் நெய்யைத்தொட்டு அவர்கள் நெற்றியில் வைத்துக் கொண்டதன் மேல் ; திருமண் காப்பையும், ஸ்ரீ சூரணத்தையும் தொட்டு வைத்துக்கொண்டான பின்பு, அந்தப் பிரகாரம் புத்திரனும் தரித்துக் கொண்டு, புத்திரன்கையால் சர்ம விக்கிரஹத்தின் நெற்றியில் சாத்தி, சர்ம விக்ரஹம் யாத்திரை போகிற மார்க்கத்தில் ஜலத்தை மூன்றுதரம் இறைத்துவிட வேண்டும்—பிறகு—

## அக்கினி ஸம்ஸ்கார விவரம்.

கர்த்தா, ஸ்வாமிகளைப்பார்த்து. மமபிதுரு அட்சய பரமபத பிராப்த்தி யார்த்தம், துஷாக்னிநா ஸமஸ்காரம் கர்த்தும் யோக்கியதா சித்திம் அனுக் கிரஹேணி., என்று தக்ஷிணை சமர்ப்பித்து. ஜலத்தை எடுத்து அக்கினிக்கு அப சவ்யமாய் சதுரமாய்பரிமாரி, திருமந்திரத்தையும், "ஸூஷ் விகும்பணி முகிலே" யும் அநுசந்தித்து, சமித்துகளை ஸமர்ப்பித்து, பின்பு அத்தியிலை அல்லது மா விலையினால் ஆஜ்யமெடுத்து, அக்கினியில் ஆஹுதிசெய்து, தர்ப்பை கூர்ச்சத் தினால் ஜலமெடுத்து, முன்போல அபஸவ்யமாய் ஜலம் புரோக்ஷித்து, சர்மவிக் கிரஹத்துக்கு புத்திரன் இரண்டு கைகளாலும் கோடி மூடினஉடனே; புத்திரன் ஹோமத்தில் அக்கினி யெடுத்து, உமியும் எருமுட்டையும் போட்டிருக்கிற அக்கினிஸ்தாளியில் வைத்து செங்நெல் வைக்கோல் அல்லது தென்னங் குருத்தினால் பிரிமணை சுத்தி கர்த்தாவின் இடதுகையில் வைத்துக்கொண்டு கிரஹத்துக்கு வெளியில் வந்து நிற்கவேண்டும்.

பின்பு, சரம விக்கிரஹத்துக்கு கரசரணபந்தனஞ் செய்வித்து கோடியினால், நன்றாய் மூடி பந்தனஞ்செய்து; பாதங்கள் முன்னும், சிரசு பின்னுமாய். கோவிந்த நமோச்சாரணத்துடன் எடுத்து வெளியிலிருக்கிற ஆசந்தியில் வைத்து, மேலே பிரிசுத்தி, அக்கினி முன்னும், சரம விக்கிரஹம் பின்னும், பந்து மித்திராள் முன்னும் பின்னுமாய் சரம திரு மந்திரத்தில் உத்திர வா க்கியத்தினாலும், பரமபத சௌபானத்தினாலும் கோஷித்துக் கொண்டு, ஸம் ஸ்காரபூமிக்குப்போய், வடக்கு சிரசாக ஆசந்தியுடன்வைத்துக், கர்த்தா, தன்பந் துக்களிலொருவர் கொண்டுவந்த சொம்பிலிருக்கிற சுத்த ஜலத்தினால் சிதைக் கும் புரோக்ஷித்து, கரசரண பந்தங்களை நிவர்த்தி செய்து, சரம விக்கிரஹத்தை சிதைக்குமேல் வைத்து, அக்கினி ஸ்தாளியிலிருக்கிற அக்கினியை சிதைக்கு மேற்புறம் கீழே கொட்டி. எருமுட்டையில் கொஞ்சம் அக்கினி யெடுத்துக்கொ ண்டு, பூர்வாபி முகமாய் நின்று, சரம விக்கிஹத்தின் மார்பில் எருமுட்டை யுடன் அக்கினியை வைத்து, திருமந்திரத்தினால் ஆஜ்யாஹுதி செய்து, ஜல மெடுத்து தெற்கேயிருந்து மேற்குவரையில் புரோட்சித்து, தண்டம் சமர்ப் பித்து, தீர்த்தத்துறைக்கு வந்து, நக்ஷசார்த்தம் செய்தபின்பு, பந்துமித்திராள் சந்தக காஷ்டாதிகளால் அடுக்கி, ஜாக்கிரதையாயிருந்து தஹனஞ் செய்ய வேண்டியது, பின்பு எல்லோரும் தீர்த்தமாடி, கிரஹத்துக்கு வந்து புண்ணிய வாசனஞ்செய்து போஜனஞ்செய்யவேண்டும்.

2-ம்நாள் ஸஞ்சயனம், 11-ம் நாள்புண்ணியஹாவாசனஞ்செய்து 12-ம் நாள் பகல் திராவிடவேத சேவாகாலம் செய்தும், பின்பு முதனாள் முதல் 12-ம்நாள் வரையிலும் கோக்கிராலயம் செய்து பூர்ணம் செய்ய வேண்டும். புருஷனாயிருந்தால், திருமந்திரத்தை வலது செவியிலும், ஸ்திரீகளாயிருந்தால் இடதுசெவியிலும் சொல்லவேண்டியது. கர்ம மந்திரங்களில் புருஷனாயிருந்தால்மமபிதுநாம, ஸ்திரீகளாயிருந்தால் மமமாதா என்றும் யுச்சரிக்கவேண்டியது. கர்மாநுஷ்டானங்களாகிய பராகிருதர்கள் பிதுர்பதிகளாகிய எமனுடைய லோகம்போய், அவனுடையதண்டனைக்குட்பட்டு பாவத்தைப் போக்கிக் கொண்டு, ஸ்வர்க்காதி போகங்களை அனுபவிப்பார்களென்றும் கிரமத்தால் கர்மகாண்டப் பிரகாரம் பிதுருகளை எமபுரத்துக்கு தடையன்றியில் போகும்படி சரம விக்கிஹத்தை எமபுரத்தின் திக்காகிய தெற்கே சிரசாகப் படுக்கவைக்கிறதும், எமபுரத்துக்கு சமீபமாகிய வைதரணீ நதியைக் கடப்பதற்கு கோதானமும், அஸ்தியெடுப்பது முதலிய காரியங்கள் செய்யவேண்டியது. ஞானாநுஷ்டானர்களாகிய பிரபந்நர்கள் எமபுரத்தைப்பார்க்க நிமித்தியமில்லாததினால், இவைகளைச் செய்ய காரணமில்லை.

ஸ்ரீ வைஷ்ணவ சந்நியாசிகளுக்கு இவ்விதமாகவே செய்யவேண்டிருப்பதினாலும், நிர்யாணகாலத்திலும், பின்பும் பத்மாஸனமாக பிரபத்தி அஸ்தத்துடன் எழுப்பண்ணிவைத்து, அப்படியே சம்ஸ்காரங்கள்நடந்த பின்புச், சப்பரத்தில் அல்லது கொடிகடத்தில் பத்மாசனமாக எழுப்பண்ணி நழுவாமல்பந்தித்து புஷ்பவருஷம் வருஷித்துக்கொண்டு, ஸம்ஸ்ர பூமியில் எட்டடி நீளம், எட்டடி அகலம், எட்டடிஆழம் வெட்டி யிருக்கிற திருப்பக்குழிக்கு புண்யாஹவாசனஞ்செய்து, கீழேமண்ணும், அதின்மேல்உப்புங்கொட்டி, அதன்மேல் சரமவிக்கிரகத்தை எழுப்பண்ணி பிரமரந்திரத்திரக்கும்படிசிரசில் தேங்காயுடைத்தும், மேலும் லவணம், மணல் கொட்டி பூர்ணம் செய்து உடனே பிருந்தாவனங் கட்டி திருவாராதனஞ்செய்து தீர்த்தப் பிரசாதம் விநியோகஞ் செய்விக்கவேண்டும்.

இந்த சந்திரவம்ச க்ஷத்திரியர்களாகிய கவரவர்கள் என்னும் பலிஜவாருக்கு ஆதிகால முதல் சிகாயக்ஞோபவீத் தாரணங்கள் ஸவசின்னங்களாய் இருந்தபோதிலும், கொஞ்சகாலமாக திருக்கோவிலூர் எம்பெருமானார் ஜீயர்சுவாமிகள், சிலரை கர்மாநுஷ்டான பார்களாகவும், சிலரை ஞானாநுஷ்டான பார்களாகவும் இருவகுப்பாக வகுத்ததனால், கர்மாநுஷ்டபராள் சிகாயக்ஞோபவீதங்களுடன பிரகாசிக்கிறார்கள். ஞானாநுஷ்டானபராள் சிகாயக்ஞோபவீதங்களை விட்டு, பிரபன்ன விலட்சணத்தோடு பிரகாசிக்கின்றனர். இவர்களுக்கு பூநூல் இல்லாமையினால் சூத்திரர்களென்று வேதாந்த விசாரணை இல்லாத சிலர் சந்தேகிப்பார்கள். பூர்வத்தில் பிராம்மணகுல திலகராக விருந்த திருக்கோவிலூர் எம்பெருமானார் ஜீயர், "ஸர்வதர்ம பரித்யஜ்யா" என்னும், கிராமகுலாதிகளால் வரும் பேர். அனர்த்த ஹேதுவை பிராமணங்களை யறிந்ததன் அநுஷ்டானப் பிரகாரம் யாசரித்துக்காட்டு மவனல்லவோ ஆசாரி என்னும் ரீதியாக, சிகாயக்ஞோபவீதங்களை பரித்யஜித்த சங்கதி பிரசித்தியாகையால்; அந்த திருக்கோவலூர எம்பெருமானார் ஜீயர் சுவாமிகளும், ஸ்ரீ சிங்கேரி, ஸ்ரீகும்பகோணம் சங்கராச்சார்யசுவாமிகளும் க்ஷத்திரியர்களாகக்கொண்டுள்ள விஷயத்தில், பிரபந்நானுஷ்டர்களாகும்கவரவனாகிய பலிஜவாரும் சூத்திரராக வேண்டுமோகையால், பூநூல் தரிக்கும்கவரவர்களை க்ஷத்திரியர்களாகவும், பூநூல் தரிக்காத கவரவர்களை பிராம்மணர்களென்றும் ஸ்ரீ வைஷ்ணவர்களென்றும் பிரம்மச்சாரி சுவாமிகள் எழுதி இருக்கிறார்.

# இந்த பலிஜவாரின் குடித்தொகை.

சென்னை இராஜதானியில் 1901ஆம் வருஷத்து ஜனசங்கியை கணக்கின்படி வதிந்து வந்த பலிஜவாரின் குடித்தொகைப்பட்டி (Vide page 165. Table XIII, Census of India 1901, Vol XV, A. Part II Inperial Tables Madras)

| ஜில்லாக்களின்பெயர். | பலிஜவாரு ஆண்கள் | பலிஜவாரு பெண்கள். | ஒட்டு மொத்தம். |
|---|---|---|---|
| 1. கஞ்சம் ஜில்லாவில் ... ... | 2,931 | 3,938 | 6869 |
| 2. விசாகப்பட்டணத்தில்... ... | 10,002 | 11,627 | 21,629 |
| ஷெ ஏஜண்டுடிவிஷனில் ... | 39 | 48 | 87 |
| 3. கோதாவரியில் ... ... | 6,660 | 7,221 | 13,881 |
| ஷெ ஏஜண்டுடிவிஷனில் ... | 127 | 135 | 262 |
| 4. கிருஷ்ணாவில், ... ... | 13,806 | 14,128 | 27,934 |
| 5. நெல்லூரில் ... ... | 44,499 | 45,781 | 90,2280 |
| 6. கடப்பையில்... .... .. | 59,795 | 58,715 | 118,510 |
| 7. கர்னூலில் ... ... | 29,368 | 30,032 | 59,400 |
| 8. பல்லாரியில் ... ... | 86,24 | 8,546 | 17,170 |
| 9. அநந்தப்பூரில் ... ... | 25,914 | 25,630 | 51,544 |
| 10. சென்னையில் ... ... | 23,759 | 24,550 | 48,309 |
| 11. செங்கல்பட்டில் ... ... | 18,934 | 18,867 | 37,801 |
| 12. வடஆர்காடுஅல்லதுசித்தூரில் | 64,306 | 66,340 | 130,646 |
| 13. சேலத்தில் ... ... | 29,002 | 30,530 | 59,532 |
| 14. கோயமுத்தூரில் ... .. | 11,930 | 12,472 | 24,402 |
| 15. நீலகிரியில் ... ... | 1,640 | 759 | 2,399 |
| 16. தென்ஆர்காடு-கூடலூரில் ... | 24,333 | 24,810 | 49,143 |
| 17. தஞ்சாவூரில் ... ... | 21,299 | 24,640 | 45,939 |
| 18. திரிசிராபள்ளியில் ... ... | 18,131 | 19,668 | 37,899 |
| 19. மதுரையில் ... ... | 33,228 | 34,574 | 67,802 |
| 20. திருநெல்வேலியில் ... ... | 45,138 | 42,917 | 88,055 |
| 21. மலையாளத்தில் ... ... | 1,967 | 1,955 | 3922 |
| 22. தென்கனரா-மங்களூரில் ... | 329 | 405 | 734 |
| ஆக- ஆங்கிலேய அதிகாரத்துக்குட்பட்ட ஜில்லாக்களில் மொத்தம் | 4,95,761 | 508,288 | 10,040,49 |
| புதுக்கோட்டையில் | 1,232 | 1224 | 2456 |
| பங்கனபள்ளியில் ... ... | 813 | 718 | 1531 |
| ஆக-கப்பம்கட்டும் நாடுகளில் | 2,045 | 1,942 | |
| ஆக ஒட்டுமொத்தம். | 497,806 | 510,230 | 10,08,036 ஜனங்கள். |

இந்த 10,08,036 ஜனங்களுடன், திருவநந்தபுரம், கொச்சி, கோவா, புதுச்சேரி, மைசூர், பெங்களூர் முதலான விடங்களிலிருக்கும் ஜனங்களைச் சேர்த்தால் ஏறக்குறைய 16,00,000 லக்ஷம் பலிஜவாரு இருக்கிறார்கள்.

1891ஆ கானீஸ்வாரி XVI ரிபோர்ட்டு 226-வது பக்கத்தில் கண்ட இந்த பலிஜவாரில் தெலுங்குநாட்டாரை பலிஜவரென்றும்,தமிழ் நாட்டாரைக் கவரைகளென்றும் இரண்டு பிரிவார்களாகவகுத்து அவ்விருவகுப்பாருக்குள் அவரவர்கள் செய்யும் வர்த்தகம் தொழில் செய்பவர்கள் இத்தனைப் பெயரெனக் காட்டும்பட்டி.

| நம்பர். | பலிஜவாருக்குள் வர்த்தகம் வேலை முதலான் துகளைசெய்து ஜிவிப்பார்கள் 131996—பெயர்களாம். | வேலைக்காரருடையவண் அல்லது மொத்தம். | 100க்கு இத்தனை பெயர் |
|---|---|---|---|
| 1 | பரம்பரையாகத்தொழிலில்128208 பெயர்-குரூப-209 210,211, 318, 378,379, சப்ஆர்டர்56கணக்குபடி | 3285 | 2,4 |
| 2 | நிலச்சு வானர்கள்— | 73372 | 53.6 |
| 3 | குடித்தனவேலைக்காரர்கள் | 22280 | 16,5 |
| 4 | உணவுபொருள்பலசரக்கு வியாபாரி(கள் | 3339 | 2,5 |
| 5 | பிச்சைக்காரர்,யாசகர் | 2399 | 1,8 |
| 6 | சர்க்கார்வேலைக்காரர்கள் | 1702 | 1,3 |
| 7 | ஆடுமாடுமேய்ப்பவர்கள் | 1523 | 1,1 |
| 8 | பருத்திநூல் நெய்பவர்கள் | 1271 | .9 |
| 9 | பிட்டாய்செய்து விற்பவர் | 871 | .6 |
| 10 | நெல்லுகுத்துகிறவர்கள் | 846 | .7 |
| 11 | சாதாரணவேலைக்காரர்கள் | 813 | .6 |
| 12 | வீட்டுவேலைக்காரர்கள் | 648 | .5 |
| 13 | தானியவியாபாரிகள் | 610 | .5 |
| 14 | வண்டிக்காரரும், அதை ஓட்டுவோரும் | 601 | .4 |
| 15 | கொளத்து வேலைக்காரர்கள் | 465 | .3 |
| 16 | கால்நடைகளை வளர்த்தும்வர்த்தகர்கள் | 450 | .3 |

| நம்பர். | கவரைகள் என்ற பலிஜவாரில் வர்த்தக முதலான வேலை செய்து ஜிவிப்பவர் 50831—பெயர்களாம். | வேலைக்காரருடையவண் அல்லது மொத்தம். | 100க்கு இத்தனை பெயர் |
|---|---|---|---|
| 1 | பாம்பரை தொழிளாளர்128, 208, 209, 210, 211, 318, 374,379—சப் ஆர்டர் குருபில்— | 1598 | 301 |
| 2 | நிலச்சுவானர்கள்— | 24275 | 47.8 |
| 3 | குடித்தன வேலைக்காரர் | 7307 | 14.4 |
| 4 | வாசாருகவளிக்காரர்கள் | 2989 | 5.9 |
| 5 | பருத்திநூல் நெய்வோர் | 2695 | 5.3 |
| 6 | சர்க்கார் வேலைக்காரர்கள் | 1241 | 2.4 |
| 7 | கூடைப்பாய் பின்னுவோர் | 983 | 1.9 |
| 8 | உணவுபொருள் பலசரக்குவிற்போர் | 913 | 1.8 |
| 9 | நெல்லு குத்துவோர் | 810 | 1.6 |
| 10 | மிட்டாய் செய்து விற்போர் | 745 | 1,5 |
| 11 | சாதாரண வேலைக்காரர் | 744 | 1.5 |
| 12 | பிச்சைக்காரர், யாசகர் | 565 | 1.5 |
| 13 | வண்டியோட்டும் வண்டிக்காரர் | 376 | .7 |
| 14 | கால்நடை மேய்ப்போர் | 289 | .6 |
| 15 | வீடுகட்டும் கொளுத்து வேலையில் | 339 | .7 |
| 16 | தானியவியாபாரிகள் | 288 | .6 |

| | | | |
|---|---|---|---|
| 17 | கள் விற்பவர்கள் | 401 | .3 |
| 18 | ஸமஸ்தான குமாஸ்தாககள் | 358 | .3 |
| 19 | பின்சன் சம்பளம் பெறுபவ. | 353 | .3 |
| 20 | பாய கூடை பின்னுபவர் | 347 | .3 |
| 21 | புகைவண்டியில் வேலைசெய்வோர் | 345 | .3 |
| 22 | படுக்கைப்பின்னல் வேலைக்கார் | 313 | .2 |
| 23 | மண்வேலைக் காரர்கள் | 297 | .2 |
| 24 | காய்கறி விற்போர் | 274 | .2 |
| 25 | கோயில் சிப்பந்திகள் | 262 | .2 |
| 26 | புஷ்பங்கட்டிவிற்போர் | 251 | .2 |
| 27 | உபாத்தியாயர்கள்— | 2 0 | .2 |
| 28 | சாராயம்விற்போர் | 249 | .2 |
| 29 | சுண்ணும்புவிற்போர் | 236 | .2 |
| 30 | காடாதுணி விற்போர் | 220 | .2 |
| 31 | மரம் அறுத்தல் தச்சுவேலைக்கார் | 216 | .2 |
| 32 | போர்டர், காவல் காரர்கள் | 203 | .2 |
| 33 | பட்டுநூல்செய்வோர் | 2 6 | .2 |
| 34 | புல்,விரகு விற்போர் | 196 | .1 |
| 35 | பாடகர்,வாத்தியக்காரர்கள் | 181 | .1 |
| 36 | பொடி, புகையிலை விற்போர் | 173 | .1 |
| 37 | விபசாரிகள், தொண்டுகள் | 170 | .1 |
| 38 | தையல் தைப்போர்கள் | 152 | .1 |
| 39 | சந்தனம் விற்போர் | 152 | .1 |
| 40 | பாரொஸ்டு (காட்டிலாக சிப்பந்திகள்) | 137 | .1 |
| 41 | சில்லறை வேலைக்கார் | 1558 | 11.4 |
| | ஆ. மொத்தம் | 134996 | 100 |

| | | | |
|---|---|---|---|
| 17 | கள் விற்பவர்கள்— | 236 | .6 |
| 18 | பட்டுநூல் செய்பவர் | 233 | .5 |
| 19 | பாடகர்-வாத்தியக்காரர் | 226 | .4 |
| 20 | கால்நடை வளர்த்து விற்போர் | 197 | .4 |
| 21 | சுண்ணும்பு விற்போர் | 187 | .4 |
| 22 | வீட்டுவேலைக்காரர் | 131 | .3 |
| 23 | கயிறு பின்னுவோர் | 166 | .3 |
| 24 | சாராயம் விற்பவர் | 162 | .3 |
| 25 | எண்ணெயெடுத்து விற்போர் | 155 | .3 |
| 26 | பின்சன் சம்பளம் வாங்குவோர் | 146 | .3 |
| 27 | புகைவண்டி வேலைக்கார் | 136 | .3 |
| 28 | காடாதுணிவிற்போர் | 133 | .3 |
| 29 | தபாலாபீசு சிப்பந்திகள் | 128 | .3 |
| 30 | கோயில் வேலையாட்கள் | 1 8 | .2 |
| 31 | மண்வேலைக் காரர்கள் | 116 | .2 |
| 32 | பித்தளைச்செம்பு வேலைக்காரர்கள் | 116 | .2 |
| 33 | தச்சுவேலைக்காரர்கள் | 99 | .2 |
| 34 | உபாத்தியாயர்கள் | 109 | .2 |
| 35 | புகையிலை-பொடி விற்போர் | 96 | .2 |
| 36 | போர்டர், காவல்காரர்கள் | 88 | .2 |
| 37 | காய்கறி விற்போர் | 84 | .2 |
| 38 | வர்த்தகர்குமஸ்தர்கள் | 73 | .1 |
| 39 | பாரெஸ்டு-காட்டி லாகாசிப் பந்திகள் | 69 | .1 |
| 40 | சர்க்கரை கம்பெனிகூலியாட்கள் | 62 | .1 |
| 41 | வைத்தியர்கள்— | 61 | .1 |
| 42 | தையல் தைப்பவர் | 61 | .2 |
| 43 | சில்லறை வேலைக்கார் | 1539 | 2.1 |
| | ஆகமொத்தம் | 50381 | 100 |

இந்தபலிஜவாரில் 1901ஷு இருந்தவர்களின் வயதுவிவரம்—

இப்படி இருக்கும் பலிஜவாரின் குடித்தொகையில் 1 முதல் 5 வயது வருஷங்களுக்குள் 13600 ஆண்களும், 14,661 பெண்களும் — 5 முதல் 12 வயசிற்குள் 23,371 ஆண்களும் ; 24,540 பெண்களும் ; —12 - முதல் 15 வயதிற்குள் 8,526 ஆண்களும், 6,799 பெண்களும் : 15 முதல் 20 வயதிற்குள் 8. 855 ஆண்களும், 7, 659 பெண்களும், — 20 முதல் 40 வயதிற்குள் 37,124 ஆண்களும், 38,326 பெண்களும்.—40 வயதிற்குமேற்பட்டு 30,764 ஆண்களும், 31149 பெண்களுமாக 1, 22,271 ஆண்களும், 123,184 பெண்களும் (சிவில்ஸ்திதியில்) இருக்கிறார்கள்.

இந்த பலிஜவாருகளில் 1901ஷும் காணிஸ்வாரி கணக்கின்படி கலியாணமாகாதவர்களும் — அவர்களுடைய வயதுகளும்

1 முதல்5வயதிற்குள் கலியாணமாகாதா13,575ஆண்களும், 14,603பெண்களும்,—5முதல் 12 வயதிற்குள் கலியாணமாகாத 23,271ஆண்களும், 22,932 பெண்களும்,—15முதல் 20 வயதிற்குள்8,493 ஆண்களும்,15,19பெண்களும், 20முதல் 40 வயதிற்குள் 14,909 ஆண்களும் 1009 பெண்களும்;—40 வயதிற்குமேற்பட்டு 1,893ஆண்களும், 562பெண்களுமாக இந்தபலிஜஜாதியாரில் இன்னும் 70,574 ஆண்களும்450 84 பெண்களும் கலியாணமில்லாதவர்களாக இருக்கிறார்கள். இதனால் இவர்களுடைய தரித்திர தசை எப்படி இருக்கிறது.!

இந்த பலிஜவார்களில் கலியாணமானவர்கள்.

இவர்களில் 1—முதல் 5வருஷங்களுக்குள் கலியாணமான 23 ஆண்களும் 58 பெண்களும்;—5முதல் 12வயதிற்குள் 94 ஆண்களும், 1562பெண்களும்; 12முதல் 15 வயதிற்குள் 92 ஆண்களும், 2, 302 பெண்களும்; 15முதல் 20 வயதிற்குள்-385 ஆண்களும், 5,794 பெண்களும்; 20முதல் 40 வயதிற்குள் 20,937 ஆண்களும், 24,503 பெண்களும் ; 40 வயதிற்குமேற் பட்டு 22, 937ஆண்களும், 8,196 பெண்களுமாக 44,486 ஆண்களும் 46,410 பெண்களும் கலியாணமானவர்களாகஇருக்கிறர்கள்.

இவர்களில் தாரமிழந்த விதந்துக்களின் விவரம்.

இவர்களில் 1முதல் 5 வயதிற்குள் தாரமிழந்த 3 ஆண்களும், 5 பெண்களும்;5முதல் 12க்குள்6 ஆண்களும் 46பெண்களும் 12முதல் 15க்குள் 2ஆண்களும், 68 பெண்களும்; 15முதல் 20குள் 6 ஆண்களும் 46பெண்களும் ; 20 முதல் 40 வயதிற்குள் 1278 ஆண்களும். 8,814 பெண்களும் 40 வயதிற்குமேற்பட்டு 5,936 ஆண்களும், 22,391 பெண்களுமாக 72,31 தாரமிழந்த ஆண்களும், 31.640 தாரமிழந்தபெண்களும் இருந்தார்கள்.

1901ஷும் காணிஸ்வாரி கணக்கின்படி பலிஜவாருக்குள் படித்தவர்கள்-படிப்பில்லாதவர்களுடைய விவரத்தைக் காட்டும் ஜாப்தா

1901ஷும் பலிஜவாருகளில் 122,271 ஆண்களும்,123 184பெண்களும், இருந்தனர்.இவர்களில் 14316 ஆண்களும், 911பெண்களுமாக 15 227 பெயர் மாத்திரம் படித்தவர்களும்,மற்ற 107955 ஆண்களும்.122 223 பெண்களுமாக 230178 பெயர்படியாதவர்களுமாக இருக்கிறார்கள்.படிக்கத்தெரிந்தவர்களில்.

தமிழ்பாஷையில் 3902 ஆண்களும், 187 பெண்களும் படிக்கத்தெரிந்தவர்கள்—தெலுங்குபாஷையில் 10,360 ஆண்களும், 728 பெண்களும் படிக்கத்தெரிந்தவர்கள்.கன்னடிபாஷைகளில்—17 ஆண்கள் மாத்திரம் படிக்கத்தெரிந்தவர்கள்: மற்றபாஷைகளில் 11ஆண்கள் மாத்திரம் படித்தவர்கள்.—

இங்கிலீஷ்பாஷையில்—949 ஆண்களும்,13 பெண்களுமாக 962 பெயர் படிக்கத் தெரிந்தவர்கள் — 107955 ஆண்களும் 122 223 பெண்களுமாக 230178 பெயர் யாதொரு படிப்பறியாதவர்களாக இருத்தல்என்னபரிதாபம்!

# ஐந்தாவது காண்டம்.

# பேட்டை பலிஜவாரு.

இதுவரையில் சந்திரவம்ச க்ஷத்திரியர்களாகிய பலிஜவாரில் கோட்டை பலிஜவாருடைய இடம், வீட்டுப்பெயர், கோத்திரம், சூத்திரம், அந்தஸ்து, அணியும் ஆடையாபரணம், ஜன்ன, மரண, விவாஹாதிகாலங்களிற்செய்யும் சடங்குகள், தத்காலஸ்திதி முதலானவைகளைப்பற்றிச் சொன்னோம்.

இனி இச்சந்திரவம்ச க்ஷத்திரிய பலிஜவாரில், வேறொரு வகுப்பாராகிய பேட்டை பலிஜவாருடைய விருத்தாந்தங்களைப்பற்றி விவரிப்பாம். பேட்டை என்றால கோட்டைக்குவெளியிலிருக்கும நாடு நகர கிராமங்களாம். ஆகவே, பேட்டை பலிஜவாரு என்றால், விஜயநகரக் கோட்டைக்கு வெளியி லிருக்கும் நாடு நகர கிராமங்களிற்குடி இருந்தப் பலிஜவாருகளாம். இவர்கள் இப்போது பற்பலவித கோத்திரத்தைச் சார்ந்தும், அநேக வீட்டுப் பெயர் சூத்திரங்களால் பிரகாசிக்கிறார்கள். இவர்கள் ஆதியில் விஜயநகர சமஸ்தானதாருடைய பந்து மித்திரர்களாக விருந்தும்; பிறகு காலதேச வர்த்தமானங்களினால், வேறு வேறு இடங்களுக்கு வலசையாகப் போய், வர்த்தகம், விவசாய முதலான தொழில்களைச் செய்துகொண்டும், அங்காங்குத் தங்கி வேறு வேறு ஜாதி, மதஸ்தர்களைப் போலிருக்கின்றனர். இந்தப் பேட்டை பலிஜவாருகளுக்குள் 18 வகுப்பார்கள் இருந்தார்கள். இப்போது இவர்களுக்குள் இராஜிறலுவாரு(கல்காரர்) முத்திராலவாரு, பகடாலவாரு, காஜுலுவாரு, சித்திராலவாரு, ஒப்பனவாரு, வெலமவாரு, கம்மவாரு, பேரிகவாரு, கோல்லவாரு, முசுகு வாரு, லிங்கவாரு, பூந்தமல்லிவாரு, கோயிலடிவாரு, கண்டிவாரு, பத்தி வாரு, ஜனபவாரு, வாடவாரு, கன்னடி பலிஜவாரு, எத்துகன்னடிவாரு, எனுமுகன்னடிபலிஜவாரு, செட்டிபலிஜவாரு, உப்புபலிஜவாரு என்றுதி பல வகுப்பினர்களாக பிரகாசிக்கிறார்கள்.

இவர்கள் யாவரும் ஒரு காலத்தில் ஒரே குடும்பத்தாராக இருந்திருக்கலாம். இடையில் காலதேச வர்த்தமானங்களைத் தழுவிபற்பல இடங்களிற்போய். பற்பலவிதவர்த்தகம் விவசாயமுதைத்தொழில்களைச் செய்து வந்ததினால்; பூர்வ உற்பத்தி ஜாதி மதாசாரங்களை காலதேச வித்தியாசங்களினாலும், பழக்க வித்தியாசத்தினாலும் மறந்து; இப்போது பற்பல வித ஜாதியாராகப் பெயர்களைப் பெற்றார்கள் போலும். ஆகவே இவர்களிற் சில விசேஷவகுப்பார்களுடைய விருத்தாந்தங்களைப்பற்றி மாத்திரம் இதனடியிற் சங்கிரகமாகக் காட்டுகி றோம்.

## இரத்னல பலிஜவாரு அல்லது இராள்ளவாரு (கல்காரர்கள்) அல்லது வளையல் காரர்கள் அல்லது காஜுலு பலிஜவாரு.

இந்தப்பேட்டை பலிஜவாருக்குள் சிறந்தவர்கள் இரத்னல பலிஜவாரு அல்லது இராள்ளவாரு (கல்காரர்) அல்லது காஜுலு (வளையல்கார) பலிஜவார்களாம். இவர்கள் ஆதியில் விஜயநகர ஸமஸ்தானதிற்கு வேண்டிய வைரம், வைடூரியம், கெம்பு, மரகத மாணிக்கம், முத்துப் பவளம்முதலான நவரத்தினங்களை தூரதேசங்களிலிருந்து தருவித்தும், அவைகளிலிருக்கும் தோஷம், குறைவு குற்றங்களைக் கண்டுபிடித்தும், அவைகளிற்தோஷமற்றவைகளைத் தெரிந்தெடுத்தும், சமஸ்தான சக்ரவர்த்திகளுக்கும், இராஜ மஹிஷிகளுக்கும் வேண்டிய ஆபரணங்களாகச் செய்வித்து கொடுத்துக்கொண்டு வந்தவர்கள்.

இவர்களில் சிலர் காஜுலுவாரு அல்லது வளையல்காரர்கள் என்னும் பெயரால், சுமங்கலிய ஸ்திரீகளுக்கு இன்றியமையா கருமணி, காட்டிசை, கதம்பம், கஸ்தூரி, குங்குமம், சந்தனம், மஞ்சல் முதலான வைகளையும்; கரங்களுக்கேற்றக் கங்கணம், வளையல் முதலான சுபகர வஸ்துக்களையும் தருவித்து ஸமஸ்தான இராஜ ஸ்திரிகளுக்கு தரித்து தனவான்களாக இருந்தவர்கள். இவர்களில் அநேகர் அக்காலத்தில் கல்வி கேள்விகளிற் சிறந்தவர்களாகவும், சத்தியம், சாந்தம், பரிசுத்தமுள்ளவர்களாகவும், பரநாரி சோதரர்களாகவும் பிரகாசித்து வந்தபடியால், விஜயநகர ஸமஸ்தானத்தார், இவர்களுடைய குணச்சிறப்புகளைக் கண்டு, இவர்களை மைத்துனர்களைப்போல பாவித்தும், தம்மனைவி மக்களாகிய இராஜ ஸ்திரிகள் இருக்கும் அந்த புரத்துக்குள் பிரவேசிக்கவும், அங்கு இராஜஸ்திரிகளுடைய கரங்களைப் பிடித்து கங்கணம், வளையல்கள் முதலானதுகளைப்புகட்டிஅலங்கரித்துவரும் சுதந்தரத்தையும் கொடுத்தும், பிறகு நாளாவட்டத்தில் தேசாஹி சிரேஷ்டி, பட்டணம் சிரேஷ்டிகளென்ற பெரியதன பிருதுகளையும் கொடுத்தார்கள் போலும்.

## இவர்களுக்கு தேசாஹி பட்டம் வந்தக்காரணம்.

இந்த இந்தியா தேசத்தை, இந்த சந்திரவமிச க்ஷத்திரிய பலிஜவாருக்கு, முன்பு ஆண்டுவந்த சூரிய சந்திரவமிச சக்ரவர்த்திகள் காலத்தில், அவர்களை மகமதாதி வேறு நாட்டுப்பகைவர் படை எடுத்துவந்து விசேஷமாகத்தாக்காத படியினாலும், அவர்களுக்குப் போதுமான அவகாச மிருந்தபடியினாலும், அவர்கள் காலத்தில்,குடிகள் பிரம்மக்ஷத்திரிய வைசிய சூத்திரரென்ற நான்கு வருணத்தாராகவும், ஒரே இந்து மதஸ்தர்களாக இருந்தபடியினாலும்; சக்கிரவர்த்திகளும், அவர்களுடைய பிரதிநிதிகளும், குடிகளுடைய க்ஷேமலாபங்களைக்கருதி ஜாதிசமயாசார விவஹாரங்களை உடனுக்குடனே சேர்ந்தோராக;

விசாரித்து நீதிசெலுத்தி வந்தார்கள். பிறகு சந்திரவம்ச க்ஷத்திரியர்களின் பின் சந்ததியாராகிய ஆந்திரர், மகத நாட்டில் ஆண்டுவர ஆரம்பித்த போது, அவர்கள் ஸமஸ்தானத்திற்குள்ளாகவே பிராம்மண பவுத்தமதஸ்தர்கள் எழும்பி பிரமாத சமயச்சண்டைகள் செய்துக்கொண்டும், பற்பல சமயாசாரங்களையும் ஜாதிபேதங்களை நியமித்தும் போராடி வந்ததன்றியில்; எவனைய நாட்டாராகிய யுவனர், பாரசீகர், மகம்மதாதிமதஸ்தர்கள் பெரும்படை எடுத்து வந்து பல பக்கங்களிலும் தாக்கி போருக்கிழுத்தபடியால், இந்நாட்டு சக்கிரவர்த்திகள் அப்போதுப்பகைவரைத் துரத்தித்தாக்க இரவும் பகலும் வேண்டிய பொருளையும், போர் வீரரையும் தேடி சதாசண்டை செய்வதிலேயே காலமெல்லாம் கழிக்கச் சம்பவித்து. இப்படிப்பட்ட கஷ்டம் சக்கிரவர்த்திகளுக்கும், இராஜர்களுக்கும் சம்பவிக்கவே, தம் நாட்டின் குடிகளுக்குள் உண்டாகும் ஜாதிமதாசார கட்டுபாடுகளின் விவஹாரங்களை நேர்ல்கேட்டு விசாரித்து நீதி செலுத்த அசாத்தியமாகிவிட்டது. ஆகவே அக்குறைவை நீக்கக் கருதி தம்ஸமஸ்தானத்திலிருந்தத் தக்க பெரிய மநுஷர்களைத் தெரிந்தெடுத்து, நகர பரிபாலகராகக்கொண்டும், அவர்களுக்கு தேசாஷி, பட்டணம் செரேஷ்டி பட்டங்கொடுத்தும், தேசக்குடிகளுடைய விவஹாரங்களை விசாரிக்கும் நீதி அதிகாரிகளாக நியமித்தார்கள் போலும்.

இப்படி நகர பரிபாலனார்த்தம் பட்டணம், தேசாஹி என்றப் பெயரால் பட்டணத்திற் சிறந்த பெரிய மநுஷரைத்தெரிந்து எடுத்து நியமிக்கும் வழக்கம் ஸ்ரீ தசரதராமர் காலத்திலும் உண்டென்றும், அதாவது ஸ்ரீ ராமர் இராவணாதியர்களை ஜயித்து ஐயோதிக்குத் திரும்பி வந்தபோது, அந்த ஐயோத்தியாவிலிருந்த நகர பரிபாலன பெரிய தனக்காரராகிய பட்டணம் தெசாஷி செரேஷ்டி ஸ்ரீராமருக்கு நல்வரவு கூறி அழைப்பிக்க பிரதிநிதிகளைச் சேர்த்தும், நகரத்தை மாந் தோர்ணதிகளால் சிங்காரித்தும், சகல வாத்திய கோஷங்களோடு எதிர் போய் அழைத்தும் வந்ததாக, அதிகவி வால்மீகரால் சொல்லப்பட்டிருக்கிறதென் ஸ்ரீ பிரமச்சாரி நாராயணதாச சுவாமிகள் தமது கிரந்தத்தில் எழுதி இருக்கிறார். அன்றியும், இந்த தேசாஷி கிராம குடியாக நியமனம் கி.பி. 1011 வருஷங்களுக்கு அதாவது இராஜேந்திர சோழன் காலத்துக்கு முன்பே உண்டென்று கவர்ன்மெண்டு சிலாசாசன டிபார்ட்மெண்டு ஸ்ரீவெங்கையாவர்கள் 1900ல் இந்தியன் ரிவியூவ் கிரந்தத்தில் எழுதி இருக்கிறார். Vide Pages 503-5 The Indian Review Vol. 1-1900—A page on South Indian History.

(முதலாவது.)

விஜய நகர ஸமஸ்தானம் பிரபல தசையிலிருந்தபோது அந்த ஸமஸ்தானபதிகளும், அடிக்கடிப் பகைவரோடு சண்டைகள் செய்துக் கொண்டிருந்தமையால், தமது ஸ்தானத்தின் குடிகளுக்குள் உண்டாகும் ஜாதிக்கட்டு சமயாசார விவஹாரங்களை விசாரித்து நீதிசெலுத்த அக்காலத்தில் இந்த பேட்டை

பலிஜவரில்இரத்தனுபுவாரு அல்லதுகாஜுலுவாரு—கல்வி,கேள்வி,சக்தி,சம்புத்து, சத்தியம், சக்தம், பரிசுத்தம் முதலான குணங்களிற் சிறந்துவிளங்கிய படியால்,இவர்கள் குடும்பத்திலே முதன்மையானத்தக்கப் பெரியவரைத் தெரிந்தெடுத்து, அவருக்கு பட்டணம் தேசாவதி என்று பட்டத்தையும், பிருதுகளையும் கொடுத்து நியமித்தார்கள் போலும்:—

இப்படி விஜய நகர ஸமஸ்தான பதிகளால் பட்டணம் தேசாவதி சிரேஷ்டி என்றுப்பட்ட பிருதுகளை பெற்ற காஜுலுபலிஜவாளைப்பற்றி தென்தேசங்களில்வழங்கிவரும் விருத்தாந்தங்களை இதனடியிற் சங்கிரகமாகக்காணலாம்.

(இரண்டாவது)

இவர்களுடைய ஆதி ஜனனத்தைப் பற்றிச் சித்தூர் ஜில்லா (Dt. Manaul) சரித்திரம் 276-ஆவது பக்கத்தில், பின்வருகிறபடி எழுதப்பட்டிருக்கிறது.அதாவது:—ஆதிகாலத்தில் தக்ஷப்பிரஜாபதியின் குமாரத்தி 'தக்ஷம்மாள்'தனக்குப் போதுமான ஆபரணங்கள் இல்லாககுறைவைப் பற்றிதன் தந்தையிடம் முறையிட, அவர் அது விஷயமாகப் பிரம்மாவினிடம் பிரார்த்திக்க, அந்நான்முகன் 'பிரம்மயாகம்' செய்தால் வேண்டிய நகைகள் கிடைக்குமென்று சொல்ல, அந்த கன்னிகையும் அப்படியே செய்ய, அந்தயாகத்திலிருந்து பொன்மயமான ஒரு புருஷன், பொன்மயமானவளையல், மஞ்சள், குங்குமம், புஷ்பம், புஷ்தியுடன் பிறந்து வந்து, அப்பெண்ணுக்கு போதுமான பொன் வளையல், மஞ்சள், குங்குமம், புஷ்பம், புஸ்திகளைக் கொடுத்து அலங்கரித்தும்; அவளுக்கு மிச்சமான வளையல் முதலானவைகளை உலகத்தாருக்குக் கொடுத்துச் சுமங்கலிய தருமத்தை விருத்தியாக்கவேண்டுமெனக் கட்டளையிட்டருள; அக்கட்டழகியும், தம் குலதேவதையாகிய கவுரியை முதலில் வளையல் முதலான சுமங்கலிய வஸ்துக்களால் அலங்கரித்துப்பிறகு உலகத்தாருக்கு உதவிசெய்தனளாம். ஆகவே, பலி + ஜ=பலிஜ என்றால், பலியாகத்தில்,ஜ=ஜனித்தவனென்றும், சுமங்கலிய பிருதாகிய வளையல்களை உலகத்தாருக்குத் தந்தமையால், காஜுலுவாரு, வளையல்காரரென்றும்;—கவுரியை=இஷ்டதேவதையாக வணங்கிவருவதால், கவரைகளென்றும் பெயர்களுண்டாகியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

(மூன்றாவது.)

இந்த ஜாதியாரைப்பற்றிக் கோயம்புத்தூர் முதலான தென்மேற்கு தேசங்களில் வேறுவிதமான கதையொன்றைச் சொல்லிவருகிறார்கள், அதாவது:— ஆதியில் சுமங்கிலியவஸ்துக்களைப்பலிஜவாருபலதேசங்களிற்கொண்டுபோய் வியாபாரம் செய்வதைப்போலவே,காஞ்சிபுரத்திலும் கொண்டுபோய் வியாபாரம்செய்யும்போது, இவர்களிடமிருந்த ஒரு வெங்கலக்கண்ணாடியைக் கண்ட தாரணிராஜனுடைய குமாரத்தி கேட்க, அது சக்தி காமட்சி அம்மனுக்கு கொண்டுவந்தபடியால் கொடுக்கப்படமாட்டாதென்று சொல்ல;

இதைக்கேட்ட தாரணிராஜன் இவர்கள் வியாபாரச்சரக்குகளுக்குச் சுங்கம் தரவேண்டுமெனக் கட்டளை இட்டான். இதைக்கேட்ட காஜுலுவாரு கண்ணாடி, மிஞ்சு, மஞ்சள், குங்குமாதிபதினொரு (11) சௌமங்கலிய வஸ்துக்களுக்குச் சுங்கம் கொடோமென்று சொன்னதாகவும்; அதைக்கேட்ட தாரணிராஜன் கோபித்து இவர்களோடு சண்டைக்கு வந்து வதைக்க, அது சகிக்கமுடியாமல், இந்த காஜுலுவாரு காமாக்ஷியிடம் முறையிட, அந்தம்மை மகாகாளியாக அவதாரமெடுத்து வந்து, ஆயுதத்தால் அந்த தாரணிராஜனுடைய வயிற்றைக்கீறி, அவன் குடலை வளையல் மலாரமாகவும், அவன் மண்டையோட்டை வளையலொட்டும் அக்கினிகுண்டமாகவும், அவன் தாள்வாய்க்கட்டை எலும்பைக் குறடாகவுங்கொள்ளும்படி கொடுத்தும்; அவன் தோலைக் கரும்கம்பளியாகவும், அதை இடதுகால் பெருவிரலால் எடுத்துக்கொள்ளும்படி பிரசாதித்து அருளியதாகவும்; ஆகவே இந்தச் சாதியார் அந்த அந்தக்காமாக்ஷி தேவியின் கட்டளையின்படி இன்றளவும் வளையலை விற்றுவருவதால், வளையல்காரரென்றும், காமாக்ஷிதேவியைக் குலதேவதையாக வணங்கிவருவதால், கவரைகளென்றும் பெயருண்டாகியதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

(நான்காவது.)

இக்கதையைச் சித்தூர் ஜில்லா சதரதால்த் கோர்ட்டு தீர்ப்புப்புத்தகம் 33-முதல் 36-வது வரையிலுள்ளப் பக்கங்களில் கண்ட கதையுடன் ஒப்பிட்டுப்பார்க்கையில், வேறு விதமாகச்சொல்லப்பெற்றிருக்கிறது; எப்படியெனில், தாரணிராஜனுடைய சிறையிலிருந்த திவஷ்டாசாரியின் வெட்டப்பட்ட தலை "கஞ்சபிஞ்சகு" சுங்கமில்லை, என்று சொல்லிக்கொண்டு காமாக்ஷிதேவியின் காலில்விழ, அக்காமாக்ஷி தாரணிராஜனைக் கொன்று, அவன் குடலை அருகிலிருந்த தேசாய் பலிஜருக்கு மலாரமாகக் கொடுத்தாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. அன்றியும், இந்த காஜுலு பலிஜவாருக்கு வலங்கையார் என்றப்பெயர் வந்ததற்கு பின்வருகிறகதையை அந்தப்புத்தகத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில் "பரிமன" சோழனுடைய பட்டத்துக்கு, "பண்புரி" சோழன் வந்தபோது, இளவரசு பட்டத்தை பரிமனசோழனுடைய கலிங்கராஜனுக்குக் கொடாமல், தன் குமாரன் பாலனைச்சோழனுக்குத் தரவே, அந்த கலிங்கன் கோபத்தால் பண்புரி சோழனை வேட்டைக்குப் போனவிடத்தில் கொன்று அந்தப் பட்டத்துக்கு வர, இராஜ குடும்பத்தில் வலங்கை இடங்கை இரண்டு கக்ஷிகளாகி பிரபல சண்டைகளுண்டானதாகவும், அச்சண்டையில் இராஜன்பக்கம் சேர்ந்தவர்களுக்கு வலங்கையார் என்றும், வலங்கைக் கக்ஷிக்குத்தலைவர் தேசாயிபலிஜசெட்டியார் என்றும்; இடங்கைக்கக்ஷிக்குத் தலைவர் கம்மாளர்கள் என்றும் சொல்லப்பெற்றிருக்கிறது. அப்படியிருக்க, அந்த சித்தூர் தீர்ப்புபுத்தகத்தில், தேசாஹி பெத்தண்ணராஜுகாரும், தேசாஹி ஜயவீரராஜுகாரும் கம்மாளருக்கு உதவி செய்ததாகவும் எழுதப்பட்டிருக்கிறது. மேலும் அந்தப்புத்தகத்தில் இந்தேசாஹிகளுக்கு கொம்பு தப்பட்டை,

பிருதுக்கொடி, சவுகாதி, காண்டி முதலான பிருதுகளும், பதினெட்டு ஜாதிகளிடம் முதல் தாம்பூல மரியாதையும், கீழ் 18 ஜாதிகளுடைய வழக்குகளைத் தீர்க்கும் அதிகாரமும் பெற்றிருந்தாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

(ஐந்தாவது)

கிறி-பி 1811ளு-ம் தஞ்சை ஸ்ரீ வேதநாயகசாஸ்திரியார் கர்னல்மெக்கன்சி அவர்களுடைய விருப்பத்தின்படி எழுதிகொடுத்த வலங்கை இடங்கையோர் சரித்திரம் ஒன்று சென்னை மியூசியம் O.M. புத்தகசாலையில் இருக்கிறதாம். அதில்சோழராஜனுக்கும், புலைச்சிக்கும்பிறந்த நந்தராஜன் ஓர் வேளாளகுலப்பெண்ணை தமக்கு விவாஹம்செய்துக்கொடுக்கும்படி கட்டாயப்படுத்தியதாகவும், அதற்கு வேளாளர்பயந்து விதியின்றி சம்மதித்துக்கொண்டும், கம்மாளரைக்கொண்டு சூத்திரக்கம்பமுள்ள கொட்டகையைக்கட்டுவித்தும், அதில் இராஜனுடைய குடும்பத்தாரெல்லோரையும் விவாகத்துக்கு வருவித்துவைத்தும், சமயம் பார்த்து அந்த சூத்திர கம்பத்தைத்தட்டிவிடும்படி செய்ய, அந்த கொட்டகைதிடீரென்று விழுந்து, அதனடியிலுள்ள எல்லோரையும் நசுக்கிக் கொன்றுவிட, ஒரு மூலையில் மாத்திரம் ஒருகர்ப்பவதியான ஸ்திரீதப்பித்தயங்கி நிற்க, அவளை ஒருவண்ணான் தன் அழுக்குத்துணி மூட்டைக்குள் மூடி எடுத்துக்கொண்டு போய்பாதுகாத்தபடியால்; அந்தவண்ணானுக்கு அன்றுமுதல் ஏகாலி=எழுகாலுள்ளவன் அதாவது அந்தவண்ணானுக்கு இரண்டுகாலும், அவன அழுக்கு மூட்டையில் மூடிக்கொண்டு போன கர்ப்பவதி ஸ்திரீக்கு இரண்டுகாலும், அந்த கர்ப்பவதியின் வயிற்றிலிருந்த குழந்தைக்கு இரண்டுகாலும், ஆக ஆறுகால்களும் ஷை வண்ணான் ஊனறிக்கொண்டு போன கைத்தடி ஒரு காலுமாக எழுகால்களாக=எழுகால்களுடையவன் அதாவது ஏகாலி என்று பெயரைப் பெற்றதாகவும்,அந்த நந்தராஜனுக்கு அனுகூலராக இருந்த வெளாளர் முதலானவர்கள் வலங்கையராகியதாகவும், அந்தராஜனுக்கு பிரதிகூலராக இருந்த கம்மாளர் முதலான சிலர் இடங்கையராகியதாகவும் எழுதப்பெற்றிருக்கிறதாம். இக்கருத்தை ஸ்திரப்படுத்த மாந்தை நகராதிபதி சதகம் 57-வது பாட்டில், நந்தி ரோகத்தின் விவரத்தை அறிவிக்கின்றது. (ஆறுவது)

மேலும்—கி. பி. 1902ளு-ம் யாழ்பாணத்து-மனிப்பாய் ம-ள-ள-ஸ்ரீ ஆ முத்துத்தம்பிப் பிள்ளையவர்கள் பதிப்பித்த அபிதானகோசம் என்னும் புத்தகத்தில், தஞ்சையிலாண்ட மராட்டியர் வமிசத்தில் இரண்டொரு இராஜர்களுடையப்பெருமைகளைப் பற்றி பிரபலமாக பிரசித்தம் செய்தவர், மதுரையிலாண்ட திருமலை நாயடு முதலானவர்களுடைய சரித்திரத்தைப்பற்றி எழுதாமல் விட்ட காரணம் தெரியவில்லை இந்த வித்துவான் அபிதானகோசம் என்னும் கிரந்தத்தை எழுதும்போது இந்த பலிஜவாரு புராணத்தின் முதற்பதிப்புப் புத்தகமொன்று அனுப்பினோம். அதில் நாயடுகாரு ஸமஸ்தான சரித்திரங்களை இவர் படித்திருக்கலாம். இந்த வேதாகமபுராண இதிகாசங்களிற் சொல்லப்பட்டிருக்கும் தெய்வங்கள், இருஷிகள். முனிவர், அரசர் முதலா

னவர்களுடைய விருத்தாந்தங்களை விவரப்படுத்த வெளிவந்த புத்தகங்களில் இந்த அபிதானகோசமே முதன்மையானது. இதில் முற்ற மத்தியகால அரசர் முதலானவர்களுடைய சங்கதிகளைச் சங்கிரத்து எழுதி பதிப்பித்திருத்தல்போல—வலங்கை, இடங்கை, கக்ஷிகளுண்டான விதங்களையும், அக்கக்ஷிகளைச் சார்ந்த ஜாதியார்களையும், வேளாளருக்கு நாட்டாண்மை யதிகாரம் வந்த விவரங்களையும், சேர்த்துப் பதிப்பித்திருந்தால் நல்ல சரித்திர சாதனமாக இருக்கும். மேலும் இந்த வித்துவான் அந்தப் புத்தகத்தின் 181-182-வது பக்கங்களில் இந்த ஜாதியைப்பற்றி எழுதிய விஷயம் திருப்தி யற்றதாகவே இருக்கிறது; ஆயினும், அந்த கிரந்த கர்த்தர் அப்புத்தகம் 182-வது பக்கத்தில் பலிஜவாரைப்பற்றி பின் வருகிறபடி எழுதி இருக்கிறார். அதாவது "தென்னாட்டிலுள்ள கவரைகளுள்ளே பலிஜவர்களே உயர்ந்தோர். இக்கவரைகளுள் பெரும்பாலார் சேனைத்தலைவராகவும், சேனை வீரராகவும் அரச சேவையிலிருந்தவர்கள் "அது பற்றியே அவர்கள் தமிழ் நாட்டிலே நாயகரென்று வழங்கப் படுவாராயினர். இவர்கள் முன்னர் நாளிலே ராஜாதிகாரம்பூண்டிருந்து பெருமை யுற்றிருந்தவர்கள் பரம்பரையில் வந்தோர்கள்." என்றமே.
(Vide Page 182. Abadana Kosam )

(ஏழாவது.)

கடைசியாக இப்போது (கி-பி 1001வரு-ம்) சென்னை அக்கவுண்டண்டு ஜெனரலாபீசு பென்சன் சூப்பிரெண்டெண்டாகிய மகா-ா ஸ்ரீ, கூடலூர் கனகசபைப்பிள்ளையவர்கள் பதிப்பித்த வருண இந்தரமணி என்னும் நூலில் வேளாள வைசியர்களென்றும், அவர்கள் வலங்கையைச்சார்ந்தவர்களென்றும், பின்னும் அவர்களுடைய பெருமையைப்பற்றி பிரபலமாக எழுதி இருப்பதன்றியில் அவர்கள் குடியரசு செய்துவந்தவிவரங்களைப்பற்றி அப்தபுத்தகம் 329-வது பக்கம் முதல் 505 பக்கங்களில் விஸ்தாரமாக எழுதி இருக்கிறார்கள் [அதன் சாரசங்கிரகமென்னவெனில்.

காஞ்சிபுரத்தில் ஒரு காலத்தில் மதனபூபதி என்னும் மன்னன் அரசாண்டு வரும்போது அப்பட்டணத்திலுள்ள பதிவிரதைகளை எல்லாம் பலாத்காரமாககொண்டு கெடுத்துவர, அப்பதிவிரதைகளில் வேதவல்லி என்னும் ஸ்திரீமனம் நொந்து, அந்த அரசனும் அவன்ராச்சியமும் பாழுத்துப் போகவேண்டுமென்று சாபமிட்டு பிராணனைவிட, அந்நாட்டிலுள்ள குடிகள் யாவரும் அந்நகரைவிட்டு ஓடிப்போக, அந்நாடு கெட்டு காடாக, கரடி புலிகள் புகுந்து சஞ்சாரம் செய்யும்படியானதாகவும். பிறகு சிலகுறும்பர்கள் அங்கே கால்நடைகளை மேய்க்கவந்து, அங்குத்தங்க, பிறகு நாளாவட்டத்திற் பலஜாதியார் குடியேறியதாகவும்; அக்குடிகளுக்கு அப்போது அரசனில்லாக்குறையால் அக்குடிகளிற்றக்க ஒருவரை அரசனாக நியமிக்ககருதி கவரைகள் கம்மவாரு, ரெட்டிகள், முதலான முப்பத்தொன்பது ஜாதிக்காரர்கள் கூடிவேளாளர் ஜாதியில் ஒரு உத்தமனைத்தெரிந்தெடுத்து அவருக்கு முதலியார் என்ற பட்டஞ்சூ

ட்டி அந்த நாட்டாண்மைத்தலைவனாக நியமித்ததாகவும்; அப்படி நியமித்ததை கம்மாளர் கைக்கோளர் பள்ளிகள் ஆக்ஷேபித்து அந்த இடத்திற்கு வியாபாரச்செட்டிகளில் ஒருவரை நியமிக்க வேண்டுமென்று வாதாடியதாகவும், கடைசியில் வேளாளர் கக்ஷியாகிய வலங்கையார் ஜயித்தபடியால், தோல்வி அடைந்த இடங்கை கக்ஷியாரில் கம்மாளர் வேளாளருடைய உழுவுத்தொழில்களுக்கு வேண்டிய கலப்பை முதலான துகளைச்செய்து கொடுக்காமல் வம்புகள் விளைவித்தபடியால், அவர்களை வலங்கையார்பிடித்து சிறையிலடைத்ததாகவும், பிறகு அவர்களுடைய பெண்டுகள்வந்து கலப்பை முதலானதுகளைச்செய்து கொடுத்து வலங்கை கக்ஷியைச் சார்ந்துகொண்டதாகவும், எழுதி இருப்பதன்றியில்-அந்த வருணசிந்தாமணி 503—504-வது பக்கங்களில். "வேளாளர்க்குரிய விருதுகள் கவரைகளுக்கு எங்ஙனம் "பொரப்பட்டதெனில்? சாலிவாகன சகாப்தம் 1433, ல், சந்திரகிரியில் கிருஷ்ணராயர் அரசாண்டுவந்தார். அவருக்கு "அறன்வளர்த்தான்முதலியார் மந்திரியாக விருந்தார். அக்காலத்தில் சில வேடதாரிகள் இராஜ சபையில் நூதனமான ஆட்டங்களை யாடவேண்டுமென்று நினைத்து வேடங்கட்டி யாடினார்கள். அவ்வாட்டத்துள், ஓர் வேளாளப்பெண் வந்ததுப்போல ஒருவன் வேடங்கட்டியாடினான். அதனைக் கண்ட முதலியார் தம்முடைய குலத்தைப் பரிகாசம் செய்வது போல நினைத்து கோபக்குறியாயிருந்தார். இதைக் கண்ட தமது சேவகனுயுள்ள ஒரு கவரைச் செட்டியானவன் அவ்வேளாளப் பெண்ணைப் பார்த்து, தாயே! தாங்கள் திருமனைவாயில் கடந்து சபையேறி இங்குவந்த காரணம் யாதென்று கேட்க, வேடதாரியும் பரிகாசமாகவே நீ வந்ததுபோலவே நானும் வந்தேன்" என்றான். அதுகேட்ட அச்சேவகன் என் எஜமானன் சாதிக்குத் தாகாதகாரியஞ் செய்ததையால், உன்னை தண்டிப்பேனென்று தன்கையிலிருந்த வாளாயுதத்தால் ஒரே வெட்டாக வெட்டி தலையை வீழ்த்தினான்! அப்படி வெட்டினதற்காக அச்சேவகனைக் குற்றவாளியாக்காமல், வேட பிராந்தியால் வெட்டினனென்று அவன் பிழையை முதலியார் மன்னிக்கச் செய்தார். பின்னும் அவனது வீரத்தனத்தை மெச்சி "தேசாயிபட்டமும்" வேளாளர்க்குண்டான விருதுகளும் அவனுக்குக் கொடுத்துச் சன்மானம் செய்தார்(!!!) அன்று முதல் கவரைச் செட்டிகளுக்கும் வேளாளர் விருதுகள் வழங்கி வருகின்றன"—என்றும்" ** 504-வது பக்கத்தில் "இதற்கு வேறு சில காரணமுமுண்டு-அஃதென்னை எனில்?, குடியரசுகாலத்தில் குடிகளை யாளுவதற்கு, "கவரைகள் அதிக முயற்சிசெய்து வேளாளரை முதன்மையாக்கினார்கள், அவ்வபிமானம் பற்றி அவர்களுக்கு தேசாயிப்பட்டமும், தமது விருதுகளும் வேளாளர்க் கொடுத்தனர் என்பதாம்.

மேல்கண்ட விநோதக் கதையை எந்த ஆதாரத்தின் மேல் எழுதினரோ என்று பரிசோதிக்கையில், தொண்ட மண்டல சதகம் 237 வது பக்கம் 98-வது கவியில் "மானமே பெரிதாகக் கொண்டவரென்னும் தலைப்பின் கீழ்

"தாளாண்மையுள்ள புகழ் கிருஷ்ணராயன் சமூகத்திலே
வேளான் மகிளரைப்போலே விஜேதித்த வேடங்கொண்டு
கோளார்வைரியர் கூத்தாடத் தங்கள் குடிமை யெண்ணி
வாளாலவனுயிர் மாய்ந்ததன்றோ தொண்டைமண்டலமே.

இதன் பொழிப்பு—சந்திரகிரியிலரசசெய்த விடாமுயற்சியையும், பெரும்புகழையுமுடைய கிருஷ்ணராயர் சபையில் கூத்தாடுங்கொள்கையில் வல்ல கூத்தர், வேளாளப்பெண்ணைப்போலவேடிக்கை வேடந்தரித்து கொண்டாடக் கண்டு, தமதுகுடிப்பெருமையை யிகழ்ந்ததைக்கருதி ஓர் வேளாள னேவலாலவ் வேடதாரியை வாளால் வெட்டினன். தம் குடிமைக் கிழிவு வரச்சகியாத வீரமுடைய வேளாளர் வாழுமி தொண்டை மண்டலம் என்பதாம். மேல் காட்டிய பாட்டிலும், பொழிப்பிலும், கவரைச் சேவகன் என்றப் பெயரையே காணுகிருக்கஷ்டி புத்தகத்தின் ஷ்டி பாட்டின்வரலாற்றில் கண்ட ஆபாசக்கதையை நமது பிள்ளையவர்கள் பதிப்பித்தது ஆச்சரியம்! ஆச்சரியம்! இப்புராணத்தின் 37-வது பக்கமுதல், 128 வரையில் கிருஷ்ண தேவராயலு சரித்திரத்தை விஸ்தரித்து எழுதியிருக்கிறோம். அதில் இந்தக் கதையைப்பற்றி பிரஸ்தாபிக்க வேகாணோம். ஆனால் கிருஷ்ணதேவராயலு காலத்தில் பிரபலராகவிருந்தஇராயலு பாஸ்கர மந்திரியார் காலத்திற் பலிஜவாருக்கு கொடுக்கப்பட்ட 3 சாசனங்களின் நகல்களையும், அவைகட்கு ஆதாரமான கவரி புத்திர சரித்திரத்தின் சங்கிரகத்தையும் இதனடியிற் பதிப்பித்திருக்கிறோம்.

எட்டாவது.

பேட்டை பலிஜவார்களுக்குள் வலங்கைத் தலைவராகிய தேசாஹி சிரேஷ்டிகள் உண்டான விவரத்தையும், இவர்களுக்கு வலங்கையார் என்றப்பெயரும், பிருதுகளும், அந்தஸ்து முதலானதுகள்வந்தவிவரத்தைப்பற்றியும் அறிவிக்கும் புராதன புராணமாகிய கவரிபுத்திர புராணமென்னும் தெலுங்கு கிரந்தத்தின் சாரசங்கிரகத்தைத் தமிழ்ப் படுத்தி இதனடியிற் பதிப்பிக்கிறோம்.

## கவரி புத்திர புராணத்தின் சாரசங்கிரகம்.



பிரம்மாண்ட புராணம், உத்திரகாண்டத்திலுள்ள, இதிகாசங்களில் ஒன்றாகிய, கவரி புத்திரசரித்திரத்தைச் சொல்லும்படி நைமிசாரணிய வாசிகளாகிய சவுனகாதி மஹாமுனிகள் வேண்டியபடி, சூதர் சொன்னதாவது—புண்ணிய க்ஷேத்திரமாகிய பரதகண்டத்தின் திலகமாக விளங்கும் ஹஸ்திநபுரத்தில் ஜன்மேஜய மஹாராஜன் செங்கோல் செலுத்திவருகையில்; ஸ்ரீ வேதவியாசர், வைசம்பாயனர், ஜயமுனி முதலான சீடர்களோடு வந்து சேவை சாதித்து, க்ஷேமசமாசாரத்தை விசாரிக்கையில்; அந்தஜன்மே ஜயன்மிக்க பயபக்தியுடன் வணங்கி, பாரத உயுத்தத்தின் காரணகாரியங்களை வியக்தமாகச்சொல்லவேண்டு மென்று கேட்க; அவைகளை விவரமாக உரைக்கும்படி வைசம்பாயனருக்கு உத்திரவளித்துப்போக, அந்த வைசம்பாயனரும் உத்திரவின்படி விவரமாகச்சொல்லினர்: அந்தப்பாரத உயுத்தத்துக்கு குந்திதேவியே முக்கிய காரணமென்று ஜன்மேஜயன் அபிப்பிராயஞ் சொல்வதாகச்சொல்ல;

வைசம்பாயனர் கேட்டு மறுத்து, தரமமஹாராஜனுடைய யாகத்தில் சகல க்ஷத்திரியர் நாசகாரணியாக ஜனித்த பிரமஹத்தியே காரணமென, சுகர் தருமருக்குச் சொல்லியதாகச்சொன்னார்-எப்படியெனில்.

ஹிமவத்ராஜனுக்கு மேனகையின் வயிற்றில் ஜனித்தபார்வதியை, ஸ்ரீ சங்கரருக்கு விவாஹம்செய்ய நிர்மானித்து, சகலதேவாதி தேவர்களையும் தருவித்ததில், அப்போது வந்திருந்த பிரம்மதேவன், பார்வதி தேவியின் பேரழகைக்கண்டு வியந்து, காம எண்ணத்தோடு சிந்தித்ததை; சிவன் அறிந்து, சினந்தும், தமது நெற்றிக்கண்ணினால் பார்த்துதகித்தும், தமதுகைவாளால் பிரம்மாவின் ஒருசிரசை வெட்ட, உடனே பிரம்மாவின் சிரசு, சங்கரன் கையிற்போய் ஒட்டிக்கொண்டது. அந்தச்சிரசு சங்கரன் கையை விடாமல் பிடித்து ஒட்டிக்கொண்டமையால்; சிவன் விசனப்பட்டு அந்தகஷ்டத்தை நீக்கிக்கொள்ள விஷ்ணுவினிடம் முறையிட, அவர் சிவனுடைய சினத்துக்குச் சினந்து, பரிதபித்து, ஓ சிவனே! நீ தம்பதி சமேதராக காசி க்ஷேத்திரம்போய் 16,000 வருஷ காலம் பிக்ஷை எடுத்து, அந்த பிரம்மகபாலத்தைப் போஷித்து வருவாயாகில் உனது பிரமஹத்தியும் போய்; உன்கையிலொட்டி கொண்டிருக்கும் சிரசும் விடுபட்டுபோம் என்று சொல்ல, அதற்குச் சிவனும் சம்மதித்துக்கொண்டு, காசிக்ஷேத்திரம்போய் 16000 வருஷகாலம் பிக்ஷை எடுத்து பிரம கபாலத்துக்குத்திருப்தி செய்துவரச்சே; ஒருநாள் ஸ்ரீ மாதவ சுவாமி மந்திரத்துக்குப்போய்; பவதி பிக்ஷாதேஹி, என்று கேட்க, மஹாலக்ஷ்மிதேவியும் பிச்சான்னம் கொண்டுவந்துபோட, அதிற்சில அன்னப்பருக்கைகள் தவறிக்கீழேவிழ, சிவன்கையிலிருந்த பிரமகபாலம் அந்த அன்னத்தை பொறுக்க சிவன்கையை விட்டிறங்க; சிவன் கண்டு இதுதான் சமயமென்றறிந்து அந்தரமாக மறைந்து விட்டார், உடனே அந்தக் கபாலமானது சிவனைக்காணமல் கோபித்துக் கொக்கரித்தும், நாலாப்க்கங்களிலும் பற்றி எறியும்படிசெய்துக்கொண்டுவரச்சே, விஷ்ணுவானவர் பார்த்து, ஓ கபாலமே! நீ 16000 வருஷகாலம் பிச்சான்னம் உண்டும் திருப்தியடையவில்லையா! யென்று கேட்க, "அதுபோதாது, அநேக க்ஷத்திரியர்களுடைய இரத்தத்தைக்குடித்து பேராசை தவிக்கவேண்டுமென்றுசொல்ல" விஷ்ணுவானவர் கேட்டு, ஓ கபாலமே! துவாபரயுகாந்திரத்தில் அநேக ராஜர்களுடைய இரத்தத்தைத்தருகிறோம். அதுவரையிலும் பொருத்துக்கொண்டிரு என, "அதுவரையில் நான் என்னமாக இருப்பேனென" பூமியில் பள்ளமாகவும், செடிகளில் பங்கவர்ணமாகவும், ஸ்திரீகளிடம் ரஜோரூபமாகவும், இருக்கக்கடவாய் என்று சொல்லிவிட்டு; இந்தகஷ்டத்தைப்பற்றி தேவர்களோடு ஆலோசனைசெய்து, இந்த கபாலத்தை தரிக்கப்பட்டவனும் உலகிலுண்டோ என்று கேட்கையில்; தேவர்கள் பயந்து மெய்விதிர்க்க, மற்கண்டேயர்பின் வருகிறபடி சொல்லலுற்றார். அதாவது—பூர்வத்தில் சங்கருடைய நாயகியாகிய கவுரிதேவி செய்த யாகத்தின் யக்ஞியகுண்டத்தில் சகலலோக ஸ்திரீகளுக்கும் சுப சூக்ஷ்ம்பொருள்களைக் கொடுக்கும்படி

யான கவரிபுத்திரன் பிறந்தான். அவன்தான் இந்தபிரம்மஹத்தி கபாலத்தைத்தாங்கவல்லவன் என்று சொல்ல, விஷ்ணுவானவர் கேட்டு, சந்தோஷித்துத் தக்கனுதர்களை அனுப்பி தருவித்து, ஓ கவரிபுத்திரா! நீ இந்தபிரம கபாலத்தை தாங்கு வாயாகில், உனக்கு புருஷ சிரேஷ்டத்துவம் உண்டாகு மென்று சொல்ல; அந்தகவரி புத்திரன் அதற்கிணங்கி அப்பிரம்மகபாலத்தைத்துணிந்து தரிக்க, தேவர்கள் கண்டு களித்தும், ஆசிர்வதித்தும்; பிரம்ம தேவன் அந்தகவரிபுத்திரனைபலிஜவாரு, சேடர், தேவடியார், ஜனப்பர், செலியார், நன்றவாரு, மங்கலவாரு, ஏறுதிகள், ஒருகலவாரு, போயர், பண்டிவாரு, ஒட்டர், உப்பரவர், லம்பாடியர், தேவரவாரு, பறையர், என்றுதி 18 ஜாதியார்களுக்கும் தலைவனுக்கிப் பட்டபு செட்டியார் என்னும் பட்டத்தைக்கட்டினர்.

அப்போது அந்தகவரிபுத்திரனுக்கு விஷ்ணுவானவர் கருடதுவஜத்தையும், பிரம்மா ஹம்சதுவஜத்தையும், சிவன் விருஷபதுவஜத்தையும், இந்திரன் ஐயுத்த ஜயசிலத்லதையும், சந்திரசூரியர்கள் சந்திர சூமரங்களையும், அக்கினிதேவன் அசமானதுவஜத்தையும், எமன் இரத்ததுஜத்துவத்தையும், நைருதி சந்திரஹாசத்தையும், தனதானியவைபங்களையும்; மன்மதன் மீன்கேதனத்தையும், மற்றதேவர்கள் பேரி மிருதங்கம் முதலான பிருதுகளையும், அஷ்டதிக்கு பாலர்கள்பின்னும் பலபிருதுக்களையும் கொடுத்து ஆசிர்வதித்து அனுப்ப; அந்த கவரிபுத்திரன், சகலலோகங்களிலும் சஞ்சரித்துதேசாஹி அதிகாரம்செய்து, தருமபரிபாலனம் செய்து வரவே; அவனிடமிருந்த பிரம்மகபாலம்பிரிந்து துருபதமஹாராஜன் செய்துக்கொண்டிருந்த யாகத்தில் ஆவாஹணமாகி, அந்த அக்கினியே துரௌபதியாகப்பிறிட்டு ஜனித்து, வீஷணனைக்கொன்றுன் என்று சுகர் சொல்ல; தருமநந்தனன் கேட்டு, அந்தகவரி புத்திரனைப்பார்க்க பேராசைக் கொண்டிருப்பதாகச் சொல்ல, ஆரியசுதாநந்தனுகிய கவரிபுத்திரன் பலவிடங்களிலும் தேசாதிபதியாக இருப்பானுகையால், அவனை வாயுவின்புத்திரனுகிய பீமனை அனுப்பி வரவழைப்பாய் என்றுசொல்லிப் போக; தருமன்கேட்டு, ஸ்ரீகிருஷ்ணரைப்பார்க்க, அவர்பீமனை நோக்கி, நீபோய் கவரிப்புத்திரனை அழைத்து வருகவென்று கட்டளையிட, உடனே பீமன் நாலாபக்கங்களிலும் காற்றுருபமாகப்போய் தேசாஹி சிரேஷ்டியாகிய கவரிபுத்திரனை 18வித பிருதுகளுடனும் அழைத்துவர; தருமராஜன் கண்டு, முன் எழுந்துப்போய் அக்கவரிபுத்திரனுக்கு தக்க மரியாதை உபசாரங்களைசெய்து, நல்வரவுகூறி அழைத்து வந்தும், சமகவுரவபந்தியில் தமமோடு உட்காரும்படிச் செய்தும், அருசுவை உணவுஉண்டபிறகு, அழைத்துவந்து சபாமண்டபத்தில் தமக்கருகில் உட்காரவைத்துக் கொண்டு உபசரித்தும், மிருகதுவஜத்தையும், ஜயசங்கத்தையும் பிருதுகளாகக்கொடுக்க; பிறகு பீமன் காண்டிபதுவஜத்தையும், பவுண்டர சங்கத்தையும், அர்ஜுனன் கபிதுவஜத்தையும், தேவதத்த மென்னும் சங்கத்தையும், நகுலன் மாதங்க வஜிரத்தையும், கோஷமென்னும் சங்கத்தையும், சஹாதேவன், சுரபி, மணிபுஷ்பகம் என்னும் சங்கங்களையும்; கிருஷ்ணர், அபிமனுயுவின் கர்ணிகாரத் துவஜத்தையும், தரு

மன், கஞ்ச, பிஞ்ச, மிஞ்சகளையும், நவரத்னங்களையும் பிருதுகளாகக் கொடுத்து அந்தபாண்டவாதிகள் கவரிபுத்திரனை ஆலிங்கனம் செய்துபுகழ்ந்ததாக வைசம்பாயனர் ஜன்மே ஜயருக்கு சொன்னார்.

---

## இரண்டாவது அத்தியாயம்.

பிறகு ஜன்மேஜயன் வைசம்பாயனரைப் பார்த்து, ஹிமவந்தனுடைய புத்திரியாகிய பார்வதி தக்ஷனுடைய புத்திரியான விவரத்தைப் பற்றித் தெரிவிக்கவேண்டுமென்று வேண்ட, வைசம்பாயனர் சொல்லுகிறார்.

"பிரமதேவனுடைய வலது கால் பெருவிரலில் ஜனித்தவனும், மஹா வீரபராக்கிரமசாலியுமாகிய, தக்ஷபிரஜாபதிக்கு, 100 குமாரத்திகளுண்டு. அவர்களில் தக்ஷாயணி என்னும் பெண்ணை அருமையாக வளர்த்தி வருகையில், ஒருநாள் தக்க ஆடை ஆபரணங்களை அணிந்து, தன் அழகைப்பற்றி நிலக்கண்ணாடியில் பார்க்கச்சே, சுமங்கலிய ஸ்திரீகளுக்கு இன்றியமையாத மஞ்சள் மை, வளையல் முதலான சுபகரப்பொருள்களில்லாமையால் மனம் கலங்கி, தன் தந்தையிட முறையிட; அந்த தக்ஷன், சப்தலோகங்களையும் தாண்டி பிரம்மாவினிடம் போய் முறையிட, அந்த பிரம்மாப்பார்த்து, ஹே, தக்ஷா! ஓர் வீரதீரபுருஷன் சிவதேஜஸ்ஸோடு உன் குமாரத்தி செய்யும் யாகத்தில் ஜனித்து, உன் மகளுக்கு வேண்டிய சுபகரமான மங்கள சுப ரூப வஸ்துக்களைத் தருவானென்று சொல்லியனுப்ப; உடனே தக்ஷன் வந்து, தங்கத்தினால் செய்த செங்கற்களைக்கொண்டு, 18 மூலைகளுள்ள, சதுரங்க பீடமாகவும், கருடாகிருதியாகவும், சில கமலாகிருதியாகவும், யாககுண்டத்தை நியமித்தும்; அதில் தன் குமாரத்தியைக்கொண்டு அக்கினி ஹோத்திர ஹோமம் செய்வித்து வரச்சே; அங்கு அனேக தேவர்கள் ஆவிர்ப்பாகமாகி வந்து நிற்க, அந்த யாககுண்டத்திலிருந்து கஞ்சு மிஞ்சு, பெஞ்சு, காஜலு, மலராம், மஞ்சள் குங்குமம், காதோலை, சீப்பு, கந்தப்பொடி, சந்தன புஷ்பங்களோடு ஒரு திவ்விய புருஷன் ஜனித்து வந்து, அந்த கவரி தேவியை சுமங்கிலியாக பிரகாசிக்கும்படி முகத்தில் குங்கமிட்டும், கழுத்தில் கருமணி தரித்தும், வளையல்களை புகட்டியும், கண்களுக்கு மைதீட்டியும், சந்தன புஷ்பங்களால் அலங்கரித்தும் வணங்க, கவரி தேவியும் ஆனந்தப்பட்டு; அந்த கவரி புத்திரனை ஆலிங்கனம் செய்துக்கொண்டு, அந்த கவரி புத்திரனைசகல லோகங்களிலிருக்கும் சுமங்கலியஸ்திரீகளுக்கு மஞ்சள் குங்குமாதி சுபகர வஸ்துக்களைக் கொடுத்துக்கொண்டு, சிரேஷ்டனாகி பிரகாசித்தும்—உலகில் நடக்கும் விவகாரங்களை விசாரித்து தரும பரிபாலனம் செய்தும், தேதாஜி என்னும் பெயரால் பிரகாசிக்கக்கடவாயென்று ஆசீர்வதிக்க; இத்தியாதி வைபவங்களை அறிந்த மஹாலட்சுமியும், வாணி, சரஸ்வதி, இந்திராணி முதலான தேவமஹிஷிகள், இந்த தேதாஜி ஆகிய கவரி புத்திரனை தம் தம் இருப்பிடங்களுக்குத் தருவித்தும், தமக்கு வேண்டிய மஞ்சள் குங்கும முதலான சுமங்கலிய வஸ்து

க்களை இந்த கவரி புத்திரன் கொடுக்கப் பெற்று; வைகுண்டத்திலிருந்த லக்ஷ்மிதேவியார், இந்த கவரி புத்திரனுக்கு பலிஜவாரு என்ற பெயரையும், அநேக பிருதுகளையும் கொடுத்து மரியாதைச் செய்தனர். பிறகு சத்தியலோகத்திலிருந்த சரச்சுவதி தேவியார், இந்த கவரி புத்திரனுக்கு, கவரவுலு, என்ற பெயரும் கொடுத்து மரியாதை செய்தார். பிறகு இந்திராணி, சஹா தேவி, சியமலாதேவி, தீர்க்காதேவி, காளிகாதேவி, அஞ்சனாதேவி, சித்திரரேகை, முதலானவர்களுக்கும், முனிபத்தினிமார்களுக்கும் முறையே மஞ்சள், மை, வளையல் முதலான சுமங்கிலிய வஸ்துக்களைக் கொடுத்து, அவரவர்களால் தக்க பிரிதுக்களை பெற்றும்; அநந்தரம் 56 தேசங்களிலும் தேசாஹி சிரேஷ்டர் என்ற பெயரால் பிரகாசித்ததாக, வைசம்பாயனர் விவரமாச்சொன்னார்—பிறகு—தக்ஷன், ஒரு காரணத்தைப் பற்றி சிவபெருமானை தூஷிக்க, சிவபெருமான் கோபித்து தக்ஷனுடைய சிரசு ஆட்டுத்தலையாக மாற்றிவிட, அதை மானுஷரூபமாக மாற்ற தக்ஷன் யாகம்செய்ய, எல்லா தேவர்களையும் தருவித்தபோது; சிவபெருமானையும், பார்வதிதேவியையு மாத்திரம் அழைக்காமல் அசட்டையாக விருக்கையில்; பார்வதி தேவியானவர், அழையாத வீட்டிற்குப் பலத்காரமாக போகவேண்டுமென்று சிவபெருமானைக் கேட்க, அழையாத வீட்டிற்கு அவர் போகவேண்டாமென்று தடுத்தும், பார்வதிதேவி கேளாமல், கணபதியையும், நந்தியையும், துணையாகக் கூட்டிக்கொண்டுப்போக, அவர்களை தக்ஷன் தக்கமரியாதையுடன் அழையாமையால்; பார்வதிதேவி நொந்து, அக்கினிகுண்டத்தில் பிரவேசமானார். இது சங்கதியை சிவபெருமான் கேட்டு, அந்த அவமானத்தை சகிக்க முடியாமல், தன் சடாமுடியிலிருந்து வீரபத்திரனை சிருஷ்டித்து, தக்ஷன் யாகத்தைக் கெடுத்துவிட்டு வரும்படியனுப்ப; அவ்வீரபத்திரனும் அப்படியே வந்துச்செய்து, பிருகு முதலானவர்களுடைய மீசைகளைப் பிடுங்கி கைலாசத்துக்குவர, இந்த அக்கிரமத்தைத் தேவர்கள் சகியாமல் தேவேந்திரனிடம் முறையிட; அத்தேவேந்திரன், வைகுண்டத்துக்குப்போய் விஷ்ணுவினிட முறையிட, அவர் ஸ்காந்தாவனத்துக்குவந்து, சிவபெருமானை வேண்ட, தக்ஷன் சிரசு யக்ஞியத்தில் பஸ்பமாகிவிட்டபடியால் அதற்குப்பதில் ஒரு ஆட்டுத்தலையை வைத்துக்கொண்டு யாகத்தை முடித்தான்.

---

## மூன்றாவது அத்தியாயம்.

பிறகு, தக்ஷாயணி, பர்வதராஜனுடைய குமாரத்தியானதற்குக் காரணமெப்படியென்று ஜன்மேஜயன் கேட்க, வைசம்பாயனர் பின்வருகிறபடி சொல்லுகின்றார்—ஒருகாலத்தில் பர்வதராஜன் அம்பிகா பூஜைசெய்து வந்ததினால் பார்வதிதேவி வியந்து, முன் தக்ஷன் யாகத்தில் பிரவேசித்த பார்வதியே, ஹிமப்பர்வதனுக்கும், மேனகைக்கும் புத்திரியாகப் பிறந்தார். அப்படிப்பிறந்தஅந்தம்மை, ஒரு காலத்தில் தன் சகிகளோடு சேர்ந்து ஒரு சிங்காரவனத்திற்போய், ஆடிக்கொண்டிருக்கும்போது; சில்பிசாஸ்திரி இடம் சிற்பவித்தையைக்கற்ற இரதாகாரன் என்னும் ஓர் சிடன் குருதுரோகியாகிய படியால்;

அந்த குருவால் சபிக்கப்பட்டான்; அந்தச்சாபனையை நீக்கிக்கொள்ளும்பொருட்டு, நல்ல கதைகளைச் செய்து பார்வதி தேவிக்குக் கொடுத்து வணங்க; அந்தம்மை கண்டு உனக்கு வேண்டுவதென்னையென்று கேட்க, அவன் தனக்கு தேசாஹி பட்டம் கொடுக்கவேண்டுமென்று கேட்க, அந்தம்மையும் கொடுக்க, அப்பட்டத்தைப் பெற்ற இரதாகாரன் உலகெங்கும் திரிந்து வம்புகள் விளைத்து வந்தான்.— நிற்க, ஸ்ரீ பார்வதிதேவியானவர் சிங்காரவனத்தில் விளையாடி வருவதை சிவ பெருமான் கண்டு மோகித்து, ஓர் ஆண்டி வேடம் தரித்துக் கொண்டு வந்து அம்மையவளர்க்க: இருவரும் அங்கு காந்தர்வவிவஹம் செய்து கொள்வதற்கு சுமங்களிய சுபவஸ்துக்களைத்தரும் கவரிபுத்திரனை விரும்ப; அவன் வந்து பார்வதிதேவிக்குப்பலவித வலையல்கள் பூட்டி, குங்குமம் பொட்டிட்டும், மைதீட்டியும், கருமணி தரித்தும், மஞ்சள் சந்தனத்தைப்பூசி புஷ்பாதிகளைப்புகட்டி சந்தோஷமடையும்படி செய்விக்க; அப்போது நாரதர்வந்துப் பார்த்து ஹே! தேவி! இந்த கவரி புத்திரன் உன்னை சுபகரமங்கல வஸ்துக்களைக்கொண்டு அலங்கரித்தவெகுசிறப்பாக இருக்கிறதென்றுப்புகழ்ந்துக்கொண்டாடும்போது, இரதாகாரன் கேட்டு வந்து, கவரி புத்திரனுடைய மலாரத்தைப்பிடித்து இழுத்து, கவரி புத்திரனை சுங்கம் கொடுக்கும்படி கேட்க, கவரி புத்திரன் கொடேனென்று கர்ஜித்து இரதாகாரனைக் கொல்லப்போகையில்; ஸ்ரீ பார்வதி தேவியானவர்: தனது வலது கையால், கவரி புத்திரனைப் பிடித்துச் சமாதான படுத்துகையில், நாரதர் எழுந்து இரதாகாரனைப் பார்த்து "ஹே! இரதக்காரனே, நீ நாடு நகரங்களைச் சுற்றித் திரிந்துக்கொண்டும், எளிய வேலைகளைச் செய்துக்கொண்டும், பொய் பேசியும், அபகீர்த்தியைப் பெற்றும், பஞ்சமஹா பாதகர்களில் ஒருவனாகி மோசவேலைகளைச் செய்தும் பிறர் பொருளை மோசமாகச் சம்பாதித்துக் காலம் கழிப்பாயாக என்றுச் சபிக்க; உடனே பார்வதி தேவியானவர், இராதகாரனை கோபித்து அவன் தரித்திருந்த பட்டபிருதைப் பிடுங்கி, கவரி புத்திரனுக்குக் கொடுக்க, அவனதை வாங்கி தன் முழங்காலில் கட்டிக்கொண்டமையால், அன்று முதல் மோகாலி பட்டபிருதுவாரு என்ற பட்ட பிருதுப்பெயரையும் (கவரி புத்திரன்) பெற்றான். பிறகு பார்வதியாகிய கவரி தேவியானவர், இராதாகாரனை தனது இடது கையால் இழுத்துத்தள்ளி துரத்திவிட்டபடியால், அன்று முதல் அந்த இரதாகாரனையும், அவனைச் சார்ந்தாரையும், இடங்கையார் என்றும், ஸ்ரீ பார்வதிதேவி தன் வலதுகையால் கவரி புத்திரனைப் பிடித்துச் சமாதானம் செய்தபடியால், அந்த கவரி புத்திரரைச் சார்ந்த 18 ஜாதியரை வலங்கையாரென்றப் பெயரைப் பெற்றும், பல பிருதுகளுடனும் தேசாஹி சிரேஷ்டர்களாகப் பிரகாசிக்கலானார்கள்.

எப்படி எனில்.

1. தெலுகுவெலமருக்கு—ஹம்சதுவஜமும்.
2. கன்னிடியாருக்கு—பசுவலிங்கதுவஜமும்.

3. ரெட்டிவாருக்கு—பஞ்சவர்ணகேதனமும்.
4. கும்மரவாருக்கு—நாகேட்டிதுவஜமும.
5. கொல்லவாருக்கு—விருஷபதுவஜமும்.
6. வன்ன ஜனபவாருக்கு—கண்டபேரண்டதுவஜமும்.
7. கோமுட்டிவாருக்கு—மகரதோரணமும்.
8. ஜாண்டரவாருக்கு—உலககேதுவஜமும்.
9. ஒசவாருக்கு—மத்தளதுவஜமும்.
10. குரவஞ்சிவாருக்கு—சகோரபக்ஷி துவஜமும்.
11. ஏனாதிவாருக்கு—குநதேடி துவஜமும்.
12. அருவ தமிழருக்கு—தாமரை துவஜமும்.
13. வேட்டகாருக்கு—கவுதாரிதுவஜமும்.
14. குறவருக்கு—கவுதாரிதுவஜமும்.
15. தேவடியாளுக்கு—பன்மததுவஜமும்.
16. தெலுங்குகொல்லவாருக்கு—சஙகுதுவஜமும்.
17. பட்டுநூலுகாரருக்கு—பட்டுதுவஜமும
18. ஜனபவாருக்கு—ஹிரன்யதுவஜமும
19. வட்டவாரிக்கு—பாரசிப்பதுவஜமும்
20. உப்பரவாருக்கு—ஆகுரதுவஜமும்
21. பத்மசாலலுக்கு—சார்து நூல துவஜமும்.
22. லம்பாடியாருக்கு—பெரிக துவஜமும்.
23. சுகாலீலருக்கு—சித்திர துவஜமும்.
24. மேளக்காரர்களுக்கு—டமாரு துவஜமும்.
25. நட்டுவருக்கு—தாள துவஜமும்.
26. பட்டுசாலவாருக்கு—கண்டபேரண்டதுவஜமும்.
27. சித்திரகாரருக்கு—மகர துவஜமும்.
28. இலவாணியருக்கு—கோகில துவஜமும்.
29. வாணியருக்கு—கருட துவஜமும்.
30. ஈன்றவருக்கு—ஏணி துவஜமும்.
31. கம்மாளருக்கு—சுத்தி, சம்மட்டி, உளி, முதலானதுகளும்.
32. தெலுங்கு செட்டிக்கு—சரதுவஜமும்.
33. செம்படவாருக்கு—வலைய துவஜமும்.
34. கிருஸ்தவருக்கு—மருகால்லகுரர துவஜமும்.
35. ஒத்தசெக்காருக்கு—பஞ்சவர்ணக்கிளியும்.
36. பட்டணமுவாருக்கு—கூர்ம துவஜமும்.
37. கரியாலவாருக்கு—பச்ச துவஜமும்.
38. ஒடைக்காரருக்கு—மீன துவஜமும்.
39. கிளாசுவாருக்கு—வண்டி துவஜமும்.
40. நக்கபோயிலுக்கு—குக்க (நாய்) துவஜமும்.
41. இருளருக்கு—சில்லகோல துவஜமும்.
42. குயவருக்கு—சகிரகூல துவஜமும்.
43. புடுபுடுக்காரருக்கு—சக்தி துவஜமும்.
44. பனசவாருக்கு—தாரையும்.
45. ஜோனங்கிவாருக்கு—மூக்தா துவஜமும்.
46. வண்ணாருக்கு—வெள்ளை யானையும்.
47. தெலுங்குபண்டாரத்துக்கு—சூலமும்.

47-கம்பசாட்டுகெம்மகார், 48- பஞ்சம் கன்னிடையர், 49-துலுக்கரணம் கன்னிடையர், 50 குறும்ப கன்னிடையர், 51- முத்திரியர். 52 கைக்கிளவர், 53-ஜேன்றவர் 54-செட்டிகள்- 55- பத்துமசாலியர், 56- சேணியர், 57-பட்டு சாலியர், 58-கன்னடி சேணியர், 59-பட்டு நூல்காரர், 60-கணியர், 61-தண்டிஎருது வாணியர், 62-அருப்புக்காரர், 63ஜோனகர் 64 கணக்கர், 65-போயவார், 66 - சுரும்புஇடையர். 67-சிவிகையிடையர், 68-வெள்ளிக்கம்மாளர், 69-வெள்ளித்தச்சர், 70-கப்பல் தச்சர், 71-கப்பல் கிளாசுகாரர்: 72-இருளர், 73-வடுகு பண்டாரம். 74-தமிழ் பண்டாரம், 75 - பெஸ்தபோயிகள், 76-உப்பாடபோயிகள், 77-தமிழ் கொசவர், 78 வடகுகொசவர், 79-பொக்கிலியார், 80-மாராட்டியார், 81-வீரணத்தார், 82-வீரமுஷ்டிகள், 83-வேடர், 84 வெள்ளிப்பள்ளிகள், 85-கைக்கள தாசிகள், 86-மறவையார் 87-ஜோகிகள், 88- பம்பைக்காரர்கள், 89-சணப்பர், 90- செவிஞ்சுவார்; 91-தமிழ் வண்ணார், 92-வடுகு வண்ணார், 93-மாராட்டி வண்ணார், 94-தமிழ் அம்பட்டர், 95-வடுகு அம்பட்டர், 96-வள்ளுவர், 97-பயுனியர், 98-முச்சியார், 99-எகுலவார், 100 கல்லடி சித்தர் 101-பெத்திண்டி கொல்லர், 102-மேதரவார் 103-பஞ்சு வெட்டிகள், 104 கள்ளர், 105-தக்கோசி, 106-வத்துக்கொறவர், 107-பூணிக் கொறவர், 108 - ரசபுத்திரர், 109- வடுகுகைக்கிளவர் 110- சக்கிலியார், 111- சாத்தாணியார், 112-வடுகுகணக்கர்கள், 113 - வடுகுகவுண்டர், 114 - வடுகு ஒட்டர், 115-வடுகு உப்பறவர், 116-தமிழ் ஒட்டர், 117- வெக்காளாவர் 118-மறவர், 119 தப்பட்டைதாசரி, 120-கூடதாசரி, 121- பந்துதாசரி 122-பட்டாணியார், 123-கரையார், 124-கோட்டைக்காரர், 125-குறவர், 126-உப்புக்குறவர், 127-செட்டிக்குறவர், 128-வடுகுக் குறவர், 129-காடைக்குறவர்; 130-ஒட்டர், 131-தச்சர், 132-சட்டுவர், 133-செம்படவர், 134-குடு குடுப்பைகள், 135-தோம்பரவர், 136-சாமி ஜோகிகள், 137 -லம்பாடிகள், 138-பணிசெய்வார், 139-மாவுட்டியர், 140-பறையர், 141 -பறைத்தாதர், 142-வடுகு பறையர், 143-பண்டப்பறையர். ஆக ஜாதி 143-இன்னுமுண்டு.

## போத ஜாதி பிராமணர்கள், — இராஜாக்கள்.
## அப்போதிருந்த இடங்கை ஜாதிகள்.

1-அச்சரவாரத்து செட்டிகள், 2-காசுக்காரசெட்டிகள், 3-வடுகு செட்டிகள், 4- வக்காமணி செட்டிகள் 5-வடக்கத்திய செட்டிகள், 6- வன்னியபள்ளிகள், 7-அவிரி பள்ளி, 8-கூடைகட்டி பள்ளி, 9-காவல் பள்ளி, 10-மீன்கண்டு பள்ளி.

## இரண்டாம் வகுப்பு.

1-தச்சன் 2-கருமான். 3- தட்டான், 4- கன்னான், 5- கல்தச்சன், 6-செம்படவன், 7-சக்கிலியன், 8-கைக்கோளன். ஆக ஜாதி 18

## அப்போதுஇருந்த—வலங்கையார் கொடிபிருதுகள்.

1-வெள்ளைக்குடை, 2-வெள்ளைக்கொடி, 3-மேழிக்கொடி, 4-வெள்ளைக்குதிரை, 5-சோடி வெண்சாமரம், 6-செயமணி, 7- சிம்மலலாடம், 8-அருகுதீவட்டி, 9-சவளதோரணம், 10 - அன்னக்கொடி, 11 - பச்சைக் குதிரைக்கொடி, 12-குயில்கொடி, 13-சிம்மக்கொடி, 14 - யாளிக்கொடி, 15-கழுதைக்கொடி, 16-அனுமக்கொடி, 17-காமதேனுக்கொடி, 18 - வசந்தக்கொடி, 19-புலிக்கொடி, 20 சங்குக்கொடி, 21-சக்கரக்கொடி, 22-கண்டபேரண்டபக்ஷிக்கொடி, 23-சற்பக்கொடி, 24-பட்டுகொடி, 25- கருடக்கொடி 26-மகரமீன்கொடி, 27-சொங்குக்கொடி, 28-புருஷமிருககொடி, 29-பூனைக் கொடி, 30-பஞ்சவர்ணக்கொடி, 31 - பசுவக்கொடி, 32 - யானைக்கொடி, 33-சந்திரக்கொடி, 34, சூரியக்கொடி, 35-அக்கினிக்கொடி, 36-ஊதாக் கொடி, 37-கத்திக்கொடி, 38-மீன்கொடி, 39-பாங்குக்கொடி, 40-மிருதங்கக்கொடி, 41-பவுண்டரக்கொடி, 42 - தேவதத்தக்கொடி, 43- சுகோஷக் கொடி, 44-மணிக்கொடி, 45 - மணிபுஷ்பக்கொடி, 46 - கொங்குக்கொடி, 47-சரசுவதிக்கொடி, 48-லக்ஷிமிக்கொடி, 49-பார்வதிக்கொடி, 50- மயில் கொடி, 51-மஞ்சல் பாவாடை, 52-வெள்ளைப்பாவாடை, 53 - மகரதோரணம், 54-வெள்ளை யானை, 55-வலை, 56 - வெள்ளைடோரா, 57- காவி டோரா, 58-கம்பிளிடோரா, பஞ்சகலசம் முதல் 33வரைக்கும் தற்காலத்து இராஜக் கொடிகள்.

## இடங்கையார் கொடிகள்.

1-கரடிக்கொடி, 2-சாவல்கொடி, 3 - அக்கினிக்கொடி, 4-மான்கொடி, 5-கிளிக்கொடி, 6-பறந்துக்கொடி, 7-கழுதுக்கொடி, 8-நரிக்கொடி, 9- மயில்கொடி.

## அப்போது வலங்கையார் சுபங்களில் ஊர் கோலம் வருகிறவிதம்

1-பல்லக்கு 2 - காடி, 3 - குதிரை, 4 - யானையின்மேல் அம்பாரி, 5-யானையின்மேல்கொடி, 6-ஒட்டையின்மேல் டாங்கா, 7—ஒட்டையின் மேல் நகபத்து, 8- குதிரையின்மேல் நகபத்து, 9 — குதிரையின்மல்சவுடோல், 10, குதிரையின்மேல் நாகசுரம். 11-ரிஷபத்தின்மேல்டமார், 12-தண்டுகட்டினபல்லக்கு, 13-நகபத்துகானு 14-சிம்மாசனம், 15-சங்கீத மேளம், 16-வெள்ளைக்குடை, 17-அருகை 18-ஆலவட்டம், 19-வெள்ளைக்கொடி, 20- மொறசுகொடி, 21-சாமரம்ஜோடி, 22 - மயில்குச்சு, 23- மயில்விசிறி, 24- வெள்ளைப்பாவாடை, 25-கொடை, 26 - ஈட்டிக்கழி, 27 - கொடிச்சீலை, 28 - மகரதோரணம், 29-பூரிகை, 30-தவச்சங்கு, 31-தெருவுஅடைப்பார், 32 - திருச்சின்னம், 33-எக்காளம், 34-கட்டியம், 35-தமுக்கு, 36-தேவடியாக்கள், 38- துத்தாரி, 33 - தப்பட்டை, 39 - தீவட்டி, 40 -கிருஷ்ணவிலாசம் முதலியன

## லவங்கையார் அசுபங்களிலே ஆசரிக்கப் பட்டவை.

1-பல்லக்கு, 2-பாடை, 3-தேர், சங்கீதமேளம், 5-தாரை, 6-மேளம் 7 - கன்சதம்பட்டை, 8- தமுக்கு, 9- கோணககொம்புத்தாரை, 10- மஞ்சல் பாவாடை, 11-வெள்ளைப் பாவாடை, 12-மயில் விசிறி, 13- வெண்சாமரம்

ரம், 14-விசிறி, 15-பூமிபாவாடை, 16-வெள்ளைத்தோரணம், 17-வெள்ளைக்கொடி, 18-சங்கு, 19-தவள்ச்சங்கு, 20-தாசறிதப்பட்டை, 21-சேமக்கலம், 22-வெள்ளைக்கழி, 23-மணி, 24-அஞ்சுகலசமுதல் 33வரைக்கும், 25-வெடியில், 26-தீவட்டி, 27-அக்கினிசட்டி, 28-கொடம், 29-கடியம், 30-அருகு, குடிமக்கள் பரிவட்டம் கட்டிக்கொண்டு, சிலர் காலில் விழுகிறதுண்டு.

இவ்வளவு பத்ததிகளோடு இருந்த இடங்கை வலங்கையார்களுக்குள், இடையில் ஜாதிவைஷமியவிஷயமாக சண்டைசச்சரவுகள் உண்டாகியதால், செங்கல்பட்டு டிஸ்டிரிகட்டு ஜட்ஜிமேஜஸ்திரேட்டாரிடமுறையிடவே, அவர் இருகக்ஷியாருடைய ஆதரா தஸ்தா வேசுகளைத்தருவித்துப் பார்த்து, விசாரணைசெய்து கொடுத்ததீர்ப்பின் நகலை இதனடியிற் காணலாம்—

## செங்கல் பட்டு ஜில்லா கோர்ட்டு முத்திரை

[ L T ]

செங்கல்பட்டு டிஸ்டிரிகட்டு ஜட்ஜி மேஜஸ்திரேட்டார் தீர்ப்பு என்னவென்றால், காஞ்சீபுரத்தி லிருக்கும் வலங்கையார், இடங்கையார், தேவதா காரியங்கள், சுப சோபனங்கள், அசுப காரியங்கள், முதலாகியதுகளுக்கு, தங்கள் சாதி பிருதுகளைக்குறித்து, ஒருவருக்கொருவர் சச்சறவாய், நம்மிடத்தில் வந்து, பிராது பண்ணிக்கொண்டு, யினிமேல் அப்படி சச்சறவுகளில்லாமல் நடக்குறத்துக்காக தீர்ப்பு பண்ணவேணுமென்று, மனுவு பண்ணிக்கொண்டு, உபயவாதிகளில், வலங்கையார் கொடுத்த அற்ச்சி 1, இடங்கையார் கொடுத்த அற்ச்சி 2. தங்களிடங்களிலே விருந்த தஸ்தாவேசுகள் வலங்கையார் கொடுத்தது, விரோதிவருஷ பங்குனிமீ 20தேதிக்கு (கி பி) 1769வருஷம் மார்ச்சிமீ 30 தேதி சேனியருக்கு புலிவாகனமும், புலிக்கொடியும், உண்டென்று யெழுதின செய்பத்திரத்துக்கு, நகல் 1- கரவருஷ புரட்டாசிமீ 29தேதிக்கு (கி பி) 1771வருஷம் அக்டோபர்மீ 12உ- யிடங்கையின் சேர்ந்த கைக்களவர் தாங்கள் பிடிச்சது சிங்கக்கொடியே யெல்லாமல், புலிக்கொடி பிடிச்சதில்லை யென்றும், யினிமேல் சாஸ்தியாய் நடந்தால் கும்பிணி சற்காறுக்கு ரூபாயி 120 அபராதம் குடுக்குறோமென்றும் யெழுதிக்கொடுத்தமுச்சிலிக்கா 1-(கி பி) 1185வருஷம்டிசம்பர் 4-உக்கு (கி பி)1771வருஷம் ஆகஷ்டுமீ 27தேதிகைக்களவர்புலிக்கொடிபிடிச்சதுக்காக, ஜேன்றவர் தங்களிடபிருதைப் பிடித்ததாய்யிருவரும், சச்சரவுபட்டுப் பிறதானத்துக்கு, விசாரணைசெய்து புலிக்கொடி ஜேன்றவருக்கே உண்டென்று ஸ்தாபித்தாச்சுது. அந்தபடிக்கு நடப்பிக்கவுமென்று திவான அபறசீதுகான் அற்தோகாஞ்சி அமீர் சின்னிய நயினர் பேருக்கு யெழுதின சன்னத்துக்கு நகல் 1- பிறமாதிவருஷம் மாசிமீ 27 தேதிக்கு (கி பி) 1793வருஷம் மாற்சிமீ 8 தேதிக்கு கெருடக்கொடி வலங்கையிற் சேர்ந்த வாணியருக்கு அனுபவ

துகளுண்டென்றும், மாஜநாமா அசல் 1-அந்தந்த சாதிகளுக்கு உண்டானபிருதுகளைக் குறித்து குடுத்த சாபிதா 2, (கி பி) 1809வருஷம் ஜுலாய் மாதம் 5 தேதி வலங்கை பறையருக்கும், யிடங்கை பள்ளருக்கும், உண்டான வியாச்சியத்தைகுறித்து எழுதிக்கொடுத்த கடுதாசி 1- யிந்ததஸ்தாவேசுக்குமேல் தங்கள் கையில் தஸ்தாவேசுகளில்லையென்று கடுதாசு 1-இடங்கையார் தாங்கள் கொடுத்த அர்ஜிகளிலே கண்டிருக்கிறது. கோற்ட்டிலே 1343 நெம்பருக்கு தறப்பு.1-மேஜிஸ்திரேட்டு சன்னதுகளும் தவிர வேறேயில்லையென்றும்ஸ்தளத்தார் இப்படிக்குடுத்த மாஜற்நாமா படிக்கு, ஒத்துக்கொள்ளுகிறோ மென்று சொன்னார்களே யல்லாமல் தஸ்தவேசுக ளொன்றும் குடுக்கயில்லை. ஸ்தளத்தார் (கி பி) 1809வருஷம் மேமாதம் 10உ குடுத்தயாஜர்நாமா 1- யிதுகளைபார்வையிட்டு பரிசோதிக்குமளவில், யிந்தவியாச்சியம் வெகுஜனங்கள் குறித்ததாகையால், யிடங்கையார் குடுத்த அற்ஜிகளிலே கண்டிருக்கப்பட்ட கோற்ட்டு தீர்ப்பும், மேஜிஸ்திரேட்டு சன்னதுகளும், யிதுக்கு சம்மந்தம்படயில்லை. ஆகையாலிதுமுதல். வலங்கையாரும், யிடங்கையாரும் அவரவர்கள் சாதிபிருதுகளும் நடத்தைகளும் குறித்து இதற்கடியில் கண்டிருக்கிற தீர்ப்புபடிக்கு நடந்து கொள்ள வேண்டியது; அப்படி நடவாமல், ஆராகிலும் விரோதமாய் நடந்தால் அவர்கள் கையில் துரைத்தனத்தாருக்காக கனமான அபருதம் வாங்குறது மல்லாமல், கனமான சிட்சைபண்ணப்படும்—

1809-ஹு ஜுலை 29உ (Signed) George Coleman,
Judge and Magistrate,

(Signed) திருவேர்க்காடு சுப்பராய முதலியார். னேடைவ் ரிஜிஸ்டர்.

இந்த கவான்மெண்டு தீர்ப்பின்படி வலங்கை இடங்கையாருடைய பிருது முதலான விவரங்களாவன—

**செங்கல்பட்டு ஜில்லா கோர்ட்டார் உத்திரவின்படி**
**வலங்கை சூத்திரர்களுக்கு பிருதுகள்.**

**வெள்ளாழர், கவரைகளுக்கு**—சங்கு சக்கிக் கோலு, பசுமை தலைத்தாரு, ஆத்திதாரு, தவண்டை, அருகு தீவட்டி, வெள்ளைக்கொடை, வெண்சாமரம், திருச்சின்னம், ஜெயமணி, சித்திரமேழிக்கொடி, வெள்ளைக்கொடி, அம்சக்கொடி, அனுமகொடி, மயில்க்கொடி, கன்னிடையருக்கு-கூடாரம், பசயசங்காக்கொடி, பஞ்ச வற்ணக்கொடி.

வடுகு வெள்ளாழர்க்கு-அம்சக்கொடி, செட்டிகளுக்கு-கலப்பைக்கொடி கம்மவாருக்கு-ரிஷபக்கொடி, சொந்தகருக்கு - சகோரபக்ஷிக்கொடி, நத்தமசகளுக்கு-ஆளிக்கொடி, மலைய மக்களுக்கு-அரிதாளக்கொடி, கோமுட்டிகளுக்கு விடுமெயில், யிடுமுறசு, இலவந்தீரு, மகர தோரணம்.

இடையருக்கு-சக்கரம், வடுகு இடையருக்கு-சங்கு, பத்ம சாலியருக்கு-புலிவாகனம், ஆண்புலிகொடி, பட்டு சாலியருக்கு-இருதலை பட்சிக்கொடி, வடுகு

சேணியருக்கு-பிச்சுமாலை, நாகபாசம், பெண்புலிக்கொடி, சேன்றவருக்கு முதலைக்கொடி கன்னிடைய சேணியருக்கு, முல்லை மாலை, விசுறி தண்டைக் கொண்ட பேரண்ட பட்சிக்கொடி.

பட்டு நூல் காரருக்கு-பட்டுக்கொடி, சேடருக்கு, கூரவானக்கொடி கொழிஞ்சக்கொடி, செக்கு வாணியருக்கு-செண்டு, தொண்டு, விடுமயிர் தாரு, யிடுமுரசு, கெருடக்கொடி,

இலை வாணியருக்கு- தொண்டு, தாரு, யிடுமுரசு.குயில்கொடி, ஒண்டிஎருது வாணியருக்கு-பஞ்சவர்ணக்கிளிக்கொடி, சணப்பருக்கு சவுரிக்கொடி, மூசசியருக்குமகாமீன் கொடி, காஞ்சியருக்கு-பொதிக்கொடி, வேதக்காறருக்குசிக்கிலிக் கொடி, பொய்க்கால் குதிரைகத்திக் கொடி, நரிசோகிகளுக்கு நாய்க்கொடி.

தமிழ்குசவர் — வடுகுக்குசவர்— குசக்கணக்கர்களுக்கு— சக்கறம், தடி, தாள விருதுபக்கொடி,

மேளக்காறருக்கு-டமாரக்கொடி, நட்டுவருக்கு தாளக்கொடி,

தேர் உச்சவத்தன்றைக்குமேல்கண்டுஎழுதி யிருக்கப்பட்ட பிருதுகளை தாரை யில்கட்டி தேருக்கு வலப்பக்கத்தில் தாரை ஊதி வருகிறது. ஸ்ரீகாமாட்சி அம்மன் உச்சவத்தில்வண்ணான் வெள்ளையானை மீதில்ஏறி வருகிறது. நாவிதன்புருஷாமிருகம் எடுத்து வருகுறது, முச்சியன் மச்சங்கட்டி வாறது. செம்படவன் வலை போடுகுறது. வேதக்காறன் பொய்குதிரைக்கட்டி ஆடி வருகிறது. சுபசோபனங்களுக்கு மாமூல்படி பந்தல்ப் போட்டு அலங்காரம் செய்து மேல் கண்டெழுதி இருக்கப்பட்ட அந்தந்த ஜாதி பிருதுகளும், வாகனங்கள் மேள வாத்தியங்களுடனே வலங்கை வீதிகளும் ராஜவீதிகளும், கோலம்வருகுறது. அசுபங்களுக்கு மாமூல்படிக்கு வலங்கை வீதியே போகிறது.

## பஞ்சமர்களுக்கு பிருதுகள்.

பவுணியருக்கு—டமாரக்கொடி.

வள்ளுவர்—மாவட்டியார்—பறையர்—பண்டபறையர்களுக்கு— வெள்ளைக்கொடை, வெண்சாமரம், வெள்ளைக்கொடி, செக்குத்தடி, தமுக்கு, தப்பட்டை பாங்கா, பற சங்கீதமேளம், பஞ்சகலசம்.

## நட கதைகள்.

இவர்கள் குடம் அம்மன், செறப்பு பிறந்தனை செய்ப வேண்டியதற்கு 4.8.16. கால் நட்டுப் பந்தல் போட்டு, வாழமறம் கட்டி, வஸ்திரங்களினாலேபந்தல் சிங்காரம் பண்ணி மேல்கண்டு எழுதி யிருக்கப்பட்ட பிருதுகளும்,தமுக்கு தப்பட்டை பாங்கா மேள வாத்தியங்களுடனே தங்கள் வீதியில் கோலம் வருகிறது. கலியாணங்களுக்கும் மேல்கண்டெழுதி இருக்கப்பட்ட பிருதுகள் வாத்தியங்க ளுடனே வாகனங்கள் பேரில் தங்கள் வீதியில்கோலம்வருகுறது. சபத்துப்பாடைக்கு பஞ்ச கலசம் கட்டி மேல் கண்டிருக்கப்பட்ட பிருது வாத்தியங்களுடனே தங்கள் வீதியே பேயாந்தை யெல்லாம் போறது.

தாசிகளுக்கு-மன்மதக் கொடி, சாணார் என்றவருக்கு - குறிஞ்சித்தாரு சாணை, யேணி, குறவருக்கு-கழுதைக் கொடி, சுக்கா செட்டி லம்பாடிகளுக்கு சித்திரக்கொடி, வேட்டைக் காறருக்கு - கவுண்டிக்கொடி, பட்டணவருக்கு-ஆமைக்கொடி, கரையாருக்கு-மச்சக்கொடி, ஒட்டருக்கு-மண்வெட்டிக்கொடி உப்பறவருக்கு-பண்ணிக் கொடி, போயிகளுக்கு - பல்லக்குக்கொடி, பணி செய்வருக்கு-தாரைக் கொடி,

தமிழ் வண்ணார்—வடுகு வண்ணார்—சாய்ப்பூ, அருவாள், அல்லித்தாரு, வெள்ளையானை.

தமிழ் நாவிதனுக்கு-தும்பமாலை- புருஷா மிருகம், வடுகு நாவிதனுக்கு-நாக சரம், தொம்புரவருக்கு-கொடைக்கொடி, மாரியம்மைக்காரருக்கு-உடுக்கைக் கொடி, பூசாலிக்கு-சிலம்புக்கொடி, யேணுதிகளுக்கு- முசல்க்கொடி, அரிப்புக் காரருக்கு- தாமரைப்பத்மம். வடுகுப் பண்டாரங்களுக்கு-சூலக்கொடி, வஞ்சூரருக்கு முத்துக்கோரவைக் கொடி, குடுகுடுப்பைக்காரருக்கு-சத்திக்கொடி, கிளாசுக்காரருக்கு-வண்டிக்கொடி, இருளருக்கு சில்லாக்கோல் கொடி, வெளிக் கருமானுக்கு-துத்திக்கொடி, சம்மட்டிக்கொடி, வெள்ளிக்கல்த்தச்சருக்கு, உளிக் கொடி, கப்பல் தச்சருக்கு-வாச்சிச்கொடி, கப்பல் வடுகருக்கு- கப்பல் கொடி பண்டருக்கு-கத்திக்கொடி,.

## நடத்தைகள்.

வலங்கை கட்சியில் யாதாமொருவர், கிருமதேவதைச்கும், கிறக தேவதைகளுக்கும், சிறப்பு, குடம் எடுக்க வேண்டியத்துக்கு மேலே எழுதி அவரவர்கள், சாதி பிருதுகள் மேள வாத்தியங்களுடனே, தங்கள் கிரகங்களி லிருந்தாவது, வீரபத்திரசுவாமி கோவிலண்டை யிருந்தாவது பிறப்பட்டு ராஜவீதிநாலு வீதியும் வந்து பிருத்தனை செலுத்துகிறது.

## இடங்கை சூத்திராளுக்கு பிருதுகள்

ஸ்ரீஏகாம்பர யீஸ்வரர். சுவாமி பிரும்ம உச்சவத்தில் செட்டிகளுக்கு பருந்துக்கொடி

நகரவாணியருக்கு-நவரத்தினமாலை, தொண்டுதாரு, கைக்களருக்கு -திருவரை பத்திரம், அடக்கம், தொமரம், எறுகழுகு, சிங்கக்கொடி, கறடிக்கொடி, மான்கொடி, மயில்கொடி, பொத்துக்கொடி, யிடுமுறசு

கம்மாளருக்கு-சுத்தி, உளி, வாச்சி, சக்கரகோலு, கிளிக்கொடி, கழுக்கொடி.

பள்ளிகளுக்கு-குந்தளி, கொக்கு எறகு, யீடிமயிர், செங்கழுநீர் மாலை, பசுமை, வெங்கத்தாரு, அக்கினிக்கொடி, சாவல்கொடி. சிலைக்கொடி, மாலக்கொடி, கழுக்கொடி, பொத்துக்கொடி, நரிக்கொடி, யிடுமுரசு.

## நடத்தைகள்.

இடங்கை கட்சியில் யாதாமொருவர் கிருமதேவதைக்கும், தங்களிடகிறக தேவதைக்கு செறப்பு குடம் யெடுக்க வெண்டியத்துக்கும் மேலெழுதிய அவரவர்கள் சாதிபிருதுகள், மேளவாத்தியங்களுடனே தங்கள் தங்கள், கிறகங்களிலே யிருந்தாவது, சற்பகப்பிள்ளையார் கோவிலண்டையி லிருந்தாவது

பெறப்பட்டு யெடங்கை வீதியேபோய், ஓதியடியில் தெருவில் சேர்ந்து, பிரு ர்த்தனை செலத்துகுறது. ஸ்ரீஏகாம்பரயீசுவரசுவாமி பிரம்ம உச்சவத்தில் ரதத்து நன்றைக்கு, மேல்கண்டு எழுதியிருக்கப்பட்டபிருதுகொடிகளை கட்டிக்கொள்ளு கிறது. சுபசோபனங்களுக்கு மாமூல் படிக்கு பந்தல் போட்டு அலங்காரம் பண்ணி, மேல்கண்டிருக்குற அந்தந்சாதி பிருதுவாகனங்கள் வாத்தியங்களுட னே யிடங்கை வீதியே கோலம் வருகுறது. ராஜவீதியே போகக்கூடாது. அசுபத்துக்கு மாமூல்படிக்கு யிடங்கை வீதியில் போறது. கம்மாளர் காளி யம்மன் உற்சவம் தங்கள் பிருதுகளுடனே ஆலயத்துக்கொள்ளே செய்குறது. கம்மாளர் கிறக தேவதா காரியத்துச்கும், கலியாணத்துக்கும், பந்தல் போட்டு பூமியில்படாமல் அந்தரமாய்வாழைமரங்கள்கட்டி, வஸ்திரம் அலங்காரம்பண்ணி வாகனங்கள் தங்கள் பிருதுமேள வாத்தியத்துடனே தங்கள் வீதியே கோலம் வருகிறது. கம்மாளர் சபத்துக்கு பஞ்சகலசங் கட்டக்கூடாது. பாடையில் யிடங்கைவீதி யே கொண்டு போறது.

## பஞ்சமர் பிருதுகள்.

பள்ளருக்கு-நெல்லித்தாரு, அரவங்கொடி, சக்கிலிகளுக்கு-மஞ்சள் தட்டி, கறுப்பு உருமாலே, வீரகத்தி, தென்னஞ்சோலே, தப்பட்டை, கோணக்கொம்பு இவர்கள் கொடம், அம்மன் சிறப்பு, பிரார்த்தனே, செய்யவேண்டியத்துக்கு 3 5. கால் நட்டு, பந்தல் போட்டு, தப்பட்டை, கோணக்கொம்பு மேல்கண் டெழுதி யிருக்கப்பட்ட பிருதுவாத்தியங்களுடனே தங்கள் வீட்டில் செய்து கொள்ளுகிறது. சபத்துக்கு பஞ்சகலசங் கட்டக்கூடாது. பாடையில்பிணத்தை யெடுத்துக் கொண்டு தங்கள் வீதியேபோறது.

இதற்குசாக்ஷி— 1809ஸூம்29உ செங்கல்பட்டுஜில்லா ஜட்ஜி மேஜிஸ்திரேட்டு விசாரணைக் கர்த்தாராகிய மேஸ்தர் ஜார்ஜி கோலு மென்துரை அவர்களிடகையெழுத்தும், கோறட்டுஇடமுத்திரையும் போடப் பட்டது.

(Signed) George Coleman.
Judge and Magistrate.

(Signed) திருவேர்க்காடு சுப்பராய முதலியார்- ரேஜிஸ்டர்

" இந்தச்செங்கல்பட்டு கோர்ட்டு தீர்ப்பும், அதற்கு முன்கண்டிருக்கும் வலங் கையார் நடவடிக்கைகளும், புராதனபாஷையில் எழுதி இருந்தபடியே பதிப் பித்தபடியால அவைகளில் உள்ளஎழுத்தாதி பிழைகளுக்கு யாம் உத்திரவாதிய ல்லோம்- நிற்க

இப்படி ஒருகாலத்தில் இவ்வளவு சிறப்பு பெற்றோங்கிய இந்த வலங்கை கக்ஷியார் பிற்காலத்தில் தம்கடமைகளை கிரமமாகச்செய்யாம லிருந்ததில், அக் காங்கு குடிகளுக்கு கஷ்டங்கள் சம்பவித்து வந்த படியால், குடிகள் வலங்கை யார் கட்டுப்பாடுகளுக்கு உட்படாமல் போகவே, இந்த ஆங்கில அரசுகாலத்தில் அவர்கள் அதிகாரமும் அந்தஸ்தும் மங்கலடைந்து விட்டது.

இதுவரையில் எடுத்துக்காட்டிய வலங்கை இடங்கை சரித்திரங்களினால் இடங்கை கக்ஷியைச் சார்ந்த கம்மாளர் முதலான சிலஜாதியார்களை இவ்வளவு கஷ்டஸ்திதிக்குக்கொண்டு வந்துவிட்டக் காரணம் வியக்தமாக விளங்கவில்லை. நாம்அறிந்தவரையில் கம்மாளர்இத்தேசத்தாருக்குதொப்புளறுக்கும் கத்திமுதல் தேர் முதலானவைகளைச் செய்து கொடுத்து வருவதோடு; அவர்களில் அநேகர் படிப்பாளிகளாயும், புத்திமான்களாயும், சத்தியவான்களாயும்;சுவாமிபக்தியுள்ளவர்களாயும்இருக்கிறார்கள். இப்படிப்பட்டநல்லஜாதியாரை நாம்கொண்டாடிவர வேண்டி இருக்க, அவர்களை ஜன்மவிரோதிகளாகக் கொண்டு, கஷ்டப்படுத்தி வருவது தருமமல்லவே! கல்வி அறிவில்லாதவர்களும், பொறாமைக்காரருமான முன்னோர் அவர்களை விரோதித்து வந்தாலும்,சீர்திருத்தமும்,கல்வியும்விருத்தியாகி வரும் இக்காலத்தார், அவர்களை சகோதரர்களைப்போல பாவித்து அன்பு பாராட்டி வரவேண்டியது நீங்கலா கடமையாம். நிற்க.

இனி இந்தபேட்டை பலிஜவாருகளில் ஒவ்வொரு வகுப்பார்களுடைய சரித்திரங்களை இப்படியே விஸ்தாரமாக எழுதினால் இது ஒரு பிரம்மாண்ட புராணமாகுமென்றஞ்சி இவர்கள் சரித்திரங்களை அதிக சங்கிரகமாக எழுதலானோம்.

## இலிங்கபலிஜவாரு அல்லது லிங்காயிதுலு.

என்பவர்கள் ஆதியில்விஜயநகரத்தி லிருந்தபோது சைவர்களாகவிருந்தும், பிறகு வைணவர்களாகி தம்சுஸ்தானத்தை ஸ்ரீரங்கபட்டணம் மைசூரில்ஸ்தாபித்தபோது அங்கிருக்கும்சிவாசாரியர்களைப் பார்த்து லிங்கம்தரித்து சுத்தசைவரானார்கள் போலும். இவர்களில் லிங்கபூஜைசெய்வோருக்குஜங்கம வாரென்றும்,வியவசாயிகளுக்கு ரெட்டிகளென்றும், வர்த்தகம் செய்வோருக்கு கண்டமூவாரென்றும், உத்தியோகஸ்தர்களுக்கு நாயடுகா ரென்றும் பெயர் இவர்கள் குடுமி, மீசை, தாடியை க்ஷவரம் செய்துகொண்டும், மது மாமிசத்தை யுண்ணாமலும், பிராம்மணார் வீட்டிலும் ஜலபானம்செய்யாமலும் இருக்கிறார்கள். இவர்களுக்குள் ஒருக்கால்கன்னியா விதவா விவாஹமும் நடந்துகொண்டு வந்தது. கி. பி. 1901 ஞ ம் கானிஷுமாரிகணக்கின்படி இந்த ராஜதானியில் 138518 லிங்காய்த்துகள் இருந்தார்கள்.

இந்த லிங்கபலிஜவாரு உண்டானதற்கு வேறொரு காரணமு முண்டென சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள்— அதாவது—ஸ்ரீ சந்திரவம்ச க்ஷத்திரிய ஆந்திர குடும்பத்தைச் சார்ந்த சாலுக்கிய விஜ்ஜலராஜன், தனது பிரதான மந்திரியும், தண்டநாயகருமாக இருந்த பசுவருடைய சகோதிரி பத்மாவதியைவிவாஹம் செய்துக்கொண்ட தாகவும், (இப்புஸ்தகம் 48-பக்கம் பார்க்கவும்) அந்த பத்மாவதியின் சகோதிரராகிய பசுவர் லிங்காயத்து மதத்தை ஸ்தாபித்தவரான படியால், அந்த பத்மாவதியின் மக்களில் சிலர் தமது தாய் மாமனாகிய பசுவருடைய அந்த லிங்காயத்து மதத்தை அநுஷ்டித்துவர, அவர்கள் சந்ததிகளே பிற்காலத்தில் லிங்க பலிஜவாராகியதாக எண்ணம். அதற்கு திருஷ்டாந்தமாகச் சொல்லும் காரணங்களாவன. இந்தசந்திரவம்ச க்ஷத்திரியர்களில்

வாரங்கல் கணபதிராஜ வம்சத்தைச் சார்ந்த கணபதி தேவருக்கும், அவர் மனைவிருத்ரம்மகாருக்கும்—ஞானம்பாளென்னும் கன்னிகைபிறக்க,அப்போது கி.பி. 1190-1258 தாரணிகோட்டையிலாண்டுவந்தஜயினஅரசனுக்குஇராஜகீய விஷயத்தைக்கருதி அந்தஞானம்பாளை விவாஹம்செய்துக்கொடுக்க,அவர்களுக் பிறந்த புகழ்பெற்ற பிரதாபருத்திரன் தன் தந்தையின் ஜயினமதத்தைத் தழுவாமல், தன் தாயாருடைய வைஷ்ணவ மதத்தைத் தழுவி விருத்திசெய்து வந்ததாக சரித்திரம் முறையிடுகிறபடியாலும்—(இந்த பலிஜபுராணம் 32-ம் பக்கம் பார்க்கவும்.) இதேமாதரியாகவே சந்திரவம்ச ஆந்திரர்களில் ஒருகிளையாராகிய சாளுக்கியரில் விமலாதித்தியன், இராஜேந்திர சோழனுடைய தங்கைகுந்தி தேவியையும், அவர்கள் குமாரன் இராஜஇராஜ சோழனுடைய குமாரத்தி இருமாங்கை விவாஹம் செய்துக்கொண்ட படியாலும், (இந்தபலிஜபுராணம் 25-வது பக்கம் பார்க்கவும்) தஞ்சையிலாண்ட அச்சுதப்பநாயடு காரு ஒரு பாண்டியன் குமாரத்தியை விவாஹம் செய்துக்கொண்ட படியாலும்; ஆகப்பாண்டியரும், சோழர்களும், ஜயினர்களும், ஒருவருக்கொருவர் கொள்வினை கொடுப்பினை செய்துக் கொள்வது சஹஜமென்றும் எண்கிறார்கள். இப்படி ஒரு வகுப்பானபெண்ணை மற்றோர் வகுப்பார் விவாகம் செய்துக்கொள்வதுத்தகும், ஏனெனில், இவர்கள் யாவரும் க்ஷத்திரியர்கள்;ஆனால், இந்தபசுவரோபிராம் மகா நலதிலக். இப்படிப்பட்ட உயர்குலத்துப் பெண்ணாகிய பத்மாவதியை க்ஷத்திரியகுல விஜ்ஜலன் விவாஹம் செய்துக்கொண்டது எப்படியோ தெரியவில்லை, இந்தவிவாஹத்தை உண்மை என்றும், இந்த விஜ்ஜலனை, பசுவனுடைய ஆண்டுதலினால் வஜ்ஜதேவர், மல்லய்ய, பொம்மண்ணா என்றவர்கள் கொன்றதாக சென்னபசுவ புராணத்தில் செப்பி இருப்பதாகவும், தென்னிந்திய சரித்திரசாசன கிரந்தம் 25-27வது பக்கங்களில் டாக்டர் ஹூப்போர்ட்டு சாஸ்திரியும் சொல்லி இருக்கிறார் (இப்புத்தகத்தின் 48வது பக்கம் பார்க்கவும்) அந்த சென்னபசுவ புராணம் எமக்கு கிட்டாமையால் உண்மையறியக் கூடவில்லை.

## கண்டிபலிஜவாரு.

இவர்கள் மதுரை விசுவநாத நாயடுகாரு குமாரர் கிருஷ்ணப்ப நாயடு காரு, இலங்கையின் மீது படை. எடுத்துப்போய் ஜெயித்து, கண்டியில் நாயடு ஸமஸ்தானத்தை ஸ்தாபித்ததில், அக்கண்டி நாயடுகாரின் சந்ததிகளே கண்டிவாரு என்ற பெயரைப் பெற்றார்கள். இவர்கள் ஸ்ரீவிசுவநாத நாயடு காருடைய குமாரர் குமார கிருஷ்ணப்ப நாடுகாருயடைய மைத்துனர்விஜய பூபாலருக்குப்பிறகு அங்கீதாங்கித ராஜநும், இராஜ சிம்ஹமலராஜநும் விஜய சிம்ஹள மஹாராஜர்களும் அந்தக்கண்டி நாட்டிலே அரசுசெய்தும், பூர்வ விசுவநாத நாயடுசந்ததிகளில் வெள்ச்சூரிச்சியி லிருந்தும், தஞ்சைமண்ணாறு சாமிநாயடு செங்கமலதாசு நாயடுமுதலானவர்களிட மிருந்துப் பெண்களைவிவாஹம் செய்துக் கொண்டவர்கள், இவர்கள் கஸ்யப கோத்திரத்தைச் சார்ந்தவர்கள்-இவர்கள் வீட்டின் பெயர் சித்தலபுரிவாராம்-இவர்களுடைய ஸ்திரீகள்

இன்றும் கோஷா அந்தப்புரஸ்திரிகளாக இருக்கிறதன்றியில்; புருஷர்கள் பூணூலைதரித்தும் க்ஷத்திரிய தருமத்தின்படி சடங்குகளைச்செய்து வருகின்றனர். இப்போது இவர்களில் அநேகர் திருநெல்வேலி மதுரை, நாகபட்டணம், தஞ்சை திருச்சிமுதலான விடங்களில் வதிந்து வருகிறார்கள். திருவையாற்றில் சப்ரிஷிஷ்டிராக இருக்கும் ஸ்ரீ தியாகசிமஹாலமஹாராஜர் இந்தசந்ததியைச் சார்ந்தவராம் இப்போது பூர்வஸமஸ்தான பெண்ஷனைப்பெற்று வருகின்றனராம்—

## சித்திராலபலிஜவாரு.

இவர்கள் ஸமஸ்தானத்தின் ரூப பாவபடங்களை எழுதிக் கொண்டும், இராயர்களுடைய பட்டுதுணிகளுக்கு பலவிதவர்ணங்களையும், சரிகைகளையும்புகட்டி தந்ததன்றியில், அநேகர்சிற்பசாஸ்திர நிபுணர்களாக விருந்துகோயில் கோபுரம், கோட்டை கொத்தளங்களைக் கட்ட நக்ஷாக்களைத் தயார்செய்து மேல்விசாரணை செய்தவர்கள் 1901 ஷு ம் காநிஸ்மாரி கணக்கின்படி இந்த ராஜதானியில் இவ்வகுப்பில் 6110 குடிக ளிருந்தார்கள்.

## மூசுகுபலிஜவாரு.

இவர்கள் விஜயநகரத்தில் மகமதியர் புகுந்து வம்புகள் செய்தபோது ஸ்திரீகளுக்கு முக்காடிட்டு மறைத்ததினால் இப்பெயரைப் பெற்றார்கள். இவர்கள் விஜயநகர ஸமஸ்தானத்தைச்சார்ந்த ஜகதேவராயலு காருடைய நேரான சந்ததிகள்-இவர்களுடைய சுகதுக்கச் சடங்குகள் பூர்வம் சந்திரவம்சத்தாருடைய முறைப்படிச் செய்யினும்; இடையில் காலதேசவர்த்தமானங்களைத் தழுவிச் செய்து வருகிறார்கள். இவர்கள் விவாஹகாலங்களில் மாப்பிள்ளைப் பெண்ணுக்குக் கட்டும் பாசிங்கத்தை மற்றபலிஜவாரைப்போல சரிகைத்தகடு முதலானவைகளில் சிங்காரித்தவைகளை உபயோகப் படுத்தாமல், ஆணிமுத்துகளால் (பாசிங்களைச்) சிங்காரித்துக் கட்டிக்கொண்டு வருகிறார்கள்,—

இவர்களிற் சிலர் 'மூதகம்மலு' என்ற பெயரால் மரக் காதோலைகளைத் தரிப்பதனால் மூதகம்மலுவாரு என்ற பெயரையும் பெற்றனர்.

இவர்களில் இராணுவாரு, கூலியம்வாரு, ரகுரவுத்துவாரு, குப்பாலவாரு, பண்டிவாரு, கட்டாரிவாரு, நெல்லங்கலவாரு, மடிகலவாரு, ஆகுலவாரு, சாமிசெட்டிவாரு, மேடிசெட்டிவாரு, அங்கிசெட்டிவாரு, செட்லுவாரு, புங்காலவாரு, சீரிகிரிவாரு, காசுலவாரு, பைபுவாரு, பாகாரபுவாரு, அரிகிரிவாரு, சிங்கம்வாரும், கும்பிணிவாரு, மந்திரிவாரு என்னும் வீட்டுப்பெயர்களுடைய வர்கள்முக்கியஸ்தர்கள்—இவர்கள் பாலகோத்திரம், அச்சுந்தல கோத்திரம், விஷ்ணுவர்த்தனுதி கோத்திரங்களைச் சார்ந்தவர்கள். இப்போது இவர்கள் (முக்கியமாக) சித்தூர், கூடலூர், சேலம், தருமபுரி, கிருஷ்ணகிரி, காவேரி பட்டினம், பெண்ணுகரம், டெங்கனிகோட்டை, வேலூர், இராயகோட்டை, குந்தணபல்லி ஈரோடு சத்தியமங்கலம், கோயமுத்தூர், முத்தனூர் முதலான விடங்களில் வதிந்துவருகிறார்கள். இவர்களுடைய ஜாதிவிவரத்தைக் காட்டும் புத்தகம் தருமபுரிக்கடுத்த ராயகோட்டை ம-ா-ா-ஸ்ரீ, சப்பராயடுகாரிடமிருக்கிறதாம்.

# ஒப்பனி விஜவாரு.

இவர்கள் விஜயநகர சமஸ்தானம் புஜபலராயலுவுடைய சேரானசந்ததிகள். அந்தச் சமஸ்தானம் ஸ்ரீரங்க பட்டணத்தில் ஸ்தாபித்தபிறகு, அங்கிருந்த ஸம ஸ்தானபதிக்கு வெளிநாடுகளிலிருந்து வரவேண்டிய சர்க்கார் கந்தாயவரி வசூல் தொகையை (ஒப்பனம்=போன்னை) அதிக நம்பிக்கையுடன் கொண்டுபோய் செலுத்தியதால், ஒப்பனக்காரர்கள் என்றபெயரைப் பெற்றார்கள். இவர்களில் அந்த விஜயநகர ஸமஸ்தானம் பிரபலமாக இருந்தபோது அனேகர் குதிரை வீரர்களாக இருந்தபடியால், இராவுத்துகள் என்ற பெயரையும் பெற்றார்கள்.

இவ்வகுப்பாரில் அநேகர் பூர்வத்தில் பிரபலவிவசாயிகளாகவும், வர்த்தகர்க ளாகவும், படிப்பாளிகளாகவும், புத்திமான்களாகவும் இருந்ததுடன்; இவர்க ளுடைய ஸ்திரீகளை (கோஷா) அந்தபுரத்தில் வைத்தும்; அந்தஸ்திரிகள் விவாஹகாலங்களிற் செய்யவேண்டிய சடங்குகளை பகல் காலத்திற் செய்தால் ஸ்திரீகளை பலபுருஷர்கள் பார்க்க சம்பவிக்கும் என்ற எண்ணத்தினால், இராக் காலங்களிலேயே பெரும்பான்மை யோர்செய்து வருகிறார்கள் - சிலர் தம்கலி யாணங்கள் ஆரம்பிப்பதற்குமுன் விஜயநகர ஸமஸ்தான பதிகளாகிய ஸ்ரீபுஜ பலராயலு, ஸ்ரீகிருஷ்ணதேவராயலு, முதலான முன்னோர்களை தம் வீட்டு தெய்வங்களாகவும், குலதெய்வங்களாகவும் கொண்டு பெரும்பூஜை செய்து வணங்கிய பின்னர், விவாஹகாரியங்களை ஆரம்பிப்பது வழக்கம்—

இப்படி சந்திரவம்சி க்ஷத்திரியராகிய விஜயநகர புஜபல, கிருஷ்ணதேவ ராயலுவுடைய சந்ததிகளாகிய இவர்கள், காலவித்தியாசத்தினால் விவாஹம், சாவுமுதலான சடங்குகளில் சிறுபான்மையாக புராதனவழக்கங்களையும், பெரும் பான்மையாகதாம்பிறகுகுடிபுகுந்தபுதுவிடங்களின்வழக்கங்களையும்அநுஷ்டித்து வருவதுடன்; சிலருக்கு தமது ஜாதியின் பெருமையும் பெயரும் தெரியாமல், இரவுத்தஜாதி, இரவுத்து குலம் என்று சொல்லிக் கொண்டும், பத்திரங்களில் எழுதிக்கொண்டும் வருகிறார்கள்—

இந்த இரவுத்துப்பட்டம் இத்தென் தேசத்தில் மசமதியர் முதலானவர் களுக்கும் வழங்கி வருவதால்; அது ஒரு கேவலமான பட்டமாக எண்ணபட்டு இக்காலத்து இங்கிலீஷ் படித்து உத்தியோகம் செய்யும் இந்து வகுப்பாரில் சிலர் நாயுடு என்றப்பட்டத்தை உகித்து வருகிறார்கள்=இரவுத்துஎன்பது இராயலு என்ற பதத்தின் திரிபாம்—இவர்களும் ஆதியில் 1000 வீட்டுக்காரர், கள் போல தோன்றினும், இப்போது இத்தென் தேயத்தில் கோயமுத்தூர், சேலம், செவ்வாய் பேட்டை, முசிலி, புதுக்கோட்டை, நிம்மலகுடி,மன்னார்குடி கும்பகோணம், ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரை முதலான விடங்களில் வதிந்து வரு கிறார்கள்.

## வெலம(பலிஜ)வாரு

11. —இவர்களை வெலகினவாரு, வெலகோட்டிவாரு, வெலம தொரலு என்றும் சொல்வதுண்டு. ஆதியிலிவர்கள் விசாகப்பட்டிணம் (கஞ்சாம்) ஜில்லாக்களிலும், வட ஆர்க்காட்டின் கீழ்கரை யோரங்களிலும் வியவசாயக் குடிகளாக விருந்து, பிறகு குருநில மன்னராளுேர்கள். விஜயநகர ஸம்ஸ்தான கிருஷ்ணதேவராயலுக்கு இவர்கள் ஆப்தர்களாக இருந்து உதவி செய்தவர்களென பிரவுட பிரபந்த கவிஜீவித புத்தகம் 68-வது பக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் பல்லவரைச் சார்ந்தவர்களென டாக்டர் ஆபர்டு (Dr. Oppert) சாஸ்த்திரியும்—காபுசெட்டி வகுப்புகளைசசார்ந்தவர்களென கர்னல்மெகன்சியும் (Col Machenze) எழுதியிருக்கிறுர்கள். இவர்களுக்குள் "ஆதிவெலமலு",'பத்மவெலமலு', தெனுகுவெலமலு', ;'திராவிட வெலமலு''கோனவெலமலு' என்றுதி 142 வெலமஜாதி உட்பிரிவுகளுண்டு. கோட்டதேசபலிஜவாரு இவர்களைத்தமக்குத்தாழ்ந்த அந்தஸ்துள்ளவர்களென்றெண்ண, அவர்களை இவர்கள் தமக்குத்தாழ்ந்த அந்தஸ்துள்ளவர்கள் என்று எண்ணுகிறுர்கள். இம்மட்டோ! ஆதியில் இவ்வெலம பலிஜவாரும், கம்மபலிஜவாரும் ஒரேகுலத்தாராக இருந்ததாகவும்; இடையில் மகமதியர் படையெடுத்து விஜயநகரத்துக்கருகில் வந்தபோது; இவ்வெலமவாரு தமது ஸ்திரிகளை மகமதிய ஸ்திரிகளைப்போல கோஷா (பர்தாநிவாசி) அந்தரங்கத்தில் வைக்க, அந்தக்கோஷா வழக்கத்தை அவர் இனத்தாரில்சிலர் தடுக்க, இனத்தாருக்குள் இரு கக்ஷிகளுண்டாகி தமக்கு அப்போது தலைவரான நரபதி வீரநரசிம்ஹராயவிடம் முறையிட; அவர் இருகக்ஷிகளையும் நீ விசாரித்து, பலிஜவாரு மகமதிய ஸ்திரிகளைப்போல தமது ஸ்திரிகளையும், கோஷாவில் வைப்பது இந்து தரும சாஸ்திரவிதிக்கு விரோதமென்று தீர்மானித்தும்; இருகக்ஷிகளும் இராஜியாகப் போகவேண்டுமென்று சொல்லியும், ஓலையில் (கம்மையில்) கையொப்பமிடும்படி கட்டளையிட, ஒரு கக்ஷிக்காரர் உடனே அந்த ஓலையில் (கம்மையில்) கையொப்பமிட்டார்களாம். அப்படி ஸமஸ்தான உத்தரவின்படி ஓலையில் (கம்மையில்) கையொப்பமிட்டதினுல் அன்றுமுதல் அவர்களுக்கு கம்ம பலிஜவாரு என்று பெயருண்டாகியதாம். கம்ம என்றுல் ஓலையாம்,—அந்த ஓலையில் (கம்மையில்) கையொப்பமிடாமல் விலகியவர்களுக்கு, விலகினவாரு=வெலமவாரென்று பெயராகியதாம். இந்த வெலமவாரில் இன்னும் தம் ஸ்திரிகளைக் கோஷாவில் வைத்திருப்பவர்களுக்கு, ஆதிவெலம வென்றும்; கோஷா வழக்கத்தை விட்டவர்களுக்கு, பத்மவெலமலென்றும் சித்தூர்ஜில்லா சரித்திர 276 வது பக்கத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இப்போது இந்த வெலமபலிஜலு, கிருஷ்ணு, கோதாவரி, மசூலிப்பட்டணம், இராஜமஹேந்திரம்,பந்தர்,நெல்லூர், வெங்கிடகிரி, காளாஸ்திரி, கார்வேட்டி நகரம், பிட்டாபூர், பூபுலி, புங்கனூர் முதலான விடங்களிலிருக்கிறுர்கள். 1901வருஷ கானிஸ்வாரி கணக்கின்படி இவ்வகுப்பில் 4, 36, 327 குடிகளிருந்தார்கள்.

## இந்தவேலமபலிஜவாருடைய உற்பத்திவிவரம். வீட்டுப்பெயர், கோத்திரம் முதலானவைகளின் சங்கிரகம். பாபட்ல ஸ்ரீ சீதாராமநாயகோரின் வாக்குமூலம்.

வெலமபலிஜவாருடைய பெயர் வந்தவிவரத்தை முன்னமே சொல்லி இருக்கிறோம். அவர்களுக்குள் ஆதிவெலமலு, பத்மவெலமலு, கொப்புவெலமலு, கூனவெலமலு, நீலிசாயவெலமலு, தொரசாட்டு வெலமலு, கொண்டவீட்டி சீம வெலமலு, என்று இப்படிப் பல உட்பிரிவர்களுண்டு. அவர்களில் **ஆதிஅண்ணன், பதும அண்ணன்** என்னும் இரண்டு சகோதிரர்கள் வசித்த வீட்டில், பதுமண்ணனுக்கு ஒரு அழகிய பெண்பிறந்து சுந்தரவதியாக வாழ்ந்துவரும் நாளில், அவ்விடத்தில் அப்போது வதிந்திருந்த இராஜனுக்கு அதிகஇஷ்டனாகை இருந்த பதுமண்ணன் தன் அழகியகுமாரத்தியை விவாஹம்செய்துக் கொடுக்கச் சம்மதித்துக்கொண்டான். இந்த விவாஹ ஏற்பாடு ஆதிஅண்ணனுக்கு இசைந்திராமையால், இருவருக்கும் பிரமாத சண்டைச் சச்சரவுகள் நடக்க; ஆதிஅண்ணன் அந்த இராஜனுக்குப் பயந்து இரவில்வேறு ஊருக்கு ஓடிவர, இடையில் ஒருபெரிய நதிபெருக்கடித்துத் தடுக்க, ஆதியண்ணன் அருகிலிருந்த மீன்பிடிப்பவனுடைய உதவியை நாட, அவன் தந்திரமாக அழைத்துப்போய் அக்கரையில் விட்டான். அந்தநன்றியை மறவாதபடி, அந்த ஆதிஅண்ணன் அவனுடைய வலையில் கொஞ்சம் கிழித்துக்கொண்டு போய், தன்கலியாணத்தின் பாலைமரத்துக்குக் கட்டி மரியாதைச் செய்தபடியால், அன்றுமுதல் அந்த வகுப்பார் தம் கலியாணகாலங்களில் பாலமரத்துக்கு மீன்வலையைக் கட்டி மரியாதைச் செய்வதுண்டு. அவர்கள் தாலி, மற்ற கோட்டபலிஜவாரைப்போல் கிண்ணி பொட்டைக் கட்டிவந்தாலும், அவர்கள் விவாஹத்தை ஒன்றுமுதல ஐந்துநாள்கள் வரையில் செய்துவருவதன்றியில், மற்ற பலிஜவாரைப்போல அம்மிமிதித்தல் முதலான சிலசடங்குகளைச் செய்வதில்லை. அவர்களுடைய ஸ்திரீகளை அந்தபுரத்தில் வைத்து கோஷாஸ்திரீகளாக நடத்தி வருகின்றார்கள். மற்ற வேஷபாஷாப் பெயர்கள் கோட்டபலிஜவாருடையவைகளையே அனுஷ்டித்து வருகிறார்கள். சென்னையில் மற்றதேச பலிஜவாரோடு சாப்பிட்டாலும், கிராமங்களில் அந்தவழக்கமில்லை போலிருக்கிறது.

### இந்தவேலமருடைய வீட்டுப்பெயர் கோத்திரப்பெயர்களாவன.

1899-ஆம் ஏப்பிரல் மீ சென்னையில் ஸ்ரீகலியாண சரஸ்வதி நிலைய முத்திராக்ஷர சாலையில், லேட் நாயனி இராமய்யநாயனிஅவர்கள் சகாயத்தினால் சேகரிக்கப்பட்டு அயினால் பாபநய்யநாயனிவாரால் ஸ்தாபிதமாக்கப்பட்டு, பசுமர்த்தி—ரங்கநாதம் செட்டியாரால் பதிப்பிக்கப் பட்டிருக்கும் ஆதிவெலமல அந்வய கோத்திரநாமமுலு என்னும் கிரந்தத்தின்படி

## வெலமயவிஜுவாரின்

| வீட்டுப் பெயர்கள். | | கோத்திரப் பெயர்கள். |
|---|---|---|
| 1. அயிஞலவாரு | ... | கோனதுள்ள கோத்திரம் |
| 2. அங்காலவாரு | ... | வந்தமாரி கோத்திரம் |
| 3. அங்காலவாரு (மற்ருெரு) | | அயம்பககோத்திரம் |
| 4. அங்காலவாரு (மற்ருெரு) | | அயுஸ்தகோத்திரம் |
| 5. அம்பினேனிவாரு | ... | நேமாகுலு கோத்திரம் |
| 6. ஆகுல வாரு | ... | பாலங்கி கோத்திரம் |
| 7. ஆகுனூரிவாரு | ... | ஸ்ரீவந்தஸகோத்திரம் |
| 8. அருமாக்கவாரு | ... | உல்லம்பாகுலு கோத்திரம் |
| 9. இம்மானேனிவாரு | ... | புவ்வாடகோத்திரம் |
| 10. உதெல்லருவாரு | ... | கௌண்டின்ய கோத்திரம் |
| 11. உம்மடிசிங்குவாரு | ... | பொன்னிவெலகல கோத்திரம் |
| 12. கனகாலவாரு | ... | தேவகல கோத்திரம் |
| 13. கனகபல்லிவாரு | ... | வெள்ளமூடிகோத்திரம் |
| 14. காவேரிவாரு | ... | பட்டில்ல கோத்திரம் |
| 15. குள்ளிவாரு | ... | பாலகுல கோத்திரம் |
| 16. கொப்பிசெட்டிவாரு. | ... | நலகல கோத்திரம் |
| 17. கனித்திம்பாகவாரு | ... | வஸிஷ்ட கோத்திரம் |
| 18. கோகாவாரு | ... | பைனூரி கோத்திரம் |
| 19. கோகாவாரு-மற்ருெரு | ... | கூடவல்லிகோத்திரம் |
| 20. கஞ்சிவாரு | ... | தேவேந்திர ,, |
| 21. கொலிகவாரு | ... | மாயாகுல ,, |
| 22. சிலம்பிவாரு | ... | காடுள்ள ,, |
| 23. தலகரிவாரு | ... | கரிதுள ,, |
| 24. தாய்வாரு | ... | ஒடிவெள்ள ,, |
| 25. திக்காணிவாரு | ... | நகுடி ,, |
| 26. தீத்தவாரு | ... | கடவகுள்ள ,, |
| 27. நங்கிரெட்டிவாரு | ... | காந்தள்ள ,, |
| 28. நாயினிவாரு | ... | க்ஷேத்திரால ,, |
| 29. நாணிசெட்டிவாரு | ... | ஸ்ரீ வத்சல ,, |
| 30. புரிமிவாரு | ... | வஸவலன் ,, |
| 31. பஞ்செடிவாரு | ... | நேமாகுல ,, |
| 32. பாலல்லுவாரு } 33. பாதானிவாரு } | ... | எமகானி ,, |
| 34. பாபினேனிவாரு | ... | புதியடு ,, |
| 35. பாகாட்டிவாரு | ... | நெக்கந்திரா ,, |
| 36. பாகலவாரு | ... | சாண்டில்ய ,, |

| | | | |
|---|---|---|---|
| 37. | பாரலிவாரு | ... | செட்டில்லகோத்திரம் |
| 38. | பிள்ளாரிசெட்டிவாரு | ... | கலியுகல ,, |
| 39. | போகலவாரு | ... | சாண்டில்ய ,, |
| 40. | போகலவாரு (மற்றொரு) | ... | யெமகள்ள ,, |
| 41. | ,, ,, | ... | செட்டிள்ள ,, |
| 42. | ,, ,, | . | வெனிவெள்ள ,, |
| 43. | ,, ,, | ... | ஆத்திரேயய ,, |
| 44. | பார்லபூதிவாரு | ... | உத்தந்தலகோத்திரம் |
| 45. | பொலுமுதேலவாரு | ... | நேமாகுலகோத்திரம் |
| 46. | பொயிந்தாலவாரு | ... | ஸப்தரிஷி கோத்திரம் |
| 47. | மரகாணிவாரு | ... | கார்ஸதால ,, |
| 48. | மாத்திராலவாரு | ... | ஆமாகுல ,, |
| 49 | மாகாலவாரு | ... | உத்தண்டல ,, |
| 50. | மாதிரெட்டிவாரு | ... | தாமேலன ,, |
| 51. | மொகலி செட்டிவாரு | ... | புர்ஸகியான் |
| 52. | மோடுபல்லிவாரு | ... | செட்டில்ல |
| 53. | மோடுபல்லிவாரு | ... | கர்மால ,, |
| 54. | ராஜனலவாரு | ... | கெமிலிகல கோத்திரம் |
| 55. | வடியாரு செட்டிவாரு | ... | கொண்டினய ,, |
| 56. | வந்திவாரு | ... | கூடவல்லி ,, |
| 57. | வர்தம் செட்டிவாரு | ... | கலியுகல ,, |
| 58. | வடதாவாரு | ... | பென்னிவெலகல |
| 59. | வாரநாசிவாரு | ... | வெலிசால ,, |
| 60. | வெலமாதிவாரு | ... | வெய்கள ,, |
| 61. | சானம்செட்டிவாரு | ... | ஹரிதால ,, |
| 62. | சிருதாவாரு | ... | கடவகூள்ள ,, |
| 63. | சிருஆரிவாரு | | |

இவர்களுடைய ஆதிசரித்திரத்தைப் பற்றி போலீசு இனிஸ்பெக்டர் ஸ்ரீ பாபாராவு நாயடுகாரு வேறுவிதமாகஅபிபிராயப்பட்டாலும், சென்னையிலிருக்கும் சிலவெலம குடும்பத்தாரிடம் இதை வாசித்து காட்டியதில் இந்த கருத்தே சரியானதென்று அபிபிராயப்படுகிறார்கள்.

## கம்ம (பலிஜ) வாரு.

இந்த கம்மபலிஜவாரு உண்டான விதத்தைப்பற்றி ஒரு சரித்திரத்தில் பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது—அதாவது; பிரதாபருத்திர மஹாராஜனுடைய கம்மை (காதோலையைப் போன்றசீட்டு) ஒருப்பண் அரசனிடம் போய்ச் சேர்ந்துவிட்டபடியால், அந்தக்கம்மையை தம் ஸம்ஸ்தானத்திலிருந்த காபுஜாதியாரில் சிலர்த் துணிந்து போய்ப் பிடுங்கிவந்தபடியால் கம்மவாரு என்ற பெயரைப் பெற்றதாகவும்; அந்தப்பகை அரசனுக்குப் பயந்தோடி விலிய

வருக்குவேலமவாரு என்றும்பெயருண்டாகியதாகவும் 1891வருஷகானிஷ்வாரி ரிபோர்ட்டில் எழுதப்பட்டிருக்கிறது. இவர்களுக்குக் கம்மவாரென்பதற்கு வேறொரு காரணமாவது.— பிரவுடபிரபந்தகவிஜீவிதம்புத்தகம் 91-வதுபக்கத்தில் இக்கம்மவாரு கிருஷ்ணதேவ ராயலுடைய ஆப்தர்களாக விருந்து, அவரது அந்தரங்கமான இராஜகீய சமாசார ஓலையைக் (கம்மையை) கொண்டுபோய் இதர ராஜர்களுக்குக் கொடுத்து வந்தமையால், கம்மையை=ஓலையைக் கொண்டு போவோர் என்று பொருள்படும் கம்மவாரென்றாகியதாகச் சொல்லப்பட்டிருக்கிறதாம்.

இவர்களைக் கம்மவாரென்பதற்கு மற்றொருகாரண மென்னெனில். ஆதியில் தண்டகாரணியத்தில் தபசு செய்துகொண்டிருந்த காமாதித ரிஷியை அனேக ராக்ஷதர்கள் வந்து வருத்த; அவர், கஷ்டத்தைச் சகிக்கமுடியாமல் மகா விஷ்ணுவைநாடி வணங்க; அம்மஹாவிஷ்ணு அந்த ரிஷியைத்தமது மனைவி இலக்ஷுமி தேவியிடம் முறையிடச்சொல்ல, அந்த ரிஷியும் அப்படியே போய் முறையிட, அந்தம்மை மனம் கசிந்து, தமது காதோலையைக் (கம்மையைக்) கழற்றிக்கொடுத்து, அதற்கு 100-வருஷம் பூசை செய்யும்படி சொல்ல, அந்த ரிஷியும் அப்படியே 100-வருஷம் பூஜைசெய்ய, அந்தக்காதோலை (கம்மை) யிலிருந்து 500-வீரர்கள் ஜனித்தும், அந்த ராக்ஷதர்களைக்கொன்றும் காட்டை யழித்துப் பயத்தைப்போக்க, அந்த ருஷியானவர் மகிழ்ந்து அந்த500-பெயரை அங்கு வியவசாயம் செய்து ஜீவனம் செய்யும்படி ஆசீர்வதித்தும், அந்த வீரர். ளுக்கு (கம்மையிலிருந்து ஜனித்தபடியால்) கம்மவாரென்று பெயரிட்டனராம்.

அவர்கள் சந்ததிகள் கண்டிகோட்டையில் பிரமாதசண்டை செய்ததில் அனேகர் மடிந்துவிட்டதாகச் சித்தூர் சில்லா மானியூல் சரித்திரம் 278-279 வது பக்கங்களில் எழுதப்பட்டிருக்கின்றது.

(இவர்களைப்பற்றி வேறொரு கதையாவது)

இவர்கள் விஜயநகரத்துக்கருகில், கிருஷ்ணாநதி தீரத்திலும், மஹாநதிக்கு வடக்கே வியவசாயம்செய்து வதிந்து வருங்கால், மகமதியர் வந்து ஒரு பெண்ணைச் சிறையெடுக்க எத்தனப்படுவதை யறிந்து, மானத்துக்கஞ்சி தென்னாடுகளை நாடிவர, இடையில் பெண்ணையாறு வெள்ளப் பெருக்கெடுத்து தடுக்க, உடனே அந்நதிக்கரையில் கங்கைக்குப் பூசை செய்து வணங்க, அந்நதியானது இடையில் கம்மவாரு நடந்து அக்கரைப்போகும்படி தண்ணீரற்று தரையைக்காட்ட, இவர்கள் ஓடிவந்து இக்கரையிலிருந்த ஓர் துவரம்காட்டில் சில நாள்கள் மறைந்திருந்து தென்னாடுகளில் குடியேறினார்களாம். இக்கம்மவாரு வைணவர்களாயினும், இடையில் ஆபத்துகாலத்தில் கங்கையானது வழிவிட்டு உதவி செய்ததனால் அந்தக்கங்கையை ஓர் இஷ்டதேவதை யாகக் கலியாணக் காலங்களில் வணங்கியும்; துவரம் செடி மறைவு கொடுத்தமையால் அதன் இலைகளை கலியாணபந்தலின் வடகிழக்குஸ்தம்பத்தில் கட்டி வணங்கியும் வருவது முண்டாம். இவர்களில் கண்டிகோட்டவாரு, கடையாலவாரு, முக்கரவாரு, பங்காரு மூத்தரவாரு, பகடமுவாரு என்று பல வீடு கோத்திரக்காரர்கள் உண்டாம்.

இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் 1891ளு ஜனிஷ்வாரி கணக்கெடுத்தபோது இந்த ராஜதானியில் 324155-குடிகள் இருந்ததாகவும், இவர்களுக்குள் 231-உள் வகுப்பார்களும், இவர்களில் ஏழு உள்வகுப்பார் விசேஷமானவர்க ளென்றும் எழுதி இருக்கிறார்கள். அந்த ஏழு வகுப்பார்கள் யாவர்களெனில்''

1. பங்காருவாரு=தங்கமூக்குத்தியை தரிப்போர், வடஆர்காட்டிலும்,மற்ற விடங்களிலும் 12, 617-குடிகளிருந்தார்கள்.

2. கம்பசாடுவாரு=கூடையினால் முகத்தை மறைப்போர், கிருஷ்ணா, நெல்லூர் முதலானவிடங்களில் 1, 99, 807-குடிகளிருந்தார்கள்.

3. கோடசாட்டிவாரு= சுவருக்குப் பின் மறைந்தவர்கள், வட ஆர்காடு, செங்கல்பட்டு முதலான விடங்களில் 68, 446-குடிகளிருந்தார்கள்.

4. இல்லுவெல்லனிவாரு=வெளியில்வராதவர்கள்-அனந்தப்பூர், நெல்லூர், கிருஷ்ணா ஜில்லாக்களில் 87 870-குடிகளிருந்தார்கள்.

5. காவல்வாரு=கோதாவரிமுதலான விடங்களில் 42, 888-இருந்தார்கள்

6. பெத்தகம்மவாரு=கிருஷ்ணா முதலான விடங்களில் 26, 911-குடிகள் இருந்தார்கள்.

7. வடுககம்மவாரு= கோயமுத்தூர் முதலானதுகளில் 28, 578-குடிகள் இருந்தார்கள்.

இந்த ஏழு உட்பிரிவாருக்குள் போஜன பிந்திபோஜன முண்டு; ஆனால் கொள்வினை கொடுப்பினை சம்பந்தம் கிடையாதாம்.

## (மற்றோர் கதையாவது.)

இக்கம்மவாருடைய ஆதி சரித்திரத்தைப் பற்றி கோயமுத்தூர் முதலான தென்னாடுகளில் வேறுவிதமாகச் சொல்லுகிறார்கள். அதாவது:— பல்லடம் தாலூகா சித்திரநாயக்கன்பாளைய வாசியும், கம்மவாரு புராணத்தை கவிகளாகப் பாடிய ஸ்ரீமாந் இராமாநுஜ கவிராயரவர்கள், இந்த கம்மவாருடைய ஆதி உற்பத்தியைப்பற்றி பின்வருகிறபடி சொல்லி இருக்கிறார். எப்படியெனில்—சந்திர வம்ச க்ஷத்திரியனாகிய யயாதியின் சந்ததியாகும் சசிபிந்துவுக்கு துஹீனனும், அவனுக்கு நந்தனும் பிறந்ததாகவும்; அந்தநந்தன்—துஹீனனுக்கும், ஒரு பஞ்சமஸ்திரீக்கும் பிறந்தபடியால், அந்தநந்தனை அவனுடைய பந்துக்கள் ஜாதி பிரஷ்டனாகக் கொண்டு அவமதித்துவர; அந்தநந்தன் சகிக்கமுடியாமல் தனது இராஜ அதிகாரத்தினால் தன்னை அவமதித்த பந்துக்களைப் பிடித்து வதைக்க; அக்கஷ்டத்தைசகிக்கமுடியாமல் அநேகபந்துக்கள்கூடிதமதுநாட்டை விட்டுதெற்கே யோடிவர, இடையில் பெண்ணைநதி பிரவாகமாகித் தடுக்க; அக்கரையில் தபோநிதியாக இருந்த ரேணுகாதேவியை வணங்கிவேண்ட, அந்தம்மை தமது இரண்டுகாதோலை (கம்மல்களை) மந்தரித்துக்கொடுக்க; அதைப்பெற்றவுடனே பெண்ணையாறு வழிவிட, இக்கரைவந்ததாகவும்; — அன்றுமுதல் அவர்களுக்கு கம்மவாரு என்றபெயர்வழங்குகிறதென்றும்;—அவர்களுக்கு பலபதிரபாஷ்கர ஐயர் குலகுருவென்றும், பட்டுமூர்த்தி இயற்றிய திபதகாவியத்தில் விவரமாகக் காணலாமென்றும்; அவர்களுடைய வீட்டுப்பெயர் விவரங்கள் பிச்சுதொண்டு..

ருக்கு செம்மையாகத் தெரியுமென்று சொல்லுகிறார். இக்கதை யன்றியில், வேறொரு கதையும் இருக்கிறது. அதாவது

பிரம்மாண்ட புராணம், கலிதரும பிரகரணம்III முதல் 20-அத்தியாயங்களில் சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லுகிறபடி, சூரியவம்சராஜனான துவிலீபன் சந்தானக் கதையில் கம்மவாரு அந்தத் துவிலீபருடைய லக்ஷம் சந்ததிகளிற் பிறந்து, சந்திரவம்சத்தாரோடு சம்பந்தம் செய்ததனால், உபயாதிகளென்றும், இவர்களுடைய ஆதிதந்தை தருமபாலர் என்றும், ஆதி ஆசாரியன் தருமசீலன் என்றும், தருமபாலனுடைய குமாரத்தி கன்னிகாமணியை ஒருசந்திரவம்சத்தான் சிறையெடுக்கப் பிரயத்தனப் படுவதை யறிந்த பெண்ணும், பெற்றோரும் ஒருகறுப்புநாய்க்குப் பெண்வேஷம் பூட்டி வீட்டில் கட்டிவிட்டு, தென்னாடுகளை நாடிவருகையில், ஒருபெருநதி வெள்ளத்தால் தடுக்க, அப்போது அந்நதிக்கரையில் தபோநிதிகளாக விருந்த ஜமதக்கினி மஹாரிஷியையும், அவர் மனைவி ரேணுகாதேவியையும், பரசுராமரையும், வணங்க; அந்த ரேணுகாதேவி தன்காதி லணிந்திருந்த கம்மலை ஓலையைப்பிடுங்கிக் கொடுத்து வணங்கி கரை தாண்டும்படி சொல்ல, அப்போது அந்தநதிவழிவிட, அன்றுமுதல் அவர்களுக்கும் கம்மவாரென்றும், அக்கம்மலைக்கொடுத்துதவிய ஜமதக்கினி, இரேணுகாதேவி, பரசுராமர் குலதேவர்களாகக்கொண்டு, கலியாணகாலங்களில் முதலில் வணங்கியும், பிறகு பலபத்திரர் என்னும் குலாசாரியருக்கு, முதல் தாம்பூலம் கொடுத்தும், விவாகம் செய்கிறார்களாம். இவர்களில் தமதுஸ்திரீகளைக் கோஷாவில் வைப்பவர்களுக்கு கோடாசாட்டுவாரென்றும், மற்றவர்களுக்கு கெம்பசாட்டுவாரென்றும், இருவகுப்பார்களாக இருப்பதன்றியில், சிங்கமுவாரு, இந்திரபுரமுவாரு, லக்ஷபுரமுவாரு, வகுளம்வாரு, லுகுளம்வாரு, மைலேட்டிவாரு, பைடிபாலிவாரு, புஷ்பம்வாரு, ஜன குலம்வாரு, வசந்தம்வாரு, செம்பேடுவாரு, கந்தாளம்வாரு, புனசூர்வாரு, மஹிராடுவாரு, முன்னூரிவாரு, சகலாவாரு, வங்காபலவாரு, பசுபலவாரு, வேலூருவாரு, பிடிகுலராலவாரு, சாலம்வாரு, விந்தலவாரு, ஆடேருவாரு, என்றுதி வீட்டுக்காரர்களும், கோத்திரக்காரர்களு மிருக்கிறதாக பீளமேடு ம-ா-ா-ஸ்ரீ, கோபாலசாமி நாயுடவர்களிடமிருந்தும்; ஸமஸ்கிருத்சுலோக கிரந்தத்தில் சொல்லப் பெற்றிருக்கிறது.

இக்கம்மவாரு தொன்று தொட்டு வியவசாயத்தில் வல்லவர்வளாதையால் "கம்மவானிகண்டே கடினபூமியு வெருகுனு, "கம்மஜாதி சேரிதே கடமஜாதி தொலுகுனு "என்றுதி பழமொழிகள் வழங்கி வருகின்றன. இவர்கள் அமராவதி, கிருஷ்ணை, நெல்லூர், செங்கல்பட்டு, கடப்பை, கோயமுத்தூர், திருநெல்வேலி முதலான ஜில்லாக்களில் விசேஷமாகவும், முக்கியமாகப் பருத்தி விளையும் கரிசல் நிலமுள்ள விடங்களில் இருக்கிறார்கள். இவர்களில் சிலர் நாசுவன் (அம்பட்டன்) கையில் குடுமியைக் கொடுத்துக் குனிந்து க்ஷவரம் செய்துக்கொள்வது கௌரவக்குறைவெனத் தலை க்ஷவரமும் செய்துகொள்வதில்லையாம். 1901-ஆம் காணிஸ்மாரி கணக்கின்படி இந்த இராஜதானியில் இவ்வகுப்பில் 9,73,723-குடிகளிருந்தார்கள்.

இந்த கம்மவார்களில் அநேகர் திருநெல்வேலி ஜில்லாவில் பலவீட்டுப்பெய ர்களாலும், கோத்திரமுதாலானதுகளிலும்பிரபலமாக இருப்பதால், அவ்வீட த்திலுள்ளாருடைய வீட்டுப்பெயர் முதலானதுகளை இதனடியில் காணலாம்.

(வீட்டுப்பெயர்கள்—கோத்திரமுதலான விவரம்.)

1-வெல்லம்வாரு-பாலெட்லகோத்திரம்,மேல்பட்டிஓட்டப்பிடாரத்திலிருக்கிறார்
2- செப்படிவாரு-கொங்குளகோத்திரத்தார்,சிவலாபாடியிலிருக்கிறார்கள் (கள்
3- கோட்டவாரு-புலிகொட்லகோத்திரம்-பந்தல்குடியிலிருக்கிறார்கள்
4- இராவல்லவாரு-சங்கரநாயினார் கோயில், கிழவந்தவலியிலிருக்கிறார்கள்
5- செருகுவாரு-சென்னுக்குளம் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருக்கிறார்கள்
6- எட்ரேருவாரு-சாத்தூர் தாலுக்கா, எட்ரேருபட்டியிலிருக்கிறார்கள்
7- கோட்டவாரு-சங்கரநயினார் கோயில் குருவிகுளத்திலிருக்கிறார்கள்
8- கோடெல்லவாரு-கடம்பாளையத்திலிருக்கிறார்கள்
9- வீமனவாரு-மேமமந்தையிலிருக்கிறார்கள்
10-சிங்கமுவாரு-படந்தவலியிலிருக்கிறார்கள்
11-மரபட்டிவாரு-மேலனீலிகிராமத்திலிருக்கிறார்கள்
12-வண்டாளவாரு ஷை ஷை
13-மாதனவாரு-கண்டமனூலகிராமத்திலிருக்கிறார்கள்
14-காதலிவாரு-வாலசமுத்திரத்திலிருக்கிறார்கள்
15-நறறவாரு-உம்பத்தூரிலிருக்கிறார்கள்
16-ஜாமண்டலவாரு-சிதம்பராப்பட்டியிலிருக்கிறார்கள்
17-மந்தலப்பவாரு-மாவிலிபட்டியிலிருக்கிறார்கள்
18-பயிண்டிவாரு-கொண்டரெட்டி பட்டியிலிருக்கிறார்கள்
19-கோரேருவாரு-ஆகலகூடத்திலிருக்கிறார்கள்
20-நாயடுவாரு-சீகம்பட்டியிலிருக்கிறார்கள்
21-காம்னிவாரு-சீயம்பட்டியிலிருக்கிறார்கள்
22-சம்மட்டிவாரு-சிவனுமைபட்டியிலிருக்கிறார்கள்
23-சாதுவாரு-மத்துக்குடி, உச்சிவலார், வாலசமுத்திரத்திலிருக்கிறார்கள்
24-பொற்றவாரு-சாத்தூர் வெங்கிடேசபுரத்திலிருக்கிறார்கள்
25-பொட்டுவாரு ஷை ஷை
26-கந்தப்பவாரு-கலுங்குப்பட்டியிலிருக்கிறார்கள்
27-காளையர் குருசிவாரு-செங்கோட்டையிலிருக்கிறார்கள்
28-கெட்டமுவாரு-வத்திப்பொருட்டி புதுப்பட்டியிலிருக்கிறார்கள்
29-மதம்ஞ்சிவாரு-சாத்தூருக்கடுத்தகாயில் பட்டியிலிருக்கிறார்கள்
30-நாமவாரு ஷை ஷை
31-கும்பினிவாரு-சிவகத்தாகுருச்சியிலிருக்கிறார்கள்
32-மல்லேனிவாரு-தடம்பாறையிலிருக்கிறார்கள்
33-குறசல்வாரு-தருகுசாலபுரத்திலிருக்கிறார்கள்

34-துப்பட்டிவாரு-குருவிகுளத்திலிருக்கிறார்கள்
36-புச்சலவாரு-மோரம்பள்ளியிலிருக்கிறார்கள்
37-சல்லாவாரு-திம்மராஜபுரத்திலிருக்கிறார்கள்
38-தந்தூரிவாரு-சிங்கத்தாகுருச்சியிலிருக்கிறார்கள்
39-கொத்தபல்லிவாரு-காருசேரியிலிருக்கிறார்கள்
40-இராமபட்டிவாரு-பூவரணியிலிருக்கிறார்கள்
41-வயிறுவாரு-சலமந்தத்திலிருக்கிறார்கள்
42-லிங்கட்டிலவாரு-வெங்கடேசபுரத்திலிருக்கிறார்கள்
43-தாண்ருவாரு ஷை ஷை
44-கென்னவாரு-களுகுபட்டிலிருக்கிறார்கள்
45-தாதவாரு-வெண்ணெரியிலிருக்கிறார்கள்
46-வேதகிரிவாரு-குருவிகுளத்திலிருக்கிறார்கள்
47-ஆத்தூரிவாரு-வெண்ணெரியிலிருக்கிறார்கள்
48-வாசுரெட்டிவாரு-செங்கமலநாச்சியார் புரம்வெள்ளையாபுரத்திலிருக்கிறார்கள்
49-சலிசிவாரு-மீசலூரிலிருக்கிறார்கள்
50-சோகினிவாரு-மேலமறினூரிலிருக்கிறார்கள்
51-சாகினிவாரு ஷை ஷை
52-விரிப்பினிவாரு-ஆழ்வார் நாயக்கம் பட்டியிலிருக்கிறாகள்
53-குறஜெலவாரு ஷை ஷை
54-வெல்லம்வாரு-செவ்வட்டி ஜமீன்தாரருடைய குடும்பத்தார்
55-கொண்டவாரு-குருவிகுளத்திலிருக்கிறார்கள்
56-கோணபல்லிவாரு ஷை ஷை.
57-பிலாரிவாரு-இழவந்தனியிலிருககிறார்கள்
58-கம்மவாரு-கொண்டரெட்டிபட்டியிலிருக்கிறார்கள்
59-பருத்திவாரு-எட்டியாபுரத்துக்கடுத்த காட்டுபுதுபட்டியிலிருக்கிறார்கள்
60-அயனுலவாரு-வெளவாதியிலிருக்கிறார்கள்
61-கொடுகுலவாரு-சிவகாசிக்கடுத்த ஆனைகூட்டத்திலிருக்கிறார்கள்
62-தேட்டிவாரு-இந்தலக்கடமையிலிருக்கிறார்கள்
63-காகூரிவாரு-படந்தவள்ளியிலிருக்கிறார்கள்
64-மந்தலப்பவாரு-மாவிலிபட்டியிலிருக்கிறார்கள்
65-சீர்பாட்டிவாரு-வடமலபுரத்திலிருக்கிறார்கள்
66-மங்கபாட்டிவாரு-சிங்கத்தாரு குடிசியிலிருக்கிறார்கள்
67-சப்பிணவாரு ஷை ஷை
68-பண்டாருவாரு-மீன்துள்ளியிலிருக்கிறார்கள்
69-பண்டலவாரு-போஜப்பட்டியிலிருக்கிறார்கள்
70-வாசுரெட்டிவாரு-நெல்லூர் ஜில்லாவில் பிரபலர்-விவாஹாதி காலங்களில் பந்துக்களில் முதல் தாம்பூலத்தை பெற்றுக்கொள்பவர். திருநெல்வேலி, சாத்தூர் தாலுக்காவெள்ளையா புரத்தில் குடியிருக்கிறார்கள்—
71-நாமினிவாரு-வெள்ளையாபுரத்திலிருக்கிறார்கள்

72-வச்சலவாரு-முரம்பனில் குடியிருக்கிறார்கள்
73-சென்னினிவாரு-வென்றாணியில் குடியிருக்கிறார்கள்
74-பொட்டவாரு-சிவலார் பட்டியிலிருக்கிறார்கள்
75-வயனலவாரு-தானூர் கோத்திரம்,எட்டியாபுரம் சமஸ்தானத்திலிருக்கிறார்கள்
76-காளாஸ்திரிவாரு-வல்லட்டிகோத்திரத்தார்செங்கோட்டையிலிருக்கிறார்கள்
77-பொட்டுவாரு - கன்ஜலகோத்திரம்-தூத்துக்குடி வெங்கடேசபுரத்தி லிருக்கிறார்கள்
78-சீபாட்டிவாரு - கூம்பூர் கோத்திரம்-தட்டப்பறை திம்மாராஜபுரத்தி லிருக்கிறார்கள்
79-சல்லாவாரு- ஷை. ஷை. ஷை.
80-வெல்லம் கொண்டவாரு-சங்கரநயினார்கோயில்குருவிகுளத்திலிருக்கிறார்கள்
81-இராவல்லவாரு-இளவந்தலிலிருக்கிறார்கள்
82-செருகுவாரு-ஸ்ரீவல்லிபுறத்தார்.நாச்சியார்பட்டிசென்னூர்குளத்திலிருக்கிறார்(கள்
83-குரபாட்டிவாரு-மணியாச்சிபுலானி கிரமத்தி லிருக்கிறார்கள்
84-பாலேட்டிவாரு-பலவிடங்களி லிருக்கிறார்கள்

இப்படியேஇந்த கம்மவாருக்குள் 600-வீட்டுக்காரர்களும்,600-கோத்திரத்தார்களும் இருப்பதாக, ஸ்ரீ வல்லிபுத்தூர் தாலுகா சேத்தூர்ஜமீன் சரகம்சேகர முகவூரில் வசிக்கிற கம்மவாரு நாயடுகாரு ஒருவரிடமிருக்கும் செப்புப்பட்டயத்திலிருக்கிறதாம்.

## பெரிகபலிஜவாரு.

கம்மவாரு விளைவிக்கும் தானியம் முதலானதுகளைப் பைகளிற் போட்டு மாடுகளின்மேல் கொண்டுபோய்த் தூரதேசங்களில் வியாபாரம் செய்பவர்களுக்கு பெரிக பலிஜவாரு என்று பெயர். சிலர், இவர்களை பிரிகிபலிஜவாரென்று சொல்வதுமுண்டு. அதாவது ஆதியில் பாசுராமர் க்ஷத்திரியர்களை நாசமாக்க கங்கணம் கட்டிக்கொண்டு வந்தபோது, இவர்கள் அப்பாசுராமருக்கு பயந்துக்கொண்டு, தெற்கே ஓடிவந்து விட்டபடியால், இவர்களை பிரிக்கி= பயந்து வந்தவர்களென்றும் சொல்லுகிறார்கள். இவர்களுடைய விவாஹகாலங்களில் பெரிகையென்ற மாட்டின்மேற் போடும், கோணிப்பையில் புல்லை நிறைப்பித்துக்கட்டி அந்தப் பையின்மேல் நக்ஷத்திரங்களைப்போல பல வர்ண புள்ளிகளை வைத்து அலங்கரித்து பூஜை செய்தபிறகே, தாலியைக் கட்டுவது வழக்கம். இவர்களுக்குள் அம்பி மிதித்தல் முதலான சடங்குகளில்லை — கத்தி கட்டாரி ஆயுதங்களை வைத்து வணங்குவதுண்டு— இவர்களில் அனேகர் உப்பு மூட்டைகளையும், கோணிப்பைகளை தைத்தமூட்டைகளையும் மாடுகளின், மேல் கொண்டுபோய் வியாபாரம் செய்து நாளாவட்டத்தில் சிலர் ஜமீன்தாரார்களானார்கள். இக்குடும்பத்தில் அனேகர் இப்போது இராஜமஹேந்திரம், விசாகபட்டணம் ஜில்லாக்களில் நல்ல அந்தஸ்தி லிருக்கிறார்கள். சமீப காலத்துக்கு முன் பரமபதமடைந்த புகழுடம்பினராகிய ஸ்ரீ மஹாராஜா, கோடே, நாராயண, கஜபதிராயலு காரும், விசாகப் பட்டணத்தின் திலகங்களைப் போலிருந்த,

ஸ்ரீ நரசிங்க ராயலுகாரும், ஐக்கா ராயலுகாரும், குருப்பம்மாவின் தாரவமர்களும் இந்த வகுப்பைச் சார்ந்தவர்களாம். இவர்களுக்கு அந்த பிராந்தியங்களில் பாபுகாரு, வஜீருகாரு, இராவ்காரு, இராணிகாரு, என்றுதி பட்டங்களை வழங்கி வருகின்றனர். சுகதுக்கச் சடங்குகளை வடநாடுகளை அனுசரித்து நடத்தி வருகிறார்கள். சென்னை முதலான சில விடங்களில் நாயடுகாரு என்ற பட்டத்தையும் இந்த பிராந்தியத்திற்கேற்றபடி சடங்குகளையும், வழங்கிவருகிறார்கள். சென்னை ஐகோர்ட்டு இண்டர் பிரிட்டாாகவும், பிறகு டிஸ்டிரிகட்டு முனிசீபு முதலான உத்தியோகங்களை வகித்துவந்த ஸ்ரீ பண்டலஇராமசுவாமி நாயடுகாரும் இந்த வகுப்பைச் சார்ந்தவராம். கி - பி. 1901-ளுசென்னை காணிஸ்வரி கணக்கின்படி, இந்த ராஜதானியில்22, 732-பெரிகபலிஜவாருகள் இருந்தார்கள்.

## பத்திபலிஜவாரு.

இவர்களும் பூர்வம் விஜயநகர ஸமஸ்தானத்தி லிருந்து தெற்கே வந்து பருத்தி வியாபாரத்தையே விசேஷமாகச் செய்து வருவதனால் இப்பெயரைப் பெற்றார்கள் போலும்.

## கன்னடி பலிஜவாரு.

இவர்களும் பூர்வம் விஜயநகர ஸமஸ்தானத்தி லிருந்து பல்லாரி மைசூர் முதலான பிராந்தியங்களில் குடியேறி யவர்கள்! இவர்களுடைய ஆதி மதம் வைணவ மேயாகிலும், பல்லாரி, மைசூர் முதலான விடங்களிலிருக்கும் சிலர் சிவாசார மதஸ்தர்களைப் பார்த்து சைவமதத்தை தழுவிக்கொண்டும், கன்னடி பாஷையைப் பேசிக்கொண்டும் வருகின்றனர். இவர்களுக்குள், எத்துகன்னடி, எனமு கன்னடி பலிஜவாரென்றப் பெயர்களால் சில்லறை வியாபாரிகள் அநேகருண்டு. சென்ற கி - பி. 1901-காணிஷ்வாரி கணக்கின்படி இந்த ராஜதானியில் 20975-குடிகளிருந்தார்கள்.

## உப்புபலிஜவாரு.

இவர்களும் பூர்வம் விஜயநகரம் முதலான வட தேசங்களி லிருந்து சென்னை முதலான விடங்களில் உப்பு வியாபாரம் செய்து வந்தமையால், இப்பெயரைப் பெற்றார்கள்போலும். இவர்களிற் சிலர் ரேவு துறைகளிலும், நகைக்கடைகளிலும் தரகு வியாபாரம் செய்துக் கொண்டிருக்கினும்; சென்னை, செங்கல்பட்டு முதலான விடங்களில் அநேக தனிகர்கள் இருக்கிறார்கள்.

## ஜனபபலிஜவாரு.

இவர்கள் ஸமஸ்தானபதிகளுக்கு வேண்டிய பட்டுசரிகைத் துணிகளை செய்து கொடுத்துக்கொண்டு வந்தவர்கள். இவர்களை புஷ்பால பலிஜவாரு என்றும் வழங்குவதுண்டாம். இக்காலத்தில் இவர்களில் அநேகர் நீகுச்சி, சாய

துணிமணிகளை விற்றுவந்தாலும், பெரும்பாலார் தரித்திர தசை யடைந்து கோணிப்பை முதலானதுகளைத் தைத்தும், துரைமார்கள் வீட்டிற்கு சேட்டி முதலான ஹாகர் வியாபாரம் செய்து வருகிறார்கள். தமிழ்நாடுகளில் இவர்களுக்கு சலுப்புசெட்டிகளென்று பெயராம்—மதுரையில் இவர்களுடைய ஒரு வகுப்பாருடைய மனைவிகள் தமிழ்பேசி வருகிறார்கள். கி. பி. 1901 ஆம் 82, 362 குடிகளிருந்தார்கள்.

## வாடபலிஜவாரு.

இவர்கள் ஸமஸ்தானாதிபதிகள் பெரிய நதி, கடல் முதலானவைகளைக் கடந்துபோகும்போது அதிகசத்தியத்தோடும், சாமார்த்தியத்தோடும், தோணி பாசல் கப்பல்களை யோட்டினவர்கள். இவர்களில் சிலர் வலச பலிஜவாராம். இவர்கள் சமஸ்தானத்துக்குவேண்டிய பலவித சரக்குகளைப் பலதேசங்களுக்கு போய்வாங்கிவந்து ஸமஸ்தானத்துக்குள் வியாபாரம் செய்து, வரும்படியில் நான்கில் ஒருபாகம் சமஸ்தானத்துக்குச் சுங்கமாகக்கட்டி வந்தார்கள். கி பி. 1901-ஆம் கானிஷ்வரி கணக்கின்படி 4, 70, 989-குடிகளிருந்தார்கள்.

## தோயில்டி பலிஜவாரு.

இவர்கள் தஞ்சை நாட்டிற்கு சேவப்பநாயக்காருவந்தபோது அவரோடு பிறப்பட்டு விஜயநகர ஸமஸ்தானத்திலிருந்துவந்தவர்கள்-இவர்கள் சிலநூற்றுண்டுகளாக அந்ததமிழ்நாடாகிய தஞ்சாவூரிலும், அதையடுத்த இடங்களிலும் வதிந்து வந்ததில் தமது சொந்தபாஷையாகியதெலுங்கைமறந்து, அதற்கு பதிலாக தமிழ்பாஷையையும், தமதுபுராதன சடங்குகளிலும் சிறுபான்மை மாற்றி நடத்தி வருகிறார்கள்—கி. பி 1901ஆம் கானிஸ்வாரிகணக்கின்படி இந்தாராஜதானியில் தமிழ்பாஷையை உபயோகிக்கும் பலிஜவாரு 1, 80, 884 குடிகளிருந்தார்கள்—

## பூந்தமல்லி பலிஜவாரு.

இவர்களும் ஆதியில் விஜயநகர ஸமஸ்தானத்தைச் சார்ந்த பிரதிநிதிகளாகிய நாயடுகார்களுடன் வந்தவர்கள், இவர்களில் பெரும்பான்மையோர் தோட்டங்களில் வெற்றிலை காய்கறிகளை பயிர்செய்து விற்பனைசெய்து வருகிறார்கள்.

## செட்டிபலிஜவாரு.

இவர்களைத்தெலுங்குச்செட்டிகள் என்று சொல்வது முண்டு. இவர்கள் இருபத்துநான்குமனையார் என்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இவர்கள் ஆதி சரித்திரம் பின்வருமாறு:—“ புநதீவீசன்” என்னும் மன்னவன், அந்தகாசுரனுல் அவஸ்தைப்பட்டுச் சிவனிடம் முறையிட அச்சிவனுத்திரவினுல் பிரம்மா வந்து அந்தஅந்தகாசுரனைக் கொன்று. அவன் மண்டை ஓடுகளைத் திராசு தட்டங்களாகவும், முதுகெலும்பைத தண்டமாகவும், நரம்புகளைக்

கயிறுகளாகவும் தொடுத்து திராசாக்கி வியாபாரம் செய்து பிழைக்கும்படி சொல்ல; அவனும் அப்படியே செய்து புத்திரனில்லாக் குறையால் புத்திர காமேஷ்டியாகம் செய்ய ; அவன் மனைவி அஜனைபயின் வயிற்றில் 24 ரிஷிகளே, 24 புத்திரர்களாகப் பிறந்ததாகவும், அந்த இருபத்திநான்கு பெயரே வஜ்ஜிருகன், கத்தவங்குரவன், வாஜவன், மராட்டியன், கயாரவன், நீல்லவான், ரெட்டயன், பிடுதவான், கவலைவான், தவழைவான், கோலவான் கனத்தவான், பல்லவன், மும்முடிவான், கோட்டைவான், அம்மைவான், மங்களவான், பக்ஷவவான், லதாக்யன், நனவிதியான், மதலவான், பல விதியான, இராயலுவான், என்ற 24 தெலுங்கு வம்சத்தார்களானதாகவும், இவர்களில் மும்முடியானுக்குக் காஞ்சீபுரத்தில் முடிசூட்டியும். மங்களவானுக்கு குசலவதி நகரத்தில் முடிசூட்டியும், மற்ற 22 பெயர் மந்திரிகளாகக்கொண்டு ஆண்டு வருகையில் ; சோழனுடைய உத்தரவின்படி கப்பல் தயார் செய்து தென்கடல் வழியாக மலையாளததுக்குப்போய் வியாபாரம் செய்ய ; அச்சேரன் இவர்களைச் சுங்கம் கேட்க ; இரு கக்ஷிகாரர்களுக்கும் சண்டையுண்டாக, அச்சண்டையில் சேரன், மடிய அவன் குமாரத்தி சிரோமணி கருமம்செய்து கேரளத்தை யாண்டதாகவும்,—பிறகு பாண்டியனுடைய துஷ்ட குடிகளுக்கு இவர்கள் அடைக்கலம் கொடுத்து ஆதரிக்க, அப்பாண்டியனுக்கு தம் சிரங்களைக் கொடுக்க காமாக்ஷியின் மகிமையால், சிரங்களைப் பெற்றதாகவும், பிறகு சோழன் இவர்கள் குடும்பத்தில் ஒருபெண்ணைக் கேட்க. பொன் பிரதிமையைச் செய்து காமாக்ஷியின் மகிமையால் உயிர் கொடுத்ததாகவும்; பிறகு கூர்ச்சரநாட்டு தருகோவிந்தனோடு எதிர்த்துச் சண்டையிட்டு அவனைக்கொன்று, அவனுடைய பெண்களை நாயகிகளாகக் கொண்டதாகவும், தம் சொந்தநாயகிமார் அக்கினிகுண்டத்தில் விழுந்து இறந்ததைக் காமாக்ஷியம்மன் மகிமையால் உயிர்பெற்றதால் அந்தக்காமாக்ஷி அம்மையே குலதெய்வமாகக் கொண்டாடி வருகிறதாகவும் சொல்லுகிறார்கள். இதுவிஷயத்தில் வேறொரு கதையும் உலாவுகிறது.—அதாவது; இவர்கள் கூர்ச்சரநாட்டரசனோடு சண்டைக்குப்போனபோது இவர்களுக்கு எதிரியினால் அபாயமுண்டாகும் குறிப்பை நாய்கள்வந்து அறிவிக்கும் என்றும், அப்போது தம் அரிவையர் அக்கினிகுண்டத்தில் விழவேண்டுமென்றும் சொல்லிப்போக, அந்தநாய்களை எரும்புற்றுக் கருகில் கட்டிவைக்க, அவைகளை எரும்புகள் கடித்தபோது நாய்கள் சகிக்கமுடியாமல் சேர்ந்தோடு ஓடிவந்து குறைக்க, இவர்கள் பெண்டுகள் பார்த்துபயந்து அக்கினி பிரவேசமானதாகவும்; அதன்மேல் இந்த செட்டிபலினர்கள் தமக்கு மனைவிகளில்லாக் குறையினால், கொங்குநாட்டு வேளாளப் பெண்களை வைப்பாட்டிகளாகக் கொண்டதாகவும்; ஆகவே, இப்போதும் இவர்களுடையமனைவிகளுக்கு இவர்கள் தாலியைக்கட்டாமல், பந்துக்களான பெண்டுகளைக் கொண்டு தாலியைக்கட்டுவித்தும், கைகளுக்கு வளையல்கள் போடாமலும், சுவாமிமுதலானச் சடங்குகளைச் செய்யும்போதுஸ்திரிகளில்லாமலும் புருஷர்கள்மாத்திரம் செய்து வருகிறார்களாம்.— இவர்களை 1901-ஆம்) கானிஷ்வாரி கணக்கின்படி 95, 924 குடிகளென்றும், வடுகர் என்றும் எழுதியிருக்கிறார்கள்போலும்— இவ்

வகுப்பார்களில் அநேகர் வர்த்தக வியாபாரங்களைச் செய்து தனவந்தர்களாக இருக்கிறார்கள். கோயமுத்தூர் முதலான விடங்களி லிருக்கும் இவர்களிற் சிலர்பேசும் பாஷை தமிழ், தெலுங்குக் கலந்து கொச்சையாகப்பேசி வருகிறார்கள்.

## கொல்ல பலிஜவாரு.

இவர்கள் பூர்வத்தில் விஜயநகர ஸம்ஸ்தானத்தாருடைய சோக்களைப்பாது காத்துக்கொண் டிருந்தார்கள். கோபாலர் என்ற பதத்திலிருந்து கொல்லர் என்ற சுருக்கப்பெயராக நாளவட்டத்தில் மருவியதுபோலும். இவர்களுள் 274 உட்பிரிவினர்கள் இருக்கினும், இவர்களில் முக்கிய மானவர்கள் பத்துப்பெயர் களாம். இவர்கள் விவரமாவன.

(1) ஆலகொல்லவாரு — கஞ்சாமில் 21683-விஜாகப் பட்டணத்தில் 114820-கோதாவரியில் 17178-ஆக 185569-குடிகளிருந்தார்கள்.

(2) எர்ரகொல்லலு—கோதாவரியில்23709 - கிருஷ்ணாவில் 22149 நெல்லூரில் 4489-கடப்பையில் 3166-கர்னூலில் 4993-கோயமுத்தூரில் 2003ஆக 172633-குடிகளிருந்தார்கள்.

(3) காமகொல்லலு—கடப்பையில் 32269-கர்னூலில் 14112-அநந்தப்பூரில் 21795- வட ஆர்காட்டில் 8499, பல்லாரியில் 7455, நெல்லூரில் 1756.ஆக 92245-குடிகளிருந்தார்கள்.

(4) மேகலகொல்லலு—கஞ்சாமில் 20531-விசகப் பட்டணத்தில் 2272-ஆக 23002-குடிகளிருந்தார்கள்.

(5) பக்கநாட்டிகொல்லலு—கர்னூலில் 10864-பல்லாரியில் 4171 ஆக 16747-குடிகளிருந்தார்கள்.

(6) பூஜகொல்லலு—கிருஷ்ணாவில் 495241-நெல்லூரில் 56971-கடப்பையில் 25916-கர்னூரில் 19618-ஆக 155075-குடிகளிருந்தார்கள்.

(7) பூனிகொல்லலு —கோதாவரியில் 10108-கிருஷ்ணாவில் 10144 நெல்லூரில் 36606-கடப்பையில் 6785-வட ஆர்காட்டில் 26531-ஆக 94252 குடிகளிருந்தார்கள்.

(8) பூரிகொல்லலு—கிருஷ்ணாவில் 22143-நெல்லூரில் 9147-ஆக 3338-குடிகளிருந்தார்கள்.

(9) பொக்கிஷ கொல்லலு—பல ஜில்லாக்களில் 22250-குடிகளிருந்தார்கள். இவர்களையே ஸ்வதந்திர கொல்லர்களென்று சொல்லலாம். இவர்கள் மஹா சத்தியவந்தர்களாக இருந்தபடியால் விஜயநகர ஸமஸ்தான பதியின் பொக்கிஷத்துக்கு முக்கிய போஷகாரர்களாக இருந்தார்கள். இவர்களிலொரு வகுப்பார் சில வருஷங்களுக்குமுன், மறுமணம் செய்துக்கொண்டும் வந்ததோடு, பூஜகொல்லர்களில் பெண்கள் தம் கணவர்கள் துஷ்டராக இருக்கிற விஷயத்தில், கலியாணச்செலவைக் கொடுத்துவிட்டு விலக்கிக்கொள்ளலாமாம்

சாத்தாதாரர்கள் இவர்களுக்கு குருமார்களாம். பலிஜவாரோடு போஜன பிரதி போஜனம் செய்துக்கொண்டும், நாயடுகாரென்றப் பட்டத்தைதரித்துக்கொண்டிருக்கினும், மற்ற நடவடிக்கைகளில் இவர்கள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைச சாந்த யாதவகுலத்தைச் சார்ந்தவர்கள். ஒருகாலத்தில் சங்கமவகுப்பைச் சார்ந்த ஹரிஹரராயலு, புக்கதேவராயலு முதலான விஜயா நகராதிபர்களாக இருந்த அரசர்கள் இவர்களுடைய முன்னோர்களாம்.—நிற்க

இவர்களன்றியில் சிலர்காபு ரெட்டிகளும், பலிஜவார்கள் என்று சொல்லுகிறார்கள். அவர்களுடைய விவரமாவன.

## காபு அல்லது ரெட்டிவாரு.

இவர்கள் பல ஜில்லாக்களில் பரவி இருக்கும் விவசாயிகர். காபு=என்றால் காவல்காரன்.ரெட்டிஎன்றால்=இரட்டு=இரெட்டி=ரட்டி=ரட்ரோ=ரஸ்திரகூட்டார்=அரசன். ஒருகாலத்தில் பிரபலர் ஆதியில் ரெட்டிபாடியி லிருந்தோர். இவர்களை சாலுகியர், பல்லவர், பலலாலர், அடிக்கடித் தாக்கி யடித்தாலும் 1323ஹு Ghiyas-ud - din - Loghluk கியாசட்டீன் டோகலாக் வாரங்கள் நாட்டு பிரதாப ருத்திரனை பிடித்தபிறகு இந்த காபுகளில் அனேகர் ஜமீன்தாரர்களானார்கள்—ஒருகாலத்தில் மில்டெரி உத்தியோகத்தி லிருந்த வெலமவாரே அதைச்சார்ந்தவர்களென சிலர்கருத்து-உண்மைத் தெரியவில்லை.

இவர்களில் 840-உட்பிரிவினராகவும், இவர்களில் அடியில் கண்டவர்கள் முகியஸ்தராகவும் இருக்கிறார்கள்—அவர்களாவன.

---

| | | | |
|---|---|---|---|
| ஐயோத்திவாரு—24278 | குடிகள் | கேடட்டிவாரு—29419 | குடிகள் |
| பலிஜவாரு—38697 | ,, | ஓரகண்டிவாரு—13873 | ,, |
| பூமன் சிவாரு—29597 | ,, | பக்கநாட்டிவாரு—226358 | ,, |
| தேசூருவாரு—26441 | ,, | பல்லேவாரு—22693 | ,, |
| காஜுலுவாரு—302462 | ,, | பண்டவாரு—455, 134 | ,, |
| கண்டிகோட்டிவாரு—18905 | ,, | பெத்தகண்டிவாரு—204270 | ,, |
| கம்மபுரிவாரு—11500 | ,, | போகநாட்டிவாரு—87820 | ,, |
| கோட்டிடிவாரு—91200 | ,, | பொங்கநாடுவாரு—27887 | ,, |
| குஞ்செட்டிவாரு—8842 | ,, | தெலகாவாரு—18796 | ,, |
| மொராசவாரு—40934 | ,, | வெலநாட்டிவாரு—19682 | ,, |
| மொட்டேடிவாரு—115391 | ,, | | |

இவர்களில், ஐயோதியவாரு=இவர்கள் திருநெல்வேலியிலும், (200 - பெயர்) மதுரையிலு மிருக்கிறார்கள், இவர்களுக்கு ரெட்டிகளெனவும், ஐயோதியாவிலிருந்து வந்த பெருமையை யுடையார். ஐயோதியாரெட்டிமாப்பிள்ளைக்கு, மிதலேரெட்டி பெண்ணை கேட்பது வழக்கம். இவர்களுக்கு வைணவர் புரோஹிதரில்லை. தாலிக்கு தங்கபொட்டில்லை, மாப்பிள்ளையின் தங்கை அல்லது தமக்கைமகளைகட்டும் வழக்கமுண்டு.

இவர்களுடைய சீர்சடங்குகளைப்பற்றி ஆராயும்போது இவர்கள் சந்திரவமிசக்ஷத்திரிய பலிஜவார் வகுப்பைச் சார்ந்தவர்கள் அல்லவென்று ஸ்பஷ்டமாகிறபடியால் விரிவாக எழுதாமல் விட்டோம்.

ஐந்தாம்காண்டம் முற்றிற்று.

---

## ஆறுவது காண்டம்.

## பலிஜவாருகளுடைய தத்காலஸ்திதி.

இதற்கு முன்னிற்கிற காண்டத்திற் கண்டிருக்கும் பலிஜவாருடைய பல உட்பிரிவுகளையும்; அவர்களுடைய நாம ரூப பேதங்களையும்; அவர்களிற் சிலர் காலவித்தியாசத்தினால் கிராமாந்திரங்களிற் குடியிருந்துகொண்டு கஷ்ட ஜீவனத்தையினால், தாழ்ந்த ஜாதியாரிடம் வேலைகளில் அமர்ந்தும்; அத் தாழ்ந்த வகுப்பார்களைப்போல உண்டும் உடுத்தியும்; அக்கிராமவாசிகள் வணங்கும் காட்டேரி, குட்டிச்சாத்தான் முதலான சில்லரை தேவதைகளை மதுமாமிசங்களை வைத்துக்கொண்டாடியும்; ஒரு கேவலமான ஜாதியாராகக் காலம் கழித்து வருகிறார்கள். இவர்களைக்காணும், ஏனையோர் இக்கலியுகத்தில் "பிராம்மணர், சூத்திரர் தவிர" க்ஷத்திரியர் வைசியர்கிடையாதென்றும்; ஆகவே, இந்த பலிஜவாரும் சூத்திர ஜாதியாரென்றும் சொல்லிக்கொண்டு வருகிறார்கள்.

இப்படிச்சொல்பவர்கள் இப்புராணத்தை முழுதும் துரபிமானம்விட்டு படித்துப் பார்த்தால் அப்படிச்சொல்லத்துணியார்கள்.

கால வித்தியாசத்தினால் அரிச்சந்திரன் பறையன் வேலையையும், நளன் சுயம்பாகி வேலையையும், பின்னும் சில சக்கிரவர்த்திகள் கேவலமான தொழில்களையும் செய்ததமையால், அவர்களை க்ஷத்திரியர்கள் அல்லவென்று சொல்லப்பொருந்துமோ? இக்காலத்தில் உயர்குலத்தாராகிய பிராம்மணர்களிற் சிலர், சந்தியாவந்தன வேதபடனங்களைவிட்டு, சட்டபாராயணஞ்செய்துகொண்டும்; சிலர், அரிசிக்கடை, சோற்றுக்கடை, தோல்கடைகளை வைத்துக்கொண்டும், சிலர்கள் சாராயகுத்தகை, கூத்தாடி முதலான தொழில்களைச்செய்துகொண்டும் வருவதனாலேயே, பிராம்மணர்கள் அல்லவென்று சொல்லப்பொருந்துமோ?

இந்த பலிஜவாரில் காலவித்தியாசத்தினால் பல உட்பிரிவுகளுண்டாகி இருப்பனப்போலவே, மற்றவருணத்தார்களிலும் உண்டாயிருக்கிறார்கள். எப்படியெனில்,

### பிராம்மணர் க்ஷத்திரியர் உட்பிரிவுகள்.

நமது இராஜதானியில் தெலுங்கு பிராம்மணர்களில் (1) காணகமம்லுவாரு, (2) முரிகிநாட்டிவாரு, (3) வெலநாட்டிவாரு (4) வேகிநாட்டிவாரு (5) நியோகியர் (6) தெலுங்காணியர் (7) மகாராஷ்டிரர் (8) கொங்கணத்தார் (9) கன்னடப்பிராமணர் (10) கர்நாட்டசர்கள் (11) ஆறுவேலு பிராஹ்மணர் (12) அறுபது வக்கலுபிராஹமணர் (13) பணக்கநாட்டார் (14) கம்மேணரார் (15) குஜராத்தியப்பிராஹ்மணர் என்றும்;—தமிழர்களில் (1) சோழதேசத்து வடமர் (2) வடதேசத்து வடமர் (3) வாத்திமார், (4) அஷ்டசகஸ்திரத்தார் (5) பிரஹசரணத்தார், சதியமங்கல பிரஹசரணத்தார், (6) காணி

யாளர் (7) பூக்காணியர் (8) சோழியர் (9) வீழியர் (10) கேசிகர் (11) குருக்கர் (12) ஆழியாளர், (13) போற்றிமார் (14) சக்கிலயசரர் அல்லது மார்த்தியான சண்டாளர் (15) மூவாயிரவர் (16) முக்காணியர் (17) பட்டர்மார் (18) வடகலைஐயங்கார் (19) தென்கலைஐயங்காரென்றுதி உட்பிரிவாயிருப்பதாக வருணசிந்தாமணியிலும்.

1870வரு ஏப்பிரல்மீ 15உ பிரம்மதீபிகையின்படி (1) ஸ்மார்த்த பிராமணர் (2) வடகலை (3) திராவிடாள் (4) திராவிடவடமாள் (5) திராவிடசோழதேசாள் (6) திராவிடதேசாள் (7) அர்ச்சகாசாரர் (8) ஆரியரதாள் (9) மகிமன் (10) காணியர் (11) முக்காணியர் (12) சாவியர் (13) பரதமசாங்கியர் (14) தெலுங்கர் (15) தெலுங்காணியர் (16) வெலநாட்டிவாரு (17) முறிகிநாட்டிவாரு (18) நியோகி (19) ஆராத்தியர், (20) தேசஸ்தன் (21) கருநாடகன் (22) வேபாரி, (23) நம்பூரி (24) திராவடவைஷ்ணவாள் (25) ஆந்திரதிராவிட வைஷ்ணவாள் (26) கோவிந்த பிராமணர் (27) மச்சதேசஸ்தாள் (28) இந்துஸ்தானியர் (29) சைனர் (30) குயன் (31) வடமன் (32) சாங்கேந்தி (33) குஜராத்தி (34) நம்பியார் (35) திரிபூரணிகாள் (36) ஆபத்தம்பியாள் (37) காத்தியாயனுள் (38) பாந்தியாயனுள் (39) ஆரியர் (40) பதிதாள் (41) லிங்கிகள் (42) கஜேறுஜி பிராமமணரென்றுதி உட்பிரிவுகளிருத்தல்பிரத்தியக்ஷம். இதேமாதிரியேக்ஷத்திரியர்களில்-நேபாளம், குச்சுபேஹார், காஷ்மீரம் பரோடா, ஹோல்கார், குவாலியூர், விஜயநகர், திருவனந்தபுரம் மைசூர்முதலான ஸமஸ்தானத்தார் இப்போது பற்பல ஜாதியாராகவும், குலத்தாராகவும் இருத்தல் பிரதியக்ஷமேயல்லவா ?"

## வேளாளரில் உட்பிரிவுகள்.

நமது இராஜதானியில் வைசியரில் ஒருவகுப்பாருக்கு வேளாண்மைத்தொழில் செய்வதைப்பற்றி வேளாளரெனப் பெயருண்டாயிற்று. அவ்வேளாளரில் பாண்டியதேசத்து வேளாண்மைமாந்தர், பாண்டிய வேளாளரெனவும்; சேரதேசத்து வேளாண்மைமாந்தர், சேரகுலவேளாளரெனவும், கொங்குதேசத்து வேளாண்மைமாந்தர், கொங்குவேளாளரெனவும், சோழதேசத்து வேளாண்மைமாந்தர், சோழியவேளாளரெனவும் சொல்லப்படுமுர்கள். துளுவவேளாளரென்னும் ஒருமரபிற்றுனே பலபிரதேசங்களைப் பற்றி உட்பிரிகள் உண்டாயிருக்கின்றன. அதாவது ஆற்காட்டுப் பிரதேசத்திலுள்ளவர் ஆற்காட்டார், புதுச்சேரி பிரதேசத்திலுள்ளவர்புதுச்சேரியார், பூந்தமல்லி பிரதேசத்திலுள்ளவர் பூந்தமல்லியார், பொன்னேரிபிரதேசத்திலுள்ளவர் பொன்னேரியார், ஒரு பொன்னேரி மரபாருக்குள்ளாகத்தானே, கும்மங்கலத்தார், காணியம்பாக்கத்தார், பழவேற்காட்டார், எடமாணியார், கூடாஞ்சேரியார், தேவஞ்சேரியார், வெண்பாக்கத்தார், தளபரம்பாக்கத்தார், நந்தியம்பாக்கத்தார், உப்பளத்தார், வசமைதபுரத்தார், இலவம்பேட்டார், எலம்பேட்டார், சதுரங்கபட்டணத்தார், இன்னும் திருவட்டீசுரன்பேட்டை, சிவரம்பேடு, நாலூர், இருக்கம், இரட்டம்பேடு, ஏனும்பாக்கம், உமிப்பேடு,

அடப்பம்பேடு, குறடி, கொறுக்குப்பேட்டை, சின்னகாவணம், பெரியகாரணம், கன்னிபுத்தூர், வழுதிலம்போடு, இந்தப்படி அநேகமாயேற்பட்டு, பற்பல ஜாதியார்களாகவும், குலத்தார்களாகவும் பிரபலப்பட்டிருத்தல் பிரதியக்ஷமல்லவா ?

நமது நாட்டிலிருக்கும் சூத்திரர்க்குள்ளிருக்கும் உட்பிரிவினர்களுக்கு கணக்கிடுவதே கஷ்டசாத்தியம். கேவலம் பஞ்சமரென்றுசொல்லும் பறையருக்குள்ளும் எத்தனையோவிதமான பிரிவுக்காரகளிருக்கிருர்கள் என்பதற்கு அடியிற்காணலாம்.

## பறையர்களின் உட்பிரிவு விவரம்.

(1) அச்சக்கேரளபறையன் (2) அகமுடிபறையன் (3) அக்னிபறையன் (4) ஆயிபறையன் (5) அகத்திப்பறையன் (6) ஏலங்காணிபறையன் (7) அம்பலக்காரன் (8) அம்பட்டபறையன் (9) அம்புளுட்டுபறையன் (10) அம்மாபறையன் (11) அனந்தபதி (12) ஆண்டிபறையன் (13) அங்குபறையன் (14) அணிலேலயிங்கோத்திரன், (16) அனுபாவிபறையன், (17) அப்பையாபறையன் (18) அரசுபறையன் (19) அரவைபறையன் (அரங்கோட்டை பறையன் (20) அறுத்துக்காட்டாதவன் (21) ஆரியபறையன் (22) ஆத்மபறையன் என்ருதி 400-வகுப்பு பறையர்கள் இருக்கிருர்கள். ஆதிகாலத்தில் நான்கைந்து ஜாதியார்களாக இருந்த இந்துக்களுக்குள், இப்போது இத்தனை உட்பிரிவாருண்டானதற்கு காலதேசவர்த்தமானமே காரணமல்லவா ?

## பிராமணன், க்ஷத்திரியன், வைஸியன், சூத்திரன், என்றபதங்களின் பகுதிப்பொருள் விவரமாவன.

---

1. பிராமணன் என்னும்பதம் பிருః என்றதாதுவிலிருந்து பிறந்ததாம் இந்த பிரு:என்றதாதுவுக்கு=உச்சரித்தல்,=என்ருல் வேதத்தைஉச்சரித்தல் என்று பொருளாம். அதாவது, வேதத்தை உச்சரித்தவர் பிராமணர் என்பதாம், மேலும் பிராஹ்மணம் என்பது வேதம், அதை உச்சரிப்பவன் அல்லது ஓதுகிறவன் பிராஹமணனும்.

2. க்ஷத்திரியன்=என்னும்பதம் க்ஷத்திரம்=என்னும் தாதுவிலிருந்து உண்டானதாம். க்ஷத்திரம் என்பதற்கு வல்லபம், அதிகாரம் என்ருதிப்பொருள்களுண்டு; ஆகவே க்ஷத்திரமுடைய (வீரர்களுக்கு) க்ஷத்திரியர் என்றப் பெயருண்டாயிற்று. இக்கருத்தால் இந்திரன்,மித்திரன், வருணன் முதலான தேவர்களுக்கும் இப்பதம் உபயோகப்படுத்த பட்டிருக்கிறது. மேலும் வேதத்தில் க்ஷத்ரபதி என்றும்சொல்லப்பட்டிருக்கிறது; ஆகவே, புவிகர்த்தன். பூஸ்திதி உடையவன் என்றும் பொருளாகிறது, சிலவிடங்களில் க்ஷத்திரபதி என்றும் சொல்லியிருப்பதால்,அதிகாரி என்றபொருளும் பெற்றிருக்கின்ற தன்றியில், க்ஷத்திரியா என்னும் பதத்திற்கு விஸபதி, அல்லது விஸம்பதி என்றும்பொருளும் சொல்லியிருப்பதால், விஸ அல்லது விஸம்

நரர்கள்+பதி=நரபதி என்றும் பொருளாகிறது. அன்றியும்- இவர்களுக்கு இராஜன்ய:=இராஜா என்ற(சாதுப்) பெயரையும் வேதத்தில் வழங்கப்பட்டிருக்கிறது.

3. வைசியர்=விச=வேச=வீட்டை உடையார் என்னும் தாதுவிலிருந்து பிறந்த பதத்தினால், வைசியராரென்றுசொல்லப்பட்டிருக்கிறது.

4. சூத்திரர்—என்றபதம சூத்=சுத்தீகரித்தல், அசாவது வீடு வாசல் நிலங்களைச்சுத்தி செய்வோன் என்று சொல்லப்பட்ட பதத்திலிருந்து உற்பத்தியாயிருக்கிறது.

அதாவது மற்ற மூன்று வருணத்தாருக்கும் ஊழியம்செய்பவராம் .நிற்க இந்து ஜாதியைப்பற்றி மநுதர்ம சாஸ்திரத்தில் சொல்லி இருக்கிற பிரமாணங்களாவன.

மநு—1 ஆவது, அத்தியாயம் 32-வது சுலோகத்தில்=பிரமா தன்னுடையதேகத்தை இரண்டு கூறாக்கி, ஒன்று ஸ்திரீயும்,ஒன்று புருஷனுமாக்கிஅந்த ஸ்திரீயினிடத்தில் அந்தப்புருஷனாகிய தானே புணர்ந்து விராட்டு புருஷனை யுண்டுபண்ணினார்— என்றும்.

மநு—1-33-ல், அந்த விராட்டு தவஞ்செய்து சுவாயம்புமநுவை யுண்டு பண்ணினார் என்றும்.

மநு—1-34-ல் சுவாயம்புமநு தவஞ்செய்து பிரஜாபதிகளான பத்துபிரமரிஷிகளை யுண்டாக்கினார்-என்றும்.

மநு—3-198-ல் அந்த பிரமரிஷிகளிடத்திலிருந்து பிதுர்க்கள் உண்டானார்கள். அந்தப்பிதுர்க்களிடமாகச் சதுர்வருணத்தாரு முண்டானார்கள் என்றும்.

மநு—1-35-ல் பத்துப்பிரமரிஷிகள் யாவரெனின் மரீசி,அத்திரி, அங்கிரசு,புலத்தியன்,புலகன்,கிரது,பிரசேதசு,வசிட்டன்,பிருகு,நாரதன் என்பவர்களாம்.—இவர்களுள

மநு—3-197—ல் பிருகுவினிடத்தில் சோமபர்கள் என்றபிதுர்க்களும் அந்தப் பிதுர்க்களினின்று பிராமணர்களுமுண்டானார்கள் 2, ஆங்கிரசனிடத்து ஹவிர்ப்புக்குகள் என்ற பிதுர்க்களும், அவர்களினின்று க்ஷத்திரியர்களுமுண்டானார்கள்—என்றும்.

3-129புலத்தியரிடத்து ஆஜ்ஜியபர்களென்ற பிதுர்க்களும், அவர்களினின்று வைசியர்களுமுண்டானார்கள், 4. வசிஷ்டரிடத்துச் சுவாலிகள் என்றபிதுர்க்களும், அவர்களிடத்துச் சூத்திரர்களுமுண்டானார்கள் என்றும், சொல்லப்பட்டிருக்கிறது.

இதனால் அந்தணர், பிருகுவமிசத்தாரென்றும். க்ஷத்திரியர், ஆங்கீரசவமிசத்தாரென்றும், வைசியர் புலத்தியவமிசத்தாரென்றும். வெளியாகின்றது.

# வேதத்தில்கூறும் ஜாதி அட்டவணை.

(வருணசிந்தாமணி.)

| எண். | வேதவாக்கியம். | ஆரியபதம். | பொருள். | திராவிடபதம். |
|---|---|---|---|---|
| 1 | பிராஹ்மணே | பிராஹ்மணம் | வேதம் | அந்தணன் |
| 2 | க்ஷத்திரியா | ராஜந்யம் | வீரம் | அரசன் |
| 3 | மருத்பியோ | வைஷ்யம் | வேளாண்மை | வேளாளன் |
| 4 | தபஸே | சூத்திரம் | தொழில் | தொழில்செய்வோன் |
| 5 | காமாயா | புஷ்சலம் | காமம் | பரத்தை |
| 6 | நிருத்தியா | ஸூதம் | நாட்டியம் | ஆட்டக்காரன் |
| 7 | மேதாயி | ரதகாரம் | அறிவு | தேர்செய்வோன் |
| 8 | தைர்யாய | தக்ஷாநம் | உறுதி | தச்சன் |
| 9 | தபஸே | கௌலாலம் | உழைப்பு | குசவன் |
| 10 | மயாயை | கர்மாரம் | செய்பவன் | கொல்லன் |
| 11 | ரூபாய | மணிகாரம் | அழகு | ரத்தினவியாபாரி |
| 12 | மிருத்யாவி | மிரிகாயம் | கொல்லல் | வேட்டைக்காரன் |
| 13 | ரிக்ஷிகாப்யோ | நைஷதம் | காத்தல் | காவலாளி |
| 14 | அயேப்யா | கிதவம் | அதிஷ்டம் | சூதாடுகிறவன் |
| 15 | பவித்தாய | பிஷசாஜம் | ஒழித்தல் | வைத்தியன் |
| 16 | பிரஜாந்தியா | நக்ஷத்திரதர்ஸகம் | சோதிடம் | சோதிடன் |
| 17 | மர்யாதாயை | பிரஷ்நவிவாஹம் | எல்லைக்குறி | நீதிச்சமுறைப்போன் |
| 18 | ஆர்மேப்யோ | ஹஸ்திபம் | வாகனம் | யானைக்காரன் |
| 19 | ஜவாயா | அஷ்வபம் | ஓட்டம் | குதிரைக்காரன் |

## வேதத்தில்கூறும் ஜாதி அட்டவணை.

(வருணசிந்தாமணி.)

| எண். | வேதவாக்கியம். | ஆரியபதம். | பொருள். | திராவிடபதம். |
|---|---|---|---|---|
| 20 | புஷ்டே | கோபாலம் | போஷணை | பசுக்காப்போன் |
| 21 | வீராயா | அவிபலம் | வீரம் | இடையன் |
| 22 | கிலாதாயா | சுராகாரம் | ஜலம் | கள்விற்போன் |
| 23 | மேதாயாவாஸா | பல்புலிம் | பிரீத்தியாகம் | வண்ணான் |
| 24 | நத்வலாப்யா | வெஷளஷாகலம் | சேற்றுநிலம் | மீன்வணிகன் |
| 25 | ஸரப்யோ | தைவரம் | நீர் | மீன்பிடிக்கிறவன் |
| 26 | வர்நாயா | ஹிரண்யகாரம் | பொன் | தட்டான் |
| 27 | துலாயா | வாணிஜ்யம் | நிறை | வணிகன் |
| 28 | ஷப்தாயா | அதய்பாதகம் | சத்தம் | மேளக்காரன் |
| 29 | பூம்நே | பரிஷ்க்கந்தம் | நீர் | மரமேறி |
| 30 | வாயவே | சாண்டாளாம் | காற்று | சண்டாளன் |
| 31 | குஹாப்யா | கிராதம் | குகை | கிராதன் |
| 32 | ப்ரவதேப்யா | கிம்புருஷம் | உயர்ந்தமலை | கிம்புருஷர் |

இந்த முப்பத்திரண்டு பெயர்களைக் கவனித்துப்பார்ப்பவர்களுக்கு அவரவர்கள் தொழில்களினாலேயே இந்த ஜாதிகளுண்டான விவரம் பிரதியக்ஷமாகும்.

## பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் செய்யவேண்டிய கருமங்களாவன.

மநுமுதல் அத்தியாயம் 87-வது சுலோகம்.

*ஸர்வஸ்யா ஸ்யது ஸர்க்கஸ்ய குப்தியார்த்தம் ஸமஹாத்தியுதிः*
*முகபஹூருபஜ்ஜாநாம் பிரதக்கர்மாண்ய கல்பயத்*

(இ - ள்.) அப்பிரமாவானவர் இவ்வுலகத்தைக் காக்கும்படிக்குத் தன் முகம் தோள், தொடை, பாதம் இவைகளினின்று முண்டான பிராமண க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வருணத்தாருக்கு இம்மைக்கு மறுமைக்கு உப யோகமான கருமங்களைத் தனித்தனியாக விதித்தார்-என்றும்.

*அத்யா பனஅசாத்ய யநம்ந யஜநம்யாஜநத தா*
*தாநம்பிரதிக்கிரஹஞ்சைவ பிராஹமணு நாமகல்பயேது.*

(இ - ள்.) பிராமணனுக்கு வேதம் ஓதல், ஓதுவித்தல், யாகஞ்செய்தல், செய்வித்தல், தானங்கொடுத்தல், வாங்குதல் ஆகிய ஆறு தொழிலையும் விதித்தார்-என்றும்.

89-வது சுலோகம் க்ஷத்திரிய கருமம்.

மநுமுதல் அத்தியாயம் 87-வது சுலோகம்.

*பிரஜநாம் ரக்ஷணந்தாந மிஜ்யாதியயந மேவச*
*விஷயேஷ்வபிரஸக்திஸ்சக்ஷத்திரியயஸ்ய ஸமாஸதः*

(இ - ள்.) க்ஷத்திரியனுக்குப் பிரஜைகளை காத்தல், தானங்கொடுத்தல், வேதம் ஓதல், பாட்டு கூத்து ஸ்திரீ முதலிய விஷயங்களில் மனஞ்செல்லா தடக்கல், இந்நான்கையும் விதித்தார். யாகாதி கருமங்களும் அவனுக்குண்டு. என்றும்.

90. வது சுலோகம் வைசிய கருமம்.

*பசுநாம்ரக்ஷணந்தானமிஜ்யாத்யயநமேவச*
*வணிக்பதங்குஸீதஞ்சவைஸ்யஸ்யகிருஷிமேவச*

(இ - ள்.) வைசியனுக்குப் பசுகாத்தல், தானங்கொடுத்தல் வேதமோ தல், சலத்திலும் பூமியிலும் உண்டான இரத்தினம் நெல் முதலிய வியாபா ரஞ்செய்தல், வட்டிவாங்குதல், பயிரிடுதல் ஆகிய இவ்வாறையும் விதித்தார் என்றும்.

91-வது சுலோகம் சூத்திர கருமம்.

*ஏகமேவதுஸூத்ரஸ்ய பிரபுகர்மஸமாதிஷத்*
*ஏதேஷாமேவவர்ணாநாம்ஸுஸ்ரூஷாமநஸூஸ்யா.*

(இ - ள்.) சூத்திரனுக்கு இந்த மூன்று வருணத்தாருக்கும் பொறாமை யின்றிப்பணிசெய்வ தொன்றையே முக்கியமான தருமமாக விதித்தார். என் றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இத்யாதி வாக்கியங்களினால் இந்து ஜாதியானது, தொழிலினாலேயே உண்டானதாக பிரத்யக்ஷமாகிறதேயன்றி, பிறப்பினாலல்லவென்று ஸ்பஷ்டமாகும்—நிற்க.

இந்நாட்டு இந்துக்களுக்குள் ஜாதிபேதம் எப்போது? என்ன காரணங்களினாலாகிய தென்றவிஷயங்களையும், க்ஷத்ரியர்கள் மது மாமிசங்களையுண்ண சுருதிஸ்மிருதிகளிலிருக்கிற பிரமாணங்களையும்; கலியுகத்திலும் க்ஷத்திரியர் வைஸியர்கள் இருக்கிறார்கள் என்ற விஷயத்தைப்பற்றியும்இதனடியிற்சற்று சங்கிரகமாகக்காட்டுவோம்.

## இந்துஜாதியைப்பற்றி வேதபிரமாணங்களாவன.

இந்து ஜாதியைப்பற்றி இருக்குவேதம், 6-வது அஷ்டகம், 3-வது அத்தியாயம், 16-வது வருக்கையிலும்,—இருக்குவேதம் 8-வது அஷ்டகம், புருஷ சூக்தத்திலும்,—கிருஷ்ண யஜுர்வேதத்திலும்,—சுக்லயஜுர்வேதம் 13-வது அத்தியாயத்திலும்,—தைதிரேயம் 30-வது அத்தியாயத்திலும்,-அதர்வணவேதத்தின் சில பாகங்களிலும்,—பிராஹ்மணங்களில், இருக்குவேதத்தைச்சார்ந்த ஐத்திரேயப்பிராஹ்மணம்,முதலாவது அத்தியாயம், முதலாவது பஞ்சகத்திலும்-மூன்றாவது பஞ்சகத்திலும்,—ஷை 5-வது அத்தியாயம் 5-வது பஞ்சகத்திலும்,—ஷை 7-வது அத்தியாயம் 7-வதுபஞ்சகத்திலும்,(இவைகளில் விசுவாமித்திரருடைய புத்திரர்களில் 50-பெயர், சுனசேஷபனை அங்கீகரிக்காததனால்,அவர்கள் ஆந்திரர்,புந்திரராகப்பிறந்தகதைகளையும்,கிருஷ்ண யஜுர்வேதத்தைச்சேர்ந்த தைத்திரேய பிராஹமணத்திலும்,—சுக்கிலயஜுர் வேதத்தைச்சார்ந்த சதபதப்பிராஹ்மணத்தின் 13-வது காண்டத்திலும்,—அதர்வண வேதத்தைச்சார்ந்தம்சாபிதப்பிராஹ்மணத்திலும்,—உபநிஷத்துக்களில்,பிருஹதாரணிய உபநிஷத்தின் 235-முதல்238-பக்கங்களிலும்,—கிருஷ்ணயசுரைச்சார்ந்த தைத்திரேய உபநிஷத்திலும்,—சாந்தோக்கிய உபநிஷத்து 254-முதல் 255-வது பக்கங்களிலும்,—சூத்திரங்களில், சுக்லயஜுர் வேதத்தைச் சேர்ந்த காத்தியாயன சூத்திரத்திலும், கிருஷ்ணயஜுர்வேதத்தைச்சார்ந்தபௌதாயனசூத்திரத்திலும், -கிருஷ்ணயஜுர்வேதத்தைச்சார்ந்த ஹிரண்யகேசி சூத்திரம், ஷை ஸ்மார்த்த சூத்திரத்திலும், ஷை தருமசூத்திரத்திலும்,--கிருஷ்ணயஜுர்வேதத்தைச்சார்ந்த ஆபஸ்தம்ப சமயாசார சூத்திரத்திலும்,இருக்குவேதத்தைச்சார்ந்த ஆஸ்வலாயனவிரௌத சூத்திரத்திலும், ஷை கிருஹ்ய சூத்திரத்திலும்,—கிருஷ்ணயசுரைச்சார்ந்த மானவகற்பத்திலும் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

மேற்கண்ட சுருதிகளினால் இந்துஜாதியானது தொழில்களினாலும் குணங்களினாலும் பிரகாசிக்கிறதேயொழிய பிறப்பினாலல்லவென்று ஸ்பஷ்டமாகிறது. சிலர் பிறப்பினாலேயே ஜாதிபேதம் உண்டாகியதென புருஷசூக்தத்தில் சொல்லியிருக்கிறதாக எண்ணுகிறார்கள் அக்கருத்து உண்மையோ என்பதைப்பற்றி விசாரிப்போம்.

## புருஷசூக்தம்என்பது.

புருஷனைப்பற்றி நன்றாகச் சொல்லப்பட்டது என்னும் அர்த்தத்தைக் காட்டுகின்றது. புருஷன் என்பவர்யாரெனில், "பூர்ணத்வாத் புருஷ:" என்றபடி பூரண மூர்த்தியாயிருப்பதால் புருஷன் எனபரபிரமத்துக்கே,பரியாய நாமமாக வளங்கப்பெற்றது.

இப்பிரபஞ்சத்தின் சம்பூதி, விபூதி,பரிபூதி என்னும் சிருஷ்டி, ஸ்திதி சம்ஹாரம் ஆகிய கிர்த்தியங்களை நடாத்தி வருவதற்குக் காரணராகியவரே புருஷன்; அவருடைய மகத்துவத்தையும், பிரபஞ்ச சிருஷ்டியையும், முக்தியடையும் மார்க்கத்தையும் காட்டுவதே இப்புருஷ சூக்தத்தின் கருத்தாம்

இந்தப் புருஷசூக்தம், கிருஷ்ணயஜுர்வேதத்தில் 18 ரிக்குகளாகவும், சுக்கில யஜுர்வேதத்தில் 5 ரிக்குகளில் அடங்கியும், இருக்குவேதத்தில் 16 ரிக்குகளாக அமைந்தும், சாம அதர்வண வேதங்களில் 7 ரிக்குளாக முடிந்தும் இருக்கின்றது. இவைகளில் புருஷன் வரலாற்றைக்குறித்த 18 ரிக்குகளாக கிருஷ்ண யஜுர்வேதத்தில் பூரணமாய் கூறப்பட்டு இருக்கின்றது.

சுருதிகளிற் சொல்லிய வாக்கியங்களிற் சிலதுணர்த்தவாதங்களாயும், சில பூதார்த்தவாதங்களாயும் இருக்கின்றன. அவைகளில் நடந்ததை நடந்தவாறு சரித்திரமாய் உரைக்கும் பாகங்களுக்கு பூதார்த்தவாதம் என்றும்; கேவலம்,தத்துவவிஷயமாகவும், மகிமா விஷயமாகவும் சொல்லி, மனதிற் பொருந்தும் பொருட்டு லக்ஷியமாகவும், உபமானமாகவும், அபூதகல்பனையாகவும் சொல்லப்பட்ட பாகங்களுக்கு "துணர்த்தவாதம்" என்றும்பெயர் இதைக்குறித்து மீம்சவாக்கியத்தை கவனிக்கவேண்டியது.

இந்த புருஷசூக்தத்தில் "பிராஹ்மணோஸ்ய-முகமாஸீத்-பாஹூ-ராஜன்ய: கிருத:, பத்பியாகம் ஸூத்ரோ அஜாயத:"—என்றால் (வீராட்டு என்னும் பிரபஞ்சத்துக்கு) பிராம்மணன் முகமானான், க்ஷத்திரியன் தோள்களாக்கப்பட்டான். வைசியன் என்பது எதுவோ, அதுவே தொடைகள் என்றும்; பாதங்களிலிருந்து சூத்திரன் உண்டானதாக கற்பனையாகச் சொல்லி இருப்பதால்; அவர்களை முகமாகவும். புஜங்களாகவும், தொடைகளாகவும் உத்பிரேக்ஷித்திருப்பதாகக் கருத்தேயன்றி, அந்தந்த அவயவங்களிலிருந்துபிறந்தார்கள் என்பதன்று.

இந்த உத்பிரேக்ஷைக்கு ஹேதுவில்லாமல் போகவில்லை-புத்திக்குக்குறியாகிய முகத்தைபிராம்மணன்பிறந்த இடமாகவும், பலத்துக்கு இடமாகிய புஜத்தை, க்ஷத்திரியன்பிறந்த இடமாகவும், சஞ்சாரத்துக்குச் சாதனமான தொடைகளை, வைசியன் பிறந்த இடமாகவும், சூத்திரத்தொழிலுக்குஇன்றியமையாபாதங்களை, சூத்திரன் பிறந்த இடமாக

வும் வர்ணிக்கப்பட்டிருக்கிறதேயன்றி; உண்மையில் பிறந்ததைப்பற்றியன்று இந்த சூக்தத்துக்கு வித்தியாரண்ய சுவாமிகளும், ம ஹீ த ர ர் முதலானவர்களும் செய்திருக்கும் பாஷியங்களை பரிசோதிப்போருக்கு இதன் உண்மை வெட்ட வெளியாகும்.

மேலும், மக்கள்தேவர் நரகர் முதலானவர்கள் குதத்துவாரமாக பிறப்பவர்கள் என்று சாஸ்திரங்கள் முறை இடுகிறன்றியில், இவ்வுலகத்தில் நமது மாதா, மனைவி, மக்களும் குதத்துவாமாக பிறப்பதும், பிறப்பிப்பதும் பிரதியக்ஷமாகஇருக்கும்போது, இந்த பிரதியக்ஷஅனுபவத்தை விட்டு, மூக்கிலும், கண்ணிலும், காதிலும், கையிலும், ஜனங்கள் பிறக்கிறார்களென்றால், இந்த இருபதாம் நூற்றாண்டில் எவர் நம்புவார்கள் ?

இப்போது நமது நாட்டை ஆண்டுவரும் ஒரேஜாதியாரான அங்கிலேயரில் சிலர், லார்டுபிஷப் பாதரிமார் என்றப்பெயரால் பராபரன் பிரார்த்தனை முதலானவைதீகவிஷயங்களைச் செய்துகொண்டும்; சிலர் கவுர்னர், கவுர்னர் ஜனரல், கம்மாண்டிரின்சீப் என்றப்பெயர்களால்தேசங்களை உயத்தங்களினுல் ஜயித்து ஹிமசேதுபரியந்தம் ஆண்டு அரசுபுரிந்துக்கொண்டும், சிலர் ஆர் பத்நட்டு கம்பெனி, ஒக்ஸ் கம்பெனி, என்றப்பெயர்களால் பெரியவர்த்தகங்களைச்செய்துக்கொண்டும் சிலர் சானிடெரி முதலான சூத்திரத்தொழில்களைச்செய்துக்கொண்டும் வருகிறார்களன்றோ ? இவர்கள எந்த பிரம்மாவின்முகத்திலும், புஜத்திலும், தொடைபாதங்களிலும் பிறந்தார்கள்? இவர்கள் யாவரும் தொழில்களில் வேறு பட்டவர்களாக விருக்கினும், ஜாதியில் ஒரே ஜாதியாரல்லவா? இப்படியாவதற்குக்காரணம் யாது? புத்திமான்களே யோசிக்கவேண்டும்.

இந்துக்களுடையஜாதி-தொழில் குணங்களினுல்பிரகாசிக்கின்றதென்பதற்கு சாந்தோக்கியஉபநிஷத்து, (இங்கிலீஷ்மொழிபெயர்ப்பு 84-85-வது பக்கங்களினுல்,) "சுவேதகேது ஆருணியன் என்ற பிராம்மணவாலிபன், பாஞ்சாலதேசராஜனிடம் போய்ப்படித்ததாகவும், அந்த வாலிபன் தந்தைகௌதமிகோத்திரத்தானும்போய் பாடம் கேட்டதாகவும்,—அந்த சாந்தோகிய உபநிஷத்து 11-வது பாகத்தில், 93-வது பக்கத்தில்- அசுவபதிராஜன், ஆத்மவைஸ்ரவாநரன் என்னும் பிராமணனுக்கு பிரம்ம வித்தையை போதித்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இதனுல் க்ஷத்திரியர், பிராம்மணத்தொழிலையும் செய்திருக்கிறார்களென்றுஸ்பஷ்டமாகிறது. இதற்கு விசுவாமித்திரர் பிரம்மரிஷியானதே பிரதியக்ஷமாம்.

இம்மட்டோ! இந்த பலிஜவாருக்கு ஆதிபிதாக்களில் ஒருவராகிய விஜயநகர நரபதி கிருஷ்ணதேவராயனு இயற்றிய ஆமுக்தமாலியோதயமென்னும் கிரந்தத்தை இந்த 1905- பி. ஏ. பரீக்ஷைக்கு பாடபுத்தகமாக நியமித்திருக்கிறார்கள். ஆகவே அதை எத்தனையோ பிராமணுதி வித்தியார்த்திகளும், உபாத்தியாயர்களும், படிக்க நேர்ந்ததன்றோ? இதற்கு என்ன சமாதானம் கூறக்கூடும்? இனி இதைப்பற்றி ஸ்மிருதிகளைவிசாரிப்பாம்.

## ஸ்மிருதிபிரமாணங்கள்.

மனு 2 - வது அத்தியாயம் 168 - வது சுலோகத்தில்.

எந்த பிராமணன் வேதத்தை அத்தியயனம் செய்யாமல், வேறு வித்தைகளைப் படிக்கப் பிராயாசப்படுகின்றானோ; அவன், வாழ்நாளிலேயே தன் குடும்பத்தோடு சீக்கிரம் சூத்திரத்துவத்தை யடைகின்றான். என்று சொல்லப்பட்டிருக்கிறது.

வசிஷ்டர் 6 - வது அத்தியாயம்.

யோகம், தபசு, இந்திரியநிக்கிரகம், தானம், சத்தியம், சௌசம், தயை அதிகக்கேள்வி. வித்தை, ஞானம், ஆஸ்திக்கியம், ஆகிய இவையெல்லாம் பிராமணர்களின் லக்ஷணமாம்.

பகவத்கீதை 18 - வது அத்தியாயம். 42 - வது சுலோகத்தில்

அந்தரிந்திரிய நிக்கிரகமும், பஹிரேந்திரிய நிக்கிரகமும், தபசும், சுசித்துவமும், பொறுமையும், நேர்மையும், ஞானமும், விக்ஞானமும், ஆஸ்திக்கியமும் இவைகள் பிராமணர்களுடைய கர்மங்களாம்.

பொறுமை முதலிய குணங்களுள்ளவனும், சிக்ஷைசெய்யப் படாதவனும், மாம்சபோஜனம் விட்டவனும், எந்த ஜீவனையும் ஹிம்சியாதவனும் இருப்பது பிராமணனுடைய முதலாவது லக்ஷணம்.

பிறனுடைய பொருளை கொஞ்சமெனினும் வழியிலாவது, வீட்டிலாவது அவன் கொடுத்தாலன்றி பெறுகிறதில்லையோ, இது பிராமணனுடைய இரண்டாவது லக்ஷணம்.

குரூர சுவபாவத்தைவிட்டு, எதையும் பரிகிரகமும் இல்லதாவனும், பந்தங்களை விட்டவனும், எப்போதும் நடப்பது பிராமணனுடைய மூன்றாவது லக்ஷணம்.

எப்போதும் ஸ்திரீ சங்கமம் விட்டிருத்தல், பிரமாணனுடைய நான்காவது லக்ஷணம்.

சத்தியமாகிய சௌசம், தயையாகிய சௌசம், இந்திரிய நிக்கிரகமாகிய சௌசம், ஜீவதயையாகிய சௌசம், தபஸாகிய சௌசம், ஆகிய இந்த ஐந்துவித சௌச லக்ஷணங்களும் நிறைந்தவனாய், எந்த துவிஜன்இருக்கின்றானோ அவனை நான் பிராமணன் என்கிறேன்; இக்குணங்களில்லாதவன் எவனோ அவன் சூத்திரன், ஹே! யுதிஷ்டிரா.!

ஹே! யுதிஷ்டிரா. ஒரே வர்ணத்தினாலே (இந்த) உலகம் (முதலில்) நிறைந்திருந்தது; கர்மம், கிரியைகளின் விசேஷத்தினால் நான்கு வருணம் (தருமம்) ஸ்தாபிக்கப்பட்டது, எல்லா மனுஷியர்களும் யோனியினின்றே உற்பத்தியாயிருக்கின்றார்கள். எல்லாரும் மலமூத்திரம் விசர்ஜனம் செய்கின்றார்கள், எல்லோருக்கும் இந்திரியங்கள் ஒன்றே, விஷயங்களும் ஒன்றே; ஆகையால் சீலத்தினாலும், குணத்தினாலும் துவிஜன் ஆகின்றான். குணவானும், சீலசம்பன்னனும் இருக்கும் சூத்திரனும் பிராமணனாகின்றான். கிரியாஹீனனான பிராமணன் சூத்திரனிலும் தாழ்ந்தவனாகிறான் என்றும்;—

சௌரியம், வீரியம், ஸதரியம், தேஜஸ், கொண்ட, தன்னை ஜயித்தல், க்ஷமை, பிராமணனுடைய ஸமானம், அனுக்கிரகம், இரக்ஷித்தல், இவையெல்லாம் க்ஷத்திரியனுடைய லக்ஷணங்களாம்.

தேவதை, குரு, ஈசுவரன், இவர்களிடம் பக்தி, தர்மம், அர்த்தம், காமம் இவைகளை இரக்ஷித்தல், ஆஸ்திக்கியம், விடாமுயற்சி சமர்த்து, இவைகள் வைசிய லக்ஷணங்களாம்.

வணக்கம்,சௌசம்,எஜமானனிடம் கபடமில்லாத சேவகம், மந்திரமில்லாத யக்கியம், திருட்டுத்தனமின்மை, நாணயம், சத்தியம், பசு, பிராமணர்களை இரக்ஷித்தல், இவை சூத்திரனுடைய லக்ஷணங்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. இனி இது விஷயத்தைப்பற்றி புராணபிரமாணங்களை விசாரிப்பாம்.

## புராண பிரமாணங்கள்.

### புராணங்களில் சிரேஷ்டமான பாகவதம் 7-வது காண்டம்.

11 - வது அத்தியாயம், 35 - வது வாக்கியத்தில், ஒரு ஜாதிக்கு அவன் குணவிசேஷங்களை முக்கிய காரணங்களென ஸ்ரீதரரும், வீரராகவாசாரியரும் பொருள் செய்திருக்கின்றனர். ஷை புராணம் 119-வது ஸ்காந்தம், 17 - வது அத்தியாயம், 19 -வது வாக்கியத்தில், கிருதயுக ஆரம்பத்தில் ஹம்ச என்ற ஒரே பெயரால் மனிதர் இருந்தார்களே யொழிய, பிராம்மணர் க்ஷத்திரியர் முதலான ஜாதிகள் கிடையாது என்று வீரராகவாசாரியாரும், விஜயதுவஜாசாரியாரும் பொருள் செய்திருக்கிறார்கள். இதனால் பிராம்மணர்கள் குணங்களினாலும், தொழில்களினாலும் பிறகுக்ஷத்திரிய வைசியர ளதர்க ஸ்பஷ்டமாகிறதல்லவா ?

ஷை புராணம் 5 4-12-லும், 9-2-17-லும், 22-23-லும்,9-17-3-லும்,9-20-1லும், 9-21-19-லும், 20-லும், 9-21-23-லும் சொல்லி இருக்கப்பட்ட வாக்கியங்களைப்படித்துப் பார்ப்போருக்கு, 'மநுவின் பேரன் ரிஷபனுக்கு 100 குமாரர்களிருந்து, அவர்களில் பரதன் பட்டமடைந்ததாகவும்; அந்த பரதனுடைய சகோதிரர் 99பெயரில்,81 பெயர் பிதாவின் கட்டளைக் குட்பட்டு நடந்து பிராம்மணர்களானதாகவும், திருஷ்டராஜன் மக்கள் பிராம்மணரானதாகவும், ஒரு க்ஷத்திரிய குடும்பத்திலிருந்து அக்கினிவஸியனம் என்ற பிராம்மண குடும்ப முண்டானதாகவும், திருஷ்டனுடைய ஒரு குமாரன் வைசியன் ஆனதாகவும், சவுனகர், கார்கியர், கார்க்கி அஜமேதன், துஷியந்தன் சந்ததிகள் பிராம்மணராதாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது.

### விஷ்ணு புராணம்4 அம்ஸம் 4 - வது அத்தியாயம் 19-ல்,

க்ஷத்திரியனாகிய பிரதிரதன் தனது குமாரன் கண்வன்; கணவனது புதல்வன் மேதாதிதி, மேதாதிதியினிடத்திலிருந்து கண்வாயண ப்பிராம்மணர்களனைவரும் உத்பத்தியாகின்றனர்.

கண்வன் பிரதிரதனது குமாரன்; மேதாதிதி அவனது புத்திரன். அவனிடத்திலிருந்து கண்வப்பிராம்ஹணர்களானார்கள்.

மஹா வீரியனென்னும் க்ஷத்திரியனுக்கு உருக்ஷயன் என்னும் புத்திரனுண்டானான், அவனுக்கு திரய்யாருணன், புஷ்கரன், கபி, என்னும் மூன்றுபிள்ளைகளிருந்தார்கள். இம்மூவரும் பிறகு பிராமஹணர்களானார்கள். என்று சொல்லப்பெற்றிருக்கிறது ;—

## இனி இதிகாசங்களைப் பரிசோதிப்பாம்.

## பாரதம்,சாந்திபருவமோக்ஷதருமம் 188அத்தியாயத்தில்,

1. வருணபேதமில்லை, இவ்வுலகமுழுதும் பிரம்ஹஸம்பந்தமானது, பிரமனால் முன்னர்படைக்கப்பட்டு, செய்தொழிலினால் வருணங்களைப் பெற்றனர்- என்றும்,

2. விடயசுகத்தில் விருப்புற்றவர்களும், உக்கிரமும், குரோதமுமான தன்மையுடையவர்களும், ஸாஹஸத்தில் விருப்பமுள்ளவர்களுமாகி, தமது தருமங்களை விட்டு, இரஜோகுணத்துடனிருந்த இருபிறப்பாளர் யாரோ, அவர்கள் க்ஷத்திரியர்களானார்கள், என்றும்,

3. பசுபாலநமும், உழவும் தமது தொழிலாக வைத்துக்கொண்டு இராஜோகுணமும்,தமோகுணமுமுடையவர்களாகி, தமதுதொழிலில்இராதவர்களான இருபிறப்பாளர் யாரோ, அவர்கள் வைசியர்களானார்கள். என்றும்,

4. ஹிம்ஸை, பொய்யானசெய்கை, இவற்றில் விருப்பமுடையவர்களும், ஜீவநத்திற்குஎல்லாத்தொழிலையும் செய்கிறவர்களும், தமோகுணமுடையவர்களும், சவுசமற்றவர்களுமான இருபிறப்பாளர் யாரோ அவர்கள் சூத்திரரானார்கள்.—என்றும்

5. சூத்திரர்களும் பிராம்மணர்களாகின்றனர், பிராம்ஹணர்களும் சூத்திரர்களாகின்றனர். க்ஷத்திரியர்வைசியசூத்திரர்களும் அப்படியேயென்று அறியத்தக்கது. என்றும் சொல்லப்பட்டிருக்கிறதன்றியில்.

இவ்விஷயம் பாரதத்தின் அநுசாஸநபர்வத்தில் விரிவகா யெழுதப்பட்டிருக்கிறது:—எப்படியெனில்

6. ஒதேவி ! இந்தகருமங்களாலும், ஸதாசாரத்தினாலும், சூத்திரன் பிராம்மணனாகிறான். வைசியன் க்ஷத்திரியனாகிறான்என்றும்.

7. ஓதேவீ? தாழ்ந்தஜாதியிலும்,தாழ்ந்தகுலத்திலும்,பிறந்த சூத்திரனாயினும்,இந்த செய்கைகளுடையபலத்தினால் நூல்களினது ஞானத்தைப்பெற்று பரிசுத்தனாகி இருபிறப்பாளனாகிறான்.—என்றும்,

8. அப்படியே பிராம்மணனாயினும்,தர்மாக்கனும்ஸங்கரபோஜியுமான பிராம்மணத்தன்மையிலிருந்து நீங்கி சூத்திரனாகிறான்.—என்றும்

9. ஓதேவீ ?செய்கையினாலும், தூய்மையினாலும், தூய்ய ஆத்மாவாகி, இந்திரியங்களை வென்றவன், சூத்திரனாயினும் இருபிறப்பாளன் போல மதிக்கப்படத்தக்கவனென்பது கடவுளின் நியமனம்.—என்றும்,

10. எந்தசூத்திரனுடைய தன்மையும், செய்கையும தூய்மையாயிருக்கின்றனவோ, அந்தச்சூத்திரன் இருபிறப்பாளரிலும் சிறந்தவன் —என்றும்

11. பிறப்பு, சமயாநுட்டானம், நூர்பயிற்சி, குலம், இவை இருபிறப்பாளத்தன்மையைப் பெறுதற்குக காரணமாகா. அதற்கு ஒழுக்கமே காரணம். என்றும்

12. உலகத்திலிருக்கிற யாவரும்ஒழுக்கத்தினுற்றுன் பிராம்மணர்களாகலாம். நல்லொழுக்கத்திலிருக்கிற சூத்திரனும் பிராம்மணத்தன்மையைப்பெறுகிறான். என்றும்

13. ஓ! கல்லியாணி! பிரம்ஹத்தின் தன்மை எங்கும் ஒன்றே என்பது என்கருத்து. நிர்குணமும்,நிர்மலமுமாகிய பிரம்ஹமயாரிடத்தி லுளதோ அவரேபிராம்மணன். என்றும்,

14. சூத்திரன் எவ்விதமாக பிராம்மணனுகக்கூடுமோ, பிராம்மணன் தருமத்தை விட்டு எப்படி சூத்திரனுகிறானே, அதன் மறைவான விஷயங்கள் உமக்குச்சொல்லப்பட்டன என்றும்,

15. உண்மை, ஈகை, பொறுமை, நல்லொழுக்கம், சாந்தம், தவம், அருள் இவை யாரிடத்திலிருக்கின்றனவோ ஓ ! நாகேந்திரா ! அவரே பிராம்மணர். என்றும்,

16. யார் பொறிகளைவென்றவரோ, தருமங்களையனுஷ்டிக்கிறவரோ, வேதாத்தியயனத்தில் விருப்பமுள்ளவரோ, தூய்மையுடையவரோ, யாருக்கு காமக்குரோதங்கள் வசமாயிருக்கின்றனவோ அவரையே தேவதைகள் பிராம்மணரென்று அறிகின்றனர். என்றும்,

17. யார் உலகத்தாரை தம்மைப்போல் நினைக்கிறாரோ, தருமத்தில் ஞானமுள்ளவராயும், பிரசஸ்தசித்தமுள்ளவராயும் இருக்கின்றாரோ, மேலும் யார் எல்லாதருமாநுட்டானங்களிலும் விருப்பமுள்ளவராய்இருக்கின்றாரோ; அவரையே, தேவதைகள் பிராம்மணராகவறிகின்றனர் என்றும். சொல்லப்பெற்றிருக்கிறதன்றியில்,

பாரதம் ஆரண்ணியபர்வம் 312-வது அத்தியாயத்தில், யக்ஷ யுதிஷ்டிர ஸம்வாதத்தில், யக்ஷன்சொல்வது :—

18. ஓ அரசனே ! பிராம்ஹணத்துவம் குலத்தினுலா, நடத்தையினுலா, வேதசாத்திர படனத்தினுலா எதனுலுண்டாகிறது? இந்த நிச்சயத்தை நன்றாகச் சொல்லும் என்க.

யுதிஷ்டிரன் சொல்வது.

19. கேளும் யக்ஷனே ! பிராம்ஹணத்துவத்திற்கு குலம், வேதசாத்திரங்களைப்படித்தல் இவைகள் காரணங்களாகா, இருபிறப்பாளத்தன்மைக்கு ஒழுக்கமே காரணம். ஐயமில்லை. என்றும்,

பாரதம் அநுசாசன பருவத்தில்,

20. அந்த மஹா தபஸியாகிய விசுவாமித்திரன் க்ஷத்திரியனு யிருந்தும் பிறகு பிராம்ஹணனுனன். மேலும் பிராம்ஹண வம்சத்திற்குக் காரணனுமானன். என்றும்,

பாரதத்தைச்சேர்ந்த ஹரிவம்சத்தின் 32-வது அத்தியாயத்தில்.

21. திவோதாஸர் என்பவரது புத்திரனுகிய மித்திரயு என்னும் அரசன் பிரமரிஷியானர். அவரது புதல்வர் மைத்திராயணர், மைத்திராயணரது குமாரர் ஸோமர், ஸோமரிடத்திலிருந்து மைத்திரேயப்பிராம்ஹணர்களுண்டாயினர்.

22. அப்பொழுது பிராம்ஹணர்களில்லாத தேசத்தில் கைவர்த்தகர்களைப்பார்த்து பரசுராமன் அவர்களுக்கு யக்கிய சூத்திரத்தைத்தந்தான்.

23. இப்படி தன்னுலுண்டாக்கப்பட்ட பிராமஹணர்களை தனது க்ஷேத்ரத்தில் நிலைப்படுத்தி அன்பான உள்ளத்துடன் சொன்னுன்.

24 பிராம்ஹணனுகிய வைவஸ்தமனுவினுடைய புத்திரர்களுக்குள் கருஷனிடத்திலிருந்து மிகுந்த பலமுள்ள காருஷாகரென்னும் க்ஷத்திரியர்களுண்டானுர்கள்.

25 அந்த வைவஸ்வதமனுவின மற்றெருரு புத்திரன் நேதிஷ்டன், அவனது குமாரனுகிய நாபாகன் வைசியனுனன்.

26. அந்த வைவஸ்வதமனுவின் வேறெருபிள்ளையாகிய பிருஹத்திரன் என்பவன் ஆசானது பசுவைக்கொன்றதினுல் சூத்திரனுனன்.

விஷ்ணுபுராணம் 4-வது அம்சம் 8-வது அத்தியாயத்தில்.

27. ஸுநஹோத்திரனது மூன்று புத்திரர்கள் காசன், லேசன், கிருத்ஸமதன். கிருத்ஸமதனுடைய புத்திரனுகிய சவுனகனிடத்திலிருந்து நான்கு ஜாதிகளும் உண்டாயின.

28. ஹரிவம்சத்தில் இந்தலேசன் என்னும் பெயர் சலன் என்றும் சவுனகனென்னும் பெயர், சுனகனென்றும் எழுதப்பட்டிருக்கின்றது ஷை நூலின் 29 - வது அத்தியாயத்தில்:—

29. சநகோத்திரனுக்கு காசன், சலன், கிருச்சமதன் எனறு மிகுந்த தருமவான்களாகிய புதல்வர் மூவரிருந்தனர்.

30. கிருத்ஸமதனது புதல்வன் சுனகன், அவனது புத்திரர்களாகிய சௌனகாள், பிராமஹணர்கள். க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள்; ஆனுர்கள். என்று சொல்லப்பெற்றிருக்கிறது.

ஆகவே இதுவரையில் எடுத்துக் காட்டிய சுருதி ஸ்மிருதி புராண இதிகாசங்களினுல் இந்த ஜாதி பேதம் கேவலம் பிறப்பினுலன்றி; தொழில்களினுலுங் குணங்களினுலும் உண்டாகிறதென்றும், அப்படியே அநேக பிராம்மணர்கள் க்ஷத்திரிய வைசிய சூத்திரரானதாகவும், க்ஷத்திரியர்

பிராம்மணராணதாகவும் பிரத்தியக்ஷமாகிறதல்லவா? அப்படியிருக்க, சந்திர வமிச பலிஜவாரின் ஆகிசந்ததிகளிற் சிலர் காலதேச பேதத்தினால் பஞ்த் தர்களாக இருக்கினும்; பிறகு சைவ, வைஷ்ணவர்களாகி அநேக சைவ வைணவ க்ஷேத்திரங்களையும், மாடமாளிகை கூட கோபுர அக்கிரஹாரங்களை நியமித்தும், தம் தம் அரண்மனைகளில் சதா தேவப் பிராம்மணர்களைக்கொண்டு வேதமோதுவித்தும், வேள்விகளைச் செய்வித்தும், ஆயிரம் பத்தாயிரம் பிராம்மணர்களுக்கு சதா வர்த்து சமாராதனை செய்வித்தும், சைவ வைணவமதோத்தாரணம் செய்வித்த விவரங்கள் இந்தப்புராணத்தில் விக்கிரமார்க்கன், சாலுவியன், பிரதாபருத்திரன், கிருஷ்ண தேவராயலு, அச்சுததேவராயலு, சேவப்பநாயடு, அச்சுதப்பநாயடு, விஜயராகவலுநாயடு, மதுரைவிசுவநாத நாயடு, திருமலைநாயடு, விஜயரங்கசொக்கலிங்கநாயடு, மங்கம்மாள் முதலானவர்களுடைய சரித்திரங்களைப் படித்து பார்ப்போர்க்கு பிரத்தியக்ஷமாகும். இதியாதி விவரங்களினால் பலிஜவாரும் பூரண க்ஷத்திரியர்கள் என்பதற்குச் சந்தேகமில்லை யல்லவா? நிற்க.

## மதுமாமிச போஜனம்.

---

சிலர்: பலிஜவாரென்ற க்ஷத்திரியர்கள் மதுமாமிசத்தை உபயோகப்படுத்துவதால், அவர்களை உயர்குலத்தாரென்று எப்படிச் சொல்லலாமென்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுடைய திருப்தியின் பொருட்டு இதனடியில் சில ஆதாரங்களைக் காட்டுகிறோம்.

ஆரியராகிய நம்முன்னோர் சோமரசம், சுராபனம் முதலான லாகிரிவஸ்துக்களை தொன்றுதொட்டு உபயோகித்து வந்தது நமது வேதங்களினாலே ஸ்பஷ்டமாகும். அந்த சோமரசத்தை அக்காலத்தில் சாதாரண ஜனங்கள் மாத்திரம் குடித்தாடியதன்றியில்; இந்திரன், வாயு, மித்திரர், வருணர், அக்கினி, அசுவனி, முதலான தேவதைகளுக்கும் வைத்து பூஜைசெய்து குடித்து பாடி யாடி யாகந்தமடைந்த வந்தசங்கதி, டாக்டர் இராஜேந்திரலாலமித்திரரியற்றிய இந்து ஆரியர் சரித்திரத்தைப் பார்ப்பவருக்கு ஸ்பஷ்டமாகும் அன்றியும்.

ஆரியராகிய நம்முன்னோர் மதுமாமிசபக்ஷணிகளென்று எஜுர்வேதத்தைச்சார்ந்த தைத்திரிய பிரமாணத்தினாலும், அசுவலாயன சூத்திரத்தினாலும், அதர்வண வேதத்தைச்சார்ந்த கோபாத பிரமாணத்தினாலும், ஸ்பஷ்டமாகும், அவர்கள் மாமிசத்தை உண்டதன்றியில் விஷ்ணு, வருணன், வாயு, சூரியன் ருத்திரன், இந்திரன் முதலானவர்களுக்கு, கோமேத அசுவமேதாதியாகங்கள் செய்து உண்டு வந்தார்கள். இதன் விவரத்தை இந்து ஆரியன் சரித்திரம் புத்தகம்—1—363 பக்கத்தை பார்ப்பவருக்கு ஸ்பஷ்டமாகும். சிலர், இந்த அசுவமேதாதியாகங்களின் கருத்து மாமிசபக்ஷணத்திற்கு அல்லவென்று

சொல்லக்கூடும்; ஆனால், விருந்தாளி அல்லது அதிதிக்கு "கோக்னு"=பசுவைக் கொல்லப்பட்டவன், என்று பெயர்வந்த காரணத்தை விசாரிப்போருக்கு உண்மை வெளியாகும்.

அதாவது-ஆரியர், தம்மிடம் விட்டு, வேறுயாரிடமாவது விருந்தாளியாகப் போனால், அவருடைய திருப்தியின்பொருட்டு கொழுத்தபசுங்கன்றுகளைக் கொன்று விருந்துசெய்விப்பது சஹஜமாகஇருந்தபடியால்; விருந்தாளிகளுக்கு கோக்னு=பசுவைக்கொன்றுஉண்பவன்-என்றபெயரிடப்பட்டதாம். அதற்கு திருஷ்டாந்தமாக வசிஷ்டர், வால்மீகரிடம் வந்தபோது அநேககொழுத்தபசுங் கன்றுகளைக் கொன்று விருந்துசெய்வித்ததாக உத்தரராம சரித்திரத்திலும்; அந்த வசிஷ்டரும், தமதாச்சிரமத்தை நாடிவந்த விசுவாமித்திரர், ஜமதக்கினி, ஜனகர், சதாநந்தர் முதலானவர்களுக்கு பசுக்கன்றுகளைக்கொன்று சமைப் பித்து விருந்தளித்ததாகவும் ஸ்ரீராஜேந்திரலாலமித்திரரின் ஆரியர் சரித்திரம் 356-358-வது பக்கங்களில் ஸ்பஷ்டமாகிறது.—

மாமிசபக்ஷணத்தைப்பற்றி மநுதருமசாஸ்திரம் 3-முதல் 5-அத்தியா யங்களில் அடியிற்கண்டபடி சொல்லப்பேற்றிருக்கிறது.

---

பிதுர்கள் :—ஒருமாதமுழுதும் திலதர்ப்பணம், பிண்டம், அன்னம், கந்த மூலபழங்களினால் திருப்தியுடையவதாகவும்; இரண்டுமாதங்கள் மச்சத்தினா லும்; 3-மாதங்கள் வேட்டையிலகப்பட்ட மிருகமாமிசத்தினாலும்; 4-மாதங்கள் ஆட்டுமாமிசத்தினாலும் 5-மாதங்கள் பக்ஷிகளின் மாமிசத்தினாலும்; 6-மாதங்கள் வெள்ளாட்டுக்குட்டி மாமிசத்தினாலும்; 7-மாதங்கள் புள்ளிமான் மாமிசத்தினா லும்; 8-மாதங்கள் எருே என்கிற மான்மாமிசத்தினாலும்; 9-மாதங்கள் ருரு என்ற மான்மாமிசத்தினாலும்; 10-மாதங்கள் காட்டுப்பன்றி, காட்டெருமை மாமிசங்களினாலும்; 11-மாதங்களில் வெள்ளாமுயல், ஆமைமாமிசங்களினாலும், ஒரு வருஷம் முழுதும் பசுவின்பால், அதில் சமைத்த அன்னத்தினாலும்; 12-வரு ஷங்கள் நீண்டகாதுடைய வெள்ளாட்டின் மாமிசத்தினாலும்; மற்றமுடிவில் லாத காலம்வரையிலும் காண்டாமிருகம், தியோதினமீன், இரும்புநிற வெள் ளாட்டுக்குட்டி மாமிசத்தினாலும் திருப்தியடைவதாகச் சொல்லப்பெற்றிருக் கின்றது.

இம்மட்டோ? தேவாராதனை, திதி, ஒருபொழுது உபவாசகாலங்களில்பாடீ னம், ரோஹிதம் என்னும் மீன்களின் மாமிசங்களை உண்ணலாமென்றும், மநு தருமசாஸ்திரம் 5-23-லும், 10-107-லும், 3-266-லும், 3-268-லும் 3-269லும், 3-270லும், 5-27லும், 4-250லும், 4-32லும், 5-35லும், வேதத்தில் ஐதிரேய பிரமஹணம் 7-ம் அத்தியாயம், 7-ம் பஞ்சகத்திலும். பின்னும் பலவித மாமி சங்களைப்பற்றி விஸ்தாரிக்கப் பெற்றிருக்கிறது.

மநு-6,35-ல் சிரார்த்தத்தில் விதிப்படி வரிக்கப்பட்ட துவிஜனுனவன் தோஷமென்று மாமிசத்தைப் புசியாவிட்டால், அவன் இருபத்தோரு ஜநநம் பசுவாய்ப்பிறப்பானென்றும்சொல்லியிருப்பதாலும்தேசதாநுட்டியத்திற்ததும், துஷ்டநிக்ரகம் செய்து தேசத்தை ஆள்பவர் மாமிசபக்ஷணம்செய்தால் உத்தம மென்றும் இக்காலத்து பதார்த்தகுணமறிந்த டாக்டர்களும் சொல்லி இருக்கிறபோது; இக்காலத்து பலிஜவாரு மாமிசபக்ஷணம் செய்வதனுல் அவர்களுடையக்ஷத்திரியவம்சம் க்ஷீணித்துப்போமோ புத்திமான்களேயோசிக்கவேண்டும். நாம் இப்படிச் சொல்வதனுல்,இக்காலத்து பலிஜவாரெல்லோரும்மது மாமிசபக்ஷணம் செய்யத்தூண்டியதன்று.மஹாத்மாக்களான தேவர்,ரிஷிகள் பிராம்மணர்கள் உவந்து உண்ட மதுமாமிசத்தை பலிஜவாருண்பதினுலேயே கீழ்ஜாதியாகாரென்றும்; புலேயும், கோலேயும், குடியையும் விட்டு,காலதேச வர்த்தமானங்களேத்தழுவி கந்தமூல பதார்த்தங்களேயே பலிஜவாரெல்லோரும் உண்டால், இகத்திலும் பரத்திலும் நல்ல சுகிர்தத்தை அடையலாமென்றும் சொல்லவந்ததேயாம்.

---

## இனிக் கலியுகத்தில் க்ஷத்திரியர்கள் உண்டா? என்னும் கேள்வியைப் பற்றிவிசாரிப்போம்.

நிற்க இக்கலியுகத்தில் சரியான க்ஷத்திரியர்கள் இல்லே என்றுசொல்லுவதற்குக்காரணம், மநுமுதலான தருமசாஸ்திரங்களிற் சொல்லியபடி, இக்காலத்து க்ஷத்திரியரென்போர், தருமாநுஷ்டானங்களேத்தழுவாமையால், சரியான க்ஷத்திரியர்களாகார்கள் எனச் சிலர் சொல்லுகிருர்கள்.

அப்படியாகில், இக்கலியுகத்தில் சரியான பிராம்மணரும், சூத்திரரும் கிடையாதென்றும் சொல்லலாம். எப்படியெனில்:—முதலாவது, ஆரியவர்த்தத்தைக்கடந்த துவிஜர்கள் மிலேச்சரென்று மநுசொல்லிருப்பதினுலும்; இரண்டாவது—பிராமணருக்கு (மநுவிதித்திட்ட) ஆறுவிதகருமங்களில், யாகம் செய்பவரும், செய்விப்பவரும்,வேதமோதுவோரும்,தானம்செய்பவரும் வெகு சிலரும்; அதைவாங்குவோர் அநேகருமாக இருப்பதனுலும்; வேதமோதுவோரில்பலரிருக்கினும்,அதன்பொருளே அறிந்தோர்வெகுசிலராகவும்,மிகுந்த கருமமாகிய தானம்கொடுப்பதற்கு வெகுசிலரும், அதைவாங்குவதற்கு அநேகரும் இருப்பதாலும்,மநுவிதித்தஆறுகருமங்களேதிருப்தியாகச்செய்யாதவர்களே சரியான பிராம்மணர்களென்று எப்படிச்சொல்லலாம்? மேலும், பட்டிக்காட்டுக் கிராமங்களிலிருக்கும் பிராமணர்களில் சிலர் கிராமகணக்கு, மணியம் முனிசீபு முதலான சர்க்கார் உத்தியோகங்களில் அமர்ந்திருப்பவர்கள் தவிர, மற்ற பிராமணர்கள் விவசாயத்திற் புகுந்து உழைத்து,அந்த கிராமங்களில் கிடைக்கும் கம்பு, சோளம் முதலான தானியங்களேயுண்டு பார்வைக்கு கேவலஞ்சூத் திரர்களேப்போல காலக்ஷேபித்துவருகிறார்கள், அல்லவா?

நாடு நகரங்களிலிருக்கும் படிப்பில்லாத பிராம்மணர்களிற் சிலர், மிட்டாய்கடை, சோத்துக்கடை, அரிசிப்பருப்புக்கடை, துணிஜவுளிக்கடை, தோல்கடை, சாராயகுத்தகை, கள்குத்தகை, கூத்தாடித்தொழில், சூத்திரர்களிடம் சமையல் செய்தல், சேவகவேலைகளைசசெய்து காலம் கழிப்பதன்றியில்; சிலர் நீசஸ்திரீகளோடு சேர்ந்தும், சிலசமயங்களில் அவர்களிடம் உண்டும் வருகிறூர்கள். இப்படிப்பட்டவர்களை (மநுதருமசாஸ்திரத்தின்படி) சரியான பிராம்மணர்கள் என்று சொல்லப்பொருந்துமோ? மேலும், இந்நாட்டில் இங்கிலீஷ் ராஜியம் ஸ்தாபித்த பிறகு, அநேகபிராம்மணர்கள் தம் மக்களுக்கு இங்கிலீஷ் பாஷையை கற்பிக்க பிரயத்தனப்பட்டதில், பெரும்பான்மையான பிராம்மணவாலிபர்கள், வேதபாராயணம், சந்தியாவந்தனங்களைவிட்டுவிட்டு, ஜியாகரபி, இஸ்டோரி, யூக்லிட்டு, முதல்ான ஹூணபாஷா சாஸ்திரபாராயணம் செய்துக்கொண்டும் பி-எ முதலான பரிக்ஷைகளிற்தேறி; சிலர் சதா பினல்கோடு கிரிமினல் கோடாதி சட்டபாராயணங்களைச் செய்துக்கொண்டும்; சர்க்கார் உத்தியோகங்களில் அமர்ந்தும், சர்க்கார் உத்தியோக பிராம்மணர்களாகி வருவது பிரதியக்ஷமல்லவா? இவர்களில்சிலர், சீமைமுதலான ஐரோபா அமெரிகாதேசங்களிற்போய் கண்டவிடத்திலுண்டும், உரங்கிவருவதோடு, இந்நாட்டிலேயே சிலர் கிளப்பவுஸ், ரிபரஷ்மெண்டு ரூமுகளுக்கு ரகசியமாகவும், பயிரங்கமாகவும்போய் இஷ்டமான உணவுகளை உண்டுவருவதாககேள்வி. "ஜந்மநாஜாயதேசூத்ரஃ கர்மணாஜாயதே துவிஜஃ" என்ற பிரமாணப்படி, மேற்சொல்லியவர்கள்மநுதருமத்திற்கண்ட கருமங்களைச்செய்யாமையால் இவர்களுக்குதுவஜத்துவமேது? மநு2-வது அத்தியாயம்168-வதுசுலோகத்தில் "எந்த பிராமணன் வேதத்தை அதியயனம் செய்யாமல், வேறுபாஷைகளைப்படித்தால், அவன் குடும்பத்தோடு சூத்திரத்துவமடைவதாகச்சொல்லி இருக்கிறூர். இதியாதி காரணங்களினுல் இக்கலியுகத்தில்சரியான பிராம்மணரும் இல்லை என்றல்லவா எற்படுகிறது-நிற்க

இந்நாட்டு சூத்திரர்களில் பெரும்பாலர், மநுதருமவிதிப்படி மற்ற மூன்று வருணத்தாருக்கும் ஊழியம் செய்யும் தொழிலை விட்டு, தீயர், புலையர், பள்ளி முதலான அநேகர் கல்விக்கேள்விகளிற் தேர்ந்து, பிராம்மணருக்குச் சமானமான உத்தியோகங்களையும், வர்த்தகவியாபாரங்களையும் செய்துவருவதும் பிரதியக்ஷம். சிலர் பிராம்மணர்களைப்போல காலையில் சுத்தஸ்நானம் ஜபதபங்களைச்செய்தும், விபூதி ருத்திராக்ஷரம், திருநாமம், துளசிமாலைகளை அணிந்துக்கொண்டும்; தேவாரம், திருவாசகம், திருபல்லாண்டுகளைப்படித்துக் கொடும்; கோயில் கோபுரங்களைக் கட்டி வணங்கிக்கொண்டும்; புலையும், கொலையும், களவும்விட்டு ஆண்டிகளாகவும், ஆழ்வார் ஆசாரிரர்களாகவும் பிரகாசிக்கிறூர்களல்லவா? இவர்களெல்லாரும் சூத்திரராவரோ? மேலும் சில சூத்திரர்கள் கிறிஸ்துமுதலான வேறுமதங்களில் பிரவேசித்து பாபுஐயர், பீட்டர் ஐயர், பெரிசிவேல்ஐயர், போப்புஐயர், பாக்கியநாதஐயர், நாட்டுஐயர், பாட்டயர், என்று ஐயர் பட்டங்களை தரித்துக்கொண்டிருப்பதும் பிரதியக்ஷமல்ல

வா? இவர்கள் மநுதருமவிதிப்படி சூத்திராவார்களோ? இத்தியாதி விவரங்களினால் இக்கலியுகத்தில் சரியான சூத்திரரும் கிடையாதென்றல்லவா ஏற்படுகிறது. மேலும்-

---

## பரசுராமரால் க்ஷத்திரியவமிசம் நாசமடைந்துவிட்டது என்பதற்கு விடையாவது.

சிலர், "பாசுராமர்," க்ஷத்திரியர்களை 21 தலைமுறையாகக் கறுவறுத்துவிட்டபடியால்; கலியுகத்தில் க்ஷத்திரியர் கிடையாதென்று, சிலபுராண இதிகாசங்களில் கண்டச்சங்கதிகளைக்கொண்டு சொல்லுகிறார்கள். இக்கதையை உண்மையானதாகநம்புவோமாகில்; வேறுசிலபுராண இதிகாசகிரந்தங்களில், பாசுராமர்அசுவமேதயாகம் செய்தபோதுக்ஷத்திரியர்ஆண்டுவந்த பூமியை கஸியபருந்து தானம்செய்ய, அப்போது கஷியபர், பரசுராமனைநோக்கி: இனிநீர்; பிழைத்துள்ளக்ஷத்திரியர்களைக் கொல்லாமல்விட்டு (பாசுராமர்) தென்கடலைப் போய்ச்சேரவேண்டுமென்று சொன்னதாகவும், பாசுராமர் அப்படியே ஆகட்டுமென்று போய்விட்டதாகவும், பிறகு உலகில் அரசு இல்லாமல் குடிகள் வருந்துவதைக்கண்டு,பூமிதேவி கஸியபரைநோக்கி"தாம்கேகயதேசத்தில் பாதுகாத்துவரும்அநேக க்ஷத்திரியர்களில் ஒருவனை அரசனாக்கவேண்டுமென்று முறையிட, அந்த கஸியபரும் இணங்கி, ஒரு க்ஷத்திரியனை அரசனாக நியமித்து ஆண்டுவரச செய்ததனால், க்ஷத்திரியவம்சம் மறுபடியும் கஸியபரால் நிலைநிருத்தியதாகவும் சொல்லப்பெற்றிருக்கிறது.ஆகவே,முன்சொன்னபாசுராமர் கதை மெய்யானால், பின்சொன்ன கசியபருடைய கதையையும் மெய்யாகவே கொள்ளவேண்டும்?

மேலும், தசரதர் பரசுராமருக்கு பயந்து சதா மாப்பிள்ளைவேடந்தரித்து இருந்ததாகவும்; அந்ததசரதருடைய புத்திரர் ஸ்ரீராமனையும் பரசுராமர் வந்துத்தாக்க, ஸ்ரீராமரும் எதிர்த்து, பரசுராமர் பிராமணரானபடியால், அவரைக்கொல்லாமல், அவர் தவத்தைக்கொள்ளைக்கொள்ள, பரசுராமர் தோற்றுநொந்து தம்மிருப்பிடம் போய்விட்டதாகக் கூர்மபுராணத்திலும், மற்ற இதிகாசங்களிலும் சொல்லப்பெற்றிருக்கிறது. தசரதருடைய முன்னோர்களைபரசுராமர் நாசமாக்கிவிட்டாரெனில், ஹரிச்சந்திரன் முதல் ஸ்ரீராமர் வரையில் 21 தலைமுறையாகிறது. அவருடைய முன்னோர்கள் பரசுராமரால் அழிந்துபோயிருந்தால்; தசரதரும், அவருடைய குமாரர் ஸ்ரீராமர், லக்ஷ்மணர், பரதர், சத்துருக்கினர் எப்படி பிறந்திருக்ககூடும்? அன்றியும் அந்த ஸ்ரீராமர் பரம்பரையில் குகன், அதிதி முதல் சுரதன், சுமித்திரன் வரையில் அறுபது (60) பெயர் அரசர்களாகி அயோத்தியில் ஆண்டுவந்ததாக சரித்திரம் முறையிடுகின்றதல்லவா, இதற்கு என்ன சமாதானம் சொல்லக்கூடும் —நிற்க

குருகுலவமிசத்தைப்பற்றிவிசாரிக்கையில், கலியுகம் ஆரம்பமாகிறவரை யில் பஞ்ச பாண்டவர்களும், பிறகு பரிக்ஷித்து, ஜனமேஜயன், நரேந்திரன், சாரங்கன், விக்கிரமன் முதலானவர்களும்; கலியுகம் பிறந்தபிறகும் இரகு குலத்தாரும், குருகுலத்தாரும் ஆண்டதாக சாசனங்களகப்பட்டிருக்கின்ற மையால், பரசுராமர் அவர்களை கருவறுத்தாரா புத்திமான்களேயோசிக்கவே ண்டும்—ஆதிசூரியசந்திரவமிசத்தைச்சார்ந்த சேரசோழ பாண்டியர்களை மக மதியர்வந்து தாக்கும்வரையில் அரசு செய்து வந்தது உண்மையல்லவோ? அவர்களையும் பரசுராமர் பூண்டறுக்காமல் விட்டதற்குக் காரணமென்ன? புத்திமான்களேயோசிக்கவேண்டும்—

இப்போது வடமேற்கு நாட்டில் குபேரசம்பத்துடன் இராஜியபரிபால னம் செய்துவரும் ஜெயபுர ஸமஸ்தானதிபதி ஆதி சூரியவமிசத்தைச்சார்ந்த சந்ததியாரென்று அநேக சிலாசாசன சரித்திர சாஸ்திரங்களால் ஸ்தாபிக்கப் பட்டு செங்கோல் செலுத்திவருவது பிரதியக்ஷம். இதேமாதிரியாகவே நேபா ளம், காஷ்மீரம், முதலான வடநாடுகளின் அரசர்களும், திருவநந்தபுரம், கொ ச்சி முதலான ஸமஸ்தானதிபதிகளுமுறையே சூரிய சந்திரவமிசத்தார்க ளென்று சிலாசாசன ஆதாரங்களைக்கொண்டு ஸ்தாபித்துவருவது பிரதிய க்ஷம்.

இப்போது ஆனேகுந்தியிலிருக்கும் நரபதி **ஸ்ரீரங்கதேவராயலு** இராவ் சாஹேபவர்கள் ஸ்ரீவிஜயநகர நரபதிஸமஸ்தானத்தாருடைய சரியான சந்ததி என்று சாசனசரித்திரங்களாலகண்டும்அவர்நாடுகளை காலவித்தியாசத்தினல் கைபற்றிக்கொண்ட ஹைதிராபாத்து **நிஜாமவர்கள்**, அந்த ராயலுக்கு இனும் ஜாகீர் மானியபூமிகளைக்கொடுத்திருப்பதன்றியில், இங்கிலீஷ கவர்ன்மெண் டாரும் நமது சக்கிரவர்த்திக்குபட்டம்கட்டியபோது அவருக்கு மாதம் 500ரூ பின்சன்என்னும்நன்கொடையை பிரதிமாதமும் கொடுத்துக்கொண்டு வருவ து பிரதியக்ஷம்;இந்த ஸ்ரீரங்கதேவராயலுடைய முன்னோராகிய ஸ்ரீநரசிம்ம ராயலு, ஸ்ரீகிருஷ்ணதேவராயலு, ஸ்ரீஅச்சுததேவராயலு, ஸ்ரீ இராமதேவராய லு முதலானவர்கள் ஆதியில் மகதநாட்டிலாண்ட சந்திரவம்ச ஆந்திரருடைய நேரான சந்ததிகளென இப்புத்தகம் முழுதும் படித்துப்பார்ப்பவர்களுக்கு பிரதியக்ஷமாகும்.

மேலும், மதுரை, தஞ்சை, கண்டிமுதலான விடங்களில் ஆண்டுவந்த நாயடுகாரு ஸமஸ்தானத்தாருடைய சந்ததிகள் இப்போது வெள்ளிக்குறிச்சி யில் இருக்கவில்லையா? கண்டிஸமஸ்தானத்தைச்சார்ந்தவர்களில் சிலர் இப் போதும் கவர்ன்மெண்டுபின்சன் (நன்கொடை)பெற்றுவருவது பிரதியக்ஷமல் லவா.

ஆகவேஇதுவரையில் எடுத்துக்காட்டிய நியாயவிவரங்களினல், சந்திரவ மிசக்ஷத்திரியகுலத்தாராகிய**பலிஜவாரு**இப்போது காலவித்தியாசத்தினல் பல பிரிவினராகி, பலகிருத்தியங்களைச்செய்தும்,மதுமாம்சங்களை உண்டும்கேவல

மாகத்தோற்றினும், இப்புத்தகத்தை முழுதும், முக்கியமாக ஸ்ரீவில்லிபுத்தூர் வைஷ்ணவ வடகலே தென்கலே மடாதிபதிகளுடைய ஸ்ரீமுகத்தைப்படித்துப் பார்ப்பவருக்கு இவர்கள் சந்திரவம்ச க்ஷத்திரியர் என்றும், அப்படிப்பட்ட க்ஷத்திரியர்கள் இந்தக்கலியுகத்திலும் இருக்கிருர்கள் என்றும் துரபிமானமற்ற மேலோருக்கு பிரதியக்ஷமாகும்.

---

# ஏழாவது காண்டம்.

---

## பலிஜவாரின் தத்கால ஸ்திதியைப்பற்றி நமது (ஆங்கில) கவரன்மெண்டாருடைய விசாரணை.

---

ஒரு காலத்தில் ஹிமசேதுவரையில் சந்திரவம்ச ஆந்திர க்ஷத்திரியர்களென்று பெருமையான புகழையும்; கல்வி, செல்வம், சீர்திருத்தமும் பெற்று செங்கோல் செலுத்தியும்; பிரம்மாலயம், தேவாலயம், நந்தவனம் ஆவிகூப தடாகங்களேயும், கல்விச்சாலே, தொழிற்சாலே தருமச்சாலேகளே ஸ்தாபித்தும்; ஆரிய தருமசாஸ்திரியமனப்படி அரசுசெய்தும்; இந்து மதத்தையும், இந்து ஜனங்களேயும் மகமதாதி ஏனேய மதஸ்தர்கள் வந்துதாக்கி கெடுக்காதபடி சுமார் 400வரும் பாதுகாத்தும் வந்த பலிஜவரு, காலவித்தியாசத்திஞல் கல்விச்செல்வமற்றும், தம்ஜாதிகுலாசாரங்களேத்தக்கபடி தழுவவகையற்றதஞல்; ஏனேயோரால் பரிஹசிக்கும்படியான நிலைமைக்குவந்து தவிக்கும்போது, அவர்களுக்கு, தெய்வானுகூலத்திஞல் மங்காத புகழ்பெற்ற ஆங்கிலேய கவரன்மெண்டார் உதவிசெய்ய வந்ததைக்கண்டானந்திக்கவேண்டும்-அதாவது.

ஆங்கிலேய அரசர் ஆரியவர்த்தமென்னும் இந்தபரதகண்டத்தின் பெரும்பாகத்தை சுவாதீனம்செய்துகொண்டபிறகு, இதன்விஸ்தீரண முதலான விவரங்களேயும், இதில் முன்ஆண்ட அரசருடைய காலம், இடம், ஜாதி, சமயசரித்திரங்களேயும் சரியாக அறிந்து, அரசு செய்யவேண்டுமென்னும் அவாவிஞல், அநேகப் பொன்னேச்செலவழித்தும், அநேக டிஸ்டிரிகட்டு மானியூல் (District Manual) ஜில்லா சரித்திரங்களேயும்; பல்லாயிரம்பொன்னே செலவழித்து பத்துவருஷங்களுக்கு ஒருதடவை குடித்தொகை சரித்திரங்களேயும் எழுதிவருவதில், மூலேமுடக்குகளில் மறைந்துகிடக்கும் குடிகளுடைய சரித்திரங்கள் வெளியாகிவருகின்றன—

இதுவிஷயத்தில் 1891வரும் குடித்தொகைச் (Census) சரித்திரத்தை மேஸ்டர் ஸ்டூவார்டு துரையவர்களுடைய ரிபோர்ட்டிலிருந்து சங்கிரகித்து எழுதுகிறேம்.

## 1891ஹூம் சென்னைராஜதானியின் கானிஸ்வாரிகணக்கு.

1891ஹூம் கானிஸ்வாரிகணக்குரிபோர்ட்டு XIII-13-வது வாலியூம் 458-வது பாராவில், இந்த சென்னை ராஜதானியில் 1891ஹூம்—7,11,379 பலிஜவாரு இருந்ததாகவும், இவர்கள் இந்தராஜதானியின்பலபக்கங்களிற் பரவிவசிக்கும் வர்த்தகவியாபாரஜீவனம்செய்யும் குடிகளென்றும்; இவர்களுடைய ஆதி உற்பத்தி விவரங்கள் பலவாருக இருக்கினும்,காபுகள் அல்லது ரேட்டிவாரு முதலான வகுப்புகளிலிருந்து உண்டானவர்களாக இருக்கலாமென்றும், இந்தபலிஜவாருக்குள் 650 உள்பிரிவார் இருக்கிறதாகவும் எழுதி இருக்கிருர்.மேலும், இந்த 650-உட்பிரிவார்களுக்குள் முக்கியமானவர்கள், 13, உட்பிரிவாரென்றும; அந்த 13, உட்பிரிவாருடைய பெயர்களேயும், கணக்கையும் பின்வருகிறபடி எழுதிபதிப்பித்திருக்கிருர்-எப்படியெனில்-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. செட்டி | (பலிஜவாரு) | 1891ஹூம் | 100446, | குடிகள் |
| 2. காஜுலு | ஷை | ஷை | 101791 | ஷை |
| 3. கவரை | ஷை | ஷை | 36101 | ஷை |
| 4. லிஙக | ஷை | ஷை | 20015 | ஷை |
| 5. முசுகு | ஷை | ஷை | 9420 | ஷை |
| 6. பஞ்சம் | ஷை | ஷை | 11310 | ஷை |
| 7 இராஜமஹேந்திர | ஷை | ஷை | 14538 | ஷை |
| 8. தெலுகுபலிஜலு | | ஷை | 24500 | ஷை |
| 9. தலுஙகுபலிஜலு ? | | ஷை | 27606 | ஷை |
| 10. தோட்டபலிஜலு | | ஷை | 66089 | ஷை |
| 11. வாடபலிஜலு | | ஷை | 12036 | ஷை |
| | | ஷை | | |
| | | ஆகமொத்தம் .. | 133000 | ஷை |
| 12. கவுரவபலிஜலு | | ஷை | 168966 | ஷை |
| 13. பெரிகபலிஜலு | | ஷை | 19356 | ஷை |

இந்த 13, வகுப்பார்களன்றியில், இராஸ்ளவாரு, கெம்புலுவாரு, பகடாலவாரு, ஜாதிவாரு, உப்புவாரு, மூடகமமலபலிஜவாரு என்ருதி உட்பிரிவினர்களிருக்கிறதாகவும், அவர்களுடைய கணக்குகள் சரியாக அகப்படவில்லை என்றும்; இந்த 13, வகுப்பார்களில் இந்திந்தஜில்லாக்களில் இத்தனைப்பெயர்களிருக்கிருர்கள் என்று காட்டும்படியுடனும எழுதி பதிப்பித்திருக்கிருர்— (Vide P. 276-Para 458 of the Census of India Vol XIII of 1891—)

இந்த 1901ஹூ கானிஷ்வாரி ரிபோர்ட்டு திருப்திகரமானதென்று சொல்ல விடமில்லை—ஏனெனில்—

முதலாவது—இந்த பலிஜவாரு, காபு, ரேட்டி முதலானமற்ற ஜாதிகளிலிருந்து உண்டானவர்களல்லர் என்று இந்த பலிஜவாருபுராணப்புத்தகத்தை முழுதும்படித்துப்பார்ப்பவருக்கு ஸ்பஷ்டமாகும்

**இரண்டாவது**—பலிஜவாருள் உட்பிரிவுகளில் 1-2-நெம்பர்களிற்கண்ட (1) **செட்டிகள்** (2) **காஜுலுவாரு** என்று எழுதியதில், காஜுலுவாருக்கே செட்டிகள் என்ற பட்டப்பெயர் வழங்கிவருவதனால், இனி " **செட்டிகள்** " என்று தனிப்பெயரால் ஒரு உட்பிரிவைக்காட்டிய காரணம் தெரியவில்லை-3-வது நெம்பரில் " **கவரைகள்** " என்றும், 12-வது நெம்பரில் " **கவுரவர்கள்** " என்றும், இரண்டுவித உட்பிரிவாராகத் தனித்துக்காட்டியகாரணமும் தெரியவில்லை-மேலும் 8-9 வது நெம்பர்களில் " **தெலுங்குவாரு** " என்றும், **தெலுங்குவாரு**-என்றும்ஒரேபொருளுள்ளப்பெயர்களை தனிதனியாக பிரித்துக்காட்டிய விதமும் தெரியவில்லை-

**மூன்றாவது**—5,ம் நெம்பரில் காட்டிய முசுகு என்ற முசுகுவாரு சேலம், கோயமுத்தூர் முதலான ஜில்லாக்களிலிருக்கும்போது, வடஆற்காடு ஜில்லாவில் மாத்திரம் இருப்பதாக எழுதியும், 3-வது நெம்பரில்கண்ட கவரைபலிஜவாரு கோயமுத்தூரில் 1000 பெயர்தான் இருப்பதாக எழுதியும், இப்படி பலவகுப்பாருடைய சங்கையை பலஜில்லாக்களில் வித்தியாசப்பட்டிருத்தல் முதற்காணலாம். இந்த கானிஸ்வாரிகணக்கு இப்படி வித்தியாசப்பட்டிருப்பதற்கு நமதுகாருணிய கவர்ன்மெண்டார் காரணால்லர்—

ஏனெனில்.-இக்காலத்தின்,பெரும்பான்மையான பலிஜவாருககுபோதுமான கல்வி, அறிவு இல்லாமையாலும், இவர்கள் இன்னகுலம், இன்னஜாதி, இன்னகோத்திரம், இன்னசூத்திரம், இன்னவீட்டுக்கு உடையவர் என்று வியக்தமாக அறிந்திருக்கும்படி,ஆன்றோரும், ஆசாரியர்களும் அடிககடி போதனைசெய்துவைககாமல்அந்தகாரத்தில்விட்டிருப்பதனாலும்; கவான்மெண்டு கானிஸ்வாரி கணக்கெழுதும் (எனியூமரேட்டர்கள்) வந்து எழுதும்போது, வாயில்வந்தபடி உளரிவிட, அவைகளை (எனியூமரேட்டரவர்கள்)நிஜமென்று நம்பி எழுதி கவர்ன்மெண்டாரிடம் கொடுக்க, அவர்களும் அதை நம்பி அச்சிட்டு விடுகிறார்கள்.

இப்படிசசெய்வதனாலுண்டாகும் சாதக பாதககளுக்கு குடிகளே காரணரேயன்றி, கெவர்ன்மெண்டாரல்ல. குடிகள் தம்தம்சரியான ஜாதிமதங்களை தக்கபடி சொல்லி எழுதிவைக்காவிட்டால்; **ஜாதியிலும், மதத்திலும்,** வேஷபாஷாதிகளிலும் முற்றும்வேறுபட்டிருக்கும் கவர்ன்மெண்டார்எப்படி அறியகூடும்? குடிகளாலுண்டாகும் குற்றங்களுக்கு கவர்ன்மெண்டாரை நிந்தித்தல் நியாயமாகுமா? நமது கவர்ன்மெண்டார், இவ்வளவு தசையிலிருந்தும், தமது குடிகளுடைய உண்மையான ஜாதிஅந்தஸ்துகளை அறிந்து அரசுசெய்யவேண்டுமென்னும் நல்ல எண்ணத்தினால் படும்பாடு கொஞ்சமல்ல- இதற்கொரு திருஷ்டாந்தமாக—1871ஹும் குடிதொகை எழுதியபொது இநத ராஜதானியின் குடிகளை **ஆசியாகண்டத்தார்** (Asiatics) என்றும் (2) **ஐரோப்பியர்** (Europeons) என்றும் (3) **யூரேஷியர்** (Eurasians) என்னும் மூன்று

# 1901ஹு சென்னை ராஜதானியிலிருந்த
# பலிஜவாரு 10,08,036 குடிகள் M-107.

இவர்கள் (பலிஜவாரு) விசேஷமாக வர்த்தகம்செய்யும் தெலுங்கு ஜாதியார்கள். இவர்கள இச்சென்னைராஜதானியின் எல்லா ஜில்லாக்களிலும் பரவியிருக்கிறார்கள். இவர்களில் தேசபலிஜவாரென்றும், கோட்ட பலிஜவாரு என்றும் பேட்டபலிஜவாரென்றும் இரண்டு முக்கியமான வகுப்பினர் இருக்கின்றனர்-இவவிரு வகுப்பார்களில் முதல் வகுப்பார், மதுரை, தஞ்சை, விஜயநகர ஸமஸ்தானஙகளை ஆண்டபலிஜ அல்லது நாயக்கர் ராஜர்களுடைய சந்ததிகளைச சார்ந்தவர்கள். இரண்டாவது வகுப்பார், வளையல்களை விற்கும் காஜா லுவாரும், உப்பு வியாபாரம் செய்யும் பெரிகவாருமான வர்த்தக விருத்தி செயபவாாவர்—தமிழ ஜில்லாககளில் பலிஜவாரை வடுகர் (தெலுங்கு ஜனங்கள்) என்றும், கவரைகளென்றும் சொல்லப்படும். மதுரை, தஞ்சை ஸமஸ்தானஙகளை ஆண்ட நாயக்கர் அல்லது பலிஜராஜாக்களுடைய சந்ததிகள் க்ஷத்ரியஜாதியைசசார்ந்த கஷியபகோத்ரி க்ஷத்ரார்களென்றும்; விஜயநகர சமஸ்தான இராயலுகாருகள் பாரத்துவாஜ மஹாமுனிவருடைய கோத்ரான சந்ததிகளென்றும் சொல்லுகிறார்கள். மற்ற பலிஜவார்கள் மஹாபாரதத்தில் கண்டிருக்கும் கவுரவர்களுடைய சந்ததிகளென்று சொல்லுகிறார்கள். சொன்னாலும், இவர்கள் க்ஷத்திரியர் சந்ததிகளென்பதை மற்ற ஜாதியார் அங்கீகரிக்கிறதில்லை. பலிஜவாரு கம்ம, காபுஜாதிகளிலிருந்துண்டானவர்கள், அல்லது ஷை ஜாதிகளிலிருந்தும, வேறு ஜாதிகளிலிருந்தும் பிரிந்த கலப்பு ஜாதியாரென்றும் சொல்லுகிறார்கள்—இந்த ஜாதியைசசார்ந்தவர்களில் எவரும் இப்போது (எஞ்கோபவீதம்) பூணுநூலை தரிக்கிறதில்லை, வேதோக்தமாக கர்மங்களைசசெய்வதில்லை. (விவரமாக அறிய விரும்புவோர், 1891ஹு கானிஸ்வாரி ரிபோர்ட்டையும், கானூல் சரித்திரம் 137-வது பக்கத்தையும், பக்கானன் மைசூர் சரித்திரம் 1-வது வாலியம், 168, 170 பக்கங்களையும், மதுரை சரித்திரம் 2-ம் பாகம் 86-வது பக்கத்தையும், வட ஆற்காடு சரித்திரம், வாலியம் 1-20-23 பக்கஙகளையும் படித்துப்பார்க்கலாம், என்று எழுதியிருக்கிறார்.

பாருஙகள்! மேஸ்டர்ஸ்டுவாட்டவர்கள் 1891ஹு எழுதிய சரித்திரத்திற்கும், இந்த 1901ஹு-ம் சரித்திரத்திற்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கிறது?

**பாருங்கள்**! நமதுகாருண்ணிய கவர்ன்மெண்டார் இந்த ஜாதி விவரங்களை திட்டமாக அறியவேண்டி எடுத்துககொண்ட சிரமத்தையினால், இந்த 1901ஹு-ம் குடிதொகை ரிபோர்ட்டு கூடியவரையில் திருப்திகரமானதென்று சொல்லும்படியாக பதிப்பித்திருக்கிறார்கள் ஆனாலும் "இந்த பலிஜவாரு க்ஷத்திரியரல்லரென்றும், கம்ம அல்லது காபு அல்லது மற்றதெலுஙகு ஜாதிகளிலிருந்து உண்டானவர்களென்ற மற்றவர்கள்சொல்லுகிறார்களென்

றாளெழுதியிருப்பதைப்பற்றியும்; 2-து-இந்த பலிஜவாரில்எவரும் பூணுநூல்தரிப்பதில்லை" என்றும் எழுதியிருப்பதைப்பற்றியும் சிலர் விசனப்படக்கூடும்— இப்படி பிசகாகப்பதிப்பித்ததற்கு கவர்ன்மெண்டார் காரணரல்லர். இத்தியாதி விஷயங்களைப்பற்றி கவரன்மெண்டாருக்கு திருப்தியுண்டாகும்படி தம் தம் ஜாதிமுதலான விவரங்களை உள்ளது உள்ளபடி கவரன்மெண்டாருக்கு தெரிவிக்காமல் சோம்பலாகவிருந்தது குடிகளுடையகுற்றமேயாகும்; ஆகவே கவரன்மெண்டாரை நொந்துக்கொள்வதுஅநியாயமும், அவிவேகமுமாகும்— நிற்க—மேல்கண்ட 3 வினாக்களுக்கு ஒருவித விடைகளாவன—

1 வது. "பலிஜவாரு கம்ம, காபு முதலானவர்களிடமிருந்து உண்டானவர்களென்று மற்றவர்கள் சொல்லுகிறார்கள் ஏதெனில்; கம்மாளர்களும், லிங்கம் கட்டிகளும், பட்டுநூல்காரர்களும், தாம்தாம் விசுவகுல பிராம்மணர், ஆரியபிராம்மணர், சவுராஷ்டிர பிராமணர், சிவாசார பிராம்மணர்களென்றும், மற்ற நமது நாட்டிலிருந்த பிராம்மணர்களை சரியான பிராமணர்கள் அல்லவென்றும் சொல்லிவருகிறார்கள்; இப்படி கம்மாளர்முதலானவர்கள் சொல்லிவருவதனாலேயே நமது நாட்டு பிராம்மணர்களை பிராம்மணரல்லவென்று சொல்லப் பொருந்துமோ? இந்த ஆக்ஷேபனையை பிராம்மணர் முதலான மற்றவர்கள் அங்கீகரிப்பார்களோ?

2 வது. பலிஜவாரி லிப்போது எவரும் பூணுநூல் தரிப்பதில்லையென்று சொன்னதும் பிசகே—இப்போது அநேக ஜில்லாக்களி லிருக்கும் பலிஜவாரு பூணுநூலை சதா தரிக்காவிட்டாலும்; சில விடங்களில் பலிஜவாரு பூணுநூலை சதா தரித்திருப்பதோடும்; பெரும்பாலார் கலியாணம் கர்மாதி காரியங்களை நடத்தும்போது புரோகிதரால் பூணுநூலைப் பெற்று தரித்து வருவது பிரத்தியக்ஷம். பூணுநூலை தரிப்பதனாலேயே சிரேஷ்டத்துவமெனில்; சில ஜில்லாக்களில் பள்ளிகள், செம்படவர் முதலானவர்களும் பூணுநூலை தரித்துக்கொண்டிருக்கிறார்களன்றோ? அவர்கள் துவஜர்களாவரோ?

3 வது—"வேதோக்தமாக கருமங்களை"ச் செய்வதில்லையெனில்,—காலவித்தியாசத்தினாலும், கல்வி அறிவில்லாமையாலும், "வேதம்" என்னும் பதத்திற்கே பொருளறிய வகையற்று தவிக்கும்போது, இனி வேதோக்தமாக கருமங்களைச் செய்வதெப்படி சாத்தியமாகும்? கலியுகத்தில் வேதோக்தமாக கருமங்களைச்செய்வது கஷ்டமென்றுகண்டே வியாசர், ஆழ்வார், ஆசாரியர் புராணரீதியாகச் செய்யலாமென்று சொல்லி இருக்கிறார்களல்லவா?

நமது ஆங்கில கவரண்மெண்டார் வேஷபாஷாதிகளில் நம்மவருக்கு வேறுபட்டவர்களாக இருப்பதனால், இத்தியாதி விஷயங்களை தமக்கருகிலிருக்கும் சுதேச உத்தியோகஸ்தர்களை விசாரித்து எழுதவேண்டி வருகிறது. அப்படி விசாரிக்கும் சுதேச உத்தியோகஸ்தர், துரபிமானமுள்ளவர்களாக இருந்தால், தமக்கிஷ்டமான சங்கதிகளைச் சொல்லி விடுவார்கள். அச்சங்கதிகளைப்பி எழுதிவிட்டால் குடிகளுக்கு கஷ்டங்களுண்டாகின்றன. இத்தியாதி கஷ்டங்களை நீக்கக்கருதியே கவரன்மெண்டார் இதன்றுகிராமபிந்தார்வே

(Ethnogrophic Survay) டிபார்மெண்டை இப்போது நியமித்து, அந்தந்த ஜாதியார் குடி இருக்கும் இடங்களுக்குப்போய் நேரில் விசாரித்து சரித்திரம் எழுதும்படி நியமித்திருக்கிறார்கள்; ஆகவே, இனி 1911லும் எழுதும் கானிஷ்மாரி கணக்கு திருப்திகரமாக இருக்கும் என்பது திண்ணம். இப்படி இங்கிலீஷ் கவர்ண்மெண்டார் நம் குடிகளுடைய க்ஷேமத்துக்கு உழைப்பதற்கு நன்றியறிந்த வந்தனம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோமல்லவா?

# முடிவுரை

**எனது சுஜாதியாருக்கோர் விணயமுள்ள விண்ணப்பம்.**

**சுஜாதி சகோதிரர்களே,**

இந்த பலிஜவாரு புராணத்தைச்சார்ந்த **இரண்டாம்பதிப்பு முகவுரையில்** கண்டிருக்கும் சாசனங்களினால்; முக்கியமாக **ஸ்ரீவில்லிபுத்தூர் வடகலை, தேன்கலை ஆசார்ய சுவாமிகளுடைய ஸ்ரீமுகப் பத்திரிகையினால்** நம்மவர் **ஆதி சந்திரவமிச க்ஷத்திரியர்** என்று ஸ்பஷ்டமாகும்.

இப்புராணத்தின் **2** முதல் **12** பக்கங்களிற் கண்டச் சங்கதிகளினால், அந்த ஆதிசந்திர வமிச க்ஷத்திரியர்களில் **பலிஜர்** அல்லது **ஆந்திரர்** பிறந்து மகததேசத்திலாண்டபிறகு, அவர்களில் ஆறேழு பெயர், மகதநாட்டை விட்டு தெற்கேவந்து, புது ஸமஸ்தானங்களை ஸ்தாபித்து ஆண்டுவந்த சங்கதிகள் விவரமாகும்.

இப்புராணத்தின் 13 முதல் 20 பக்கங்களினால், அப்படி ஆண்டவர்களுக்குள் **விக்கிரமார்க்கன்** மாளவ உஜ்ஜினியில் ஆண்டுவந்தவிவரம் விவரமாகும்.

இதன் 20 முதல் 27 வது பக்கங்களினால், அந்த ஆந்திரருள் ஒரு சந்ததியாராகிய **சாலுங்கியருடைய** இராஜ்ய பரிபாலனம் விவரமாகும்.

இதன் 28 முதல் 30 பக்கங்களினால், அந்த ஆந்திரருடைய மற்றோர் சந்ததியாராகிய **காலசூரியர்** என்பவர்களுடைய இராஜ்ஜிய பரிபாலனம் விவரமாகும்.

இதன் 31 முதல் 34 பக்கங்களினால், அந்த ஆந்திரருள் மற்றோர் சந்ததியாகிய ஓரங்கல் **கணபதிராயர்**களுடைய அரசாக்ஷி விவரமாகும்.

இதன் 35 வது பக்கத்தினால் அந்தஆந்திரருள் மற்றோர் சந்ததியாராகிய **கொண்டவீடு கஜபதிராயலு**களுடைய அரசாக்ஷி விவரமாகும்.

இதன் 36 வது பக்கத்தினால், அந்த ஆந்திரருடைய மற்றோர் சந்ததியாராகிய **கபிலேசுவரகஜபதியார்** உடைய அரசாக்ஷி வெளியாகும்.

இதன் 37 முதல் 123 பக்கங்களினால் அந்த ஆந்திரருள் மற்றுமோர் சந்ததியாராகிய **விஜயநகர நரபதிகள்** உடைய செங்கோல் சிங்காரம் வெளியாகும்.

இதன் 3 ம் காண்டம்முதல் 16-46பக்கங்களினல், அந்தநாபதிகளுடைய சந்ததிகளாகிய தஞ்சை **சேவப்பநாயடு**, **அச்சுதப்பநாயடு**, விஜயராகவலு **நாயடு** சமஸ்தான பதிகளின் பிரபாவம் விவரமாகும்.

இதன் இரண்டாம் காண்டத்தில், அந்த நாயடுகொரு தென்னடுகளுக்கு வரும்காலத்தில், இத்தென்னட்டிலாண்ட சேர சோழ பல்லவ பாண்டியர்களுடைய அரசாக்ஷியின் விவரம் வெளியாகும்.

இதன் மூன்ரும் காண்டத்தினல், இவர்களுக்கு **நாயடு** என்ற பட்டம் வந்த காரணமும், வெங்கடகிரி, கார்வேட்டி நகரம், காளாஸ்திரி, பிட்டாபூர், போபுலி சமஸ்தானங்களுண்டான விதங்களும்; **தஞ்சை, மதுரை, இலங்கை** முதலான விடங்களில் **நாயடு** ஸமஸ்தானங்களை ஸ்தாபித்தாண்டவர்களுடைய விவரங்களும் வெளியாகும்.

இதன் நான்காவது காண்டத்தினல் **கோட்டை, பேட்டை**, பலிஜவார்களுடைய **வீட்டுப்** பெயர்கள், கோத்திரம், சூத்திரம், மதம், விவாஹாதிகர்மங்களைச்செய்யும் விவரங்களும், 1901ஆ காஷிஷ்வார் கணக்கின்படி குடித்தொகை முதலான விவரங்களும் வெளியாகும்.

இதன் ஐந்தாவது காண்டத்தினல், **பேட்டை பலிஜவாருடைய** விவரம், அவர்களுக்கு **தேசாஹிபட்டம்** வந்த விவரமும், பலிஜவாருகளுக்குள் இருக்கும் பல உள் பிரிவார்களுடைய சரித்திரங்களும் விவரமாகும்.

இதன் ஆருவது காண்டத்தினல், பலிஜவாருடைய தற்கால ஸ்திதியைப்பற்றி சிலர்கொண்டிருக்கிற அபிப்பிராயங்களுக்கு, விடையாகக்காட்டிஇருக்கும் பிரமாணங்கள் இன்னவையென்று விவரமாகும்.

இதன் ஏழாவது காண்டத்தினல் கவரண்மெண்டாருடைய காஷிஸ்வாரி கணக்கின்படி ஜாதிஅந்தஸ்துக்களின் விவரமும் வெளியாகும்.

இவ்விஷயங்களை எல்லாம் ஒருதரத்துக்கு பலதரம் படித்துப்பார்த்தும் விரிந்த சுபுத்தியோடு யோசித்தும் பார்ப்பீர்களானல்; ஒரு காலத்தில் மண்டலம்புகழ் மஹோன்னத தசையிலிருந்த **சந்திரவம்ச ஆந்திரர்களுடைய** சந்ததிகளாகிய நம்மவர், இப்போதிருக்கும்படியான கேவலஸ்திதிக்கு வந்திருப்பதற்குக் காரணம் நம்மவரேஎன்று ஸ்படிகமாகும்—எப்படியெனில்:— நமது முன்னேராகிய ஆந்திரர்களில், **மநுதர்மசாஸ்திரத்தில்** க்ஷத்திரியருடைய தருமங்களைப்பற்றிச் சொல்லி இருக்கிற (அதாவது **பிரஜைகளை தருமமாக காத்தல்**, (2) **வேதமோதல், யகியாதி தருமங்களைச்** செய்தல், (3) **பரஸ்திரீகளுடைய முகங்களை** (காம இச்சையுடன்) பாராதிருத்தல் (4) **பாட்டு கூத்துகளில்** மனதை நாட்டாம லிருத்தலாகிய) விசேஷ தருமங்களைத் தழுவி, தருமராஜயபரிபாலனம்செய்த விக்கிரமார்க்கன் **போஜமஹாராஜன் பிரதாபருத்திரகஜபதி, வீரநரசிம்ஹ நரபதி, கிருஷ்ணதேவாராயலு, அச்சுத தேவராயலு** முதலான வடதேசத்தாரும்; அவர்களுடைய பின்சந்ததியார்களான

**தஞ்சை சேவப்பநாயடு, அச்சுதப்பநாயடு, விஜயராகவநாயடு,** முதலான சோழநாட்டரசர்களும்; **விசுவநாதநாயடு, குமார கிருஷ்ணப்பநாயடு, திருமலைநாயடு, மங்கம்மகாரு** முதலான பாண்டிய நாட்டரசர்களும் தம் தம் காலங்களில் குடிகளால் கொண்டாடப்பெற்றிருந்ததோடு, இக்காலத்து குடிகளாலும், ஏனையநாட்டாராலும் கொண்டாடப்பெற்றும், சிலரால் வணங்கப்பெற்றும் வருதல் பிரத்தியக்ஷமல்லவா ?

அப்படியானவர்களுடைய பின் சந்ததியார்கள் அவர்களைப்போல க்ஷத்திரிய தருமங்களைத் தழுவாமலும், கல்வி அறிவைப் பெறாமலும், விஞ்ஞான விருத்தியை விட்டொழித்தும், தம்முயிரைப்போல் மன்னுயிரைப் பாதுகாவாமலும், தமது இராஜ்ய பரிபாலன காரியங்களை தாமே நேரில் பாராமலும், மூடர்களான மந்திரி பிரதானி முதலான சிப்பந்திகளிட விசாரணையில்விட்டு விட்டு; தாம், வீணை வீராவேசத்தோடு தம்மினத்தாரோடும், சுஜாதியாரோடும் வீண் சண்டைகளைச் செய்துக்கொண்டு வந்ததனாலும்; சமயங்கண்டு சுஜாதியாருக்கு உதவிசெய்யாமல், ஏனைய ஜாதியாரோடும், ஏனைய மதஸ்தரோடும் சேர்ந்துக்கொண்டு தம் சுஜாதியாருக்கு தீங்குகளை விளைவித்துக்கொண்டுவந்ததனாலும்; கணக்கற்ற கன்னிகைகளோடுகூடி காமகூத்துகளை ஆடிக்கொண்டும், மிதமிஞ்சி மதுமாமிசங்களை உண்டு மடிந்தவர்போல மயங்கிக்கிடந்ததினாலும், அவரவர்களுடைய குரூர உத்தியோகஸ்தர்களுடைய கொடுங்கோலுக்குள் குடிகள் வருந்தித் தவித்ததனாலும், அக்கொடுங்கோலின் கஷ்டம் கடவுளுக்கே சகிக்கக்கூடாமலிருந்தமையாலும் அவர்களுடைய அரசாக்ஷியைப்பிடுங்கி ஏனையோரிடம் கொடுத்துவிட்டார்போலும். இதன் காரண காரியமிம்படி இருக்க, இதை யறியாத நம்மவரில் சிலர். பலிஜவாரு இப்போது இவ்வளவு கேவல ஸ்திதிக்கு வந்ததற்கு பிராம்மணரே காரணரென்றும், அந்த பிராமணர் ஆந்திரருக்கு மந்திரிகளாக இருந்தபோது, அநேக அக்கிரமமான நடவடிக்கைகளை நடத்தி இராஜ்யபரிபாலனத்தைப் பாழ்த்துப் போகச்செய்து விட்டார்களென்றும், இக்காலத்து பிராமணர்களும், பலிஜவாரை சூத்திரஜாதியாரென்றுசொல்லி கீழ்ஜாதியாக்கி விட்டார்களென்றும் சொல்லித் திரிகிறார்கள்.

என்ன அநியாயமான அபிப்பிராயம்! இப்படிப்பட்ட பிசகான அபிப்பிராயங்கொண்டிருப்பவர்கள் இந்தப்புராணத்தை முழுதும் ஆர அமர வாசித்துப் பார்ப்பார்களாகில், பலிஜவாருடைய ராஜாங்க காரியங்களை நடத்த மந்திரிகளாக நியமித்த பிராம்மண மந்திரிகளில் இரண்டொருவர் தவிர, மற்றபிராம்மண மந்திரமார்கள் எல்லோரும் மஹாமநியூகிகளாகி, தருமராஜ்யபரிபாலனத்துக்கு வேண்டிய உதவிகளை எல்லாம் உள்ளன்போடு செய்துப் பாதுகாத்த விவரம் பிரதியக்ஷமாகும். மேலும், மந்திரிமார்கள் கொடுங்கோன்மை செய்வதற்கும், சதிமோசம் செய்வதற்கும், அரசருடைய அவிவேகமும், ஆளும் திறமை இல்லாமையுமே காரணங்களாகுமன்றோ ?

அன்றியும், இக்காலத்து பிராம்மணர்களும் நம்மவரை சூத்திரஜாதியாக்கி அவமதிக்கிறதாக எண்ணுவதும் பிசகான அபிப்பிராயமுமேயாகும்—ஏனெனில், கேவல சாஸ்திரஞானமும், சரித்திர ஆராய்ச்சியுமற்று துரபிமானமுள்ள இக்காலத்து சில பிராம்மணர்கள் நம்மவரை சூத்திரராக பாவித்தாலும்; படித்தவர்களும், பெரியவர்களுமான பெரும்பான்மையான பிராம்மணர்கள் நம்மவர் ஜாதிக்குத்தக்கபடி மரியாதைசெய்து அன்பு பாராட்டி

வருவது அனுபவ சித்தமேயாம். ஆகவே, நம்மவர் பிராம்மணரை தூஷித்தல் அவிவேகமும் அநியாயமேயாகும். இதுநிற்க—

இப்பிரபஞ்சாதிபதியாகிய பரமேசுவரன் படைத்த பிரஜைகளை, சுகமாக வாழ்விக்கக்கருதி, காலத்துக்குக் காலம் தருமாநுஷ்டர்களை சிரிஷ்டித்து, அண்டத்தின் அரசர்களாக அனுப்பிவருகிறாரென்று பகவத்கீதையும், மற்ற உலகசரித்திரங்களும் முறையிடுகிறதன்றியில்; நமது அனுபவத்திலும் கண்டும் கேட்டு வருகிறோமல்லவா ?

ஆகவே; நமது நாயடுகாரு ஸமஸ்தானத்தார், கடைசீ காலத்தில், தம் சிங்காசனத்தைப் பற்றி தம்மினத்தாருக்குள்ளாகவே சண்டை சச்சரவுகள் செய்துக்கொண்டும், மத்தியில்வந்த மகமதீயர் உதவியை நாடவே; அந்த மகமதியரும் தமக்கு இயற்கையான ஜாதிக் கட்டுப்பாடினாலும், மதவைராக்கியத்தினாலும் தந்திரமாகவே நமது தேசங்களைப்பிடித்தும், தாமே மன்னர்களாகிவிட்டதன்றியில்; பெரும்பான்மையான அம்மகமதியமன்னர்களும்தம் மன்னுயிரை தம்முயிரைப்போலெண்ணாமல் வருந்தித் தவிக்கச்செய்தார்கள். இப்படி தவிக்கும் குடிகளின் கஷ்டநிஷ்டூரங்களை நீக்கக்கருதியே, ஈசுவரன் இவ்விருமன்னர்களுடைய இராஜ்ய பரிபாலனத்தைப் பிடிங்கி இங்கிலீஷ்காரரிடம் கொடுத்துவிட்டார் போலும்.

இந்த இங்கிலீஷ் ராஜாங்கத்தார், கல்வி, கேள்வி, செல்வம், சக்தி; சத்தியம், சாந்தம், சுவாமிபக்தி முதலான குணங்களிற்சிறந்தவர்களாகவும், இந்நாட்டின் **சகலஜாதியாரிடமும், சமயபேதம், ஜாதிபேத** முதலான துகளைப் பாராட்டாமல், **அபேதராக** இருந்து தம்குடிகளுக்கு **வாக்குசுதந்திரம், சமாசாரபத்திரிகை சுதந்திரம்** முதலான துகளைக் கொடுத்து (குடிகளை) சுகமாக வாழ்விக்கும்படியான சக்தியையும் பெற்றிருப்பதால்; இப்படிப்பட்ட **சமரச ஞானமுடைய** புத்திமான்களின் செங்கோலுக்குள் இந்த ஆரியவர்த்தமாகிய இப்பெரியதேசம் அடைக்கலம் பெற்றிருத்தல் நலமென (கடவுளின் கருத்தென்று) கரதலாமலகம்போல் காணலாம்.

இப்போது இந்த இங்கிலீஷ் அரசர்களால் இந்நாட்டின் குடிகளுக்கு உண்டாகி இருக்கும் சுதந்திர சுகவாழ்வு இவர்களுக்கு முன்னிருந்த மற்ற மன்னர்கள் காலத்தில் கிடையாதென்பது திண்ணம். ஆகவே, இப்படிப்பட்ட ஆங்கில அரசை இந்த ஆரியநாட்டில் ஸ்தாபித்த ஜகதீசுவரனை சதாக் கொண்டாடியும், இந்த ஆங்கிலஅரசருக்கு இராஜபக்தியோடு அடங்கிவாழக் கடமைப்பட்டிருக்கிறோ மல்லவா ?

இனி இப்படிப்பட்ட ஆங்கில எகாதிபத்தியத்திற்குட்பட்ட நம்மவர்கள் நற்கதியை அடைவதற்கதாரமான சிலசுலபசாதனசாதுஷ்டியங்களை இதனடியிற் சங்கிரமாக காணலாம். அவையாவன.

## பலிஜவாருக்கு பத்து பிரமாணங்கள்.

(1) நம்மவர் நற்கதியை அடைவதற்கு இன்றியமையா சாதனஙகள் **கல்வியும், கைத்தொழில்** களுமேயாம். நம்மவர்களிற் பெரும்பாலார் கல்வியையும், கைத்தொழில்களையும்அசட்டைசெய்து, சோம்பேறிகளாகி தினேதினே தரித்திரதசையை அடைந்து வருந்துவது பிரதியக்ஷம். இதுவரையிற் போனது போகட்டும், இனிமேலாகிலும் நம்மக்கள் சிறுவர்களாக இருக்கும்போதே

தேசபாஷையையும், அத்தோடுகூட இராஜபாஷையாகிய இங்கிலீஷ்பாஷையையும் கட்டாயமாய்க் கற்பிக்கவேண்டும். ஏழைகளாக இருப்போர் தேசபாஷை, இங்கிலீஷ் பாஷைகளில் படிக்கவும், எழுதவும், கணக்கிடவும் போதுமான வரையில் கற்பித்தும். தனவான்களாக இருப்பவர் தம்மக்களை பி. ஏ. பி. எல். பரிஷையில் தேறுகிற வரையிலும் கற்பித்து வரவேண்டும். இப்படி படிப்பிக்கும்போது தேக அப்பியாசத்துக்கேற்ற கொடி, ஜிம்னேசிய முதலான வித்தைகளையும்; தமது பெண்மக்களுக்குப் போதுமான தேசபாஷைக் கல்வியையும் கற்பிக்கவேண்டும். கைத்தொழில், விவசாயம், வர்த்தக வேலைகளில் நாட்டமுடையவர்கள்கூட தம்மக்கள் பாலியராக இருக்கையில் தேசபாஷையிலும் இராஜபாஷையிலும் எழுத வாசிக்கும் வரையிலாவது கற்பித்துக்கொடுத்து, பிறகு தமக்கு இஷ்டமான தொழில்களிற் செய்யவிடவேண்டும். இவ்வாறு கல்வியையும், கைத்தொழில்களையும் கிரமேண கற்றுக் கொடுத்தபிறகு, கல்வி கைத்தொழில் விருத்தி விஷயமாக ஏனைய விடங்களுக்கு யாத்திரையாகப்போய் நேரில் பார்க்கச்செய்து அறிவை விருத்தியாக்கவேண்டும்.

(2) இவ்விதமாகக் கல்வியையும், கைத்தொழில்களையும் விருத்தியாக்கிக் கொண்டுவந்து, தமது கல்விக்குத் தக்கபடி உத்தியோகமோ ? அல்லது கைத்தொழில்களோ செய்யும்பொழுது இராஜாங்க சட்டதிட்டங்களைக்காட்டும் புத்தகங்களையும், தம் தம் ஜில்லா கெஜட்டுகளையும், சமாசார பத்திரிகைகளையும் தருவித்துப் படித்து; இராஜகீய கட்டளைகளையும், உலக விசித்திர விநோதங்களையும் தெரிந்துக்கொள்ளவேண்டும். இப்படி சட்டதிட்ட புத்தகங்களையும், சமாசார பத்திரிகைகளையும் அதிகப் பணச்செலவிட்டு வாங்க சக்தியற்றவர்கள் தாம் குடியிருக்கும் கிராமம், அல்லது தாலுகா அல்லது கஸ்பாபட்டணங்களிற் குடியிருக்கும் குடிகளிற் சிலரைக் கையொப்பக்காரர்களாகச் சேர்த்து பணம் வசூல்செய்து பொதுவான வாசகசாலைகளை ஸ்தாபித்து விருத்தி யடையவேண்டும்.

(3) இவ்வாறு விருத்தியடைந்து வருங்காலத்தில், தாம் வசித்துவரும் அந்தந்த கிராமாதிகாரிகள், சப்மேஜஸ்டர்கள், தாசில்தார்கள், டிவிஜனல் ஆபீசர்கள், அல்லது கலெக்டர்களை அடிக்கடி தரிசித்து தமது குறைவு நிறைவுகளையும், குடிகளுடைய சுகதுக்கங்களையும் சொல்லி வரவேண்டும்; அவர்கள் அவைகளை அநுதாபத்தோடு கேட்காதவிஷயத்தில், அப்படிப்பட்டவர்களிடம்போய் வருத்தாமலிருக்கவேண்டும்.

(4) தம் தம் சொந்தகாரியங்களை தாமே நேரில்போய் பார்த்து செய்தும், செய்வித்தும் வரவேண்டும். வேலைக்காரர்களையும், ஏஜண்டுகளையும் முற்றும் நம்பி பெரியவேலைகளை விட்டுவிடவேண்டாம். கலியாணம் கல்லெடுப்பு முதலான காரியங்களில் டம்பாகாரமான வீண்செலவுகளைச்செய்ய கடன்வாங்க வேண்டாம். அல்லது பிறர்கடனுக்கு பிணைப்பட்டு அலையவேண்டாம். வரவுக்குமிஞ்சி செலவுசெய்வோர் வருந்தி சாவார்; ஆகவே, சிக்கனவாழ்வே சிறந்த வாழ்வாம்.

(5) தருமம் செய்ய பின்னடையவேண்டாம் அதாவது ஏழைகள், வருமையிலுள்ளோர், வியாதியஸ்தர், கூன், குருடு, நொண்டி முதலானவர்களுக்கு தம்மாலான உதவிசெய்யவேண்டும்.

(6) தருமத்திற் சிறந்தது சுஜாதிதருமமாம்—அதாவது, நமது சுஜாதியாரில் ஏழைகளாக இருப்பவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டியதன்றியில்; அவர்களுடைய மக்களுக்கு கல்வி, கைத்தொழில்களை கற்பித்துவைத்தும், அது விஷயமாக அந்தந்தகிராமம், கஸ்பா நகரங்களிலும், கூடுமாகில் மதுரை, மதராசு முதலான பட்டணங்களிலும், பிரதிஷ்டு **சுஜாதிமஹாசபை**களைக்கூட்டி, அந்தசசபைகளில் சுஜாதியாருடைய விருத்தி விஷயத்தைப் பற்றி பேசி, **நாயடுஹோம் (Naidu Home) கஷ்ரவர் தலவாசம்** என்றுதி தர்மஸ்தாபனங்களை ஸ்தாபித்து அவைகளுக்கு வேண்டிய திரவிய சகாயம் செய்வித்தும், அந்ததிரவியத்தைக்கூட்டி பெருக்கி விருத்தியாக்கி, அதனால் வரும் லாபத்தினால் நம்மவர்மக்களுக்கு தர்ம கல்வியையும், கைத்தொழிலறிவையும் ஊட்டி விருத்தியாக்கி வரவேண்டும். இப்படி விருத்தியாச்கப் பெற்றவர்களுடைய சுகவாழ்வைக் கருதியும், அவர்களுடைய சந்ததிகளுடைய விருத்தியைக்கருதியும், பிரதிஷ்டு தாம்வாழும்பிரதிஜில்லாக்களிலும் மாகாண சபைகளைக்கூட்டி பேசி சுகாதிவிருத்தியை பிரபலமாக்கவேண்டும்.

(7) இப்போது நம்மவர்களிற் சிலர் நான் பெரியஜாதி, நல்லவமிசத்தான் என்று சொல்லிக்கொள்ளும் கக்ஷி பிரதிகக்ஷிகளையும் உண்டாக்கி ஒருமைப்பாட்டின் பெருமையை அறியாமல் தவிக்கிறார்கள். அதனால் நமது ஜாதியாருக்கு வந்த கஷ்டநிஷ்டூரங்கள் கொஞ்சமல்ல. இனிமேலாகிலும் நம்ம ஜாதியார் யாவரும் ஒரே குடும்பத்திற்பிறந்த ஒரே சகோதிரர்களாக எண்ணித் தழுவி ஒருமைப்பாட்டை விருத்தியாக்கவேண்டும்.

(8) நம்மவருக்குள் குடிவெறியும், கூத்திவைப்பும், வரவர அதிகரித்து வருவதாக வதந்தி. **குடித்தல் பஞ்சமஹா பாதங்களில்** ஒன்று, கூத்திகளை வைத்தல் தருமசாஸ்திர விரோதம், ஆகவே, குடி—கூத்திக் கள்ளத்தனங்களை கட்டோடேவிட்டொழித்தும், பரோபகாரிசோதரர்களாக பிரகாசிக்க வேண்டும். புலையும், கொலையும, களவும் தவிர்த்தவர்கள் புனித ரவார்க ளன்றோ ?

(9) பொய், சூது, வாது முதலானதுகளை விட்டொழித்து பெற்றோர், பெரியோர், பிராம்மணர் பக்தி விசுவாசமுள்ளவர்களாகி; சான்றோர், சாதுக்கள் சற்சங்கத்திற் சேர்ந்து **சதாசாந்தம், சத்தியம், சுவாமிபக்தி**யைத் தழுவ வேண்டும்

(10) பிரதிதினமும் அருணோதயத்தில் எழுந்து ஆண் பெண் சகிதமாக சுத்த ஸ்நானஞ்செய்தும், வீடுவாசல் பண்டபாத்திரங்களை சுத்திசெய்தும், ஜகதீசுவரனை தியானித்தும், தமக்கு கிடைத்திருக்கும் போஜனத்தை உண்டும், தம் தம் காரியங்களை கிரமமாய்செய்து முடித்தும், அவகாசகாலத்தில் **ஆரியர் வேதம், ஆரியர்ஆசாரம், பகவத்கீதையாதி** கிரந்தங்களைப்படித்துத்தெளிந்து சதாபிரம்மதியானபாராயணர்களாகி, இல்லறதருமத்தைஇன்பமாகநடத்தி சுவர குடும்பத்தாராக பிரகாசிக்கவேண்டும் ஓசுஜாதிசகோதிரர்களே! இந்தப் பத்து பிரமாணங்களை ஒடுங்கிய மனதோடன்றி, சுபுத்தியால்படித்துஆழ்ந்து யோசித்து அவைகளின்படி நடந்தும், நடத்தியும் வந்தால், நம்மவர் நற்கதியை அடைவார்களென்பது திண்ணம். ஓ! சுஜாதிசகோதிரர்களே உங்களுக்கு சுபவாழ்வும் மங்களமு முண்டாவதாக—ஓம் தத் சத்.

இப்படிக்கு சுஜாதி ஊழியன்,

**சேலம், பகடால, நரசிம்மலுநாயடு.**

கோயமுத்தூர் கலாநிதி பத்திராசிரியன்.